சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அரும்பதப்பொருள்.

பால்வார்.
-தொழில்செய்யு
யின்மை.
இராப்பகல்.
[மை.
மை, அசைவின்
காரணவிரோத
.
ாதது, சடம்.
ில்லாமை.
முப்பத்தெட்டு.

ப்பு,அதிட்டித்தல்
ந்தது.
த்துகிறவன்.
லுத்துதல், இட
தல்.
ப்பொருள்.

ாப்படாதது. [து.
த்தியக்ஷமல்லாத
ப்போதுள்ளது.
நோக்கியமுகம்.
டற்றது. [ல்.
மனஞ்செலுத்துத

ளக்கமில்லாமை.
வின்மை.
கப்படாதது.
றையிடமாகக்கொ
த்தல்.
அநாதியேசித்தித்த
ாதியாயுள்ளது.

அநியதபோக்கியம்-நியதமில்லாத போக்கியம், நியதம்,நியமம், போக்கியம், அநுபவிக்கப்படுவது.
அநிர்வசநீயம்-சொல்லக்கூடாதது.
அநுக்கிராகி-அநுக்கிரகிக்கிறவன்.
அநுக்கிராகியத்துவம்-அனுக்கிரகிக்கப்படயோக்கியமான.
அநுசந்தாநம்பண்ணல்-திரும்பத்திரும்ப ஆராய்தல். [ல்
அநுபாஷித்தல்-திரும்பச்சொல்லுத
அநுமிதித்தல்-அநுமாநித்தல். [ல்.
அநுவதித்தல்-பின்னுஞ்சொல்லுத
அநுவித்தம்-ஆராயப்பட்டது.
அநைகாந்திகன்-காரணகாரியமொன்றற்கொன்று மாறுபடச்சொல்லுதல்.
அந்தரியாகம்-உட்பூசை.
அந்தருத்திரோகம்-உட்டொடக்கம்.
அந்தர்ப்பவித்தல்-உள்ளிருந்துதோன்றுதல்.
அபரம்-பின்.
அபரிமிதம்-அளவின்மை.
அபரோக்ஷம்-பிரத்தியக்ஷம்.
அபாவும்-இல்லாமை.
அபிதேயம்-சொல்லப்பட்டது,அறியப்பட்டது.
அபிநிவேசம்-மரணபயம்.
அபிமதம்-சம்மதம்.
அபிமானம்-பற்றுதல். [மை.
அப்பிருதக்கு-வேற்றுமையில்லா
அபிவியத்தம்-மிகுவிளக்கம்.
அருகம்-யோக்கியம்.
அர்ப்பித்தல்-ஒப்பித்தல்.
அவசிதம்-முடிந்தது.

தமதுகுருவணக்கங்கூறி மூன்றாற்சிறப்புமுரைக்கின்றார்.

என்னையிப்பவத்திற்சேராவகையெடுத்தென்சித்தத்தே
தன்னைவைத்தருளினாலேதாளிணைதலைமேற்சூட்டி
மின்னமர்பொழில்சூழ்வெண்ணெய்மேவிவாழ்மெய்கண்டானூல்
சென்னியிற்கொண்டுசைவத்திறத்தினைத்தெரிக்கலுற்றாம்.

இ-ள். (செவ்வரத்தப்பூநிறமாயொருமுகமு மிருபுயமு முடைய
கிச் செம்பட்டுச செஞ்சந்தனஞ் சிவந்தமாலை தரித்தவராகிய குருமூ
.. ா லதிட்டிக்கப்பட் டந்தரூபியாயிருந்து) அருளினாலே - தனதுநீசு
விளங்காநின்ற தீக்ஷையென்னு மியற்கைப் பெயரை
ம் - என்னை - அநாதியே பசுத்துவத்தினாலே யஞ்
த்திற்சேராவகை - இந்தச் சனன
ாகன்மங்களோடு பொருந்தாமல்
க்குமபடி
ந்து - சமனார்தபாசக் கூட
ங்கூடாவகை
- சேஷிக்கப்பண்ணிச்
ஷித்துநின்ற - என்சித்த
துவமென் றிசைக்கப்
மூன்மனாமூலத்துச
ரவென்று செப்பப்படுமெ
தாத்மதத்துவத்திலே - தன்னைவைத்து - ன்மனாகார வித்தியாதத்
த்துபரியுறந்தனது டரசிவச சொரூபத்துக்கொத்து விரிதன்முதலா
குணங்களோடேகூடிப் பரமென்றுரைக்கப்படு மெனது வித்தியாதத்
த்தை விளக்கித் திருமப - அருளினாலே - தனது சத்திசங்கற்பத்தி
லே - தாளிணை - ஒவ்வொன்று மும்மூன்றாய்ச் சுத்தசிவசாட்குண்ய
ரூபமாகிய ஞானசத்தி கிரியாசத்தி யிருசத்தியாகிய வொருசத க்
த்து, அப்படி சாட்குண்ணிய பரிபூரணமாகிய சிவத்துவத்தோடு கூட்
சுத்தசிவமென்று செப்பப்படு மெனது சிவத்துவத்தை - தலைமேற்
டும் - முன்சொன்ன டமாகிய வித்தியாதத்துவதத்துக்குபரிமுடிபோ
லிறப்பித்துப் பிரகாசிப்பிக்கும் - மின்னமர்பொழில்சூழ் வெண்ணெ
மின்பொருந்திய மேகங்கள் படியாநின்ற சோலைசுற்றிய திருவெண்
ணெய்நல்லூரின்கண்ணே - மேவிவாழ் மெய்கண்டான் - பொருந்தி
வாழாநின்ற சத்தியதரிசியென்னும் பெயரையுடைய பரமாசாரிய
னூல்-வடமொழிச் சிவஞானபோதத்தைத் திரித்த தென்மொழி
ஞானபோதத்தை-சென்னியிற்கொண்டு- (சென்னியிற்கொண்டு
பூர்விபவசனம்). செவிக்சேறக்கேட்டு மனசிலுட்படுத்திச் சி
தெளிந்து-சைவத்திறத்தினை-சைவாகமத்திற் சொல்லுந் திரிப
தார்த்தலக்ஷணத்தை-தெரிக்கலுற்றாம்-விரித்துச் சொல்வாம். எ-று.

யாரூப சொரூப சிற்சத்திரூப வியத்த சிவத்துவத்தை-சேரும்பரிசினை-பொருந்துமுறைமையை-புகலலுற்றாம் - சொல்லுவாம். எ-று.

ஆகையாலன்றோ சத்தியோநிருவாணதீக்ஷையிலே தேசிகனுக்கன்றிச் சாதகனுக்கு ஞானம்வேண்டுவதில்லையாதலால் தேசிகனம் பிரதானம் சாதகனுக்குத்தீக்ஷை பிரதானமென்று வியாக்கியானத்திற் சத்தியோச்சோதிபாதங்களால் விஸ்தரிக்கையான் ஞானந் தீக்ஷாகன்மத்துக் கங்கந் தீக்ஷாகன்டதும், மலந்திரவியமாதலால், நேத்திரபடலம்போல ஞானகோடிகளாலும் போகாதென்பதும், மேல்விஸ்தரித்துச் சொல்லுவாம். (௬)

அவையடக்கங்கூறுகின்றார்.

மறையினாலயனான்மாலான்மனத்தினால்வாக்கான்மற்றுங்
குறைவிலாவளவினாலுங்கூறொணாதாகிநின்ற
இறைவனார்கமலபாதமின்றியானியம்புமாசை
நிறையினார்குணத்தோர்க்கெல்லாநகையினைநிறுத்துமன்றே.

இ-ள். மறையினால்-(பதியினாற் பாரம்பரியமாக வதிட்டிக்கப்பட்டு அநாதிசர்வஞ்ஞனாயிருக்கின்ற பசுவினாற் பண்ணப்பட்டபடியால் இடத்துப் பதிஞானமென்றும் பசுஞானமென்றும் பதிப்பிரமாணமென்றும் பசுப்பிரமாணமென்றுஞ் சொல்லப்பட்டிருந்தாலும், இயற்கையால் நாதரூப பாசரூபமாதலாலும், ஆத்மஞானத்தை விளக்குதலான் ஞானமென்று உபசரிக்கப்படுதலாலும், பாசஞானமென்றும் பாசப்பிரமாணமென்றுஞ்சொல்லப்பட்டு இயல்பினால் ஆத்ம சிற்சத்தியைப் பொருந்திப் பசுபாசபதார்த்தமாத்திரத்தையேபடிக்கும்) வேதங்களால்-கூறொணாதாகி-(சிலவிடத்தொரு பிரகாரத்துப் பதிபதார்த்தத்தைக்குறிவேறாகவுங்கூறுமாயினுமியல்பாகிய விலக்கணத்தாற்) சொல்லப்படாதாகி-அயனான் மாலால்-சிவானுக்கிரகம்பெற்ற நிரஞ்சன விதிவிட்டுணுக்களுக்கு வேறாகிச் சாஞ்சனராயிருக்கின்ற விதிவிட்டுணுக்களுக்குப் பசுத்துவநீங்காதபடியினாலே பாசஞானத்தால் விளங்கிப் பசுஞான பசுப்பிரமாணமாகிக் காண்டன் முதலிய திரிப்பிரமாணமாகிய அவரவர்களது சிற்சத்திமானங்களாலவரவர்களாலறியப்படாதாகி-மனத்தினால்-பாசஞானம்பாசப்பிரமாணமென்கிற மனமுதலிய வுட்கருவிப் பிரத்தியட்சப் பிரமாணத்தினாலும், நேத்திரமுதலிய புறக்கருவிப் பிரத்தியட்சப் பிரமாணத்தினாலும், பாசயோகப்பிரத்தியட்சப் பிரமாணத்தினாலும், பசுயோகப் பிரத்தியட்சப் பிரமாணத்தினாலு மறியப்படாதாகி-வாக்கால்-லோகவார்தஞ் சத்தியமு மசத்தியமுமா யிருக்குமாதலாலவற்றுட் சத்தியமாகமப்பிரமாணத்தி லடங்குமாதலாற் பொதுவாகுமந்த லோகவாதத்தினாலறியப்படாதாகி-மற்றுங்குறைவிலாவளவினாலும்-பசுசாத்திரங்களிற் படிக்கப்பட்டுப் பசுப்பிரமாணங்களாகிப் புத்திப்பிரகாசமாகிய லிங்கபராமரிச சித்தவிருத்தி முதலாகிய

பஞ்சாவயவங்களினால் நிறைந்த பரசானுமானங்களினாலும்—கூறொணாதாகி- அறியப்படாதாகி—நின்ற-நிலைபெற்ற—இறைவனார்-சிவனாரது—கமலபாதம்-தாமரைபோலவிரிந்த சத்தியெனுஞ்சிவத்துவலட்சணத்தை—இன்றியானியம்புமாசை-இப்போது நான் சொல்லவேண்டுமென்ற விருப்பம்—மறயினார்குணத்தோர்க்கெல்லாம்-க்ஷமத்தினால் நிறைந்த நீர்மையராகிய சகலர்க்கும்—நகையினை-சிரிப்பினை —நிறுத்துமன்றே- நீங்காதுண்டாக்குந்தானே. எ-று. (எ)

இவனிப்படிப் பிரமாணாதீதரானாற்சூனியப்பொருளோவென்ன,
அன்று, பதிப்பிரமாணத்தாற் பார்க்கப்படும் பொருளென்று கூறுகின்றார்.

அருளினாலாகமத்தேயறியலாமளவினாலுந்
தெருளலாஞ்சிவனைஞானச்செய்தியாற்சிந்தையுள்ளே
மருளெலாநீங்கக்கண்டுவாழலாம்பிறவிமாயா
விருளெலாமிரிக்கலாகுமடியரோடிருக்கலாமே.

இ-ள். ஆகமத்தே— (பிறன்படிக்கும் வன்னபதவாக்கியங்களைக் கேட்கும் வியோமபௌதிகாகமவெழுத்தைப்பார்க்கும் நினைக்கும் தீக்ஷாவான்களாகிய நமது மனச்சங்கற்பத்தினால் வியோமபௌதிகத்தொனியொடு கிளம்பிப் புத்தியினாற்பொருத்தப்பட்ட வன்னபதவாக்கியமயமாயுள்ளுணரோசையாகிய மத்திமைவாக்குருபமாய் இருதயத்துத் தோன்றும் அத்தியாத்மிகசடாகமத்திற் கரியிலக்கினிபோலவந்து வன்னபதவாக்கியக் கிரமத்தில் ஆவிர்ப்பவித்துப்பொருள்போதிப்பதாய், மகாப்பிரளயபரியந்த நாசமில்லாமற் சுத்தவித்தையிலிருக்கும்) ஆதிதைவிகதிவ்வியாகமத்திலே (வந்து சாந்நித்தியமாகிய)—அருளினால்- சிவசத்தியாகிய வாதிதைவிக திவ்வியசிதாகமத்தினால், திரும்பவிது காரியலக்ஷணையாதலால், அதினால் விளக்கப்பட்ட நமது சிற்சத்தியாகிய ஆத்தியாத்மிகசிதாகமத்தினால்—சிவனையறியலாம்-சிவனைப் பரோக்ஷமாக நிச்சயிக்கலாம்— அளவினாலும் - திவ்வியசிவாகமத்திற் சிவனாற் காண்பிக்கப்பட்டுச் சிவசத்தியதிட்டிதபுத்திப் பிரகாசகலுஷிதலிங்க பராமரிசவியாபாரசீலமான நமதுசிற்சத்தி அனுமானத்தினாலும்—தெருளலாஞ்சிவனை- சிவனைப்பரோக்ஷமாகவறியலாம்—(தியானசமாதியென்னு மங்கயோகவாசனையில் துபதிந்த சிவசத்தியினாலந்தச்சமாதிசமயமாத்திரத்தில்) மருளெலாமயப் மலமெலா[illegible]லாம்போக—சிந்தையுள்ளே-திரும்ப அந்த
[illegible]துசிற்சத்தியிலே—ஞானச்செய்தியால்-அந்தரட
[illegible]சதேகசீவன்முத்தி சாக்ஷாற்காரத்தினால்—கண்[illegible]
[illegible]ஷமாகப் பார்த்து—வாழலாம்-நமதந்தச் சிற்சத்[illegible]
[illegible]யபாரசாக்ஷாற்காராகார சிவானுபூதியினது பூரித்தலாகிய நமது

சிவானந்தத்தினது அனுபூதிலட்சணச் சுவானுபூதிமான்களா யிருக்கலாம்—(சரீராந்த சமயத்திலே யந்தச்சீவன்முத்தி, சாக்ஷாற்கார சாமர்த்தியத்தினாலே சேஷித்துத் திரும்பத்திரும்ப வாராதபடி) பிறவிமாயாவிருளெலாம் - (பிறவியென்பது ஆகுபெயராதலால்) பிறவிக்கேதுவாகிய கன்மமலம்—மாயாவிருள் - மாயாமலம் — (திரும்ப மாயாவிருளென்றெடுத்துக்கொண்டு) மாயாவிருள்-கெடாத அநாதிசித்த, ஆணவமலம், என்னுமிவைகளெல்லாம்—இரிக்கலாகும்- நம்மைப் பந்தியாமற் பொருளுண்மைமீட்டிரமா, யிருக்கப்பண்ணலாம் — அடியரோடிருக்கலாமே - (நிரதிசயவிதேகபரமுத்திபல சர்வார்த்தவிஷயசிவசாக்ஷாற்கார வியாபாராகாரமாய் இருக்கின்ற நமது சிற்சத்தி சமவேதசிவானுபூதியினது பூரித்தலாகிய சிவானந்தானுபூதியாகிய சுவானுபூதிமான்களாகி) அடியை - சிவசத்திசமானசுவசிற்சத்தியை, உடையராகிய முத்தாத்மாக்களோடொத்து நாம் வியாபிக்கலாமே. எ-று.

முன்சொன்ன சீவன்முத்தியவத்தையிலேயாயில் சிவபத்தர்களோடுங் கூடியிருக்கலாம், பரமுத்தியிலே, "பாரதந்திரியங் கரைகழிபந்தம்" என்று ஞானமிர்தத்திலிருத்தலினால் அடிமைத்திறமில்லாதபடியினாலே சிவன்களென்றல்லாதடியார்களென்று சிவசமான முத்தாத்மாக்களைச் சொல்லலாகாதென்பதறிக. (அ)

பாயிரமுற்றிற்று.

# அளவை.

---

திரிபதார்த்தமாகிய பிரமேயசித்தி, பிரமாணம
லையென்பதனாற் பிரமாணங் கூறுகின்றார்.

நதலுரையபாவமபொருளொப்பாறென்ப
புண்மையையதிகததோடியலபெனநான்
களவைகாணபரவையிற்றின்மேலுமறைவரவையெல்லா
மளவைகாண்டல்கருதலுரையென்றிம்மூன்றினடங்கிடுமே.

இ-ள். அளவை-பிரமாணங்கள்-காண்டல்-பிரத்தியக்ஷம்-கருதல்-அனுமானம்-உரை-ஆகமம்-அபாவம-அனுபலத்தி-பொருள்- அர்த்தாபத்தி-ஒப்பு-உபமானம்(என)-ஆறென்பர்-ஆறென்றுகூறுவர்-(இப்படிப் பாட்டனும் வேதாந்தியும் பிரமாண மாறெனபர், ஆருகதனும் பிராபாகரனும அவற்றுள் அபாவப்பிரமாணம ஒன்றையுந்தள்ளிப் பிரமாணமைந்தென்பர், நையாயிகன் அவற்றுள் அர்த்தாபத்திப் பிரமாணமொன்றையுந்தள்ளி நான்கென்பன், சாங்கியன் அவற்றுள் உபமானப்பிரமாணமொன்றையுந்தள்ளி மூன்றென்பன், பௌத்தனும் வைசேஷிகனும் அவற்றுள் ஆகமப்பிரமாணமொன்றையுந்தள்ளிப் பிரமாணமிரண்டென்பர், உலோகாயுதன் அவற்றுள் அனுமானப பிரமாணமொன்றையுந்தள்ளிப் பிரமாணமொன்றென்பன்.) அளவைமேலும் — சொல்லியவாறு பிரமாணங்களுக்குமேலும்-ஒழிபு-பாரிசேஷியம்-உண்மை - சம்பவம்-ஐதிகம்-உலோகவிதம் — அதனோடு — இயல்பு-சுவபாவம்-என நான்களவைகாண்பர்-என்று நான்குபிரமாணங்களையறிந்து சொல்லுவர்-அவையிற்றின்மேலுமறைவர்-சொல்லிய விந்தப் பத்துப்பிரமாணங்களுக்குமேலும்,பிரமாணங்களைச்சொல்லுவர்—அவையெல்லாமளவை-அந்தவெல்லாப்பிரமாணஙகளும் (சாங்கியததிலேபோலச் சைவசித்தாந்ததிலே)—காண்டல் கருதல் உரையென்றிமமூன்றின்-பிரததியக்ஷம அனுமானம் ஆகமமென்கிற மூன்றுபிரமாணங்களின்-அடங்கிடுமே— அந்தர்ப்பவிக்குந்தானே. எ-று.

இதற்குச்சம்மதிவாக்கியம.

"ப்ரத்யக்ஷமேகஞ்சார்வாக: கணாதசுகதௌபுந:|
அநுமாநஞ்சதச்சாதஸாங்க்யா: சப்தஞ்சதே அபி||
ந்யாயைகதேசிநோப்யேவமுபமாநஞ்சகேசந|
அர்த்தாபத்த்யுபமாநேசதாநிசாஹப்ரபாகர:||
அபாவஷஷ்டாந்யேதாநிபாட்டாவேதாந்திநஸ்ததா|
ஸம்பவைதிஹ்யயுக்தாநிதாநிபௌராணிகாஜகு:||
ப்ரத்யக்ஷமநுமாநஞ்சஸஹசப்தேநசாங்கரே|"

இந்தப்பிரமாணங்களினது பகுப்பிலக்ஷண ப
விரித்துச், சுருங்கியவுரையில் உரைக்கில் விபரீ
மென சொல்லிய முன்னோருரையின் முதிர்ந்தோருரைகக முயாருமைய...
லறிக. (க)

மேனிறுத்தமுறையானே காண்டல் முதலிய பிரமாணமூன்றினை
யும வகுத்துணர்த்துகின்றார்.

மாசறுகாட்சியையந்திரிபின்றிவிகற்பமுன்று
வாசறவறிவதாகுமனுமானமவிநாபாவம்
பேசுறுமேதுக்கொண்டுமறைபொருள்பெறுவதாகுங்
காசறுமுரையிம்மானத்தடங்கிடாபபொருளைக்காட்டும்.

இ-ள். மாசறுகாட்சி - குற்றமில்லாத பொறிபுணர்ந்த சிற்சத்திக்
குறிப்பிரத்தியக்ஷமாவது — ஐயந்திரிபின்றி - சந்தேகவிபரீதஸ்மிருதிகளி
ன்றி—விகற்பமுன்று-நிருவிகற்பத்துககுமேற் சவிகற்பமாக—ஆசற-குற்ற
மின்றி—அறிவதாகும்- பொருளைப் போதிப்பதாகும்—அனுமானம்- தூம
முதற் சாதனம்புணர்ந்த சிற்சத்திக்குறி யனுமானமாவது—அவிநாபாவம
பேசுறுமேதுக்கொண்டு-வியாத்தியோடு சொல்லப்படு மந்தத் தூமமுதற்
சாதனங்கொண்டு—மறைபொருள்பெறுவதாகும்- பிரத்தியக்ஷத்துக்குயோ
க்கியமு மயொக்கியமுமா யொளித்தவஸ்துவை அறிவிப்பதாகும்— காச
றுமுரை-குற்றமற்ற ஆப்தவாக்கியமபுணர்ந்த சிற்சத்திக்குறிச சிவாகம
மாவது—இம்மானத்தடஙகிடாப் பொருளைககாட்டும— பிரத்தியக்ஷத்தைக
கடந்து அனுமானதீதமாகிய பதார்த்தத்தையும் போதிக்கும். எ-று.

ஈண்டு, அறிவிப்பது பெறுவிப்பது எனற்பாலன பிறவினைப்பொரு
ளுணர்த்தும் விகுதிதொக்கு, "அறிவது, பெறுவது" என நின்
றன. இவ்வாறுவருவனவற்றை வடநூலார அந்தர்ப்பாவிதணிச் என்பர்.

ஐயந்திரிபுகளினதிலக்ஷணமும், நிருவிகற்பஞானமென்றுஞ் சவிக
ற்பஞானமென்றும், ஞானமிருவிதமென்று பண்ணி
யவற்றின் இலக்கணமும் உணர்த்துகின்றார்.

கண்டபொருளையிரட்டுறவேகருதலையந்திரியவே
கொண்டதிரிபாம்பெயர்சாதிகுணமேகன்மம்பொருளெனவைந்
...ண்டவ்விகற்பவுணர்வினுக்குப்பொருளினுண்மைமாத்திரத்தின்
திர...டலில்லாவறிவாகும்விகற்பமில்லாக்காட்சியே.

ப்பிர
ணா இ-ள். ஐயம் - சந்தேகமாவது—கண்டபொருளை - பொதுவிலக்கண
ய கப் பார்த்த பதார்த்தத்தை— இரட்டுறவே கருதல் - குற்றிகொல்லோ
கன்கொல்லோவென்றிருதன்மையுறும்படி குறித்தல் — திரிபு-விபரீத
மாவது—திரியவேகொண்டலாம்-சிப்பியை வெள்ளியென்று வேறுபடக்கி
ரகித்தலாம்—அவ்விகற்ப வுணர்விஒக்கு-அந்தச் சவிகற்ப ஞானத்துக்கு—

பெயர்சாதிகுணமேகன்மம்பொருளெனவைந்துண்டு - தாண்டவனென்னும்பெயர் பிராமணனென்னுஞ்சாதி சிவப்பனென்னுங்குணம் தேவபூசகனென்னுங் கன்மம் இவனென்னும் பொருள் எனவைந்துண்டு- விகற்பமில்லாக்காட்சியே - நிருவிகற்ப ஞானமாவது—பொருளினுண்மைமாத்திரத்தின் - ஒன்றிதென்று வஸ்துவினது சத்துவமாத்திரத்திலே— விண்டலில்லாவறிவாகும் - முன் னிருவிகற்பகாரணத்திலே சவிகற்பகாரியந்தோற்றுதாகில் உத்தரகாலஞ் சவிகற்பமுண்டாகாதென்னுஞ் சற்காரியவாத வார்த்தையினாலே நாமசாதிகுணகிரியைகட்குத் தன்னிடத்திற் சற்றேதோற்றுதலுண்டாயிருந்தாலும், வசனித்தலுக்கேதுவல்லாத ஞானமாகும். எ-று. (௩)

நிருவிகற்ப சவிகற்ப ஞானமெனும் பிரமிதிபலவத்தாகிய பிரத்தியட்சப் பிரமாணமுதலாகிய பிரமாணங்களினது பேதங்களைக் கூறுகின்றார்.

காண்டல்வாயின்மனந்தன்வேதனையோடியோகக்காட்சியென
வீண்டுநான்காமனுமானந்தனக்கும்பிறர்க்குமென்றிரண்டா
மாண்டவுரைதந்திரமந்தரமுபதேசசசொல்லெனமூன்றாம்
பூண்டவளவைக்கெதிர்புலன்றன்னியல்புபொதுவென்றிரண்டாமே.

இ-ள். காண்டல்-பிரத்தியக்ஷப்பிரமாணமானது— வாயில்-இந்திரியப்பிரத்தியட்சம்—மனம் - மானசப் பிரத்தியக்ஷம்—தன்வேதனை - சுவசம்வேதனப்பிரத்தியக்ஷம் — அந்தச் சுவசம்வேதனப்பிரத்தியக்ஷத்தோடு— யோகக்காக்ஷியென - யோகப்பிரத்தியக்ஷமென — ஈண்டு - இந்தச்சைவத்தில் — நான்காம் - நான்குவிதமாம்—அனுமானம்-அனுமானப் பிரமாணமானது—தனக்கும் பிறர்க்குமென்றிரண்டாம்-தன்னனுமான மென்றும், பிறரனுமானமென்றும் இருவிதமாம்—மாண்டவுரை-மாட்சிமைபொருந்திய ஆகமப்பிரமாணம்—தந்திரமந்த்ரமுபதேசச்சொல்லென-தந்திரகலைமந்திரகலை உபதேசகலையென்று—மூன்றும்-மூன்றுவிதமாம்—பூண்டவளவைக்கெதிர்புலன்-பொருளொடுபொருந்தியபிரமாணங்கட்கு முன்னாகிய பிரமேயம—தன்னியல்பு பொதுவென்று-அசாதாரணலக்ஷணத்தையுடையது, சாதாரணலக்ஷணத்தையுடையதென்று — இரண்டாமே - இரண்டுவிதமேயாம். - எ-று. (௪)

தன்னியல்பு பொதுவியல்பென்று சொல்லிய பிரமேயப்பொருளினதியற்கையைக் கூறுகின்றார்.

அன்னியசாதியுந்தன்சாதி...மகன்றுநிற்ற
றன்னியல்பன்னியத்தை ...க்குதன்சாதிக்கொத்த
துன்னியபொதுவியற் ...விவ்விரண்டினுள்ளே
மன்னியபொருளிய ...மானமுற்றால்.

இ-ள். (பதிபதார்த்தத்துள் அநாதிமுத்தசிவனுக்கு) அன்னியசாதியும்-பசுபாசங்களையும்—தன்சாதியும்-ஆதிமுத்தசிவன் அபரமுத்தசிவன் இவர்களையும்—அகன்று-நீங்கி—(அநாதிமுத்தசிவனென்று) நிற்றல்-இருத்தல்—தன்னியல்பு-தனதசாதாரணலக்ஷணம்—அன்னியத்தை-பசு பாசங்களைமாத்திரம்—தவிர்ந்து -நீங்கி—தன்சாதிக்கொத்தல் - ஆதிமுத்தசிவன் அபரமுத்தசிவன் இவர்களுக்குச் சமமாகிச் சிவனென்று இருத்தல்—துன்னிய பொதுவியற்கை-பொருந்திய சாதாரணலக்ஷணம்— (ஆதிமுத்தசிவனுக்கு) அன்னியசாதியும்-பசுபாசங்களையும—தன்சாதியும் - அநாதிமுத்தசிவன் அபரமுத்தசிவன் இவர்களையும்—அகன்று-நீங்கி— (ஆதிமுத்தசிவனென்று) நிற்றல்-இருத்தல்—தன்னியல்பு-தனதசாதாரண லக்ஷணம்—அன்னியத்தை - பசுபாசங்களைமாத்திரம்— தவிர்ந்து - நீங்கி—தன்சாதிக்கொத்தல் - அநாதிமுத்தசிவன் அபரமுத்தசிவன் இவர்களுக்குச்சமமாகிச் சிவனென்று இருத்தல் — துன்னியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம்—(அபரமுத்தசிவனுக்கு) அன்னியசாதியும்-பசுபாசங்களையும் — தன்சாதியும் - அநாதிமுத்தசிவன் ஆதிமுத்தசிவன் இவர்களையும்—அகன்று-நீங்கி—(அபரமுத்தசிவனென்று) நிற்றல்-இருத்தல்—தன்னியல்பு-தனதசாதாரணலக்ஷணம்— அன்னியத்தை - பசுபாசங்களைமாத்திரம்—தவிர்ந்து - நீங்கி—தன்சாதிக்கொத்தல்-அநாதிமுத்தசிவன் ஆதிமுத்தசிவன் இவர்களுக்குச் சமமாகிச்சிவனென்று இருத்தல் — துன்னிய பொதுவியற்கை - பொருந்திய சாதாரணலட்சணம் — (பசுபதார்த்தத்துள் விஞ்ஞானகலனுக்கு) அன்னியசாதியும் - பதிபாசங்களையும்—தன்சாதியும்-பிரளயாகலன் சகலன் இவர்களையும்—அகன்று-நீங்கி—(விஞ்ஞானகலனென்று) நிற்றல் - இருத்தல் — தன்னியல்பு - தனதசாதாரணலக்ஷணம்—அன்னியத்தை - பதிபாசங்களைமாத்திரம்—தவிர்ந்து-நீங்கி—தன்சாதிக்கொத்தல் - பிரளயாகலன்சகலன் இவர்களுக்குச்சமமாகிப் பசுவென்று இருத்தல் — துன்னியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம் — (பிரளயாகலனுக்கு) அன்னியசாதியும் - பதிபாசங்களையும் — தன்சாதியும் - விஞ்ஞானகலன் சகலன் இவர்களையும்—அகன்று - நீங்கி— (பிரளயாகலனென்று) நிற்றல் - இருத்தல்—தன்னியல்பு-தனதசாதாரணலக்ஷணம் — அன்னியத்தை- பதிபாசங்களை மாத்திரம்—தவிர்ந்து - நீங்கி—தன்சாதிக்கொத்தல்-விஞ்ஞானகலன் சகலன் இவர்களுக்குச் சமமாகிப் பசுவென்று இருத்தல் — துன்னியபொதுவியற்கை- பொருந்திய சாதாரணலக்ஷணம் — (சகலனுக்கு) அன்னியசாதியும் - பதிபாசங்களையும் — தன்சாதியும் - விஞ்ஞானகலன் பிரளயாகலன் இவர்களையும்—அகன்று - நீங்கி — (சகலனென்று) நிற்றல் - இருத்தல்—தன்னியல்பு - தனதசாதாரணலக்ஷணம்—அன்னியத்தை - பதிபாசங்களைமாத்திரம்—தவிர்ந்து - நீங்கி— தன்சாதிக்கொத்தல்—விஞ்ஞானகலன் பிரளயாகலன் இவர்களுக்குச் சமமாகிப் பசுவென்று இருத்தல்—துன்னியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம் — (பாசபதார்த்தத்துள் மலத்துக்கு) அன்னியசாதியும் - பதிபசுக்களையும்—தன்சாதியும் - மாயாகன்மங்களையும்—அகன்று - நீங்கி— (மலமென்று) நிற்றல் - இருத்தல்—

தன்னியல்பு - தனதசாதாரணலக்ஷணம் — அன்னியத்தை- பதிபசுக்க ளைமாத்திரம்—தவிர்ந்து - நீங்கி—தன்சாதிக்கொத்தல் - மாயாகன்மங்களுக்குச் சமமாகிப் பாசமென்று இருத்தல் — துன்னியபொதுவியற்கை- பொருந்திய சாதாரணலக்ஷணம்—(மாயைக்கு) அன்னியசாதியும் - பதிபசுக்களையும் — தன்சாதியும் - மலகன்மங்களையும் - அகன்று - நீங்கி—(மாயையென்று) நிறதல் - இருத்தல்— தன்னியல்பு - தனதசாதாரணலக்ஷணம்—அன்னியத்தை - பதிபசுக்களைமாத்திரம்—தவிர்ந்து- நீங்கி—தன்சாதிக்கொத்தல் - மலகன்மங்களுக்குச் சமமாகிப் பாசமென்று இருத்தல் — துன்னியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம்—(கன்மத்துக்கு) அன்னியசாதியும் - பதிபசுக்களையும்—தன்சாதியும் - மலமாயைகளையும—அகன்று - நீங்கி — (கன்மமென்று) நிற்றல் - இருத்தல்—தன்னியல்பு - தனதசாதாரணலக்ஷணம் — அன்னியத்தை - பதிபசுக்களைமாத்திரம்— தவிர்ந்து - நீங்கி — தன்சாதிக்கொத்தல் - மலமாயைகளுக்குச் சமமாகிப் பாசமென்று இருத்தல் — துன்னியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம்— சொன்னவிவ்விரண்டினுள்ளே- கூறிய பொதுச்சிறப்பென்கிற விந்தவிரண்டினுள்ளே— மன்னியபொருளியாவும் - நிலைபெற்ற பதார்த்தங்களெல்லாம்—மாணமுற்றால் - அளவையைப்பொருந்தின்—அடங்கும் - அந்தர்ப்பவிக்கும். எ-று. (ரு)

பிரத்தியக்ஷான்கினதிலக்ஷணமிரண்டு திருவிருத்தங்களாற் கூறுகின்றார்.

உயிரினோடுணர்வுவாயிலொளியுருவாதிபற்றிச்
செயிரொடுவிகற்பமின்றித்தெரிவதிந்திரியக்காட்சி
யயர்விலிந்திரியஞானமைம்புலன்சார்ந்துயிர்க்கண்
மயர்வறவந்தஞானமானதக்காண்டலாமே.

இ-ள். உயிரினோடு- ஆத்மாவாகியபிரமாதாவோடு—உணர்வு- சிற்சத்தியாகிய பிரமாணம்—வாயில் - மலத்தைச்சற்றே நீக்கி அந்தச்சிற்சத்தியைச்சற்றேவிளக்காநின்று தனக்குப்பிரேரகமாயிராநிற்குங்கலை வித்தையிராகங்களோடுகூடிய மனசினாலே செலுத்தப்பட்ட விந்திரியம்—ஒளி- காட்டாகியசோமசூரியாக்கினிப்பிரகாசம்—உருவாதி- உருவசத்தப்பரிசரசகந்தங்களிவைகளை—பற்றி- பொருந்தி—செயிரொடுவிகற்பமின்றி- குற்றமாகிய ஐயந்திரிபொடு விகற்பமின்றி—தெரிவது- நிருவிகற்பமாகக் காண்டல்—இந்திரியக்காட்சி - வாயிற்பிரத்தியக்ஷம்— அயர்விலிந்திரியஞானம்- முன்சொன்ன சோர்வில்லாத வாயிற்பிரத்தியக்ஷமாகிய நிருவிகற்பஞானம்—ஐம்புலன்சார்ந்து- சத்தப்பரிசரூபரசகந்தங்களாகிய பஞ்சவிடயங்களைப்பொருந்தி — மயர்வற - மயக்கமாகிய ஐயந்திரிபுகளின்றி— உயிர்க்கண்—ஆத்மாவினது புத்திகலுஷிதசிற்சத்தியினிடத்து அதுவிதுவாக—வந்தஞானம்-தோன்றிவிளங்கிய சவிகற்பஞானம்—(பௌத்தப்பிரமிதிப்பிரத்தியக்ஷமாயிருந்தாலும் இஃதின்னரூபமாகவேண்டுமென்னு மனசினதுசங்கற்ப சந்தேகஞானமுன்னாக உண்டாதலினால்) மானதக்காண்டலாமே-மானசப்பிரத்தியக்ஷமுமாமே. எ-று.

புத்திக்குமாரசென்னும்பெயர் பொது; பௌத்தரென்றேசெம்மைப்பொருள்.

தத்துவவியாபாரமுறைமை சற்றேசாற்றுகின்றோம்.

ஒரு சிற்சத்திரூபமாகிய வோர் ஞானந்தானே தற்பொருளறிவென்றும் பிறபொருளறிவென்றுமிருவிதமாயிருக்கும்; அப்படியிருந்தாலும், பிறபொருளறிவாயிருந்த தான்றானே தற்பொருளறிவாயிருந்து பகுப்பற்றிருதன்மையாயிருக்கும்.

பிறபொருளையறியுமிடத்துத் தற்பொருளறிவானது தற்பொருளறியுஞ் சமுதாயசித்துரூபமாதிருரூப முன்மணந்தகர்த்திருரூப சிவரூப ஆத்மரூப பிரத்தியக்குரூப சிற்சத்தியென்கிற பிரமாதா; பிறபொருளறிவானது, கரணரூப சிவசத்திரூப ஆத்மசத்திரூப பராக்குரூப சிற்சத்தியென்கிறபிரமாணம்; பிரமாணத்தின் தறிதற்றொழிலானது, கிரியையென்கிறபிரமிதி; பிறபொருளானது கர்த்திருகரணக்கிரியைகட்கன்னியமாகிய கன்மமென்கிறபிரமேயம்: தற்பொருளையறியுமிடத்துத் தற்பொருளறிவு பிறபொருளறிவென்கிற விரண்டிற்கும் பொதுமுச்சித்துரூபமாத்திர அந்தராத்மப்பிரேரகவறிவானது, கர்த்திருரூபமாத்திர சிவரூபாத்மரூப சிற்சத்தியென்கிறபிரமாதா; இப்பிரமாதாவோடு மணந்து பிறபொருட்பிரமாதாவாயிருந்த தற்பொருளறிவானது, கரணரூப சிவசத்திரூப ஆத்மசத்திரூப பிரத்தியக்குரூப சிற்சத்தியென்கிறபிரமாணம்; பிரமாணத்தினதறிதற்றொழிலானது கிரியையென்கிறபிரமிதி; பிறபொருளறிவானது பராக்குரூப சிற்சத்தியென்கிற பிறபொருட்பிரமேயம்போலாது பிறபொருட்பிரமாணரூபமாகவறியப்படும் பிரமேயம்.

சிவன்முத்தசிவன் அபரமுத்தசிவன் சீவன்முத்தசிவன் சீவாத்மாவென்னுமைவர்க்கும் அவரவர்க்கன்னியமாகிய வவரவர் பிறபொருட்சிதசிற்பிரமேயஞ்சுவரூபமன்று; பின்னைப்பொருள்.

அவரவர் பிரமாதிருரூபமும் பிரமாணரூபமுமாகிய விரண்டுஞ் சீவான்மாவுக்குஞ் சீவன்முத்தசிவனுக்கும் அபரமுத்த சிவனுக்கும் மூத்திரஞ் செப்பப்படாநின்ற தடத்தபௌத்த சவிகற்பஞானமென்ப தௌபாதிகமாதலாற் பௌத்த ஸ்தூல விகற்பமாத்திரத்தைத்தள்ளி, நீங்காமனிற்கு முள்ளற்ப சாத்த சவிகற்ப நிருவிகற்ப ஞானப்பிரமிதிரூபமும், பிறபொருட் பிரமாணமாகிய தற்பொருட்சிற்பிரமேயரூபமும் ஆகநான்கும் பகுப்பற்று வேறுவேறாய் அவரவர்க்கு நான்காய்த் தடத்தலக்ஷணமன்றிச் சுவரூபலக்ஷணமாய்த்தானேயிருக்கும்.

ஆகையாற், கலாதத்துவஞ் சிற்சத்திவிருத்தியிற் சிறிது மலத்தை நீக்கிப் பிறபொருளறிதலைப் பண்ணுதலைக்குறித்துப் பகுப்பற்று ஞானசத்தி தன்மேலிச்சாசத்திகோத்த கிரியாசத்திரூபவீரொருகரணரூபியாயிருக்கின்றபராக்குரூபிப்பெயரெய்திய வெதிர்முகியாகிய சிற்சத்தியைப் பொருந்தி யதனிடத்திலுள்ளற்பசவிகற்ப நிருவிகற்ப ஞானமாய் இனிமே

லிந்திரியத் துவாரத்தால் வித்தியாதத்துவத்தினால் மலவாசனையை மாற்றிபபிறபொருளை யிதுவென்றறியும்படிக்கும், மேலிராகதத்துவங்கோத்த கலாதத்துவமென்கிற தன்னான் மலவாசனையை மாற்றி இதுகாரியமென்றுத்தியோகித்து இதின்னதாகக்கடவதென்று சங்கற்பித்துப்பண்ணும்படிக்கும், அறிதல்பண்ணுதற் றொழில்களை மலவாசனைமணக்கச் சற்றே விளக்கி, அப்போதுமாத்திரங் கரணகாரகமாயிருந்தது.

பின்னுடனுண்முகமாய்த் திரும்பிப் பிறபொருள் அறிதல்பண்ணுதலைக் குறித்துப் பகுப்பற்று ஞாதிருகர்த்திருரூப வீரொருகர்த்திருரூபியாயிருக்கின்ற பிரத்தியக்குருபிப்பெயரெய்திய திரும்பியமுகசிற்சத்தியைப் பொருந்தி அதினெதிர்முக சிற்சத்திகரணங்கொண்டறிதல் பண்ணுதற் றொழில்களைப் பண்ணுவிக்குஞ் சாமர்த்தியத்தையும் அச்சிற்சத்தி பிறபொருள்காட்ட அச்சிற்சத்திகொண்டு பிறபொருளறியுஞ் சாமர்த்தியத்தையும் விளக்கி அக்கலைகர்த்திருகாரகமாயிருந்தது.

தற்பொருளறிதல் பண்ணுதலைக் குறித்துப் பகுப்பற்று ஞானசத்திதன்மேல் இச்சாசத்திகோத்த கிரியாசத்திரூபவீரொருகரண ரூபியாயிருக்கின்ற பிரத்தியக்குரூபிப் பெயரெய்திய திரும்பியமுகியாகிய சிற்சத்தியைப்பொருந்தி அதிலறிதல்பண்ணுதற் றொழில்களைச்சற்றே விளக்கிக் கரணகாரகமாயிருந்தது.

பின்னந்தவெதிர்முக சிற்சத்திதிரும்பியமுகசிற்சத்திகளிரண்டிற்கும் பொதுநடுச்சித்துரூபமாத்திரவந்தராத்ம கர்த்திருரூபமாத்திர சிற்சத்தியைப் பொருந்தி அதிற்றிரும்பியமுகசிற்சத்தி கரணங்கொண்டு அறிதல்பண்ணுதற் றொழில்களைப் பண்ணுவிக்குஞ் சாமர்த்தியத்தையும் அச்சிற்சத்தி தற்பொருள்காட்ட அச்சிற்சத்திகொண்டு தற்பொருளறியுஞ் சாமர்த்தியத்தையும் விளக்கி, அக்கலைகர்த்திருகாரகமாயிருந்தது.

அப்படியிருந்து நானறிவேன் நானறியாநிற்கின்றேன், நான்பண்ணுவேன், நான்பண்ணா நிற்கின்றேன் என்றும் அறிந்தபின்னும் பண்ணினபின்னும் நானறிந்தேன் நான்பண்ணினேனென்றும் உள்ளாற்பசவிகற்ப நிருவிகற்ப ஞானமாய் அகங்கார தூலவிகற்பாஸ்பதமாய் அறிதல்பண்ணுதற் கிரமத்திற் கர்வித்துச் சம்ரம்பித்து நிற்கும்; ஆதலாற் கலை கர்த்திருகாரகமென்பதே. முக்கியம்.

பிறபொருட்பிரமாணமென்கிற தற்பொருட்பிரமேயந் தான்றானே பிரத்தியக்குருபதற்பொருட் பிரமாதிருரூப பிரமாணரூபமாய், அதிலதிருக்குமித்துமேயவிலக்கணமாய், ஸ்புரித்துச் சுயம்பிரகாசமாய் நிரந்தரமாய்ச் சடிதிவிளங்கிவிடுதலால், அநவத்தையின்றித் தற்பொருட்பிரமேய விஷயத்திற் பிரமாதாமுதலிய நான்குஞ் சுவரூபமாயிருந்தாலும், பிரமாதாவல்லாப பிரமாதா பிரமாணமல்லாப் பிரமாணம் பிரமிதியல்லாப் பிரமிதி பிரமேயமல்லாப் பிரமேயம் எனவறிக.

பிறபொருட் சிற்பிரமேய விஷயத்திலுஞ்சற்றே சிறப்போப்பிருத் தலால் அப்படி யொருபடியறிக.

பின்பு வித்தியாதத்துவங் கலையினுலொருபடி விளங்கிய கரணரூப பராக்குரூப ஞானசத்திரூப சிற்சத்தியைப்பொருந்தி மலவாசனையை நீக்கித் தெளிவுபண்ணிக் கரணகாரகமென்று பெயர்பெற்று நிற்கும்.

இராகதத்துவம், கரணரூப பராக்குரூப இச்சாசத்திரூப சிற்சத்தி யைப்பொருந்திப் போக்கியப்பொருளினுபரஞ்சிப்பித்துக் கரணகாரக மென்று பெயர்பெற்றுநிற்கும்.

காலதத்துவம், நியதிதத்துவத்தாற் போக்கியப்பொருளி னியமி த்த புருஷனையேவி நியதியோடு கரணகாரகங் கர்த்திருகாரகமுமன்றிக் காரணமாத்திரமா யிருந்தாலும் ஒருபிரகாரத்தாற் கர்த்திருகாரகமென்று பெயர்பெற்று நிற்கும்.

புருஷதத்துவம், அவிவேகப் பிரதிபத்தி விபரீதசுக துக்க மோக வேதன போகக்கிரியையைப் பண்ணும் போக்தாவாய்க் கலையோடுகூ டிக் கர்த்திருகாரகமென்று பெயர்பெற்று நிற்கும்.

பிரகிருதிதத்துவம், சாதாரணசாதாரணமுமாய்ப் பிரகாசப் பிரவிர்த் தி நியமவியாபார சிலகுண காரியத்துவாரத்தினாலே தனக்குக் கீழுள்ள போக்கியபோசகப் பொருள்களையுண்டாக்கிக் குணதத்துவத்தோடுகூடக் காரணமாத்திரமாய் நிற்கும்.

தன்மாத்திரைகளும் பூதங்களுமாகிய தேரிற்றேராழிபோலிருக்குஞ் சக்ஷுதத்துவமுதலிய ஞானேந்திரிய மிச்சாசத்திரூப சிற்சத்தியைப் பொருந்திய விராகத்தாற் செலுத்தப்பட்டு அந்தச்சிற்சத்தியைப் பொரு ந்தியவிராகதத்துவமணைந்த மனசினாலேவப்பட்டுப்பராக்குரூப ஞானசத்தி ரூப சிற்சத்தியைப் பொருந்தி முன்சொல்லிய புறப்போக்கியப் பொருளை க்காண்பித்து அந்தச் சிற்சத்திபொருந்திய வித்தியாதத்துவத்தினாற் புரு ஷனென்றிதுவென் றறியும்படிபண்ணிக் கரணகாரகமென்று பெயர்பெ ற்று நிற்கும்; அந்தவறிவு நிருவிகற்ப ஞானமென்று மிந்திரியப் பிரத் தியக்ஷமென்றுஞ் சொல்லப்படும்; அவ்வறிவை அவ்விராகதத்துவங் கலக்கும்.

திரும்ப ராகதத்துவத்தோடு கோத்துநிற்கு மனத்தத்துவம் அந்த நிருவிகற்ப ஞானத்திற்றோற்றும் பொருள்களிலொன்றை விகற்பித்துத் தூக்கி யிதுவனிதையினதுரூபமாக வேண்டுமென்று இதுமுதலுரூபங் களைச் சந்தேகமாகச் சங்கற்பித்து அகங்காரபுத்திப்பிரேரகமாய்க் கரண காரகமென்று பெயர்பெற்று நிற்கும்.

கலாதத்துவத்தோடு கோத்துநிற்கு மகங்காரதத்துவம் பிறபொருள் அறிதல்பண்ணுதலைக்குறித்து ஞாதிருகர்த்திருரூப கர்த்திருரூபமாத்திரமா ய்த் தற்பொருளறிதல் பண்ணுதலைக்குறித்து ஞானசத்திமேலிச்சாசத்தி

கோத்தக்கிரியாசத்திரூப கர்த்ருரூபியாயுமிருக்கின்ற பிரத்தியக்குரூபிப் பெயரெய்திய திரும்பியமுகியாகிய சிற்சத்தியையு மெதிர்முகசிற்சத்திதிரும்பியமுக சிற்சத்திகளிரண்டிற்கு மந்தராத்மசிற்கர்த்திருரூபமாத்திர சிற்சத்தியையுங் கலாதத்துவத் துவாரத்தாற் பொருந்தி, அதினதினிடத்தறிதல் பண்ணுதற் றொழில்களையும் அந்தத்தொழில்களைப் பண்ணுவிக்குஞ் சாமர்த்தியத்தையுமுறைமையிற் சமர்ப்பித்து இந்தவிந்திரிய நிருவிகற்பஞானமெதைப்பற்றிவந்ததோ அதைநிச்சயமாக நானறிவேன் நானறியாநிற்கின்றேன் நான்பண்ணுவேன் நான்பண்ணாநிற்கின்றேனென்றும் அறிந்தபின்னும் பண்ணினபின்னும் நானறிந்தேன் நான்பண்ணினேனென்றும் அந்தக்கலையினா லுற்பவித்த தற்பொருள்விஷய நிருவிகற்பஞானத்தைப்பற்றிப் பிறக்குஞ் சவிகற்பஞானமாய்ப் பிறபொருள்விஷய வித்தியாகலாகலுஷிதபராக்குரூப ஞானக்கிரியாசத்தியை விஷயீகரித்துக் கர்வித்துச்சம்ரம்பித்துநிற்குமாதலால் ஒருபிரகாரத்தாற் கரணகாரகமென்றும் பிரதானமாகக்கர்த்திருகாரகமென்றும் பெயர்பெற்றுநிற்கும்.

பின்பு வித்தியாதத்துவத்தோடுகோத்துநிற்கும் புத்திதத்துவங்கரணரூப பராக்குரூப ஞானசத்திரூப சிற்சத்தியைப்பொருந்தி இவள்வனிதை இதுயானை, இதுசந்தனம், இதுசர்ப்பம், இதுமுள், இதுவிஷம், இதுசிங்கநாதம் என்றிவை முதற்பொருள்களை நிச்சயித்துக் கரணகாரகமென்று பெயர்பெற்றுநிற்கும்; அந்த நிச்சயிக்கப்பட்டபொருள், ஞேயமாத்திரத்தினாலேதான் போகத்துக்குப் பொருந்திய கன்மேந்திரியங்களினாற் காரியப்பட்டுத்தான் புத்தியிற்பிரதிவிம்பிக்கும்; புத்தி அதனாற் சுகரூபையாயுந் துக்கரூபையாயுமோகரூபையாயு மிருக்கும்; அந்தச் சுகமுதலாகிய மூன்றை யொவ்வொன்றாகப் பராக்குரூப ஞானசத்தி பொருந்திய வித்தியாதத்துவமொன்றிதுவென்று நிருவிகற்பமாகப்பார்க்கும்; அந்தப்பார்வையைப் பராக்குரூப விச்சாசத்திபொருந்திய இராகதத்துவ முபரஞ்சிப்பித்துக் கலக்கும், அந்தவிராகதத்துவத்தோடு கோத்த அந்தவிச்சாசத்திபொருந்தியமனத்தத்துவம், இது சுகரூபமாகவேண்டும், இது துக்கரூபமாக வேண்டும், இது மோகரூபமாகவேண்டுமென்று விகற்பித்து ஒவ்வொன்றைத் தூக்கிச்சங்கற்பிக்கும்.

கலாதத்துவத்தோடு கோத்துப் பிரத்தியக்குரூப ஞானசத்திபொருந்திய அகங்காரதத்துவம் வித்தியாதத்துவத்தினாற்றோற்றுநிருவிகற்பஞானமெதை விஷயீகரித்து வந்ததோ 'அந்தவஸ்துவை நானிச்சயிப்பேனென்று கர்விக்கும்; பின்பு தற்பிரகாசப் பிறபிரகாசமாயிருக்கின்ற புத்திதத்துவத்தினது முன்பிரபஞ்சித்த பராக்குரூப சிற்சத்திவிருத்திக்கூறி நிருவிகற்பப் பிறபிரகாசத்தோடுகோத்ததற் பிரகாசத்திலந்தச் சுகதுக்க மோகங்கள் இதுசுகம் இது துக்கம் இது மோகம் என்றுதோற்றும்; அந்தச் சுகதுக்க மோகங்களோடு பகுப்பற்றிருக்கும், அந்தப்புத்தி அத்தியவசாயசவிகற்ப ஞானத்தினின்று மந்தப்புத்திப்பிரகாசத்தோடு கலந்துநின்றதனையறிதற்றொழில்களோடும் வித்தியாதத்துவத்தோடு கோ

த்துக்கிளம்பி யந்தப்புத்தி பிரகாசாம்சமாத்திரபோக்கியத்தின் மேல்வி மூர்த்த வெதிர்முகஞானசத்தியில் அந்தப்புத்திப்பிரகாசத்தினது விசற்பம் தோய்ந்து சற்றே சவிகற்பஞானமாய்வரும் புத்தியத்தியவசாய மூற்று ப்பொருந்திய பௌத்த சுகதுக்க மோகபோகமென்கிற வேதனையினது சுபூர்த்தி துட்பூர்த்திச் சுவரூப சுபானந்த துரானந்தமாய்த் தோற்றும் போகத்தை அகங்காரத்தோடு சோத்துத்திருப்பிய முகசிற்சத்தி கலையி னூற் றன்னிடத்தின் மூன்றோன்றியவுள்ளற்ப சவிகற்ப நிருவிகற்ப ஞா னமான சுவசம்வேதனாட் பிரத்தியக்ஷத்தை யகங்கார விகற்ப சவிகற்ப மாக்கி நான்சுகி நான்றுக்கி நான்மோகியென்று போகோபபோகமாய்ப் புசிக்கும் அனுபவிக்கும்.

பராக்குருபியென்றும் பரோன்முகியென்றும் பரசம்வித்தென்றுஞ் சத்தியென்றும் எதிர்முகசிற்சத்திக்குப் பெயரென்றறிக.

பிரத்தியக்குருபியென்றுஞ் சுவயோன்முகியென்றுஞ் சுவசம்வித் தென்றுஞ் சத்திமானென்றுஞ் சிவனென்றும் ஆத்துமா வென்றுந்திரு ம்பிய முகசிற்சத்திக்குப் பெயரென்றறிக.

அந்தவெதிர்முகசிற்சத்தி திரும்பியமுகசிற்சத்திகளிரண்டினை தந்தரா த்மா சிதாத்மாவுக்கு மவரவரிருசத்திக்குள்ளாகுஞ் சிதந்தராத்மா வென் பதைக்குறித்துச் சிவனென்றுமாத்மாவென்றும் பெயரென்றறிக.

பின்னுமொரு சிற்சத்தியினுடையவெதிர்முகரூபந் திரும்பியமுகரூப மே சத்தியென்றுஞ் சிவனென்றுஞ்சொல்லப்படு மாதலாற்றனதுசத் தியைத்தவிரச் சிவனென்றொன்பதில்லையென்பது மப்படியாதலாற்றனது சத்தியைத்தவிர வாத்மாத்தானென்பதில்லை யென்பதுமறிக.

திரும்பவந்த வகங்காரங் கலையினால் விளங்கிய கிரியாசத்தியைப் பொருந்தி மனச்சங்கற்ப முன்னைப் பிராணவாயுக்கன்மேந்திரியங்க ளைச்செலுத்தி ஞானசத்தியாலறிந்த கடமுதற்காரியபதார்த்தங்களைப் பண்ணும். (சு)

அருந்தின்பதுன்பமுள்ளத்துறிவினுக்கராகமாதி
தருந்தன்வேதனையாங்காட்சிசமாதியான்மலங்கள்வாட்டிப்
பொருந்தியதேசகாலவியல்பகல்பொருள்களெல்லா
மிருந்துணர்கின்றஞானமியோகநற்காண்டலாமே.

இ-ள். (முன்சொன்ன முறைமையினாற் புறம்பே பராக்குருபசிற்ச த்தியைப் பொருந்தி நிருவிகற்பமாகப் பார்க்கும் வித்தியாதத்துவத்தின் பின் கோத்த விராகமுதற் புத்திதத்துவ முடிவாகிய தத்துவங்களினால் முன்சொன்ன முறைமையில்வரும் இதுமாலை இதுசந்தனம் இவள்வனி தை இதுபாம்பு இதுமுள் இதுவிஷம் இதுசிங்காதமென்று புத்தி நிச்ச யபுத்திப் பிரதிவிம்பங்களினாற் புத்திதத்துவத்துதிக்கும்.) அருந்தின்ப துன்பம் - போக்கியமாகிய சுகதுக்கமோகங்களை - அராகமாதி - திரும்ப

உண்ணிருவிகற்பமாகப் பார்க்கும் வித்தியாதத்துவத்திற் பின்கோத்தவிராகதத்துவமுதற் புத்திதத்துவச சுவப்பிரகாசமந்தமாகியதத்துவங்கள்—உள்ளத்தறிவினுக்கு - ஆத்துமாவின் எதிர்முகசிற்சத்திக்கு—தரும் - கொடுக்கும் (திரும்பத் தன்னொடு பிரித்தற்கரிதாகிய சுகமுதலியவற்றைத்தனது சுகாதிவேதனாபூர்த்திக்குறிப் போகத்தோ டெதிர்முகசிற்சத்தி முன்சொல்லியபடிக்குத் திரும்பியமுக சிற்சத்திக்குக் கொடுக்கும்; அதுமுன்சொல்லியபடி யனுபவிக்கும்.)—(அந்தவனுபவம்) தன்வேதனையாங்காட்சி - சுவசம்வேதனப் பிரத்தியக்ஷம்—(பலவிதமாயிருக்கின்ற சுத்தாவத்தைகளைச் சுருக்கிக் கீழாலவத்தை முதலவத்தைகளிற் சாக்கிராவத்தைமுதலைந்தையுந் தனது சாக்கிரமுதலைந் தவத்தைகளினாலே சயம்பண்ணுஞ்சுத்தாவத்தையிற் சாக்கிரமாவது, ஆசனப்பிராணாயாமங்களைப் பண்ணியிந்திரியங்களைச் சத்தாதிவிஷயங்களிலே நின்றுந் திருப்பித் தன்வசமாக நிறுத்தலாகிய பிரத்தியாகாரம்;

சொப்பனமாவது சாலம்ப சிவயோகத்திற்சொரூப சிவரூப சகள சகளாகள சாகாரசிவனிடத்திற் பிராகிருத மனசைவைத்துநிறுத்தலாகிய தாரணை; திரும்ப நிராலம்ப சிவயோகத்திற் சுரூப சிவரூப நிட்கள நிட்களாதீத நிராதார நிராகார சிவனிடத்தின்முறைமையிற் பிராகிருதமனசை நிருவிஷயமாய்ச் சுவலீனமாயிருக்கும்படிபண்ணித் தியானத்தினெடுப்புக்குள்ளும்போய்த் தாக்குஞ் சிவசத்தியாகிய மனசினால் விளங்கியதனது சிற்சத்தியாகிய மனசைச் சின்மாத்திராத்மாவில் வைத்துச் சிவசத்திக்கொப்ப விரித்துத் தியேயசிவத்தில் வைத்தலாகிய தாரணையுஞ் சுழுத்திக்குள்ளுந்தாகுஞ் சொப்பனமாம்;

சுழுத்தியாவது, சவிகற்பமாயு நிருவிகற்பமாயும் அந்தநால்வகைச்சுவரூப சிவரூப விருசிவன்களை முறைமையிற் சிந்தனைபாவனை பண்ணுவதாகிய வங்கசிவயோகமென்கிற தியானம்,

துரியமாவது, தியானத்தசைவறுதலாகிய வங்கசிவயோகமென்கிற சமாதி;

துரியாதீதமாவது சமாதிசாமர்த்தியத்தினால் முறைமையிற் சவிகற்பமாயு முள்ளற்ப சவிகற்ப நிருவிகற்பமாயு மந்த நால்வகைச் சுவரூப சிவரூப சிவப்பிரத்தியக்ஷமாகுஞ் சுவரூப சிவரூப சிவாபரோக்ஷமென்கின்ற சுவரூப சிவரூப சிவசாக்ஷாத்காரமாகிய வங்கிசிவயோகம்.

இப்படிச்சிவயோகமுறைமைசுருக்கியிருத்தலால்) சமாதியான் மலங்கள்வாட்டி - சமாதிசாமர்த்தியத்தினால்மலமாயாகன்ம சாமார்த்தியங்களைத் தடுத்து — பொருந்தியதேசகாலவியல் பகல்பொருள்களெல்லாம்—தானிராநின்றவிடந் தானிராநிற்குங்கால மிந்தத்தேச காலங்களினது முறைமையை நீங்கியு நீங்காமலுமிருக்கின்ற சிவமுதலநித்தியபதார்த்தமுதற் பதார்த்தங்களையெல்லாம்—இருந்து- தானிருந்தவோரிடத்திருந்து—

உணர்கின்றஞானம் - சாலம்பநிராலம்ப சிவயோக முறைமையிற் சவிக ற்பமாயு முள்ளற்ப சவிகற்ப நிருவிகற்பமாயுஞ் சாக்ஷாற்கரியாநின்ற சா க்ஷாற்காரம்—யோகநற்காண்டலாமே - யோகக்காட்சியென்கிற யோகப் பிரத்தியக்ஷமாமே (அந்தவிந்தச்சுவசம்வேத்தியமாம் பராநுபூதி பரியா யபரசம் வேதநாகார சிவரூபசிவாநுபூதி விஷயவூகமாகிய சுவத்தை விஷ யீகரித்துவருஞ் சுவசம்வே தநரூபச் சுவரூப சிவாநுபூதிச் சுவாநுபூ திப் பிரத்தியக்ஷமுமாகுமே.) எ-று. (எ)

அநுமானப்பகுப்புணர்த்துகின்றார்.

பக்கமூன்றின்மூன்றேதுவுடையபொருளைப்பார்த்துணரத்
தக்கஞானந்தன்பொருட்டாம்பிறர்பொருட்டாமனுமானந்
தொக்கவிவற்றாற்பிறர்தெளியச்சொல்லலாகுமச்சொல்லு
மிக்கவன்னுவயத்தினொடுவெதிரேகச்சொல்லெனவிரண்டாம்.

இ-ள். பக்கமூன்றின்-பக்கஞ் சபக்கம் விபக்கமென்கிற மூன்றினு ள்—(மலையுலகுமுதலியபக்கத்தின்) உடையபொருளை-அந்தப்பக்கத்தினது சாத்தியதன்மமாகச் சாதிக்கப்படு மக்கினிகர்த்தாமுதலிய பதார்த்தங்க ளை—பார்த்துணர - உணர்ந்தறிய—மூன்றேது - இயல்பேது காரியவேது அநுபலத்தியேதுவெனக் காரணவேதுத் தன்மவேது ஆகமவேது முத லியவேது பேதங்களையுந் தோற்றுவிக்குமேதுமூன்று—(தன்பொருட்டனு மானம் பிறர்பொருட்டனுமானமென வனுமான மிருவிதமாதலால்) தக் கஞானம் - சொல்லியமூன்றேதுவினது தகைமைபொருந்திய தனது சிற்சத்தி—தன்பொருட்டாம் - தன்பொருட்டனுமானம்—பிறர்பொருட்டா மனுமானம் - பிறர்பொருட்டனுமானம்—தொக்கவிவற்றால் - மூன்றுபக் கத்தோடு கூடின மரியாதைபொருந்திய முன்சொன்ன மூன்றேதுக்க ளால்—பிறர்தெளிய - பிறரது சிற்சத்தி யனுமானம் பிரகாசித்துப் பிறர் மறைந்த அக்கினியீசரன்முதலிய பொருள்களையறிய—சொல்லலாகும்- பிரதிஞ்ஞை எது திருட்டாந்தம் உபநயம நிகமனமென்னும் பஞ்சாங்கத் தைப் படித்தலாகும—அச்சொல்லும் - அந்தப்படனமும்—மிக்கவன்னுவ யத்தினொடு வெதிரேகச் சொல்லென விரண்டாம் - மிக்கவன்னுவயச சொல்-சாதனசாத்தியங்களினது, மேன்மையாகிய வுண்மையைச்செப் புதல்—வெதிரேகசசொல்-மாறியில்லாமையைச் சொல்லுதல், எனவிரண் டுவிதமாம். எ-று. (அ)

பக்கமுதன் மூன்றினது பகுப்பிலக்ஷண முணர்த்துகின்றார்.

மூன்றுபக்கம்பக்கநிகர்பக்கநிகரில்பக்கமெனத்
தோன்றும்பக்கந்துணிபொருளுக்கிடமாமுவமைநிகர்பக்க
மான்றபொருள்சென்றடையாதவிடமாநிகரில்பக்கமுத
லேன்றவிரண்டும்பொருளுண்மைக்கிடமாமொன்றுபொருளின்றாம்.

இ-ள் மூன்றுபக்கம் - பக்கமூன்றுவன—பக்கநிகர்பக்க நிகரில்பக்கமெனத் தோன்றும்-பக்கஞ் சபக்கம் விபக்கம் எனவெளிப்படும்—(மூன்றினுள்) பக்கந் துணிபொருளுக்கிடமாம் - சாதிக்கப்படுவதாகிய வன்னியீசுரன்முதலிய பதார்த்தத்துக்குத் தானமாகிய மலை யுலகுமுதலிய பொருளாம்—நிகர்பக்கம் - சபக்கம்—உவமை - திருட்டாந்தத்தானமாகிய பாகசாலை குடமுதலாகிய விடமாம்—நிகரில்பக்கம் - விபக்கம்—ஆன்ற பொருள் சென்றடையாதவிடமாம் - மேம்பட்ட அந்தச்சாத்தியசாதனங்களாகிய அக்கினி தூமமுதலிய பதார்த்தங்கள்போய்ப் பொருந்தாத மடுமுதலிய தானமாம்—முதலேன்றவிரண்டும் - முன்பொருந்திய பக்க சபக்கங்கள் இரண்டும்—பொருளுண்மைக்கிடமாம் - சாத்தியசாதனங்களினதுண்மைக்குத் தானமாம்—ஒன்று - விபக்கம்—பொருளின்றாம் - சாத்தியசாதனங்களில்லாததாம. எ-று. (கூ)

ஏதுமூன்றினது பகுப்பிலக்கண முணர்த்துகின்றார்.

ஏதுமூன்றுமியல்புகாரியத்தோட னுபலத்தியிவை
யோதினியல்புமாமரத்தைக்காட்டலுறுகாரியப்புகைதன்
றுதியானவனலகாட்டலாகுமனுபலத்தியது
சீதமின்மைபனியின்மைகாட்டல்போலுஞ்செப்பிடிலே.

இ-ள். ஏதுமூன்றும் - ஏதுக்கள் மூன்றுவகையாயிருக்கும்— இவை-அவையாவன—இயல்பு - இயல்பேது—காரியத்தோடு - காரியவேதுவோடுகூட — அனுபலத்தி - அனுபலத்தியேது [இயல்பு-இயற்கை, காரியம்-பண்ணப்படுவது, அனுபலத்தி-ஞானபாவம்] —(கிரமத்திலே யுதாகரிக்கின்றார்) ஓதினியல்பு - சொல்லிய வியல்பேதுவாவது—மாமரத்தைக்காட்டல் - இது மாமரமென்கையா லென்கிறவேதுவான் மனசு குதிரைமுதலிய பிறவற்றிற் செல்லாமல் இயற்கையாக மாமரத்திற் செல்லுதலான் மாவென்கை மரத்தைக்காண்பிக்குமேது—உறுகாரியம - உற்றகாரியவேதுவாவது—(மலையிதுவன்னியுடைத்துப் புகையுடைத்தாதலா லென்று) தன்றுதியானவனல்காட்டலாகும் - தனக்குக்காரணமாகிய வன்னியைக்காண்பிப்பதாகும்—புகை - தூமவேது—அனுபலத்தியது- அனுபலத்தியேதுவாவது—செப்பிடிலே-சொல்லுமிடத்து—(பனியில்லை பனிஞானபாவத்தினாலென்று) பனியின்மைகாட்டல்-பனியினதில்லாமையைக் காண்பிக்கும்—சீதமின்மைபோலும் - சீதமின்மையால்வரும் பனிஞானபாவமாகிய வேதுப்போலும். எ-று. (க0)

முன்சொல்லிய வன்னுவயவெதிரேக லக்கணங்கூறுகின்றார்

புகையாலனலுண்டடுக்களைபோலென்னப்புகறலன்னுவயம்
வகையாமனலில்லாவிடத்துப்புகையின்றாகுமலரிநெடு
முகையார்நீரிற்போலென்றுமொழிதல்வெதிரேகச்சொலிவை
தொகையாருறுப்பைந்தொடுங்கூடச்சொல்லுவாருமுளர்துணிந்தே.

இ-ள். (இந்தமலையில்) அனலுண்டு - அக்கினியுண்டு—புகையால்-தூமமுடையதாதலால்—(எங்கெங்கேபுகையுண்டு அங்கங்கேயனலுண்டு) அடுக்களைபோலென்னப் புகறலன்னுவயம்-பாகசாலைபோல என்று சொல்லல் அன்னுவயச்சொல் — வகையாமனலில்லாவிடத்துப்புகையின்று குமலரிஞெடு முகையுயார்நீரிற்போலென்று மொழிதல் வெதிரேகச்சொல்-(எங்கெங்கேயக்கினியில்லை அங்கங்கேபுகையில்லை) மடுவிற்போல என்றுசொல்லுதல் வெதிரேகச்சொல்— இவை - அன்னுவயச் சொல் வெதிரேகச்சொல் இவைகளை— தொகையாருறுப்பைந்தொடுங் கூடச்சொல்லுவாருமுளர் துணிந்தே - முன்சொல்லிய மூன்றுறுப்பினோ டிரண்டுறுப்புக்கூட்டிக் கூட்டநிறைந்த பஞ்சாங்கங்களோடுங்கூட நிச்சயம்பண்ணியுரைப்பாருமுளர். எ-று.

அதுவருமாறு:——மலையிதுவன்னியுடைத்து, இது பிரதிஞ்ஞையென்கிற அவயவம்; புகையுடைத்தாதலால், இது ஏதுவென்கிற அவயவம், எங்கெங்கே புகையுண் டங்கங்கே வன்னியுண்டு, எப்படி யடுக்களை, இதுதிருட்டாந்தமென்கிற அவயவம்; அப்படியிந்தமலையும் புகையுடைத்து, இது உபநயமென்கிற அவயவம்; ஆகையால் அப்படிவன்னியுடைத்து, இதுநிகமனமென்கிற அவயவம். இப்படி யன்னுவயத்திலைந்துறுப்புங்காண்க.

மலையிதுவன்னியுடைத்து, இதுபிரதிஞ்ஞையென்கிற அங்கம்; புகையுடைத்தாதலால், இதுவேதுவென்கிற அங்கம்; எங்கெங்கேவன்னியில்லை அங்கங்கே புகையில்லை, எப்படி மடு, இது திருட்டாந்தமென்கிற அங்கம்; இஃதப்படியன்று, இதுஉபநயமென்கிற அங்கம்;ஆகையால் அப்படியன்று, இதுநிகமனமென்கிற அங்கம். இப்படிவெதிரேகத்திற் பஞ்சாங்கமுமறிக. (கக)

பின்னுங்காண்டன்முதலியமூன்றினுமூன்றனுமானமுணர்த்துகின்றார்.

போதுநாற்றத்தாலறிதல்பூர்வக்காட்சியனுமான
மோதுமுரையாலறிவினளவுணர்தல்கருதலனுமான
நீதியான்முற்கன்மபலனிகழ்வதிப்போதிச்செய்தி
யாதியாகவரும்பயனென்றறிதலுரையாலனுமானம்.

இ-ள். (இவ்வழியினதொருபுறத்துத் தாழைப்பூவுண்டு பூருவங்கண்டுமுகந்த தாழைப்பூமணத்துக்கொத்த சாதியமணம் வீசலாலென்று) போது - புட்பத்தை—நாற்றத்தால்-மணத்தால்—அறிதல்-* பூர்வக்காட்சியனுமானம்-முன்னும் பின்னும்பிரத்தியக்ஷயோக்கியப்பொருளையுணர்த்துதலாற்-பிரத்தியக்ஷானுமானம் (இது தன்மானுமானந் திருட்டானுமானமென்றுமாம்)—(கமடத்துச் சாத்திரப்பொருள் போதிக்கு முதிர்ந்தவார்த்தை மானசப்பிரத்தியக்ஷத்திற்றோற்று முதிர்ந்த புத்திபூர்வமாய்

வருதல்கண்டு, இவன் முதிர்ந்த புத்திமான் சாத்திரப்பொருள் போதிக்கு முதிர்ந்தவார்த்தைவசனித்தலால் நம்போல்வாரிலொருவன்போலென்று) பிறனுதுமுரையா லறிவினளவுணர்தல் கருதலனுமானம் - (பிறரறிவு யோகிக்குமாத்திரமன்றி ஒருவர்க்கும் பிரத்தியக்ஷமன்றாதலாற்) புத்தி பூருவமாய வார்த்தைவருமென்று அனுமிதித்தறிந்த வறிவினதுயர்ச்சியை யனுமிதித்தல் அனுமானுனுமானம் (இதுகாரியானுமானம் சாமானிய திருட்டானுமான மென்றுமாம்)—இப்போதுநிகழ்வது - (முன்சொன்னமுறைமையிற் புத்தியிலிருக்கும் போசககன்மநிமித்தமாக உண்டாகியபுறப்போக்கியப்பொருள் முன்னாகப் புத்தியில்) இப்போதுண்டாகாநின்ற சுகதுக்கமோகங்கள்—நீதியான்முற்கன்மபலம் - முறைமையின் முந்தியசன்மங்களிற்செய்த புத்தியிற் சஞ்சிதகன்மத்தி லெடுத்துச்சேர்த்த பக்குவப்பிராரத்தகன்மத்திற் போசககன்மநிமித்தமாய முதற்காரணமாகிய போக்கியகன்மபரிணாமமாகிய பலம் — (சுகதுக்கமோகபலங் கன்மகாரியமென்றாகமஞ் சொல்லுதலால்)இச்செய்தியாதியாக - (பிராரத்தம் புசிக்குமிடத்துவரும்) இவ்வாகாமியகன்மங் காரணமாக—பயன் - சுகதுக்கமோகங்கள்—வரும் - (சொர்க்க நரகங்களிலேயுஞ் சொர்க்கநரகசேடமாகிய பூலோகத்திலேயும் இனிமேல்) வந்துபொருந்தும்— (சுகதுக்கமோகபலகாரணங் கன்மமென்றாகமஞ் சொல்லுதலால்) என்றறிதலுரையாலனுமானம் - இவ்விரண்டனுமானமும் ஆகமானுமானம் (கிரமத்திலேகாரியானுமானமென்றும் காரணானுமானமென்றும் சொல்லப்படும். திரும்ப விரண்டுஞ் சாமானியதிருட்டானுமானமென்றும் சொல்லப்படும்.) எ-று. (கஉ)

ஆகமத்தினது பகுப்பிலக்கண முணர்த்துகின்றார்.

அனாதியேயமலனாயவறிவனூலாகமந்தான்
பின்னிமாறின்றிப்பேணுதந்திரமந்திரந்தான்
மனாதிகளடக்கித்தெய்வம்வழிபடும்வாய்மையாகுந்
தனாதியீறிலாதான்றன்மையுணர்த்துவதுபதேசந்தான்.

இ-ள். ஆகமந்தான் - சத்தப்பிரமாணந்தான்— அனாதியேயமலனாய- அநாதிமலமுத்தசிவனாகிய—அறிவனூல் - சர்வஞ்ஞனதுசாத்திரம்—(அந்தவாகமந் தந்திரகலையென்று மந்திரகலையென்று முபதேசகலையென்று மூன்றுவிதமாம்; மூன்றினுள்.) தந்திரம் - தந்திரகலையாவது (சரியாகிரியாபாதப்பகுப்பாதலால்)—பின்னிமாறின்றிப்பேணல்- (சத்தசாமர்த்தியம் அர்த்தசாமர்த்தியம் வஸ்துசாமர்த்தியங்களாற்) பின்முன் னாகமார்த்த விரோதமின்றிச் சரியா கிரியா கிருத்தியம் போதிப்பது—மந்திரந்தான்- மந்திரகலையாவது (யோகபாதப்பகுப்பாதலால்)—மனாதிகளடக்கி- ஆசன மந்திரசெபத்தோடு பிராணாயாமம் பிரத்தியாகாரந் தாரணை யிவைகளாற்

சித்தேந்திரியங்களைநிறுத்தி — தெய்வம்வழிபடும்வாய்மையயாகும் - சுத்தபஞ்சாக்ஷரசெப சிவத்தியான சிவசமாதி சீவன்முத்த சிவசாக்ஷாற்காராங்காங்கியோகங்களை யுள்ளமுறைமை போதிப்பதாகும் — உபதேசந்தான் - உபதேசகலையாவது — தனுகியீறிலாதான்றன்மையுணர்த்துவது - (பசு பாச பதார்த்தங்களினது இலக்கணங்களோடுகூடத்) தனதுற்பத்தி நாசங்கள் காரணவிலக்கணங்களைப் போதிப்பது. எ-று. (கரு)

காண்டன்முதலிய வளவைகளினிலக்கணங்களைக்கூறி
யனுமானப்பிரமாணத்தில்வரு மாபாசங்களைச்
சொல்கின்றார்.

ஈண்டுப்பக்கப்போலிநான்கேதுபபோலியொருமூன்றும்
வேண்டுமெழுமூன்றுவிளங்குமுவமைப்போலியீரொன்பான்
காண்டுந்தோல்வித்தானமிரண்டிருபத்திரண்டாங்கருதிலிவை
யாண்டுமொழிவரிவையெல்லாமளக்கிலறுபத்தைந்தாகும்.

இ-ள். ஈண்டு - அனுமானப் பிரயோகம்பண்ணுமிடத்து — பக்கப்போலிநான்கு - (முன்சொன்ன பக்கம்போலத் தோன்றி யல்லவாய்ப்போம்) சபக்கமாம் நான்கு — எதுப்போலியொருமூன்றும - (முன்சொன்ன வேதுப்போலத்தோன்றியல்லவாய்ப்போ) மேதுவாபாச மூன்றும — (அத்தமூன்றுந்தானே) எழுமூன்றுமேவேண்டும - இருபத்தொன்றாக விரும்பப்படும — விளங்குமுவமைப்போலி - (முன்சொன்ன திருட்டாந்தம்போலத் தோன்றி யல்லவாய்ப்போம) திருட்டாந்தாபாசம் — ஈரொன்பான்களேடும் - பதினெட்டாகப் பார்ப்போம — தோல்வித்தான மிரண்டு - நிக்கிரகத்தான மிரண்டு — கருதில் - விசாரிக்கில் — இவை - இந்த நிக்கிரகத்தானங்கள் — இருபத்திரண்டாம் - * ஆண்டுமொழிவா - இவற்றின் பேருஞ் சொல்வார்கள் — இவையெல்லாம் - முன்சொல்லியபக்கப்போலிமுதலியவெல்லாம — அளக்கில் - பகுப்புத்தொகை பண்ணிப் பார்க்கில் — அறுபத்தைந்தாகும் - அறுபத்தைந்தாம. எ-று.

இவற்றிற்குதாகரணங்கள் காட்டில் விரியும். திருமறைஞானதேசிகரது விரிந்தவுரையில் முதிர்ந்தோர்காண்பிக்க ஒருபிரகாரங்காண்க.

இப்படி அளவைகளினது, லக்ஷணமறிவிக்கப்பட்டபடியால்; நேத்திரமுதலிய விந்திரியவிளக்கு, புகைமுதலிய காரியலிங்கவிளக்கு, சிவாகமமுதலிய சத்தவிளக்கு, இந்தமூன்றுவிளக்கிற்பின்முன்கோத்த சிவசத்திவிளக்கு, இந்நான்குவிளக்குக்களோடு யிளக்கவிளங்குஞ்சம்பந்தவதியாகுஞ் சீவாத்மசிற்சத்தியுஞ் சீவன்முத்தாத்ம சிற்சத்தியுந் தனித்தனியிந்திரியப் பிரத்தியக்ஷப்பிரமாணமென்றும், அனுமானப்பிரமாணமென்றுஞ், சத்தப்பிரமாணமென்றுஞ், சீவன்முத்தாத்ம சிற்சத்திமாத்திர

யோகிப்பிரத்தியக்ஷப் பிரமாணமென்றந் தடத்தலக்ஷணமாமுபாதியால் நான்கா யுள்ளொரு சுவரூபலக்ஷணப் பிரமாணமாயிருக்கும்.

ஆதலால், அந்த நான்குவிளக்குந் தனதுதனது சாமர்த்திய முறைமையின் மலவிருளினது வாசனைபோகச் சீவாத்ம சிவன்முத்தாத்மசிற்சத்திப்பிரமாணத்தை விளக்குமுபகாரத்தால், அவர்களைக்குறித்து உபகாரோபகாரப்பிரமாணம். சிவசத்தி சிவனைமாத்திரங்குறித்து முக்கியப்பிரமாணம்;

நிருபாதிகமாய் நிரபேட்சமாயிருக்கும்படி திரும்பத்திரும்பச் சிவசத்திவிளக்குவிரும்பாமலொருங்கே சிவசத்திவிளக்கினால்விளக்கப்பட்டுச்சுவயம்பிரகாசமாய் நிரதிசயமாய்ச் சிவன்முதற் சர்வபதார்த்தப்பிரத்தியக்ஷியாயிருக்கின்ற சிற்சத்திப்பிரமாணமொன்றுமாத்திரமுடையனாய், நிரபேட்சனாய்ச் சிவதுல்லிய சிவனாயிருக்கின்ற முத்தாத்மாவைக்குறித்துச் சிவசத்தியுபகாரோபகாரங்களினாலும் பிரமாணமன்று, சிவனுக்குமப்படி வேறொரு சிவசத்தி பிரமாணமாய் வருமதனா லனவத்தையாமாதலால்.

இப்படியிருக்கச் சிலர் ஆத்மாவுக்குப் பெத்தாவத்தையிற் சிற்சத்தியினது வித்தியாதத்துவ கலுஷிதமமிசம் பிரமாணரூபம், வித்தியாதத்துவ கலுஷிதமல்லாத அம்சம் பிரமாதிருரூபம், அதனான் முத்தியவத்தையிற் பிரமாதிருரூபமாத்திரமே பிரமாணரூபமில்லை யாதலான் முத்தாத்மாவுக்குச் சிவனைப் பார்க்குமிடத்துச் சிவசத்தியே பிரமாணமென்றும்: சிலர் ஆத்ம முத்தாத்மாக்க ளிருவர்க்குஞ், சிவசத்தி முக்கியப்பிரமாணமென்றும், சங்கிராந்திவாதி, ஆவேசவாதி, பிரயோச்சியகர்த்திருத்துவவாதி, மதமென்கிற மும்மதப் பிசாசாவேசிகளாய்ப் பிரஞ்ஞையின்றிப் பிரலபிக்கின்றார். அவர்கள், சுத்தசிவசித்தாந்த மந்திரவாதிகளால், அந்தப் பிசாசோடப் பிரஞ்ஞை பெறுவார்கள்.

அந்த மந்திரவாதிகள் மந்திரோபதேசமாவது, வித்தியாதத்துவகலுஷிதச்சுவரூபம்; பிரமாணலக்கணமென்று பேசுதலன்றன்று. அது சிவசத்திக்கில்லாமையாற் சிவசத்திப்பிரமாணமே யில்லையாமென்று சிவனுக்கும் முத்தாத்மாவுக்கும் பிரமாணக்கண்ணில்லாமையா லந்தகர்களாய் விடுவார்களாதலால், வேறொரு பிரகாரத்தினாலே சிவசத்திப்பிரமாணமுண்டென்றால், அது, சிவனுக்கு முத்தசிவன் முதற்பொருள்களைப் பார்க்குமிடத்துப் பிரமாணம்; முத்தாத்மாவாகிய சிவனுக்குச் சிவன் முதற்பொருள்களைப்பார்க்குமிடத்துப் பிரமாணமன்று. ஆயிரம் விளக்குவந்தாலும் அந்தகனானவன் அந்தவிளக்குக்கொண்டு, பொருள்களைப் பார்ப்பதின்று; அந்தவிளக்கினால் விளங்கியகண்ணுள்ளவன் அந்தக்கண்கொண்டு விளக்கையும்பொருள்களையும் பார்ப்பன்.

பின்னுமொன்று, சிவசத்தி சிவனுக்குக்கண்: அது பிறர்கண்ணாத லால் முத்தாத்மா அதுகொண்டு சிவன்முதற்பொருள்களைப் பாரான்; பார்ப்பானாயினும் பார்த்தற்கிரியைப்பிரமிதிப்பிரயோசனம் அவனதன் றாம். சிவாநந்தியவைக்கியத்தினாலந்தப்பிரயோசன மவனதாமென்னி லதுகூடாது, சிவஞானைக்கியஞ் சிவமானசாதியாகிய சிவசாதிருச் சியம் வேறொன்றன்றென்று சித்தாந்தசிகாமணி பிரமாணதீபிகை முத லானவைகளிலே அனேகப்பிரகாரத்தாற் சாதிக்கப்பட்டிருக்கையால்; சிவனுஞ் சிவசத்தியுஞ் சிவசத்திவிளக்கினால் விளங்கித் திரும்ப அவ்வி ளக்கு விரும்பாமலிருக்கின்ற முத்தாத்மாவினது, பிறபொருளறிவாகிய வெதிர்முகசிற்சத்தியால் அறியப்படுந்தன்மையின்றி, அறியும்பொருளாக வறியப்படும்.

முத்தாத்துமாவினது தற்பொருளறிவாகிய திரும்பியமுகசிற்சத்தியா லறியப்படாது. அறியப்படுமாகில்; திருபசரிதவைக்கியம் வருமாதலால் கௌதமப் பிரசங்கம்வந்து, சித்தாந்தமன்றி வேதாந்தமாய்விடுமாதலால், "பசுந்பாசாம்ச்சமுக்தானாந் பாலயிபதிருக்யதே" என்பதில், முத்தாத் மாக்களை யிரட்சிக்கிறாரென்னும் ஏகதேசவசனத்துக்கும், பதமுத்தராகிய அபரமுத்தர்களையென்றர்த்தமாதலாற் பரமுத்தாத்ம சிவசிற்சத்தி திரும்பச் சிவசிற்சத்திவிளக்கு விரும்பாமற் சுவயம்பிரகாசமாய்ச் சுவதந் திரமாய்ச் சுவரூபப்பிரமாணமாயிருக்குமென்று சித்தாந்தமாகையால், சிவன்முதற் சிவாந்தமாவந்தமான சிற்பொருள்களுக்கெல்லா முன்சொ ன்னமுறைமையிற் பிரமாதிருரூபம்பிரமாணரூபம பிரமிதிரூப மூன்றுஞ் சொரூபந்தானே தடத்தமன்று; ஆதலால், அவரவரெதிர்முகியாயிருக்குங் கரணக்குறிச்சிற்சத்தியேபிரமாணம், பிரமிதி பிரமாணமன்று.

அது பிரமாணவியாபாரக்குறிப் பிரமாணபலமாதலால், பிரமிதிதா னே பிரமாணம்; பலமேதென்னில்பிரமாதிருகோடிப்பிரமிதிபிரமாணம; பிரமேயக்குறி விஷயகோடிப்பிரமிதிதான், விஷயவியாபாரந்தான், பல மெனும்பிறர்மதமும், அதுவன்றி (நாதவிருத்தி வித்தியாராகாதிகளாற்கல க்குணடசவிகற்பநிருவிகற்பப் பிரமிதிதானேபரோன்முகசிற்சத்தியதுதா னே பிரமாணம்.) ஆனேபாதானேபேக்ஷாபுர்த்தியே பிரமாணபலப்பிர மிதி (நாதவிருத்தி வித்தியாராகாதிகளாற் கலக்குண்ணாத சுவயோன்முக சிற்சத்தியே பிரமாதிருரூபம்)பிரமாதிருரூபமாநிரஞ்சொரூபம், முத்தியி லிருப்பது. பிரமாணப்பிரமிதிரூபமிரண்டுந் தடத்தம; முத்தியிலில்லை; சம்சாரத்திலிருப்பது.

முத்தாத்மாவுக்குச் சிவன்முதற்பொருள்களை யறியுமிடத்துச் சிவ சத்தியே பிரமாணமென்னும், பிறர்மதமும் பேசாமற்போயின.

திரும்ப, ஊகித்துப்பார்க்குமிடத்துச் சிவசத்தி முத்தாத்ம சிவன்மு தற்பிறபொருள்களைப் பார்க்குமிடத்துச் சிவனுக்குப்பிரமாணம். தற்பொ

ருளாகிய தன்னைப்பார்க்குமிடத்துச் சிவனுக்குச் சிவசத்தி பிரமாணமன்று, அதுபிறபொருள் அறிவாதலால் சிவன் சத்திக்குப் பின்னைப்பொருளாய்ப்போவர் ஆதலின். சிவன் தன்னறிவாகிய தனது சிவரூபசிற்சத்திப்பிரமாணத்தினுற், பிறவறிவாகிய தனது சத்திரூபமென்கின்ற சிவச்சுவரூபப்பிரமேயத்தைத் தற்பொருட்பிரமாணம் பிறபொருட்பிரமாணமாகும் அந்தவிரண்டிற்கும் அந்தராத்ம சித்துரூப சிவரூபப் பிரமாதாவாயிருந்தறிவர். இந்தநீதி முத்தாத்ம சிவன்முதற் சிற்பொருள்களுக்குஞ் சமமாகும்.

ஆகையாற், சீவன்முத்த சித்தசிவயோகி நிருபாதிக சிவசத்திவிளக்கில் விளங்கிய தனது சிற்சத்திப் பிரத்தியக்ஷப்பிரமாண சிவப்பிரமாணத்தில் உற்பவித்த வபரோக்ஷசாக்ஷாற்கார சிவலக்ஷண லக்கிய நிபதித சிவயோகப் பிரத்தியக்ஷப்*பிரமிதியினுற் சிவனைப் பார்ப்பன்.

சீவன்முத்த சாத்திய சிவயோகி திவ்வியாதிதைவிக சிவாகம சத்தானுவித்தாத்தியாத்மிக சிவாகமசத்த விஷயவாசனுபூரித புத்திப்பிரகாசத்திரியிற்பற்றிச் சிவாகமப்பேர்பெறுஞ் சிவசத்திவிளக்கில் விளங்கிய தனதுசிற்சத்தி நேத்திர சிவாகமப்பிரமாண சிவப்பிரமாணத்திலுற்பவித்த, பரோக்ஷசத்தப்பிரமிதியினுற் சிவலக்ஷணக்கேள்விவழியாற் சிவனையறிந்து, தியானசமாதிபண்ணுவன்.

அறிந்தபின்னும் அவன் வாதிப்பிரதிவாதி விப்பிரதிபத்திகலகங்களால் வருஞ் சந்தேகம்போம்படி காரியலிங்க விஷயவாசனுபூரித புத்திப்பிரகாசததிரியிற்பற்றி அனுமானப்பேர்பெறுஞ் சிவசததிவிளக்கில் விளங்கிய சிற்சத்தி நேத்திரானுமானமான சிவப்பிரமாணத்தில் உற்பவித்த, பரோக்ஷானுமிதியினுற் பரீக்ஷித்துப் பரீக்ஷையினதேககோடியில் விழுந்தறிந்து தியானசமாதி பண்ணுவன். (௧௪)

அளவைமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௨.



# முதலாஞ் சூத்திரம்.

---

ஆகையாற் சாத்திரத்தினு லறியுமறிவிற் சந்தேகம்வாராதபடி அனுமானத்தாற் சிவனையறியுமுறைமையை யுணர்த்து கின்றார்.

ஒருவனோடொருத்தியொன்றென்றுரைத்திடுமுலகமெல்லாம்
வருமுறைவந்துநின்றுபோவதுமாதலாலே
தருபவனொருவன்வேண்டுந்தான்முதலீறுமாகி
மருவிடுமனாதிமுத்தசித்துருமன்னிநின்றே.

இ-ள். உலகமெல்லாந்தருபவனொருவன்வேண்டும்-சிவதத்துவமுதற் பிருதிவிதத்துவமீறாகுந் தத்துவ தாத்துவிகமாகிய வுலகொருகர்த்தாவை யுடையது,(இதுபிரதிஞ்ஞை; காரியத்தன்மையால், இதுவருவித்தவேது. உலகிதுகாரியமன்று, உமதேதுச்சுவரூபாசித்தம்; நமதேதுச்சுவரூபாசித்தமன்று. உலகு காரியம)—ஒருவனோடொருத்தியொன்றென்றுரைத்திடுமாதலாலே - சரீரத்தைப்பற்றி அசேதனமாகவு மொருவனோடொருத்தியொன்றென்று அனேகமாகவு மறையப்படுமாதலால்—வருமுறைவந்துநின்றுபோவதுமாதலாலே-இலதுளதாகி உளதிலதாகி, உற்பத்தித்திதி நாசமுறுமாதலால், இப்படிக் காரியத்துவ நிச்சயமாதலால், யாதொன்று யாதொன்று காரியம், அது கர்த்தாவையுடைத்து, எப்படிக்கடம், இது திருட்டாந்தம், அப்படியுலகிது காரியம், இது உபநயம், ஆகையால் அப்படியுலகிது கர்த்தாவையுடைத்து, இது நிகமனம்—(அந்தக்கர்த்தாவினதிலக்கணமெப்படியென்னில) தான்-அந்தக் கர்த்தாவானவன்—முதலீறுமாகிமருவிடும - சிவதத்துவமுதற் சுத்தவித்தியாதத்துவமீறாகுஞ் சாதாரண அசாதாரண சாதாரணாசாதாரணங்களாகிய தத்துவதாத்துவிக புவன சூக்குமதேக தூலதேக போக்கிய சுத்தாத்துவப்பொருள்களை சுத்தமாயையினின்று சிருட்டித்துத் திதித்துச் சங்கரித்து, ஸ்ரீமத். அனந்தேசுரத்துவாரத்தினாலே மகாசிருட்டியிற் காலதத்துவமுதற் பிருதிவிதத்துவமீறாகுஞ் சாதாரண அசாதாரண சாதாரணாசாதாரணங்களாகிய தத்துவ தாத்துவிக புவன சூக்குமதேக தூலதேக போக்கிய சுத்தாசுத்த அசுத்தாத்துவப்பொருள்களை அசுத்தமாயையிலேநின்றுஞ் சிருட்டித்துத் திதித்துச் சங்கரித்து, குணதத்துவத்துள்ளு, மத்தியப்பிரளயத்திற், பிரகிருதியின் அக்கிரத்து நிலயராகிய ஸ்ரீமத். ஸ்ரீகண்டநாதத் துவாரத்தினாலே மத்திய சிருட்டிதோறும் [அசாதாரண மகாப்பிரளயபரியந்தமிருக்குமென்றுகொண்டு] குணதத்துவமுதற் பிருதிவிதத்துவமீறாகுஞ் சாதாரண அசாதாரண சாதாரணாசாதாரண தத்துவ தாத்துவிக புவன திவ்விய

தூலதேகபோக்கிய வசுத்தாத்துவப்பொருள்களையும், பின்னுங்குணதத்துவத்துள் மத்தியப்பிரளயத்திற் பிரகிருதியின தக்கிரத்துநிலயராகிய பிரமவிட்டுணுத்துவாரத்தினாலேயும் பிரமாண்டத்துண்ணிலயராகிய பிரமவிட்டுணுத் துவாரத்தினாலேயும் சில திவ்வியாதிவ்விய தூலதேகபோக்கிய வசுத்தாத்துவப்பொருள்களையும் பிரகிருதியிலே நின்றுஞ் சிருட்டித்துத் திதித்துச் சங்கரித்து; முதனடுவீறுமாகி என்றுகொள்ளுதலான், முதலென்றுசொல்லுஞ் சிருட்டிகர்த்தாவாயும், நடுவென்றுசொல்லுந் திதிகர்த்தாவாயும், ஈறென்றுசொல்லுஞ் சங்காரகர்த்தாவாயும், பொருந்திடும்— (அதுவன்றிச் சுவபாவத்தினாலேயு மனந்தேசுரத்துவாரத்தினாலேயுந் திரோபாவகர்த்தாவுமாம். சுபாவத்தினாலேயு மனந்த ஸ்ரீகண்டாதித் துவாரத்தினாலேயும் அனுக்கிரககர்த்தாவுமாம். சரீரிகளே கிர்த்தியம்பண்ணுதலால் அசரீரியாயிருக்கின்றவுமது கர்த்தாவுக்குக் கிருத்தியம் எப்படிக்கூடும்? சத்தியம். மூர்த்தியிரண்டுவிதம், சலையென்றும, அசலையென்றும். சலையாயிருக்கின்றமூர்த்தி யவர்க்கில்லாதபடியினாலே) அனாதிமுத்தசித்துருமன்னிநின்றே-அசலையாகிய நித்திய முத்த சிற்சத்திமூர்த்தி பொருந்திநின்றே (தான் முதலீறுமாகி மருவிடுமென்று பொருட்புணர்ச்சி போதிக்க.) எ-று. (க)

உலகொருகர்த்தாவையுடைத்து, காரியமாதலால், உலகு காரியம்; "ஒருவனோடொருத்தியொன்றென் றுரைத்திடுமாதலாலும் வருமுறைவந்துநின்று போவதாதலாலும" என்றுகாரியத்தைச் சாதித்து அதனாற் கர்த்தாவைச்சாதித்தீர், அதுகூடாது. பிருதிவிமுதலுலகிற்றோற்றநாசங்காணேமென்று லோகாயதன் ஆருகதனிவர்கள்முதலோர் சொல்ல மறுத்துணர்த்துகின்றார்.

உதிப்பதுமீறுமுண்டென்றுரைப்பதிங்கென்னைமுன்னோர்
மதித்துலகநாதியாகிமன்னியதென்பரென்னி
லிதற்கியானனுமானத்தியெடேனிப்பூதாதியெல்லாம்
விதிப்படிதோற்றிமாயக்காணலான்மேதினிக்கே.

இ-ள். உதிப்பதுமீறுமுண்டென்றுரைப்பதிங்கென்னை-உலகுக்கு உற்பத்தியாதலு நாசமாதலு முள்ளனவென்று இசைப்பதேது— முன்னோர்-தர்க்கமுதற் சாத்திரமுணர்ந்தோர்—மதித்து-தர்க்கித்து நிச்சயம்பண்ணி—உலகு-பிரபஞ்சம்—அநாதியாகி-எப்போது மிப்படியிருப்பதாய்—மன்னியதென்பர்-நிலைபெற்றதென்று நிகழ்த்துவர்—என்னில்-என்று நீசொல்லில்—இதற்கு-நீசொல்லுமிந்த வார்த்தைக்கு—யான்-நான் (நீபிரத்தியக்ஷவாதியாகையினாலு மிதுபிரத்தியக்ஷசித்தமாகையாலும் பிரத்தியக்ஷப்பிரமாணமாத்திரமன்றி) — அனுமானத்தியெடேன்-அனுமானாகமப் பிரமாணங்களைத்தொடேன்—(பின்னை அறியுமாறெப்படியென்னில்) இப்பூதாதியெல்லாம்-பூதங்களை[யாதியாகக்] காரணமாகவுடைத்தாய்ப்பூதபரிணாமமாகிய

உடலூர்மரமல்லாமாமுதலிய இவ்வுலகிற்பொருந்திய பொருள்களெல்லாம்—விதிப்படிதோற்றி மாயக்காணலாம் மேதினிககே-பூமியின்கண்ணே கன்மமுறைமையில் ஈசுரசங்கற்பத்தினால் உற்பத்திநாசமாகப் பிரத்தியக்ஷப்பிரமாணமாகிய சிற்சத்திபொருந்திய நேத்திரத்தினாற் பார்த்தலால். எ-று. (உ)

உலகுக் குற்பத்திநாசமுளது, அஃதொருகர்த்தாவைவிரும்பாமல், இயல்பிலாமென்ன மறுத்துணர்த்துகின்றார்.

இயல்புகாண்டோற்றிமாய்கையென்றிடினியல்பினுக்குச்
செயலதின்றியல்புசெய்திசெய்தியேலியல்பதின்றா
மியல்பதாம்பூதந்தானேயியற்றிடுஞ்செய்தியென்னிற்
செயல்செய்வானொருவன்வேண்டுஞ்செயற்படுமசேதனத்தால்

இ-ள். இயல்புகாண்டோற்றிமாய்கையென்றிடில் - உபாதானகாரணத்திற்றோன்றி யொடுங்குவது, காரியப்பொருளினது, சுவபாவமென்று நீசொல்லில்—இயல்பினுக்குச் செயலதின்று - இயல்பாயிருக்கும்பொருளுக்கு ஒருபோதுண்டாய் ஒருபோதின்றாய்க் காரியப்படுந்தன்மையின்று—இயல்புசெய்தி-அப்படிக் காரியப்படுவது அப்பொருட்சுவபாவமென்று நீசொல்லில்—செய்தியேலியல்பதின்றாம்-காரியப்படுமாகில் அப்பொருட்சுவபாவமில்லையாம். (அப்படிச்சொல்லவேண்டுவதில்லை)— (செய்தி) யியல்பதாம்-உற்பத்திநாச யோக்கியமாகிய வியல்பில்லாதபொருள் சர்வசாமர்த்தியமுடைய கர்த்தாவினாலுந்தோற்றுவித்தொடுக்கப்படாது. ஆதலாற் காரியப்பொருளுற்பத்திநாசமாகு மோரியல்புடையது, ஈரியல்புடையதன்று. அப்படியாயி னுற்பத்திகாலத்து நாசம் நாசகாலத் துற்பத்தி, காணுதிருப்பதென்? உள்ளது தற்காலத் துற்பத்திரூபமாயும், நாசரூபமாயும், நாசோற்பத்திக ளோரியல்பாயிருக்கும்; பௌத்தனுக்குப்போலத் தற்காலத்திரியல்பாயிரா. அந்தவுற்பத்திநாசங்கள் காரியப்பொருள்களிற் காணப்படுதலாற் காரியமாய்ச் செயற்படும்பொருள் செய்பவனை விடாததலால் அந்தவுற்பத்திநாசங்கள் ஒருங்கே யொருகாலத்தோ ரியல்பாயிருந்தாலும் தனது தனது காரியவிளக்கங் காரியமறைதலாகுமுரூபந் தனது தனது கர்த்திருகாரக முதற்காரகங்களின்றி முதற்காரணத்தினின்றுந் தோன்றாது; ஆதலாற் கர்த்தாவைவிரும்புதல் காரியத்துக்குண்டு. சம்மதமே யிதெல்லாமுமக்குமாதலால்—செய்தி-காரியம்; சிருட்டி திதி சங்காரங்களை — பூதந்தானே- * (கர்த்தாவாய்) இயற்றிடுமென்னில் - பண்ணுமென்று லோகாயதபக்ஷனாயிருக்கும் நீசொல்லில்—(பூதங்கள்) செயற்படுமசேதனத்தால்-காரியமாகுஞ் சடமாதலால்—செயல்செய்வா னொருவன் வேண்டும்-பூதகாரியத்தினது தோற்றம் நிற்றல் போதற்றொழில்களைப் பண்ணுமொருகர்த்தாவை விரும்பும். எ-று. (௩)

பிரத்தியக்ஷப்பிரமாண கோசரமாகப் பூதங்கடாமே பொருள்களைத் தோற்றுவித்து நிற்பித்துப்போக்கும், சேதனனாகிய ஒருகர்த்தாவேண்டுவதில்லையென்னை, மறுத்துணர்த்துகின்றார்.

நிலம்புனலனல்கால்காணநிறுத்திடுமழிக்குமாக்கும்
பலந்தருமொருவனிங்குப்பண்ணிடவேண்டாவென்னி
லிலங்கியதோற்றநிற்றலீறிவையிசைதலாலே
நலங்கிளர்தோற்றநாசந்தனக்கிலாநாதன்வேண்டும்.

இ-ள். நிலம்புனலனல்கால் - பிருதிவி அப்புத்தேயு வாயுக்கள்—காண-பிரத்தியக்ஷமாக—(சரீராதிப்பொருள்களை) நிறுத்திடுமழிக்குமாக்கும்பலந்தரும்-ஆக்கும்-சிருட்டிக்கும்—நிறுத்தும்-திதிக்கும்—பலந்தரும்- அதனாற்போகத்தைக்கொடுக்கும்—அழிக்கும்-சங்கரிக்கும்—ஒருவன்- (அப்பிரத்தியக்ஷனாய்ச்சேதனனாய்) ஒருகர்த்தா—இங்கு-இந்தக்காரியத்தை—பண்ணிடவேண்டா-செய்யத்தக்கதில்லை—என்னில்-என்று நீசொல்லுகில் ("பூதாதி யீறுமுதலுந் துணையாகப் பேதாய் கிரியாகும" என்று சிவஞானபோதத்திருத்தலால் நிற்றலாகிய திதி தோற்றமீறாகிய சிருட்டி சங்காரங்களை முன்பின்காண்பியாதிராது. அப்படிப்பூதங்களிலிருக்குந்திதியுமப்படியென்று)— இலங்கியதோற்றநிற்றலீறிவை யிசைதலாலே- மணமிலுதித்த சிருட்டிதிதி சங்கார சம்பந்தமிவை பூதங்களுக்காரியமென்று கொண்டு அவற்றைத் தோற்றுவித்து நிறுத்திப் போக்கும்பொருட்டு—தனக்குத் தோற்றநாசமில்லா-*நலங்கிளர்நாதன்-சாட்குணணிய பரிபூரணனாயிருக்கின்ற கர்த்தா—வேணடும் - விரும்பப்படுவன். எ-று. (௪)

பௌத்தன் புத்ததேவதை குருவாயிருத்தன்மாத்திரமன்றி உலககர்த்தாவல்லன், பஞ்சகந்தங்களினது கூட்டத்தினாலுலகுண்டாம், கர்த்தாவேண்டுவதில்லையென்னமறுத்துணர்த்துகின்றார்.

சார்பினிற்றோன்றுமெல்லாந்தருபவனில்லையென்னிற்
றேரினில்லதற்கோதோற்றமுள்ளதற்கோநீசெப்பா
யோரினில்லதுவுந்தோன்றாதுள்ளதேதுதிக்கவேண்டா
சோர்விலாதிரண்டுமின்றிநிற்பதுதோன்றுமன்றே.

இ-ள். சார்பினிற்றோன்றுமெல்லாம்-பஞ்சகந்தங்களினது கூட்டவிசேடத்தாற் பூதமுதலாகிய பொருள்களெல்லாமுதிக்கும்—தருபவனில்லையென்னில்-சிருட்டிமுதற் கிருத்திய கிருத்தாய்முன் நீர்சொன்னமுறைமையனாகிய கர்த்தாவில்லையென்றுநீசொல்லிற் (கர்த்தாவுண்டில்லையென்பது பின்பேசுவோம். இப்போது நீரூபாதானவாதியன்றோ?)—தேரினில்லதற்கோ தோற்றமுள்ளதற்கோ நீ செப்பாய்-விசாரிக்கிற் றோற்றமுள்ளபொருட்கோ வில்லாதபொருட்கோ நீசொல்—ஓரில்-விசாரிக்கில்—இல்லு

துவுஞ்சொன்றதுள்ளதேனுதிக்கவேண்டா-இல்லாத முயற்கொம்புமுத லியவு முண்டாகா, உதித்துளதாயிருக்கின்ற கடபடாதியுமுண்டாகமா ட்டாவாம்—சோர்விலாதிரண்டுமின்றிநிற்பது-அப்படி யுள்ளதுமில்லதுமி ன்றி யுள்ளதாயிருப்பது—தோன்றுமன்றே-உண்டாகுந்தானே. எ-று.

அந்தச் சற்காரியவார்த்தையைத்தானே சமுத்தரித்து நிறுத்து கின்றார்.

உள்ளதுமிலதுமின்றிநின்றதொன்றுளதேலுண்டா
மில்லதேலில்லையாகுந்தோற்றமுமிசையாதாகு
முள்ளகாரணத்திலுண்டாங்காரியமுதிக்குமண்ணி
னில்லதாம்படங்கடாதியெழிதருமியற்றுவானால்.

இ-ள். உள்ளதுமிலதுமின்றி நின்றதொன்றுளதேலுண்டாம்-வியத்திருபமென்கிற காரியரூபத்தினாலே உள்ளதுமின்றிச், சத்திருபமென்கிற காரணரூபத்தினாலே இலதுமின்றி, இருப்பதொருபொருளுண்டாமாகில், அதற்பத்தியாம்—இல்லதேல் - இப்படியொருபொருளின்றேல்—இல்லையாகும்- * தோற்றமுமிசையாதாகும் - உற்பத்தியும்பொருந்தாதாகும—(பின்னைச் சித்தாந்தமெப்படியென்னிற் சொல்வாம்) உள்ளகாரணத்தில-காரியகாலத்தில வியத்திருபமாய்ச் சத்தாயிருக்கும முதற்காரணத்தில்—உண்டாங்காரியம் - காரணகாலத்திற் சத்திருபமாய்ச் சத்தாயிருக்கும காரியம—உதிக்கும்-உற்பத்தியாம்—(காரியங் காரணத் திலதுண்டாமென்னில்) மண்ணினில்லதாம்படம் -சத்திருபமாய் முன்னாதில்லாமையால், நாலேயெடாமல், மண்ணைக் குலாலன் எடுக்கும்படி முன்சூக்குமித்திருந்து இதுகாரணம் இதுகாரணமல்லவென்று நியமிக்குங் காரியமாகும—கடாதி-* இயற்றுவானால்- குலாலனால்—எழிதரும்- பிரகாசித்ததுண்டாம். எ-று. (௬)

முதற்காரணத்தின்முன்னிருந்த, காரியந்தோன்றுமென்றீர், அது நிமித்தகாரணமின்றித் தானே பிரகிருதியிற் றோன்றுமென்று சாங்கியன்சொல்ல மறுத்துணர்த்து கின்றார்.

ஒருபொருளொருவனின்றியுளதிலதாகுமென்னி
றருபொருளுண்டேலின்றாந்தன்மையின்றேனுண்டாய்
வருதலின்றிலதுகாரியமுதலுளதாகுமென்னிற்
கருதுகாரியமுமுண்டாய்த்தோற்றமுங்கர்த்தாவாலாம்.

இ-ள். ஒருபொருள்-காரியம்—ஒருவனின்றி - நிமித்தகாரணனையன்றி—உளதிலதாகுமென்னில் - முதற்காரணத்திற்றோற்றி யொடுங்குமென்று நீசொல்லில்—தருபொருள்-அந்தமுதற்காரண முற்பவிப்பித்த வஸ்து—உண்டேல்-உள்ளதேல்—இன்றாந்தன்மையின்று-(நாசத்திற்குக்காரண

மில்லாமையால்) நிலைபெற்றிருக்குந்தானே—இன்றேல்-நாசமானால்—உண்டாய்வருதலின்று- (நிமித்தமில்லாமையாற் காரணரூபமாய் இருப்பதன்றிக் காரியரூபமாய்த்) தோற்றுவதில்லை—முதலுளதாகும் - முதற்காரணமுள்ள பொருளாகும்—அலது காரியம்-அதிற்றோன்றுங் காரியஞ் சிப்பியிற்றோன்றும் வெள்ளிபோல ஆபாசமாயசத்தியமாம்—என்னில்- என்று நீசொல்லில (அதசத்தியமன்று)—கருதுகாரியமு முண்டாய்த் தோற்றமுங் கர்த்தாவாலாம-குற்றமற்ற பிரத்தியக்ஷப் பிரமாணமுதற் பிரமாணங்களினால் உள்ளபொருளென்று பரீக்ஷிக்கப்பட்டகாரிய முன் சூக்குமித்து முதற்காரணத்துள்ளதா யதினாற்பதியுஞ் செய்டவனாலாகும. எ-று.

பட்டாசாரியன் மதமாசங்கித் திரண்டு திருவிருத்தங்களான் மறுத் துணர்த்துகின்றார்.

காயத்தினழிவுதோற்றங்கண்டனமுலகிற்காணே
நீயித்தையுரைத்தவாறிங்கென்னெனினிகழ்த்துமுண்மை
மாயத்தவுலகம்பூநீர்தீவளிவானமாதி
யாயிற்றொன்றிலொன்றுதோன்றிநின்றழிதலாலே.

இ-ள். காயத்தி னழிவு தோற்றங் கண்டன முலகிற் காணேம்-(ஒருவனோடொருத்தி யொன்றென்றுரைத்திடுஞ்) சரீரமுதலிய பொருள்களினுற்பத்திநாசங் கண்டோம், பூமிமுதலிய சகத்திற்காணோம்—நீயித்தையுரைத்தவாறிங்கென்னெனில்—உலகுகாரியமாதலால் அதற்கொரு கர்த்தாவுண்டென்று நீர் சொல்லுவதேதென்று நீ சொல்லுகில்—மாயத்தவுலகம்-மயக்கத்தைப்பண்ணும் பிரபஞ்சம்—பூநீர்தீவளிவானமாதியாயில் - பிருதிவி அப்புத் தேயு வாயு வாகாசமுதற் பொருளாகில் (தானென்பதனை)—(சைவத்துக்குத் தன்மாத்திரையிற்றோற்றமீறதுநிற்க, நமக்குப்பொதுவும் உனக்குப்பொதுவன்றிச் சிறப்புமாகும் வைதிகமார்க்கத்தில்) ஒன்றிலொன்று தோன்றிநின்றழிதலாலே- ஆத்துமாவில் ஆகாசம் ஆகாசத்தில் வாயு வாயுவில்அக்கினி அக்கினியில் அப்பு அப்புவிற் பிருதிவி இந்தமுறைமையிலுண்டாயிருந்த முறைமையினாலொடுங்குமென்று சொல்லுதலாலே— (அந்தவுலகம்) உண்மைநிகழ்த்தும்-தனக்குத் தோற்ற நிற்ற லீறு சத்தியமென்று சாற்றும். எ-று. (அ)

பஞ்சபூதங்களுக்கு நாசஞ்சொல்லுஞ் சுருதிக்குத்தாற்பரியஞ்சொல்ல மறுத்துணர்த்துகின்றார்.

ஓரிடமழியப்பின்னுமோரிடநிற்குமொக்கப்
பாரிடமழிவதின்றுமென்றிடிற்பயில்வித்தெல்லாங்
காரிடமதனிற்காட்டுமெங்குரங்கழியும்வேனிற்
சீருடைத்துலகுகாலஞ்சேர்ந்திடப்பேர்ந்துசெல்லும்.

அதுபோலவென்று வருவிக்க. விருத்தப்பொருள் வெளிப்படை.

பூமியினொரு பிரதேசம் நாசமாகப் பின்னுமொரு பிரதேசம் நசி யாது நிற்கும். அதுவன்றிப் பூமியிடமெங்கு மொருங்கே நாசமாதலில்லை யென்று நீகூறின பூமியிற்பொருந்தியிருக்கும் வீசங்களெல்லாங் கார்கா லத்துண்டாக்கிய முளைகள் வேனிற்காலத்தொருங்கழியும். அதுபோலக் காரணப்பொருளாகிய மாயை சிருட்டிகாலத்துண்டாக்கிய உலகஞ் சங் காரகாலம்வந்துழி வேறுபட்டொருங்கழிந்து போம்சிறப்புடைத்து என் பது இதன்கருத்து. (௯)

காலேசுரவாதி காலமே கர்த்தாவென்றுசொல்ல மறுத்துணர்த் துகின்றார்.

காலமேகடவுளாகக்கண்டனந்தொழிலுக்கென்னிற்
காலமோவறிவின்றாகுமாயினுங்காரியங்கள்
காலமேதரவேகாண்டுங்காரணன்விதியினுக்குக்
காலமுங்கடவுளேவலாற்றுணைக்காரணங்காண்.

இ-ள். தொழிலுக்கு-சிருட்டி ஸ்திதி சங்காரங்களுக்கு—காலமே- * கடவுளாக - கர்த்தாவாக—கண்டனமென்னில் - * காலமோ - * அறிவி ன்றாகும் - (இதுகதிது காரணங் காரியங் கரணம் பிரயோசன மென்ற றியும்) அறிவில்லாததாம்—ஆயினும்-* காரியங்கள் - தாத்துவிக போக்கி யப்பொருள்களை—காலமேதரவேகாண்டும் - கால முற்பத்திபண்ணக்கண் டோம் ஆகையால்—காரணன்விதியினுக்கு- முதற்காரணமாகிய தத்துவங் களினின்றுந் தாத்துவிகமாகிய போகியப்பொருளினது தோற்றநிலை யீறாகச் சொல்லப்படும் நிமித்தகாரணனாகிய சிவனதுகிருத்தியத்துக்கு— காலமும் - *கடவுளேவலால்-கர்த்தாவினது செலுத்துதலால் — துணைக் காரணங்காண்-சககாரிகாரணங்காண். எ-று. (௪௰)

ஆருகதரி லொருவன்மத மறுத்துணர்த்துகின்றார்.

அழிந்தபின்னணுக்களாமேயகிலமாய்வந்துநின்று
கழிந்திடுங்கன்மத்தென்னிற்கன்மமுமணுவுங்கூட
மொழிந்திடுஞ்சடமேயாகிமுடிதலான்முடியாசெய்தி
யொழிந்திடுமணுருபங்களுலகெலாமொடுங்குமன்றே.

இ-ள். (அருகேசுவரனுக் குபதேசகர்த்திருத்துவமாத்திரஞ் சகற்கர் திருத்துவமில்லை யாதலால்) அழிந்தபின்-பிரளயத் துலகெலாமொடுங்கி னபின் (ஒடுங்காதுநின்ற)—அணுக்களாமே- (நிமித்தகர்த்தாவாகிய பாப புண்ணியங்களினாலே முதற்காரணமாகிய) பரமாணுக்களாமே— கன்ம த்து-* அகிலமாய் - எல்லாவுலகுமாய்— வந்துநின்று கழிந்திடுமென்னில்- தோற்றியிருந்தொடுங்குமென்று நீசொல்லுகில் — கன்மமுமணுவுங்கூட- நிமித்தகாரண முதற்காரண மிரண்டுமொத்து — மொழிந்திடுஞ் சடமே யாகிமுடிதலால் - சொல்லப்படு மசேதனமாகி யநித்தியமாதலால் —

முடியாசெய்தி-இருத்திய நிறைவேறாது—உலகெலா மொடுங்குமன்றே-உலகமெல்லாஞ் சங்காரமாம்போதே—அணுரூபங்கள் - பரமாணுக்கள் (சைவத்துக்குப் பூதகாரியமாதலால்)—ஒழிந்திடும்-ஒடுங்கிடும் (பூதமுதலியவுலகத்துக் கெப்படிக் காரணமாம்? காரணமன்றுதானே.) எ-று. ()

உலோகாயதனுலகுக்குக் காரணமென்னும் பூதமும் நையாயிகன் முதலோருலகுக்குக்காரணமென்னும்பரமாணுவும் பிரளயத்தொடுங்குமென்றீர், பின் காரணமேதென்றுவினவச் செப்புகின்றார்.

காரணவணுக்கள்கெட்டாற்காரியவுலகின்றென்னிற்
காரணமாயையாகக்காரியங்காணலாகுங்
காரணமாயையென்னைகாண்பதிங்கணுவேயென்னிற்
காரணமாயையேகாண்காரியமணுவிற்கண்டால்.

இ-ள். காரணவணுக்கள் கெட்டால்-நாங் காரணமாகக்கற்பித்தவணுக்கள் சங்கரிக்கப்பட்டால்—காரியவுலகின்றென்னில்• காரியமாய்த்தோற்றும்பிரவஞ்சமில்லையாய்விடும் (அதுண்டாகும்பொருட்டுக்காரணம் வேண்டு)மென்னில் — காரணமாயையாக-* (அதினின்றுமுற்பவிக்கும்) காரியங் காணலாகும்-* காரணமாயையென்னை-மாயை காரணமென்பதேது?—இங்கு-காரியத்துக்குக்காரணமாக— அணுவேகாண்பதென்னில்-* அணுவில்-* காரியங்கண்டால்-காரியத்தன்மை யறியப்பட்டால்—காரணமாயையேகாண்-* எ-று. (௧௨)

திரும்ப விகற்பித்து நிராகரிக்கின்றார்.

காரியமென்பதென்னைகாரணவணுவையென்னிற்
காரியமவயவத்தாற்கண்டனங்கடாதிபோலக்
காரியவுருவமெல்லாமழிதருங்காரணத்தாற்
காரியவுறுப்பின்மாயைதருமெனக்கருதிடாயே.

இ-ள். காரணவணுவை-நாங்களுலகுக்குப் பரமகாரணமாகக் கற்பித்த பரமாணுவை—காரியமென்பதென்னையென்னில்- * அவயவத்தால்-சாமிசத்தால் — கடாதிபோல - * காரிய (மாக) - * கண்டனம்-அறிந்தோம் — (நிரவயவமாகிய பரமாணுவைச் சாவயமாக எந்தவேதுவினாலேகண்டீர்? திக்கொடு சங்யோகியாயும், மூர்த்தமாயுங், கேட்கப்படுதலாற் சாவயவமென்றும் அதனாற் காரியமென்றும், அதனாலதற்கு வேறொரு காரணமுண்டென்றும் அறிந்தோமாகையால் பரமாணுமுதலாம்) காரியவுருவமெல்லாம் அழிதருங்காரணத்தால்- * (அந்தப் பரமாணுமுதலிய காரியங்களை) காரியவுறுப்பின்-அசேதனமாய் அனேகமாயிருத்தல் அமூர்த்தமாயிருத்தல், சாவயவமாயிருத்தல் முதலான காரியவி

லக்ஷணமில்லாததாய் இதற்குச் சேதனமாத்திரமின்றி, விபரீதலக்ஷண முள்ளதாகிய —மாயை-* தருமென-உண்டாக்குமென—கருதிடாயே- * எ-று. (௧௩)

இவ்வுலக மாயையின்காரியமென் றுணர்த்துகின்றார்.

தோற்றமுநிலையுமீறுமாயையின்றொழிலதென்றே
சாற்றிடுமுலகம்வித்துச்சாகாதியணுக்களாக
வேற்றமதேலீண்டிநிற்குமில்லதேலில்லையாகு
மாற்றநீமறந்தாயித்தான்மாயையைமதித்திடாயே.

இ-ள். (உலகினது) தோற்றமு நிலையுமீறும் - சிருட்டியும் திதியும் சங்காரமும்—மாயையின்றொழிலதென்றே-(அன்னத்தினதுபாகஞ் சாத்தனதுபாகமென்றாற்போல) மாயையினது கிருத்தியம், ஈசுவரனது கிருத்தியமென்றுதானே — சாற்றிடுமுலகம்-உயர்ந்தோர் சொல்லுவார்கள்—வித்து-ஆலம்விதை முதலானது — சாகாதி - பனைகொம்புமுதலானவையை—அணுக்களாக - சூக்கும சத்திரூபங்களாக — ஏற்றதேல்- தன்னிடத்துத் தரித்திருந்ததானல்— ஈண்டிநிற்கும்-(தம்மிடத்து நின்றுந் தூலவியத்திரூபமாகத்) தோற்றி நிற்கும்—இல்லதேலில்லையாகும் - *மாற்றநீ மறந்தாய் - (முதற்காரணத்திற் காரியமுன் சூக்குமித்துச் சத்திரூபமாயிராதிருந்தால், உண்டாகாதென்று முன்சொன்ன) வசனத்தைநினையாதிருந்தாய்—இத்தால் - வித்துச்சாகாதியென்னுந் திருட்டாந்தமுறைமையால்— மாயையைமதித்திடாயே - (மாயைதனது காரியத்தைமுன் சத்திரூபமாக ஏற்றதேலந்தக்காரியத்துக்குக் காரணமாம், இல்லையேற் காரணமாகாதென்று) மாயையைச் (சற்காரியவாதியாகித் தானே)விசாரித்துப் பார். எ-று. (௧௪)

அப்படித்தானே மதித்தலை வெளிபண்ணிக்காட்டுகின்றார்.

மாயையினுள்ளவஞ்சம்வருவதுபோவதாகும்
நீயதிங்கில்லையென்னினிகழ்ந்திடுமுயலிற்கோடு
போயுகுமிலைகளெல்லாமரங்களிற்புக்குப்போதி
னாயிடுமதுவுமென்னிற்காரணங்கிடக்கவாமே.

இ-ள். (மாயையின்) உள்ளவஞ்சம்-சத்திரூபமாய் முன் சூக்குமித்திருந்த பிரபஞ்சம் வியத்திரூபமாய்த் திரும்பச் சத்திரூபமாய் — மாயையின்-மாயையினிடத்திருந்து—வருவது போவதாகும் - தோற்றியொடுங்குவதாகும்—நீயதிங்கில்லையென்னில்-மாயையிற்காரியமுன் சத்திரூபமாயிருந்து, வருவது போவதில்லை யென்று நீசொல்லில்—முயலிற்கோடு-முயலின்கண்ணே கொம்பு—நிகழ்ந்திடும்- உண்டாம் — (மரங்களில்) உகுமிலைகளெல்லாம்-உதிரும்பத்திரங்களெல்லாம்—மரங்களிலே — போய்ப் புக்குப்போதின் - சென்றுமேன்றி வருமாகில்—அதுவும் ஆயிடுமென்னில்-மாயை

யிற் பிரபஞ்சம் வருவது போவதாகுமென்று நீசொல்லில் (மரங்களினு திர்ந்த விலைகள் தங்களுக்குக் காரணமாகும் மரங்களுக்குக்காரணமாகிய பிருதிவியிலொடுங்கும் அப்போது மரங்களினிலைகளினது தோற்றம் எப்படி யென்னில், உதிர்ந்தவிலைகள் வந்தொடுங்காதிருந்தாலும்) — காரணங்கிடக்கவாமே-அவைகளன்றிப் பின்னு மனந்த பத்திரசத்திரூபமாகிய மரசிற்க வேறுவேறு இலைகளுண்டாகா நிற்குந்தானே. எ-று. (கடு)

பிரபஞ்சம் பிரவாகாநாதியென்பதிசைக்கின்றார்.

கருதுகாரணமுண்டாகக்காரியமுள்ளதாகி
வருதலாலநாதிவையமற்றொருகடவுளித்தைத்
தருதலாலாதியாகச்சாற்றனுமாகுமாயைக்
கொருவனுரென்னிங்கென்னிலுள்ளவாறுரைப்பக்கேணீ.

இ-ள். கருதுகாரணமுண்டாக-(இந்தக்காரியத்துக்கு, இதுவேகாரணமென்று) பரீக்ஷிக்கப்பட்ட மாயை எக்காலத்து முள்ளதாயிருக்க—காரியமுள்ளதாகி-காரியஞ் (சத்திரூபத்தினுலேயும் வியத்திரூபத்தினுலேயும் எப்போது) முள்ளபொருளாகி—வருதலால்-சத்திரூபந்திரிந்து வியத்திரூபமாதலால்—வையம்-பிரபஞ்சகாரியம்—அநாதி-நித்தியம் (வியத்திரூபத்தினுலே யொன்றுபோக வொன்று பிரவாகமாய் வருதலாற் பிரவாகநித்தியமென்று சொல்லப்படும்)—மற்றொருகடவுள்- நிமித்தகாரணனுகிய கர்த்தா—இத்தை-இந்தவையத்தை—தருதலால்-சத்திரூபத்தைவியத்திரூபமாகத்திரித்து நீக்கி வியத்திரூபமாக்கலால்—ஆதியாகச் சாற்றனுமாகும்-அநித்தியமாகவுஞ் சொல்லப்படும் — மாயைக்கொருவனுரென்னிங்கென்னில்-மாயை யொவ்வொரொவ்வொரு பிரதேசங்களிலே சத்திரூபந்திரிந்து வியத்திரூபமாதலுக்கு நிமித்தகாரணன் எவனென்று நீர்சொல்லுமென்று நீசொல்லில்—உள்ளவாறுரைப்பக்கேணீ- சத்தியமாகச் சொல்வாம் நீகேள். எ-று. (கசு)

உள்ளமுறைமையை யுணர்த்துகின்றார்.

புத்திமற்காரியத்தாற்பூதாதிபுகுடன்றூனு
மத்தனுகரணம்பெற்றூலறிதலாலவற்றைமாயை
யுய்த்திடுமதனுன்மாயைக்குணர்வொன்றுமில்லையென்றே
வைத்தனாதனுலெல்லாம்வருவிப்பானொருவன்வேண்டும்.

இ-ள். பூதாதி-சங்காரக்கிரமத்திற் [பூதத்துக்குப்பூருவமாகும்] பிருதிவிதத்துவாதி சிவதத்துவாந்தமாகிய உலகு—புத்திமற் புத்திமத் - இது தகாராந்தவடமொழிப்பதம். இலக்கணையினுற் புத்தியென்றது ஞானமன்றிக்கிரியையையுங்காட்டுதலால், சருவசிருட்டி ஸ்திதிசங்காரத் தொழிலறிவுடைய ஒருகர்த்தாவையுடைத்து; இது பிரதிஞ்ஞை— காரியத்தால்-

பண்ணப்படுந்தன்மையால், இதுவேது. (காரியானுமானத்தால் முன்க ர்த்தாவைவிஸ்தரித்துச் சாதித்திருக்கக் கூறியதுகூறலென்னுங்குற்றம்வ ரத் திரும்பக் கூறுவதேன்? உள்ளது. இப்போது காரியானுமானங்கோ த்த பாரிசேஷியானுமானத்தாற் சாதித்துச் சிறப்பிக்கின்றார். ஞானவான் கர்த்தாவாகவேணடுமென்றால் அறிவுள்ளவனாய்ப் பிரசித்தனான வான் மாத்தானே கர்த்தா, பிரசித்தனன்றி யிருக்கும்வேறோரீசுரன்வேண்டிய தில்லையென்று மீமாஞ்சகன்சொல்ல மறுத்துணர்த்துகின்றார்.)—(விஞ்ஞா னகலர் பிரளயாகலர்களறிவின்றியப்பிரசித்தராதலால்) புருடன்றானும்-சகலன்றானும்—அதனுகரணம் பெற்றால்-அந்தவேறொருகர்த்தாச சிருட் டித்துக்கொடுத்த தூலதேக சூக்குமதேக பரதேகங்களைப்பொருந்தினால்—அறிதலால்-அவனறிவுக்கு நிமித்தமாக முன்பொரு சுவதந்திரவறிவனாகிய கர்த்தாச் சித்தித்தலானும், அவன் கர்த்தாவல்லன். (முதற்காரணந்தா னே கர்த்தாவென்று சாங்கியன் முதலோர் சொல்ல மறுத்துணர்த்துகி ன்றார்)—அவற்றை-அந்தத் தனுகரணாதிகளை—மாயை- *(முதற்காரணமா யிருந்து நிமித்தகாரணனாலேவப்பட்டு) உய்த்திடும்- உண்டாக்கும — அத னால்-முதற்காரணமாகையால் (யாதொன்றியாதொன்று முதற்காரணம் அதறிவில்லது மண்போலவென்று) — மாயைக்குணர்வொன்றுமில்லையெ ன்றே- * வைத்தனர்-பெரியோர் நிச்சயித்தார்கள் —அதனால்- * எல்லாம் வருவிப்பானொருவன் வேண்டும்-சகலத்தையுமறிந் துண்டாக்குமொருக ர்த்தா விரும்பப்படுவன். எ-று. (௧௭)

காரியோற்பத்தியிற் காரணம் மூன்றுமுறைமையா யிருக்குமென் றுரைக்கின்றா.

காரியகாரணங்கண் முதறுணைநிமித்தங்கண்டாம்
பாரின்மண்டிரிகைபண் ணுமவன்முதறுணைநிமித்தந்
தேரின்மண்மாயையாகத்திரிகைதன்சத்தியாக
வாரியன்குலாலனாய்நின்றாக்குவனகிலமெல்லாம்.

இ-ள். காரியகாரணங்கள்-கடமுதற்காரியங்களினது காரணங்கள்—முதறுணைநிமித்தங்கணடாம் - முதற்காரணமென்றுந் துணைககாரணமெ ன்றும் நிமித்தகாரணமென்றும் மூன்றுபகுப்பாகப் பரீக்ஷித்துப் பாரத் தோம்— (அதெப்படி?)தேரின்-பரீக்ஷிககின்—மண்மாயையாக-மண்போல முதற்காரணஞ் சுத்தமாயை யசுத்தமாயையாக—திரிகை தன் சததியாக-திரிகைபோலத் துணைக்காரணந் தனது சத்தியு மதனாலேவப்பட்ட வின ந்தேசுர சத்தியுமாக—ஆரியன்-நிமித்தகாரணனாகிய சிவன்—குலாலனாய்-மண்மகன்போல—நின்று-* அகிலமெல்லாம்-சகலலோகமெல்லாம்—ஆக்கு வன்-உண்டாக்குவன். எ-று

முதற்காரணம் உபாதானமென்றுஞ், 'சமவாயியென்றும், துணைக் காரணஞ் சககாரியென்றும் பெயர்பெறும். (௧௮)

சிலசைவாசாரியர்கள், சுத்தமாயையொன்றுமே, முதற்காரணந்துள் நித்தியமாகும். பரமகாரணம், அசுத்தமாயை பிரகிருதி இரண்டுஞ் சுத்தமாயையினின்று முறைமையிற்றோற்றி அநித்தியமாகு மவாந்தரகாரணமென்று சொல்லுவார்கள், மற்றுள்ள சைவாசாரியர்கள் சுத்தமாயைபோல வசுத்தமாயையு நித்தியமாகும் பரமகாரணம்பிரகிருதிமாத்திரம் அநித்தியம் அவாந்தரகாரணமென்று சொல்லுவார்களென்று இந்தநிலைத்திரயத்திற் சொல்லியிருத்தலால், அசுத்தமாயையும் நித்தியமென்பார்கருத்து இரண்டாஞ் சூத்திரத்தில் "நித்தமா யருவாய்" என்னுந்திருவிருத்தமுதல விருத்தங்களினால் விஸ்தரிக்கின்றார். அநித்தியமென்பார் கருத்து இப்போதறிவிக்கின்றார்.

விந்துவின்மாயையாகிமாயையினவ்வியத்தம்
வந்திடும்விந்துத்தன்பால்வைகரியாதியாவை
முந்திடுமோராகமாதிமுக்குணமாதிமூலந்
தந்திடுஞ்சிவனவன்றன்சந்நிதிதன்னினின்றே.

இ-ள். விந்துவின் மாயையாகி- சுத்தமாயையினின்றும், அசுத்தமாயைதோற்றி — மாயையினவ்வியத்தம் வந்திடும்-அந்தவசுத்தமாயையினின்றும் பிரகிருதிதோன்றும்—விந்துத்தன்பால்-திரும்பச் சுத்தமாயையினின்றும் — (வைகரியாதிவந்திடுமென்றுகூட்டுக. சங்காரக்கிரமகணனைக்கு வைகரிமுதல், சிருட்டிக்கிரம கணனைக்கு அதிசூக்குமை முதலாதலால், மகாமாயையினின்றும் மகாசிருட்டியினுண்டாய் மகாப்பிரளயபரியந்தம் அவரவர்க்கு வேறுவேறாய் ஆன்மாக்களைப்பற்றிப் பிரணவகலாசத்தி சதுட்டயரூப விருதயபங்கசத்திருக்கும் பிரணவபஞ்சம நாதகலாசத்திகர்ப்பப் பிரதானநாதத்துக்குள் ஆமையுறுப்புப்போலப்படிச் சத்திரூபமாயடங்கிச் சிவதத்துவமைந்தினதிடமாயிருக்கின்ற நாதவிந்துமகார உகார அகாரப்பெயர்ப்பிரணவகலைகளைந்தையும் பற்றிக்கொண்டு அதிசூக்குமை, சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியென்கின்ற வாக்குக்கடோற்றும்; வாக்குநான்கென்னுமிடத்து, உகார அகாரங்களிரண்டினையும்பற்றி வைகரிவரும். அதிசூக்குமைசூக்குமையினடங்கும்.) மாயைமுந்திடுமோராகமாதி-(சங்காரக்கிரமகணனைக்கு ராகமுதல், சிருட்டிக்கிரம கணனைக்குக்கால முதலாதலால்) மாயையினின்றுங் காலநியதி கலைவித்தை ராகங்கள் புருடதத்துவத்தோடு மேற்சொல்லுமுறைமையில்— முந்திடும் - உண்டாம்— முக்குணமாதிமூலந்தந்திடும்-பிரகிருதி முக்குணதத்துவமுதற் பிருதிவிதத்துவமீறாகுந் தத்துவங்களை மேற்சொல்லு முறைமையிற்றோற்றுவிக்கும். (நிமித்தமின்றியாமோவாகாது) — சிவனவன்றன்சந்நிதிதன்னினின்றே.

சிவனாகிய அவன் சங்கற்பத்தினுஞ் சிவனதியற்றுதற் கருத்தாவாகிய அவனென்னுமனந்தேசுரசங்கற்பத்தினு முன்னின்றே. எ-று.

சிவனதவனென்னு மாறும் வேற்றுமைத்தொகை விரிவுவிட்டுச் சிவனாகிய அவனென்று பண்புத்தொகைமாத்திர விரிவுபண்ணினால் மாறுபடும், அசுத்ததத்துவா அனந்தேசுர கர்த்திருத்துவமாதலால். (௧௯)

சங்காரக்கிரமத்தின் வைகரிவாக்கின திலக்ஷண முணர்த்துகின்றார்

வைகரிசெவியிற்கேட்பதாயர்த்தவசனமாகி
மெய்தருமுதானவாயுமேவிடவிளைந்தவன்னம்
பொய்யறவடைவுடைத்தாய்ப்புந்திகாரணமதாகி
யையமில்பிராணவாயுவடைந்தெழுந்தடைவுடைத்தாம்.

இ-ள். வைகரி செவியிற் கேட்பதாய்-வைகரிவாக்குக் கேட்பவன் செவியிற் கேட்பதாய்—அர்த்தவசனமாகி-கேட்பவனது நாதத்திலறைந்து முறைமையினதை மத்திமையாக்கி அவனுக்குப் பின்பொருளைப் போதிப்பதாய், முன்சொல்பவனது கிரியாசத்திபொருந்திய வகங்காரப் பிரயத்தினப் பிரேரிதமாய் — மெய்தரும் - உண்மைகொடுக்கும் — உதானவாயு-* மேவிட-*பொருந்த (இச்சாசத்தி பொருந்திய மனச்சங்கற்பத்தால்)— விளைந்தவன்னம் - பைசந்தியிற் பரிணமித்தவக்ஷரங்கள் —புந்தி காரணமதாகி - ஞானசத்திபொருந்திய புத்திபோத காரணமாக — பொய்யறவடைவுடைத்தாய் - விபரீதமற்றொழுங்குபெற்று மத்திமையாய்—ஐயமில் பிராணவாயு வடைந்தெழுந் தடைவுடைத்தாம்-பிராணசம்சய காரகரேசக மற்ற பிராணவாயுவைப்பொருந்திப் புறம்பே புறப்பட்டு வைகரியாயுற்பவித்த முறைமையிற் கேட்பவனுக்குக் கேட்கப்படும். எ-று. (௨௦)

மத்திமைவாக்கின திலக்ஷணங் கூறுகின்றார்.

உள்ளுணர்வோசையாகிச்செவியினிலுறுதல்செய்யா
தொள்ளியபிராணவாயுவிருத்தியையுடையதன்றித்
தெள்ளியவக்கரங்கள்சிந்திடுஞ்செயலதின்றி
மெள்ளவேயெழுவதாகுமத்திமைவேறதாயே.

இ-ள். உள்ளுணர்வோசையாகி-சொல்பவன திருதயாதிகண்டாந்தத்துக்குள் அவனதறிவுக் கறியப்பட்டு அவனாற்சொல்லப்படும் பொருளில் அவனறிவை விளக்குந்தொனியாகி — செவியினிலுறுதல் செய்யாது - கேட்பவன் செவிக்கேறாததாய், வைகரியாய்த்திரிந்து மேலவனுக்குக் கேட்கப்படுவதாய்—ஒள்ளிய பிராணவாயு விருத்தியையுடையதன்றி-உதானவாயு வியாபாரமாத்திரமுடையதாய், பெலமுடையபிராணவாயுவியாபாரத்தினது விடுதலுடையதாய்—தெள்ளியவக்கரங்கள் சிந்திடுஞ்செயலதின்றி-தெளிவாகிய வன்னங்கள் சிதறுதலின்றி யொழுங்குபெ

ற்று—மத்திமை-* (வைகரிக்கும் பைசந்திக்கும்) வேறதாயே மெள்ளவே யெழுவதாகும் - *. எ-று. (௨௧)

பைசந்திவாக்கின திலக்ஷண முணர்த்துகின்றார்.

வேற்றுமைப்பட்டவன்னம்வெவ்வேறுவிபாகமாகித்
தோற்றுத லடைவொடுக்கிச்சுயம்பிரகாசமாகிச்
சாற்றிய மயிலினண்டந்தரித்திடுஞ்சலமேபோன்றங்
காற்றவேயுடையதாகிப்பைசந்தியமர்ந்துநிற்கும்.

இ-ள். பைசந்தி-*வேற்றுமைப்பட்ட வன்னம்-வெவ்வேறு குறிய வாயிருக்கு மக்கரங்கள்—சாற்றிய மயிலினண்டந் தரித்திடுஞ் சலமேபோன்று வெவ்வேறு விபாகமாகித் தோற்றுதலடைவொடுக்கியாற்றவேயுடையதாகி-சொல்லிய மயிலினது முட்டைதாங்கிய நீரிற் சிறகுமுதலிய வுறுப்புக்கள்போல வேறுவேறு பிரிந் தொழுங்குபெற்று மத்திமையாய்த் திரிந்தினிமேல் வருதலை யிப்போதடக்கி அந்தவன்னங்களை நிலைபெறவுடைத்தாகி—சுயம்பிரகாசமாகி- (சொல்வோர்க்குங் கேட்போர்க்கு முறைமையில் மத்திமையும் வைகரியுமாய்ப் புத்தி அகங்காரங்களோடுகூடிச் சவிகற்ப ஞானகாரணமாம் பைசந்தி வித்தையோடுகூடி நிருவிகற்ப ஞானகாரணமாய்ப் பின் மனத்தோடுகூடிச் சவிகற்ப ஞானத்துத்தியோகிக்கும் சூக்குமை வித்தையோடுகூடிநிருவிகற்ப ஞானகாரணமாயிருக்கும். ஆதலாற் புருடப்பிரயத்தினம் பொருந்தாமற் சற்றே பொருந்தித்) தானே விளங்கி—அமர்ந்துநிற்கும்- (நிருவிகற்ப ஞானவிளக்காய்ச் சவிகற்ப ஞானத்துத்தியோகித்து) நிலைபெற்றுநிற்கும். எ-று. (௨௨)

சூக்குமைவாக்கின திலக்ஷணமுணர்த்துகின்றார்.

சூக்குமைவாக்கதுள்ளோர்சோதியாயழிவதின்றி
யாக்கிடுமதிகாரத்துக்கழிவினைதன்னைக்கண்டா
னீக்கமிலறிவானந்தமுதன்மைநித்தியமுடைத்தாய்ப்
போக்கொடுவரவிளைப்புவிகாரமும்புருடனின்றாம்.

இ-ள். சூக்குமை வாக்கது-* உள்ளோர் சோதியாய்-(தூலசரீரத்தின் இருதயாதாரத்திருக்கும் பார்த்திவபங்கசப்பொகுட்டினது குழியிற்பற்றி, அதனதழிவில் வேறொன்றுபற்றிப் பிரளயபரியந்த மிருக்குமுன்சொன்னபரசரீரவிந்து சத்திசதுட்டய பங்கசத்திலிருக்கும், பிரதானநாதகர்ப்பத்திருக்கும் பிரணவகலாநாதசத்தியைப்பற்றி யிருத்தலால்) ஒப்பற்றவந்தரங்கப்பிரகாசமாய்—அழிவதின்றி-பிரளயபரியந்த மீறின்றி(இருக்கும்)—அது தன்னைக்கண்டால் - (முறைமையிற் பிரகிருதிபுருடவிவேகஞானத்தாற் சாங்கியன் பாதஞ்சலன் வேதாந்தியிவர்முதலோர்க்குப், புருடத்

துவப் பிராத்தி, மலபரிபக்குவமின்றிக்கேவலங்கலாந்த்து யாந்ததீக்ஷாசுத்தி மாயாபுருட விவேகஞானத்தாற், சைவேகதேசிகட்கு விஞ்ஞானகலப்பிராத்தி, மலாந்ததீக்ஷாசுத்தி மலபுருஷவிவேகஞானத்தால் மந்ததராதி தீவிராந்த மலபரிபாகமுடைய மகாவிரதர்முதலோர் சாமானியசைவர் சைவசித்தாந்திகளிற் சிலர்க்குஞ் சுத்தாத்துவப்பிராத்தி, மகாமாயாந்ததீக்ஷாசுத்தி மகாமாயா புருட விவேகஞானத்தாற் றீவிரதரமலபரிபாகமுடைய சைவசித்தாந்திகட்குப் பரமோக்ஷப்பிராத்தி, நாதபுருட விவேகஞானமே மகாமாயாபுருட விவேகஞானமாதலால்"அந்த நாதத்தோடுபெற்றியிருக்குஞ்) சூக்குமைவாக்கை (நான்வேறிதுவேறென்றுவிவேகித்துத்) தரிசித்தால்—அதிகாரத்துக் கழிவினையாக்கும் - மோக்ஷாதிகாரங்கொடுத்துப் போகாதிகாரத்துக்கு நாசத்தைப்பண்ணும். (தானீங்குவதேகொடுப்பதுங் கெடுப்பதும். அப்போது புருஷன் சர்வபாசமுத்தனாய்ச் சின்மாத்திரனாய்) — நீக்கமிலறிவானந்த முதன்மைநித்தியமுடைத்தாய்- (சம்சாரத்திற் பசுத்துவச் சுவரூபசிற்சத்திவிளக்கமே போகானந்தம்; முத்தியிற் சிவனுக்குப்போலச் சிவத்துவச் சுவரூபசிற்சத்திவிளக்கமே மோக்ஷானந்தமாதலால், நீக்கமிலென்றது மலமறைப்பினுஞ் சுவசிட்டமாய்ப் புருடனோடு சமவாயசம்பந்தமாய் இருத்தலென்றதலால்) நீக்கமிலறிவானந்தம் - சருவஞ்ஞத்துவசிவத்துவரூப சருவஞ்ஞதாதிருத்தியறுதிபோத முக்குணவடிவாகிய ஞானசத்தி யபிவியத்தி—நீக்கமில்முதன்மை- சருவகர்த்திருத்துவ சிவத்துவரூபச் சுவதந்திரதை யனுத்தசத்தி யனந்தசத்திமுக்குணவடிவமாகியகிரியாசத்தி யபிவியத்தி; இப்படியறுவிதமாய் இருவிதமாயொருவிதமாயிருக்கின்ற சிவத்துவரூப சிற்சத்தி யபிவியத்தியென்கின்ற சிவத்துவவிளக்கமாகிய சிவானந்தத்தொத்ததனது சிவானந்தத்தை— நித்தியமுடைத்தாய் - (சிவசத்திவிளக்கினுற் றிரும்பத்திரும்பச் சிவசத்திவிளக்கு விருப்பின்றிச், சருவப்பிரகாரமாயமலமறைப்புநீங்கிவிளங்குதலாற், கெடா திடைவிடாது அனுபவிப்பானுகி— போக்கொடுவரவினைப்புவிகாரமுமின்றும் - இறப்புப்பிறப்பில்வருந் தொய்விற்றேன்றும் வேற்றுமையுமில்லாதவனும். எ-று.

போக்கொடுவரவினைப்பு விகாரமானதும் புருடனுக்கின்றுமென்றும் எழுவாய் பயனிலையிசைத்துப் பொருளுரைக்கலுமாம்.

சிவத்துவமென்கின்ற சிவகுணவிளக்கமே சிவானந்தமென்று சித்தாந்தஞ் சித்தித்திருக்கவும், சிவகுணமே சிவானந்தமென்று சிலர் சொல்வார்கள். அதுமாறுபடுமென்பது பிரமாணதீபிகை சித்தாந்தசிகாமணி சிவஞானபோதவியாக்கியானம் இவைகளிலே காண்பித்துக் கண்டித்தனம். எதிருசொல்லியது சிவத்துவசின்னகுணவிளக்கமுங் குணமாகாதோ குணமாமே? உள்ளது குணமானுலுங் குணியிலிருப்பதன்று. கெந்தாதிகளிடத்துத் தீவிராதிதன்மம்போலச் சிவததுவலக்ஷண குணத்திலிருக்குமதனுன் மாறுபாடில்லை. (உரு)

பஞ்சகலைகளில் வாக்கிருக்குமுறைமை வகுத்துரைக்கின்றார்.

நிகழ்ந்திடும்வாக்குநான்குநிவிர்த்யாதிகலையைப்பற்றித்
திகழ்ந்திடுமஞ்சதாகச்செயல்பரிணாமமன்று
புகழ்ந்திடும்விருத்தியாகும்படங்குடிலானாற்போல
மகிழ்ந்திடும்பிரமமன்றுமாமாயையென்பர்நல்லோர்.

இ-ள். நிகழ்ந்திடும் வாக்குநான்கு நிவிர்த்யாதிகலையைப்பற்றித்திகழ்ந்திடுமஞ்சதாக-நிவிர்த்திகலாகெர்ப்பபுவனவாசிகளுக்குத் தூலதரமாயும், பிரதிட்டாகலாகெர்ப்ப புவனவாசிகளுக்குத் தூலமாயும், வித்தியாகலாகெர்ப்பபுவனவாசிகளுக்குச் சூக்குமமாயும், சாந்திகலாகெர்ப்பபுவனவாசிகளுக்குச் சூக்குமதரமாயும், சாந்தியதீதகலா கெர்ப்பபுவனவாசிகளுக்குச் சூக்குமதமமாயுமிருக்குமென்றிதன்பொருள்— செயல்-காரியப்படுதல்— பரிணாமமன்று -மண்ணினின்றுங் கடகலசமுதலானவைபோல மகாமாயையிலே நின்றும் வாக்குற்பத்தி தூலபரிணதிரூபமன்று—படங்குடிலானாற்போலப் புகிழ்ந்திடும் விருத்தியாகும்-புடைவையே கூடாரமானாற்போலப் புகழப்படுகின்ற விருத்திரூபமாம். (விருத்திக்கும் பரிணாமத்துக்கு மத்தியர்தம் பேதமில்லாமையால் முற்றுவமையன்று; சூக்கும பரிணாமமாகுமென்றிதன்பொருள். அந்தவாகக்குவிருத்திசுக்குக் காரணம்) — பிரமமன்று -சத்தப்பிரமவாதிசொல்லு மான்மாவன்று—நல்லோர் மாமாயையென்பர்- *. எ-று. (௨௪)

இப்படி மாமாயையினின்றுஞ் சாதாரண சத்தசிருட்டி சொல்லிச் சாதாரண சத்தார்த்தசிருட்டியைச் சாற்றுகின்றார்.

வித்தைகள்வித்தையீசர்சதாசிவரென்றிவர்க்கு
வைத்திடும்பதங்கள்வன்னம்புவனங்கண்மந்திரங்க
டத்துவஞ்சரீரம்போகங்கரணங்கடாமெலாமு
முய்த்திடும்வயிந்தவந்தானுபாதானமாகிநின்றே.

இ-ள். வித்தைகள் வித்தையீசர் சதாசிவரென்றிவர்க்கு-வித்தைகள்-சத்தகோடிமாமந்திரங்கள்—வித்தையீசர்-அனந்தாதிமந்திர மகேசுவரர்கள்—சதாசிவர்- அணுசதாசிவர்கள்— என்றிவர்க்குவைத்திடும்- * பதங்கள்- (சாதாரணங்களாயிருக்கும்) பதங்கள் (எண்பத்தொன்று) —வன்னம்-* (ஐம்பத்தொன்று) — புவனங்கள் - * (இருநூற்றிருபத்துநாலு)— மந்திரங்கள்-* (பன்னிரண்டு) —தத்துவம்-* (அசாதாரணமாயிருக்குஞ் சுத்தகலாதி சுத்தபிருதிவியந்தம் முப்பத்தொன்று)—சரீரம-(சாதாரணசாதாரணமாயிருக்கும்) தூலதேகம்—போகம்-போக்கியப்பொருள்—கரணம்-(முன்சொன்ன தத்துவங்களில் விசேடமாகும்) இந்திரியங்கள் — தாமெலாமும்-இவைகளெல்லாவற்றையும்—வயிந்தவந்தான்-சுத்தமாயையிலுண்

டாகிய சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவமென்னுஞ்சிவதத்துவமைந்துந்தானே (தங்கடங்களிடத்திருப்பவர்களுக்குமுறைமையில்)—உபாதானமாகிநின்றே யுய்த்திடும்-சமவாயிகாரணமாய் நின்றுண்டாக்கும. எ-று.

மாயையிற் பிரபஞ்சம், மாயையிற்கோத்துண்டாவதுபோல, மாமாயையிற் கோத்துண்டாகவேண்டுவதில்லை.

விஞ்ஞானகலருட் பரிபக்குவமலர்களில் அனுக்கிரகப்பட்டு மலபாசமின்றிப் பதிபதார்த்தத்துக்குட் பிரவேசித்துப் பதியாயிருக்கின்ற மந்திரர்கள், மந்திரமகேசுவரர்கள், அனுசதாசிவர்கள் இவர்களை விஞ்ஞானகலர்களென்று சிலர் வியாக்கியானம் பண்ணினார்கள். அது முன்பின் மலையும்.

ஒருமலத்தா விஞ்ஞானகலரென்றுசொல்லியிருக்க, மலநீங்கியதிகாரமலமாத்திரராகளாய், அபரபதிகளாய்க் கடந்துபோனவர், 'எப்படி விஞ்ஞானகலராவர்களாகார்களே. அப்படியாகிற் சிலவிடத்து அப்படிச்சொல்லியிருப்பதேது' உள்ளது. பூருவத்திலிருப்பைநோக்கிப் புறப்பட்டவசனம்; இப்போதிலிருப்பைநோக்கி யெழுந்தசொல்லன்று.

விஞ்ஞானகலர் மாயைக்குமேற் சுத்தவித்தைக்குக்கீழ் நடுத்தானத்திலே பெண்ணிறந்திருப்பார்களென்றறிக. (உரு)

முன்சொல்லிய மந்திரர்முதன் மூவகையான்மாக்களுக்குச் சருவஞ்ஞத்துவம், முன்சொல்லிய வாக்கு விருத்தி முதல் விந்துகாரியமின்றி யுண்டாகாதென்றுணர்த்துகின்றார்.

மூவகையணுககளுக்குமுறைமையால்விந்துஞான
மேவியதில்லையாகில்விளங்கியஞானமின்று
மோவிடவிந்துஞானமுதிப்பதோர்ஞானமுண்டேற்
சேவுயர்கொடியினன்றன்சேவடிசேரலாமே.

இ-ள். (சர்வான்மாக்களுக்குஞ் சூக்குமைவாக்குமுதலிய விந்துஞானமிருந்தாலுங் கன்மத்தினன் மாயையிலுண்டாகிய தூலசரீர சூக்குமசரீரசம்பந்தத்தினாலே சர்வஞ்ஞத்துவம் பிரகாசிக்கவில்லை யாகையால்) மூவகை யணுக்களுக்கும்-மந்திரர் மந்திரமகேசுவரர் அனுசதாசிவர்களுக்கும்—முறைமையால் விந்துஞானமேவியதில்லையாகில்-சூக்குமைமுதல்வாக்குவிருத்தி சம்பந்தக்கிரமத்தில், ஞானத்தை விளக்குதலான் ஞானமென்றுபெயருடைய முன்னெடுத்த விருத்தத்திற்சொல்லிய வயிந்தவதேகமும் தூலதேக புவனாதிகாரியசம்பந்த மில்லாதிருந்தால்—விளங்கிய ஞானமின்றாம்-சர்வஞ்ஞத்துவசத்தியிற் சமுற்பன்ன சவிகற்ப சர்வவிஷய

ஞானம் அவர்களிடத்திற் காணப்பட்டதில்லையாய்விடும் — விந்துஞானம் — இப்போது சொல்லிய வயிந்தவ தத்துவ தாத்துவிக வாக்குரூப வியஞ்சகஞானமும், வாக்குபாதிபொருந்திச் சர்வஞ்ஞத்துவசத்தியிற் சமுற்பன்ன சர்வவிஷயவியங்கியசவிகற்பஞானமும் — ஓவிட — நீங்கிட — உதிப்பதோர் ஞானமுண்டேல் - பரமுத்திக்கருகராமிவர்க்குச் சிவதீக்ஷைபாத்திரநிருவிகற்பசமாதி சமுற்பன்ன நிருவிகற்பசீவன்முத்தி சாக்ஷாற்கார ஞானமேதான், சகலர்க்குமுன்சொல்லியமகாமாயாந்ததீக்ஷாசுத்தி, மகாமாயாபுருஷவிவேகஞான சிவத்தியான சிவசமாதியினுற்பவிக்கும், ஒப்பற்ற சிவவிஷய சீவன்முத்தி சாக்ஷாற்கார ஞானந்தான், சமாதிஞானமாத்திரந்தான், தியானஞானமாத்திரந்தான், விவேகஞானமாத்திரந்தான், உள்ளதேல் — (அடுத்துமுறைமையினும்) சேவுயர்கொடியினுன்றன் சேவடி சேரலாமே - காரியலக்ஷணையினால் முன்சொல்லிய அறிவானந்தமுதன்மையென்கின்ற சிற்சத்திலக்ஷண சிவத்துவாபிவியத்தி பெறலாகுந்தானே. எ-று.

சத்தியோ நிர்வாணதீக்ஷாசுத்தியாகில் அசத்தியோநிர்வாணதீக்ஷைமாத்திரத்துக்கங்கமாகிய விவேக ஞானத்தியானசமாதி சீவன்முத்திசாக்ஷாற்காரங்களின்றிப் பெறலாம். மூவகையணுக்கள், விஞ்ஞானகலப்பிரளயாகல சகலர்களல்லர் விதேகிகளாகும் முதலிருவர்க்கும் விந்துஞானமில்லாமையால். விந்துஞானமென்றது வாக்குமாத்திரமென்றுபண்ணி, அஃதெல்லார்க்குமுண்டென்று சகலர்க்குள்ளுத்தம மத்திம வதமர்கள் மூவகையணுக்களென்று பொருளுரைத்தாலு மாறுபாடில்லையே? உள்ளது. ஒருபிரகாரத்தாலப்படியும் பொருளுரைக்கலாம். (உ௬)

இவ்விடத்து மகாமாயாகாரியத்தைச் சிறப்பித்தினிமேற்செப்பும்
படிக்குப் பொதுவாயுரைத்து, மாயாகாரியத்தையு
மப்படிச் செப்பும்படிக்கப்படி யுரைக்கின்றார்.

அருவினுவுருவந்தோன்றியங்காங்கிபாவமாகி
யுருவினிலுருவமாயேயுதித்திடுமுலகமெல்லாம்
பெருகிடுஞ்சுருங்கும்பேதாபேதமோடபேதமாகு
மொருவனேயெல்லாமாகியல்லனையுடனுமாவன்.

இ-ள். அங்காங்கிபாவமாகி-(காரியசத்திசமூகமே மாயையாதலால்) மாயையங்கி காரியங்களங்கங்களென்னுந் தன்மையாகி — அருவினிலுருவந்தோன்றி - அருவினில் - காரியசத்திரூபமாகியமாயையில் — உருவம் - அந்தக்காரியசத்தி வியத்திரூபமாகியகலாதிகாரியம் — தோன்றி - உற்பத்தியாய் — உருவினிலுருவமாயே - அந்தக்கலாதிகாரியத்தினின்றும் பிரகிருதிமுதலிய காரியமாகித்தானே — உலகமெல்லாம் - கலாதிபிருதிவியந்தமாகிய தத்துவதாத்துவிகப்பொருள்களெல்லாம் — உதித்திடும் - உற்பத்தியாம் —

பெருகிடுஞ்சுருங்கும் - சிருட்டிகாலத்தில் வியத்திருபமாயும், சங்காரகாலத்திற் சத்திருபமாயுமிருக்கும் — பேதாபேதமோடபேதமாகும் - வியத்திருபமாய்க்காரணம்பெருகிக் காரியமானகாலத்திற் கடமுதிருத்தும்போலக் காரியகாரணங்கள், விசேஷாவிசேஷமாய்த் தோற்றும். சத்திருபமாய்க் காரியஞ்சுருங்கிக் காரணமானகாலத்திற் காரியகாரணங்கள், அவிசேஷங்களாய்த்தோற்றும் — (நிமித்தகாரணனன்றியாமோ வாகாதென்றுணர்த்துகின்றார்) ஒருவனேயெல்லாமாகியல்லனுயுடனுமாவன் - சிவனொருவனே அனந்தத்துவாரத்தினாலே மாயாகாரியமெல்லாவற்றையும் பண்ணுகிறவனாய்க், குலாலன்தண்டமுதலியவற்றைக் கைக்கொண்டுபிடித்துப் பண்ணுவதுபோலப் பண்ணுதவனுமாய்த், தனதுசத்திருபகரணசங்கற்பமாகிய சலனமற்றதொழிலினாற் பண்ணுநிற்பவனுமாவன். எ-று. (உஎ)

தந்துமுதலியவுருவத்தினின்றும் படமுதலியவுருவந்தோன்றுதல் கண்டிருந்தும் அருவினிலுருவந்தோன்று மென்பதடாதென்றாசங்கித்து மறுத்துணர்த்துகின்றார்.

அருவுருவீறதாகும்விகாரமுமவிகாரத்தில்
வருவதுமில்லையென்னில்வான்வளியாதிபூதந்
தருவதுதன்னின்மேகசலனசத்தங்களோடு
முருவின்மின்னுருமேறெல்லாமுதித்திடுமுணர்ந்துகொள்ளே.

இ-ள். அரு-மாயை—உருவீறதாகும் கலாதிகளையுண்டாக்கமாட்டாது—விகாரமும் - பரிணாமமும் — அவிகாரத்தில் - பரிணாமமல்லாதபொருளில்—வருவதுமில்லையெனில்-வாராதென்று நீசொல்லில்— (வைதிகமதத்தினன் மறுக்கின்றார்) வான் - அருவாகிய, வாகாசமானது— வளியாதிபூதந்தருவது- வாயுவாதி பூதங்களையுண்டாக்குவது — தன்னில் - அதனிடத்தில், (அந்தப்பூதவிகாரங்களாகிய தூமதூளிபடல முதலியவற்றின்)— மேகசலனசத்தங்களோடு முருவின்மின்னுருமேறெல்லா முதித்திடுமுணர்ந்துகொள்ளே - மேகம் அந்தமேகத்தசைவு தொனிகளோடுகூடி (உருவென்பதுவருவித்து உருவின்மின் உருவில் உருமேறென்று பொருள்கள் கொண்டிவையெல்லா முதித்திடுமென்று கூட்டுக) எ-று. (உஅ)

திருட்டாந்தமுன்னாகச் சிவன்கிருத்தியம் பண்ணுமுறைமை, யறிவிக்கின்றார்.

மண்ணினிற்கடாதியெல்லாம்வருவதுகுலாலனாலே
யெண்ணியவுருவமெல்லாமியற்றுவனீசன்றானுங்
கண்ணுகாரியங்களெல்லாங்காரணமதனிற்காண்பன்
பண்ணுவதெங்கேநின்றிங்கென்றிடிற்பகரக்கேணீ.

இ-ள். மண்ணினின் - மிருத்பிண்டத்தினின்றும் - கடாதியெல்லாம் - கும்பகலசமுதலிய காரியங்களெல்லாம் - குலாலனாலேவருவது - மண்மகனாலுண்டாவது - (அப்படி) ஈசன்றனும் - * எண்ணியவுருவமெல்லாமியற்றுவன் - நினைத்தகாரியங்களெல்லா நிருமிப்பன் (முதற்காரணமின்றி முடிப்பனோவென்னில், சர்வசாமர்த்திய மிருந்தாலு மதுகூடாது. பின்னெப்படியெனில்) - கண்ணுகாரியங்களெல்லாம் காரணமதனிற்காண்பன் - நினைத்தகாரியங்களெல்லா முதற்காரணமாகிய மாயையினின்று முண்டாக்குவன் - (குலாலன் பூமியாதாரமாகநின்று கடாதிகாரியம்பண்ணக் கண்டோமே) ஈசனிங்கெங்கே நின்றுபண்ணுவதென்றிடில் * - பகரக்கேணீ - சொல்லுவாம் நீகேள். எ-று. (௨௯)

கர்த்தா நிற்குநிலைமையை நிரூபணிக்கின்றார்.

சிலமோவுலகம்போலத்தெரிப்பரிததனுனிற்குங்
கோலமுமறிவாரில்லையாயினுங்கூறக்கேணீ
ஞாலமேழினையுந்தந்துநிறுத்திப்பின்னசம்பண்ணும்
காலமேபோலக்கொண்ணீநிலைசெயல்கடவுட்கண்ணே.

இ-ள். சிலமோவுலகம்போலத் தெரிப்பரிது - (பரமேசுவரனுடைய) சரித்திரம் உலகத்திலுண்டாகிய பிரமாதிதேவர்களுக்குப்போலச் சொல்லுவது துல்லபம் (அமூர்த்தமாகையால்) - அதனுனிற்குங் கோலமுமறிவாரில்லை - ஆகையா லிந்தப்பரமேசுவரனுடைய சகளவிக்கிரக தடத்தலக்ஷணத்தையுங் காண்பாரில்லை (சொரூபலக்ஷணந் தூரமென்பது சொல்லவேண்டுமோ) - ஆயினுங்கூறக்கேணீ - அப்படியிருந்தாலுஞ் சொல்லுகிறோம் நீகேள் - ஞாலமேழினையுந்தந் துநிறுத்திப்பின்னசம்பண்ணுங்காலமேபோல - தாத்துவிகசகலப் பிரபஞ்சத்தையுந் தோற்றுவித்து நிற்பித்துப் போக்கும் (அமூர்த்தமாய் அப்பிரத்தியக்ஷமாய் நிராதாரமாயிருக்கும்) காலமேபோல் - கடவுட்கண்ணே - (காரியம்பண்ணுஞ்) சிவனிடத்திலே - நிலைசெயல்கொண்ணீ - நிராதாரமாய் நிற்றன்முறைமையுஞ் சங்கற்பமாத்திர சந்நிதானத்தாற் கிருத்தியநிகழ்தன் முறைமையுங் காண்பாயாக. எ-று.

அப்போது காலத்துக்குப்போற் புத்திமற்கர்த்திருத்துவம் பொருந்துவதின்றெனின், அப்படிச்சொல்லவேண்டா. காலமென்பதமூர்த்தமாய்ச் சுவதேகத்தசைவுபண்ணு மாத்மாவைப்போலவென்று போதிப்பது. (௩௦)

சிவசங்கற்பத்தான் மாயையில்விகாரமாய்ச் சிவனுக்குவிகாரமின்றிப் பிரபஞ்சந் தோற்றுமுறைமையை விரிக்கின்றார்.

சுற்றநூற்பொருளுஞ்சொல்லுங்கருத்தினிலடங்கித்தோன்றும்
பெற்றியுஞ்சாக்கிரர்தியுயிரினிற்பிறந்தொடுக்க
முற்றதும்போலவெல்லாவுலகமுமுதித்தொடுங்கப்
பற்றொடும்பற்றதின்றிநின்றனன்பரனுமன்றே.

இ-ள். சற்றநூற்பொருளுஞ்சொல்லுங் கருத்தினிலடங்கித்தோன்றும் பெற்றியும் - முன்படித்துப்பழகிய சாத்திரச்சொல்லனுபூதி பொருளனுபூதிகள் புத்தியிற்கூட்டிய வாசனையொடுங்கிக் கண்ணெழுத்தியைபு முதலிய காரணத்தினாற் றிரும்ப அந்தவாசனைகிளம்பி மதியினினைவுவருவிக்க நினைத்தவருவுயிர்த்துணைவி மனத்திலிச்சிக்கச் சூக்குமைவாக்கிற்சொல் முன்றோற்ற மதிமணிவிளக்கின் மலர்ந்த சிற்சத்தியிற் சொல்லனுபூதி பொருளனுபூதிகள் பின்றோற்று முறைமையும் (போல)—சாக்கிராதி- சாக்கிரமுதலிய 'அவத்தைகளைந்தும் — உயிரினிற்பிறந்தொடுக்கமுற்றதும் போல - அருவாகி நிமித்தனாகிய வாத்மாவிற் பொருந்திய கருவிகளிற் றமோகுணங் கிளம்பிக்கிளம்பி மெள்ளமெள்ள மேவிடமேவிடச் சத்துவகுணஞ் சற்றே சிற்சத்திமனச் சங்கற்பத்தோடு குன்றிக்குன்றிவர முறைமையிற் றோற்றித் திரும்பத் தமோகுண சத்துவகுணங்களினதேறுதல் குறைதன் மாறிவர மறைந்ததும்போல— பரனும் - சிவனும— எல்லாவுலகமுதித்தொடுங்க - சகலகாரியப்பிரபஞ்சமுற்றும் மாயையிற்றோற்றியழிய (அந்தப்பிரபஞ்சத்தோடு)— அன்றே - அநாதியே — பற்றொடும்பற்றின்றிநின்றனன் - தனதுசத்தியாகிய சொருபகாரணத்தினது சத்திசங்கற்பத்தொழிலாகிய சந்நிதிச்சொரூப சம்பந்தியாய் நின்று கடத்தொடுதொட்டுக் கைகொடுபிடித்த தண்டசக்கிராதி கடத்தினதசைதற்றொழிற் சம்பந்திபோற்சம்பந்தியன்றி — நின்றனன்- வியாபித்திருப்பன். எ-று. (௩௧)

சித்துக்கும் அசித்துக்கும் தோற்றமொடுக்கஞ் சாத்திரஞ் சொல்லுமாதலான், மாயையிற்றோற்றமொடுக்கம் உயிர்க்குமதிக்கப்படாது, சித்துகருச் சடத்தன்மைவருமாதலாலே, பாரிசேடத்தாற் சிவனிடத்திற்செப்பவேண்டும்,சிவனிடத்தொடுங்கினால் முத்தியடைந்துபோகாமற்றிரும்பச் சித்துதிப்பதேனென்றாசங்கித்துப் பரிகரிக்கின்றார்.

உயிரவையொடுங்கிப்பின்னுமுதிப்பதெனரன்பாலென்னிற்
செயிருறுமலத்தினாலுஞ்சிதைந்ததேதென்னிற்சித்தத்
துயர்வொழிகாரியங்களழியுங்காரணங்கிடக்கும்
பயிறருகாரியம்பின்பண்டுபோற்பண்ணுமீசன்.

இ-ள். உயிரவையொடுங்கிப்பின்னு முதிப்பதெனரன்பாலென்னில்- சிவனிடத்திற் சித்துக்குத் தோற்றமொடுக்கம் பிரமத்தில் நாராயணப்பிரகிருதியிற் பரிணதவேதாந்தி பாஞ்சராத்திரிபோலிச்சித்தாந்திகள்செப்பார்கள். பின்னெப்படி?—செயிருறுமலத்தினாலும்- ஆத்மாக்களுக்குத் தோற்றமொடுக்கம் மாயையிற் கலாதிதத்துவங்கடோற்றியொடுங்கிக் கட்டவிட, மோகமுற்றமல மொருபிரதேசத்தினீங்கமறைக்க வதனால் ஞானக்கிரியைகள் விளங்கமறைய வுபசரிக்கப்படும். விகாரமின்றி ஞானக்கிரி

யைகட்குக் கலையினால்விளங்குதல் மலத்தினான்மறைதல் சித்துக்குச் சனனமரணமும் சிவனிமித்தமாதலால் அரன்பாலென்றுபசரிக்கப்பட்டது. சடத்துக்குச் சிவசங்கற்பத்தால் விகாரமாய்த் தனதுகாரணரூபத்திற் காரியரூபமறைதல் காரணரூபமறையக் காரியரூபம்விளங்குதல் நாசமுற்பத்தி— சிதைந்ததேதென்னில் - (ஆணவமுதலிய மலங்களிருக்கிற்) சங்கரிக்கப்பட்டதேதென்னில் — சித்தத்தயர்வொழி - மனசில் மயக்கத்தைவிடு— காரியங்களழியும்- காரியப்பொருள்களொடுங்கும்— காரணங்கிடக்கும்- முதற்றுணைநிமித்தமென்கின்றகாரணத்திரயமிருக்கும் (அதனால்)— பயிறருகாரியம் பின்பண்டுபோற் பண்ணுமீசன்—சிவனிமித்தகாரணனாய்நின்று போசகபோக்கியங்களாக முன்பழகிய காரியப்பொருள்களை முந்தியசிருட்டியிற்போல முதற்காரணத்தினின்று துணைக்காரணத்தாற் றோற்றுவிப்பன் எ-று. (௧௨)

சிவன் கிருத்திய கிருத்தானாலும் விகாரியல்லனென்று விளம்புகின்றார்.

தோற்றுவித்தளித்துப்பின்னுந் துடைத்தருடொழில்கண்மூன்றும்
போற்றவேயுடையனீசன்புகுந்ததுவிகாரமென்னிற்
சாற்றியகதிரோனிற்கத்தாமரையலருங்காந்தங்
காற்றிடுங்கனலைநீருங்கரந்திடுங்காசினிக்கே.

இ-ள். தோற்றுவித்தளித்துப்பின்னுந் துடைத்தருடொழில்கண்மூன்றும்-சிருட்டி ஸ்திதி சங்காரமென்கின்ற மூன்றுகிருத்தியங்களையும், (சொல்லாமற் சித்திக்குந் திரோபாவம் அனுக்கிரகமென்கின்ற இரண்டு கிருத்தியங்களையும்) —ஈசன்-சிவன்—போற்றவேயுடையன்-பண்ணுதற்குரியன்—புகுந்தது விகாரமென்னில்- (குலாலாதிகளுக்குப்போல முன்னிருந்தமுறைமைவிட்டு வேறொருமுறைமை யாகுதலாகிய) விகிர்திவந்ததென்னில் (அதில்லை) —சாற்றியகதிரோனிற்கத் தாமரையலருங்காந்தங் காற்றிடுங்கனலைநீருங் கரந்திடுங்காசினிக்கே- காசினிக்கே - உலகத்தின்கண்ணே, (கண்காணத்தானே காரணமாகக்) கற்பிக்கப்பட்ட சூரியன் முன்னின்றமுறைமையினிற்கக் கமலமலரும்—காந்தம்- சூரியகாந்தக்கல்லுத் (தானு மசைவற்றிருந்து) — காற்டுங்கனலை - அக்கினியைக்கக்கும்— (காசினிக்கேயென வின்னுமெடுத்துக்கொள்க) பூமிக்குள்ளே நீரும்— கரந்திடும்-சுவறும். எ-று.

நீர் சொன்னதுமக்குத் திருட்டாந்தமன்று. சூரியனுக்குக் கமலமலரக்கடவது, காந்தங் கனலைக் கக்கக்கடவது, நீர் நிலத்திலே சுவறக்கடவதெனுஞ் சங்கற்பமில்லை, காரியநிகழக்கண்டோம். இதுகொண்டு பூதங்கர்த்தா, பிரகிருதி கர்த்தா, கன்மங் கர்த்தாகாலங்கர்த்தா, என்கிறவாதங்கள் வந்துலாவப், புத்திமான், கர்த்தாவென்பது பொய்யாய்த் தூரம் போயிற்று.சத்தியம் நீசொல்லியது. சூரியனுக்குக் கமனசங்கற்பத் துவர

சிவதத்துவமஞ்சையும் இருக்கப்பண்ணிக்காத்து மகாப்பிரளயத்தின்மு ற்றும் அவாந்தரத்துஞ் சிலதேகாதிகளையுஞ் சங்கரிப்பர்.

பின்னந்தமகாசிருட்டிகாலத்தில்அனந்தேசுவரர் அசுத்தமாயையி னின்றும் புவனக்கொத்தாயுஞ் சூக்குமதேகக்கொத்தாயு மிருவகையாயி ருக்கின்ற கலாதிபிருதிவியந்த தத்துவங்களையும்தூலசரீரங்களையும்போக்கி யப்பொருள்களையும் பொதுச்சிறப்பாகப்பண்ணிப் பொருத்திக்காத்து மகா ப்பிரளயத்துமுற்றும் அவாந்தரத்துச் சிலதேகங்களையும் ஸ்ரீகண்டாதித்து வாரத்தாலுந் தாமாயுஞ் சங்கரிப்பர்.

மத்திமசிருட்டிகாலத்திற் ஸ்ரீமத் ஸ்ரீகண்டருத்திரர் பிரகிருதியினின் றும் புவனாதாரக்கொத்துமாத்திரமா யிருக்கின்ற குணாதிபிருதிவியந்த தத் துவங்களைப் பொதுவாகப்பண்ணிப் போக்கியப்பொருள் தூலதேகங்க ளைப் பொதுச்சிறப்பாகப்பண்ணிப் பொருத்திக்காத்து, மத்திமப்பிரளயத் தில் முற்றுஞ்சங்கரிப்பர்.

அவரேவலாற் குணநிலையர்களாயிருக்கும் பிரமவிஷ்ணுக்களும் பிர மாண்டத்துண்ணிலையர்களாயிருக்கும் பிரமவிஷ்ணுக்களும் குணாதிபிருதி வியந்த புவனங்களிற் றூலதேகங்களையும் போக்கியப்பொருகள்ளையும் பொதுச்சிறப்பாகப்பண்ணிப் பொருத்திக் காப்பார்கள்.

பிரதமப்பிரளயத்திற் ஸ்ரீகண்டரேவலாற் றமதிருப்புத்தொடங்கிச் சுவர்க்கபரியந்தஞ் சங்கரிக்கும் காலாக்கினிருத்திரரே அவாந்தரத்தும் பிரமாண்டத்துட்டேலசரீரங்களோடு போகக்கியப்பொருள்களைச் சங்கரிப் பர். ஆதலால்) — புண்ணியன் - (பரசிவானுக்கிரகம்பெற்றுப் பரிசுத்தரா ய்ச் சிவனாயிருக்கும், முன்சொல்லிய) ஸ்ரீகண்டபரமேசுரன்— புரைத்த திகாரசத்திநண்ணலாலே - பரசிவனிடத்தினின்றும் பரசிவனுக்கொத்திரு க்கும் பிரகிருதிகாரியசிருட்டியாதி கிருத்தியஞ்செய்யும் சாமர்த்தியம் பெ றலாலே (அவரேவுதற்கர்த்தா) — விரைக்கமலத்தோன் மாலுமேவலா ன் மேவினோர்கள்- (காலாக்கினிருத்திரரோடு) பிரமவிஷ்ணுக்கள் இயற் றுதற்கர்த்தாக்கள்(ஆதலால், அவரொருவருக்கேயாகவைத்தது. அதுவன் றி)—புண்ணியன்- (ஸ்ரீமத் அனந்தேசுரரனுக்கிரகம்பெற்றுப் பரிசுத்தரா ய்ச் சிவனாயிருக்கும் பிரமாண்டத்துட் சிவலோக கைலாய மேருச்சி கர நிலையராகிய) ஸ்ரீகண்டபரமேசுரன் — புரைத்ததிகாரசத்தி நண் ணலாலே-ஸ்ரீமதனந்தேசுவராரிடத்தினின்றும் அனந்தேசுவரருக்கொத்தி ருக்கும் பிரமாண்டத்துட் பிரமவிஷ்ணு முதலோர்க்கு நிக்கிரகானுக்கிரக ம்பண்ணுஞ் சாமர்த்தியம் பெறலாலே(அவரேவுதற்கர்த்தா) — விரைக்கம லத்தோன்மாலும் ஏவலான்மேவினோர்கள்-(பிரமாண்டத்துண்ணிலையரா கிக் காலாக்கினிருத்திரரோடு கூடியிருக்கும்). பிரமவிஷ்ணுக்கள்இயற்றுத ற்கர்த்தாக்கள்.

அதுவன்றி,—புண்ணியன்- (பரசிவானுக்கிரகம்பெற்றுப் பரிசுத்தராய்ச் சிவனாயிருக்கும் ஈசுவரதத்துவ நிலையராகிய) ஸ்ரீகண்டபரமேசுவரன்—புரைத்ததிகாரசத்தி நண்ணலாலே- பரசிவனிடத்தினின்றும் பரசிவனுக்கொத்திருக்கும் அனந்தேசுவரரோடுகூடி மாயாகாரியசிருட்டியாதி கிருத்தியஞ்செய்யுஞ் சாமர்த்தியம்பெறலாலே அவர், சுவயமாயுங் குணநிலையபிரமாண்டநிலையவிருஸ்ரீகண்டத்துவாரத்தினாலேயும் ஏவுதற்கர்த்தா—விரைக்கமலத்தோன் மாலுமேவலான் மேவினோர்கள்- (குணத்துட் பிரமாண்டத்துள் இருவரைப்) பிரமவிஷ்ணுக்களும் இயற்றுதற்கர்த்தாக்கள். எ-று.

இப்படி ஸ்ரீகண்டத்திரயம் பிரேரகம், காலருத்திரரோடு பிரமவிஷ்ணுசதுட்டயம் பிரேரியமெனவறிக. பரசிவனேவுதற்கர்த்தா அனந்தேசராதிகளோடுகூடச் சிறீகண்டத்திரயம் பிரமவிஷ்ணு சதுட்டயமெல்லாம் இயற்றுதற் கர்த்தாவாயிருக்கும். (௧௬)

ஆகையால், மகாப்பிரளயத்திற் பரசிவமொன்றுமே பதிகளுக்குட் பரிசேடிக்குமென்று படிக்கின்றார்.

இறுதியாங்காலந்தன்னிலொருவனேயிருவருந்தம்
முறுதியினின்றாரென்னிலிறுதிதானுண்டாகாதா
லறுதியிலரனேயெல்லாமழித்தலாலவனாலின்னும்
பெறுதுநாமாக்கநோக்கம்பேரதிகரணத்தாலே.

இ-ள். இறுதியாங்காலந்தன்னில்- மகாப்பிரளயத்தில்—ஒருவனே- பரசிவனொருவரே (பதிகளிற் பரிசேடித்துநிற்பர்)—இருவருந் தம்முறுதியினின்றாரென்னில்- (பிரமவிஷ்ணுக்களிருவருந் தாமென்பது பௌராணிகமதப் பழக்கத்திற் படித்தது. சிவசாத்திரியத்துக்கு) அனந்தாதி யதிகாரகர்த்தாக்களனைவரும் தமது கிருத்தியங்களோடு இருந்தார்களாகில்—இறுதிதானுண்டாகாதாம்-மகாப்பிரளயம் வாராதாகும். (ஆதலால்)—அறுதியில்- அந்திகாலமுடிவில்—அரனே- பரசிவனே— எல்லாமழித்தலால்- சிவதத்துவமுதற் பிருதிவிதத்துவபரியந்தம் பிரபஞ்சமுற்றும் சங்கரிப்பித்துச் சங்கரித்தலால்—அவனால்- அந்தப்பரசிவனால்—பேரதிகரணத்தாலே- "அதபத்யுரதிஷ்டானம்" என்று ஸ்ரீமத் மதங்காகமவசனத்தால் தாதாத்மியத்தினால் அந்தப்பரசிவனுக்குப் பெரிதாமிருப்பாகுஞ்சத்திகரணத்தினாலேதானே— (திரும்பவெடுத்துக்கூட்டுக) பேரதிகரணததாலே (பேரதிகரணத்தினின்றுமெனவேற்றுமைமாறுக) "நித்தியாதிட்டேயரூபிணி" யென்று பவுட்கரவசனத்தினாற் பரிக்கிரகத்தினால் அந்தப்பரசிவனுக்குப் பெரிதாமிருப்பதாகுஞ் சுத்தமாயையினின்று சிவதத்துவமைந்துக்கும் — இன்னும்- இனிமேலும் — ஆக்கநோக்கமபெறுதும் - சிருட்டிஸ்திதிகளைக்காண்போம்— (திரும்பவெடுத்துக் கூட்டுக) பேரதிகரணத்தாலே- பரிக்கிரகசத்தியினாலந்தப்பரசிவனுக்குப் பெரிதாமிருப்பதாகு மியற்று

தற்கர்த்தாவாகு மனந்தேசுரனாலேதானே— (திரும்பவெடுத்தக்கூட்டுக) பேரதிகரணத்தாலே- தாதாற்மியத்தினா லந்தவனந்தேசுரருக்குப் பெரிதாயிருப்பாரும் அந்தவனந்தேசுரசத் திகரணத்தினாலேதானே — (திரும்பவெடுத்துக்கூட்டுக) பேரதிகரணத்தாலே-(பேரதிகரணத்தினின்றுமெனவேற்றுமையுமாறுக) பரிக்கிரகத்தினா லந்தவனந்தேசுரருக்குப் பெரிதாயிருப்பதாகு மசுத்தமாயையினின்றுந்தானே காலதத்துவமாதியாய்ப்பிருதிவிதத்துவமந்தமாகுந்தத்துவங்களுக்கு—இன்னுமாக்கநோக்கம்பெறுதும்- திரும்பச் சிருட்டித்திதிகளைக்காண்போம். எ-று. (௬௭)

இதனானுமதுகர்த்தாச் சரீரியல்லவென்பது சொல்லப்பட்டது. சிலவாதிகள் சரீரியல்லாத கர்த்தாவுக்குக் காரியகர்த்திருத்துவங் கூடாதென்று சொல்லுவார்கள், அதெப்படியென்றுவினவ உத்தரமுரைக்கின்றார்.

அருவமோருபாருபமானதோவன்றிநின்ற
வுருவமோவுரைக்குங்கர்த்தாவடிவெனக்குணர்த்திங்கென்னி
லருவமுமுருபாருபமானதுமன்றிநின்ற
வுருவமுமூன்றுஞ்சொன்னவொருவனுக்குள்ளதாமே.

இ-ள். வெளிப்பொருள்.

வினாவின சேஷனதுகருத்திது.

கர்த்தாச்சரீரியோ? அன்றியசரீரியோ? அன்றிச்சரீரியசரீரியோ? அன்றிச்சரீரியசரீரியல்லாதவனோ? இந்த நாலுபக்ஷத்துட் சரீரியசரீரியல்லாதவனாகிற் சூனியப்பொருளாய்ப்போமவன். சரீரியசரீரியாகில் விருத்ததன்மமிரண்டுஞ்சீதமும் உட்டணமும்போல ஒருபொருளிலிராது. அப்படியிருக்குமாகிலும் சரீரிக்கு மசரீரிக்குஞ் சொல்லப்போகின்றகுற்றம் சொல்லாமல்வரும். (௬௮)

சரீரியுமாம், அசரீரியுமாம், சரீரியசரீரியுமாய், என்று நாஞ்சொன்னோம்; சரீரியசரீரியாகில், சரீரிக்கு மசரீரிக்குஞ் சொல்லுங்குற்றம் வருமென்றதேதென்று குருவினாவச்சிஷன்கூறுகின்றதற்குக் கூறுகின்றார்.

நண்ணிடுமுருவமென்னினமக்குளவுருவம்போலப்
பண்ணிடவொருவன்வேண்டுமிச்சையேற்பலருமிச்சை
கண்ணியவுருவங்கொள்ளேமியாம்பெருங்கடவுடானு
மெண்ணியயோகர்சித்தர்போலுருவிசைப்பன்காணே.

இ-ள். நண்ணிடுமுருவமென்னில்-கர்த்தாவைச் சரீரம்வந்து பொருந்துமென்னில்—நமக்குளவுருவம்போல-நம்போல்வார்க்குள்ள சரீரத்துக்குப்போல—பண்ணிடவொருவன் வேண்டும் - சிருட்டிக்க வேறொருகர்த்

தாவிரும்பப்படுவன் (அப்படியாகில் அவனுக்கும் வேறொருகர்த்தாவேண்டுமென்றனவத்தைவரும்)—இச்சையேல்-தமது சங்கற்பத்தாற் றமக்குச் சரீரத்தைப் பண்ணிக்கொள்வாரென்று நீ படித்துப்பேசில், (தாம் சரீரியாயிருந்து தமக்குச் சரீரத்தைப்பண்ணிக்கொண்டாரோ? அன்றி, யசரீரியாயிருந்து பண்ணிக்கொண்டாரோ? சரீரியாயிருந்து, தமதிந்தச்சரீரத்தைச் சிருட்டித்தாராகில், அந்தச்சரீரத்தையும், சரீரியாயிருந்து சிருட்டிக்கவருமென்றனவத்தைவரும்

அசரீரியாயிருந்து சங்கற்பத்தாற் றமது சரீரத்தைப் பண்ணிக்கொண்டாரென்னில், அப்படிச் சங்கற்பத்தாற் சாவப்பிரபஞ்சத்தையும், பண்ணுவரென்று சரீரகற்பனைநிட்பலமாம். அப்படியாகிலும்)—பலருமிச்சை—நாமெல்லாரும் நமதுசங்கற்பத்தானமக்குவேண்டிய சரீரங்களைப்பண்ணிக்கொள்வோம். அப்படிச்சொல்லவேண்டியதல்ல— யாங் கண்ணியவுருவங்கொள்ளேம்-நாமெல்லாரும், கருதிய திவ்வியசரீரங்களை—(மலாதிதகைந்த சாபர்ததியார்களாதலாற்) பண்ணிப் பொருந்திக்கொள்ளமாட்டோம்—பெருங்கடவுடானும்-பரமகர்த்தாத்தானும் — எண்ணியயோகர்சித்தர்போலுருவிசைப்பன்காணே-எண்ணிக்கையாயிருக்கின்றயோகர்கள்சித்தர்கள் போலவேண்டிய சரீரங்களை யெடுப்பன். எ-று. (௩௯)

நீர்சொல்லிய திருட்டாந்தஞ் செப்பமல்லவென்று செப்புகின்றான்.

வித்தகயோகர்சித்தர்வேண்டுருக்கொள்ளுமாபோ
லுத்தமன்கொள்வனென்னிலவர்களிலொருவனாவ
னத்தகையவர்களெல்லாமாக்குவதருளாலாங்கே
வைத்ததுமாயையென்னில்வடிவெலாமாயையாமே.

இ-ள். வித்தக யோகர் சித்தர் வேண்டுருக் கொள்ளுமாபோ லுத்தமன்கொள்வனென்னில் - * அவர்களிலொருவனாவன் - அந்த வித்தக யோகர் சித்தர்களுக்குள்ளே யொருவனாவன் (ஆனாலேது? அவர்கள் பிராகாமியசித்தியினாலே தங்களுக்குச்செயற்கையாகிய வேண்டியசரீரங்களை எடுத்துவிடுவார்கள், தங்கள் இச்சையினால் இயற்கையாகிய சரீரங்களை விட்டியற்கையாகிய திவ்விய சரீரங்களை யெடுக்கமாட்டார்கள்) —அத்தகையவர்களெல்லாமாக்குவதருளாலாங்கேவைத்தது மாயையென்னில் - அதுவன்றியு மவர்கள்—ஆங்கே-அவ்விடத்து—அத்தகையெல்லாம் - பிராகாமியசித்தியினா லெடுக்குஞ் சரீரங்களனைத்தும்(உபாதானகாரணமன்றியுண்டாகாதென்ன) —அருளால்- சிவாக்கினையினால் (காரியத்துவாரத்தினாலே)—மாயைவைத்ததென்னில் — மாயையுண்டாக்கிக்கொடுத்ததென்றுத்தாஞ்சொல்லில் (அத்திருட்டாந்தம்போலச் சிவனுக்கும்) —வடிவெலாமாயையாமே-சரீரமுற்றும் மாயாமயமாமே. எ-று. (௪௦)

ஏகதேசவுவமையில் முற்றுவமைக்குள்ளவுரை யுரைக்கப்பட்டதென்றுரைக்கின்றார்.

மாயைதான்மலத்தைப்பற்றிவருவதோர்வடிவமாகு
மாயவாணவமகன்றவறிவொடுதொழிலையார்க்கு
நாயகனெல்லாஞானத்தொழின்முதனண்ணலாலே
காயமோமாயையன்றுகாண்பதுசத்திதன்னால்.

இ-ள். மாயைதான், மலத்தைப்பற்றி வருவதோர் வடிவமாகும்- ஆணவமலநிமித்தமாக வாராநின்றிருக்குந் தூல சூக்குமசரீரமாகும் (எதுக்காக?)—ஆயவாணவம்- அந்தவாணவமலம் (பசுவான்மாக்களுக்கு)—அகன்றவறிவொடு தொழிலையார்க்கும்- (சிவனுக்குப்போல) விரிந்த சர்வஞ்ஞத்துவம்சர்வகர்த்திருத்துவம் என்கின்ற சியத்துவமாகிய பேரறிவைக்கட்டும். அதனாலந்தப் பசுவான்மாக்களுக்கு மலபரிபாகமு வரும்பொருட்டுப் போகம் புசிக்கச் சிற்றறிவுண்டாகச் சிவனருளால் மாயை தூல சூக்கும சரீரமாம்.—நாயகன்-சிவன்—எல்லாஞானத்தொழின் முதனண்ணலாலே-சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவரூப சிவதத்துவத்தினின்று நிமித்தமன்றி விளங்குஞ சகல ஞானக்கிரியானுக்கிரகங்களைப் பொருந்தலாலே —காயமோமாயையன்று-அவருக்குச் சரீரம மாயோற்பனமன்று, அதற்கு நிமித்தமாகு மலமில்லாமையால். (மலமில்லாம லிருக்கவும, ஸ்ரீமத். ஸ்ரீகண்டபரமேசுரன் முதலோருக்கு மாயாசரீரம்வருவானேன்? மலவாசனையா லதிகாரகாரணமாய்ச், சிறீமதனந்தாதிகளுக்குமாமாயாசரீரம்போல மாயாசரீரம் அதிசுத்தமாய்வரும். சிவனுக்கு மலவாசனைற்பன்னவதிகாரமல மில்லாதபடியால்)— காயமோமாயையன்று-* அப்போதுநீரவருக்குச்சொன்னவடிவேது? சொல்வாம்— காண்பதுசத்திதன்னால்- சிவனுடைய சமவேத சத்தியினாலே அவருக்கு வடிவுண்டாக்கப்படும். எ-று. (௪௧)

அப்போது பரிணாமதோஷம் வருமென்று சொல்லப் பரிகரிக்கின்றார்.

சத்தியேவடிவென்றாலுந்தான்பரிணாமமாகு
நித்தமோவழியுமத்தானின்மலனருவேயென்னி
லத்துவாயார்க்கத்துள்ளானன்றிவனருமைதன்னைப்
புத்திதானுடையைபோலவிருந்தனைபுகலக்கேணீ.

இ-ள். சத்தியேவடிவென்றாலுந்தான்-சிவனுக்குச் சிவசத்தியே சரீரமென்று சொன்னாலும் (அகண்டிதமூர்த்தியாய்ச் சொல்லலாம். கண்டிதமூர்த்தியாய்ச் சொல்லில்) —பரிணாமமாகும்-திரிவதாம் (அதனால்)—நித்தமோவழியும் - நித்தியமென்கின்றதுபோ [யநித்தியமாம், (மாயை கலாதிகாரியமாவதுபோலேகதேசத்திற் கண்டிதமூர்த்தியாமென்னில், மாயைபோற் சடமாம்) — அத்தால் - அந்தக்குற்றம் வருதலால்— நின்மல

ன்- * அருவேயென்னில்- (நீர்சொன்ன உருவமன்று. நீர்சொன்ன அருவேயென்னில்—அத்துவாமார்க்கத்துள்ளானென்று-சிவன் சடத்துவா மார்க்கத்தருவுருவாயிருக்கும பொருள்போலல்லன. (ஆவனென்னில்)—இவனருமைதன்னைப் புத்திதானுடையைபோல விருந்தனைபுகலக்கேணி—மாறுபடுமென்பது சொல்ல நீகேள். எ-று. (சஉ)

மாறுபடுதலை வலைரந்துரைக்கின்றார்.

உலகினிற்பதார்த்தமெல்லாமுருவமோடருவமாகி
நிலவிடுமொன்றென்றாகாநின்றவந்நிலையேபோல
வலகிலாவறிவன்றானுமருவமேயென்னிலாய்ந்து
குலவியபதார்த்தந்தொன்றாய்க்கூடுவன்குறித்திடாயே.

இ-ள். உலகினிற் பதார்த்தமெல்லாம்- * உருவமோடருவமாகி நிலவிடும்-மாயைமுதலிய வரூபமும் பூதமுதலியவுருவமுமாகிநிற்கும்—ஒன்றென்றாகாநின்ற வந்நிலையேபோல-அருவுருவாகாதருவருகாது நிற்குமந்தமுறைமையேபோல—அலகிலாவறிவன்றானு மருவமேயெனனில்-ஒப்பற்ற ஞானமுடைய சிவனு முருவில்லாப்பொருளென்று சொல்லில்—ஆய்ந்துகுலவிய பதார்த்ததொன்றாய்க்கூடுவன்- விசாரித்துக்கொண்டாடப்பட்ட மாமாயா மாயாகாரியப்பொருள்களி னொன்றாய்ப் பொருள்களோடு கலப்பில்லான் கலப்பன் — குறிதிடாயே - விசாரித்துப்பார—[சித்தருச் சடவருப்போலன்றென்று தாற்பரியம்.] எ-று. (சங)

சாங்கரிய முண்டென்றுரைக்க வில்லையென்றும், பிரகாராந்தரத்திறனுண்டென்று முரைக்கின்றார்.

பந்தமும்வீடுமாயபதபதார்த்தங்களல்லா
னந்தமுமாதியில்லானளப்பிலனுதலாலே
யெந்தைதானின்னனென்றுமின்னதாமின்னதாகி
வந்திடானென்றுஞ்சொல்லவழக்கொடுமாற்றமின்றே.

இ-ள். பந்தமும் வீடுமாயபத பதார்த்தங்களல்லான் - மோககமும் போதகமுமாயிருக்கும் மாயா மகாமாயா காரியமாகிய சொற்பொருளாகும் பொருள்களல்லான்—அந்தமுமாதியில்லான்-நித்தியன்—அளப்பிலன்-வியாபகன்—ஆதலாலே எந்தைதான்- எமது சுவாமிதான்—இன்னனென்றும்-இக்குறியுடையரென்றும்—இன்னதாம்- இப்படியாவதென்று சுட்டியறியப்படும் பொருளாமென்றும்—இன்னதாகிவந்திடான்- (எல்லாவியாபகத்தா லதுதானுயிருத்தலால்) இப்பொருளாய் வாரானென்றும்—சொல்ல—வழக்கொடு மாற்றமின்றே- சங்கை யுத்தரங்களில்லை, அனுமானுகமக்க ளில்லையென்றுமாம். எ-று. (சச)

அதற்கேதுகூறுகின்றார்.

குறித்ததொன்றாகமாட்டாக்குறைவிலனாகலானும்
நெறிப்படநிறைந்தஞானத்தொழிலுடைநிலைமையானும்
வெறுப்பொடுவிருப்புத்தன்பான்மேவுதலிலாமையானு
நிறுத்திடுநினைந்தமேனிநின்மலனருளினாலே.

இ-ள். நின்மலன்-சிவன்—குறித்ததொன்றாகமாட்டாக்குறைவிலனாதலானும்- (எவற்றுக்கர்த்தாவா யிருக்கின்ற சிவன் இயற்றுதற் கர்த்தாக்களாயிருந்து, உபதேசகர்த்தாக்களும் சிருட்டிமுதலிய கிருத்தியகர்த்தாக்களுமா யிருக்கின்ற, அனுசதாசிவர் அனந்தேசுரர் ஸ்ரீகண்டத்திரயம் பிரமவிட்டுணு புத்தர் அருகர் கபிலர் கணாதர் முதலியகர்த்தாக்கள் சரீரங்களைச் சாட்சாத்தும் பாரம்பரியமாயு மதிட்டித்துத், தனதுசரீரமாகப் பண்ணிக்கொண்டு, அவர்கள்பண்ணுங்கிருத்தியந்தனதுகிருத்தியமாய் முடிதலால், அந்த நமதுசரீரமென்று) குறித்த-சங்கற்பித்த, சரீரங்களுக்குள் ளொருசரீரமும் நமதல்லவென்னுங் குறைவின்றி நிறைவாகிநிற்பவனாதலானும்—நெறிப்பட நிறைந்த ஞானத தொழிலுடைநிலைமையானும்—எல்லாமார்க்கத்துஞ்செல்லப்பூரணமாகிய, சிற்கிரியாச்செய்திசெய் சத்தியுடைய தன்மையனாதலானும்—வெறுப்பொடு விருப்புத் தன்பான்மேவுதலிலாமையானும்-இராகத் துவேஷவிசைவு தன்னிடத்தில்லாமையானும—அருளினால் - தனதுசத்தி சங்கற்பத்தால்—நினைந்தமேனி - சங்கற்பித்த காரியத்துக்கேற்ற வனுசதாசிவர்முதலோர் திருமேனியை— நிறுத்திடும்- (தனதுதிருமேனிபோலத்) தரிக்கும். எ-று. (௪௫)

இப்படிக் குருதேகங்களையதிட்டித்துத் தீட்சோபதேசஞ் செய்யாதிருந்தால், முத்தராவதுமின்று, குருசந்தானமு நடவாதென்று கூறுகின்றார்.

ஆரணமாகமங்களருளினாலுருவுகொண்டு
காரணனருளானாகிறகதிப்பவரில்லையாகு
நாரணன்முதலாயுள்ளசுரர்நரர்நாகர்க்கெல்லாஞ்
சீரணிகுருசந்தானச்செய்தியுஞ்சென்றிடாவே.

இ-ள். காரணன்-சிவன்—அருளினால்-தனது சத்திசங்கற்பமாத்திரத்தினால்— உருவுகொண்டு-இது நமதென்ற குருதேகங்களைக் குறித்துச் செலுத்தி—ஆகமமாரணங்களருளானாகில் - வேதாகமங்களையுபதேசியானாகில்—கதிப்பவரில்லை-முத்தராவாரில்லை, மற்றது வெளிப்பொருள். எ-று.

இப்படிச் சிவனுக்கு வாஸ்தவதேகமில்லாமையாற் றியானபூசாதி நிமித்தங் கற்பனீகதேகம அனுசதாசிவாதிதேகங்களை யொட்டிக் கற்பிக்கவேண்டும். அதெதினாற் கற்பிக்கவேணுமென்றவினவ, அவருடைய சத்தியினாலேதானே கற்பிக்கப்படுமென்று சாற்றுகின்றார்.

உருவருள் குணங்களோடு முணர்வருளுருவிற்றோன்றுங்
கருமமு மருளரன்றன்கரசரணாதிசாங்கந்
தருமருளுபாங்கமெல்லாந்தானருடனக்கொன்றின்றி
யருளுருவுயிருக்கென்றேயாக்குவனசிந்தனன்றே.

· இ-ள். (நிரவதிகைகளாய் நீரூபிகளாய் நிரஞ்சநிற்பேதவதிகைக ளாய் நிட்காடின்னியைகளாய் நிட்கம்பைகளாய் நிச்சலைகளாய், ஈசானியாதி மூர்த்தியந்த பஞ்சசத்திசமுற்பன்ன சசினியாதி யட்டத்திறிம்சற்க லைகளாயிருக்கும், முன்பின் மூலாக்கிரங்களில் முறைமையிற்கோத்த ஞா னசத்தி இச்சாசத்திமத்தாகிய கிரியாசத்திகலைகள் விண்டவகண்டபிண் டாசல சிவசரீரம், சாவதிகைகளாய்ச் சருபைகளாய்ச் சாங்சபேதவ திகைகளாய்ச் சகாடின்னியைகளாய்ச் சகம்பைகளாய்ச் சசலைகளா யிருக்கு மாயாகலைகள் விண்டகண்ட பிண்டசல பசுசரீரம்போல் அய க்காந்தம்போல் அசைவற்றிருந்துங் கிருதகிய கிருத்தாதலாற் கடின கண்டித சலித சரீரமாக உபசரிக்கப்பட்டது. ஆதலால் ஐந்து பதினை ந்து பத்து இரண்டாகிய முகநேத்திர கரசரணாதிகளிற் காடின்னிய கண் டிப்புச் சலனம, வெண்மைநிறமுதலநிறமாதிகளதனால்வருஞ் சகளாதி பேதஞ் சகலமுங் கற்பிதங்களசத்தியங்களாம. ஆகையாற் கிரியாசத்திவ க்கண சிவசரீரத்துக இச்சாசத்தி சங்கற்பரூபப் பிரவிருத்திலக்கண சக ளாதிகார சதாசிவனும வீசுரரூபமுங், கிரியாசத்தி சமுத்தியோகரூபப் பிரவிருத்தி நிவிர்த்திலக்கண சகளநிட்கள போகாருகத சிவனுமசதாசிவ ரூபமும், ஞானசத்திக்குறிச் சுமகாவிருப்புரூப நிவிர்த்திலக்கண நிட்கள விலயசிவநாம சாந்தரூபமும, விருத்தி பரிணாதி விவர்த்தாரம்பமல்லவாத லால் அநித்தியங் கற்பித மசத்தியமுமன்று. ஆகையால் அந்தவிலய போகவதிகார முசசொரூபமும் நித்திய சத்திய சொரூபலக்கணந்தானே. ஆதலால் அர்த்தச்சகளமுஞ் சத்திகலாசாகித்தியத்தினாற் சகளம், மாயாக லாராகித்தியத்தினானிட்களம, ஆதலாற் சகளநிட்களமாம். ஆகையாற் சிவனது) உருவும்-அங்கமும்—அருள்-சத்திரூபம்—சாங்கந்தருங் குணங்க ளோடு முருவிற்றோன்று முணர்வுங் கருமமும்-சருவத்தையு மறிதலும் பணணுதலும—அருள் - சத்திவியாபாரரூபம— அரன்றன்கரசரணாதி - சிவ னது பிரத்தியங்கமும்—அருள்- சத்திரூபம—உபாங்கமுமருள்—எல்லாந்தா னருள்-இதுவன்றிச் சிவனுக்குச்சொல்லப்படுவன யாவுண் டவை யெல்லாஞ் சத்திரூபம்—(இப்படி) அசிந்தன் - சிவன்—அருளுரு - சத்தி சரீரத்தை—தனக்கொன்றின்றி—தன்பிரயோசனங்குறியாமல்— (பிரயோ சனம்) உயிருக்கென்றேயாக்குவன்-*. எ-று.

அது வாதுளத்தில் வித்தரிக்கப்பட்டது. அந்தக்கிரந்தமிது.

அங்கப்ரத்யங்கசாங்கஞ்ச உபாங்கஞ்சதுரோபவேத்।
சிரோவக்த்ரஞ்சஇருதயம் அங்கஞ்சேதிப்ரகீர்த்திதம்॥

வக்ஷகண்டஸ்தமௌவாக நாபிகுய்யோதரந்ததா।
நேத்ரம்நாஸாஸ்யகர்ணௌச பாணிபாதௌததாங்குலி:॥
ஊருசாநூச்சங்கேச ப்ரத்தியங்கஞ்சேதிகத்தியதே।
மூர்த்திநாங்குணரூபந்து சாங்கஞ்சேதிப்பிரகீர்த்திதம்॥
குணஞ்சின்னமிதிக்ஞேயந் தத்குணந்தசதாபவேத்।
குணஞ்சத்தியம்ப்ரதாபஞ்ச தூர்ப்பேத்யாநுக்ரகந்ததா॥
இருத்திமாயாவிவர்ணஞ்ச நாதம்சங்கிருதிரேவச।
ஏதேதசகுணப்ரோக்தா தேஷாம்லக்ஷணமுச்யதே॥
திரிகுணஞ்சூலமித்யுக்தஞ் சத்யம்பரசுரீஷ்யதே।
கட்கமீசப்ரதாபோயந் தூர்ப்பேத்யம்வச்ரமிஷ்யதே॥
ஈசஸ்யாநுக்கிரகஞ்சைவ அபயஞ்சப்பிரசஸ்யதே।
இருத்திஸ்யாநாகரூபந்து பாசம்மாயாஸ்வரூபகம்॥
விவர்ணமங்குசஞ்சைவ கண்டாநாதாத்மகம்விது:।
சங்காரமக்நிரூபம்ஸ்யாத் பாசாநாம்பஸ்மசாற்கிருதி:॥
ஏதேவைகுணரூபம்ஸ்யாத் சாங்கஞ்சேதிப்பிரகீர்த்திதம்।
வஸ்த்ரோபவீதமாலாட்டிய கந்தமாபரணந்ததா॥
ஆசனாவரணஞ்சைவ ப்யுபாங்கஞ்சேதிகீர்த்திதம்। இதி. (௪௭)

சிவன் சிறீகண்டப்பிரேரகராகு மனந்தேசுரராகிய மூர்த்தியாற் மாவி லந்தராத்மாவாய்த் திரும்பவந்த வனந்தேசுரராகிய மூர்த்தி யாற்மாவைப் பிரமாண்டாந்தராதிபதியாகுஞ் சிறீகண்டராகிய மூர்த்தியாற்மாவி லந்தராத்மாவாக்கி யந்தச் சிறீகண்ட சரீரசரீரியாய்ச் சத்தியகாதின்னிய கண்டிப்புடைய காயகரணகலைகளாற் சகளராயிருந்து, பிரம விஷ்ணு முதலோர்க்குஞ் சுவேததோபமன்னியுப்பிறபிரதிகட்குங் கிருஷ்ணவருச்சுனுதியர்க்கு மறுபத்துமூவர்முதலோர்க்கு நிக்கிரகானுக்கிரகங்களைப் பண்ணிவிளையாட்டுவிளைத்துப் பின், அகம்பிறர்தமக்கு மற்ப சொற்ப வத்தியற்புதப் பிரசாதப் பிரதராயிருந்து சரிக்குஞ் சரித்திரங்களிற் சிறிது பவுராணிகமதம் பாஷிப்பதற் குபக்கிரமிக்கின்றார்.

உலகினையிறந்து நின்றதரனுருவென்பதோரா
ருலகவனுருவிற்றோன்றியொடுங்கிடுமென்றுமோரா
ருலகினுக்குயிருமாகியுலகுமாய்நின்றதோரா
ருலகினிலொருவனென்பருருவினையுணராரெல்லாம்.

இ-ள். அரனுரு-சிறீகண்டசரீரமாகிக் கண்டிப்புப்பொருந்திய சிவசரீரம். உலகினையிறந்துநின்றது - சிவாற்மகிருத்திய விலக்கணகிருத்தியங்களையுடையதென்பது. ஓரார் - விசாரியார், உலகு - பிரபஞ்சம். அவனு

ருவிற்றொன்றி, யொடுங்கிடுமென்றுமோரார்-அந்தச்சிவனது கண்டிப்பி ல்லாச் சமவேதசிற்சத்தி சரீராதிட்டித வகண்டித பரிக்கிரக மாமாயா மாயாசத்திசரீரத்தினின்றும் பிறந்திறந்திருக்குமென்பதும் விசாரியார்—உலகினுக்குயிருமாகி யுலகுமாய்நின்றதோரார்-சிதசிற்பிரேரகராய் வியா பியாயிருப்பதுமுணரார்—(இப்படியிருக்கும்)உருவினை, உணராரெல்லாம்-விவேகித்தறியாரனைவரும் —(சிறீகண்ட ரூபியாயிருக்கின்றசிவன் திருட் டாகாரராதலால்) உலகினிலொருவனென்பர் - நம்மைப்போலேயொரு வனென்று சொல்லுவார்கள். எ-று. (௪௮)

இதுவுமது.

தேவரிலொருவனென்பர்திருவுருச்சிவனைத்தேவர்
மூவராய்நின்றதோரார்முதலுருப்பாதிமாத
ராவதுமுணராராதியரியயற்கறியவொண்ணா
மேவுருநிலையுமோராரதனுருவினைவுமோரார்.

இ-ள். திருவுருச்சிவனை-சிறீகண்டசரீர சரீரியாயிருக்குஞ் சிவனை. தேவர்மூவர்களைச் செலுத்தி யவரவராய்த் தியானம பண்ணப்படுவரெ ன்பதறியார். முதலுருப்பாதி-சத்திசிவாற்மகம். மேவுருநிலை-இலிங்கத் தம் பாகிருதி. அதனுருவினைவு-சதாசிவரூபம். மற்றது வெளிப்பொருள். (௪௯)

இதுவுமது.

போகியாயிருந்துயிர்க்குப்போகத்தைப்புரிதலோரார்
யோகியாயோகமுத்தியுதவுதலதுவுமோரார்
வேகியானாற்போறசெய்தவினையினைவிட்டலோரா
ரூகியாமூடரெல்லாமும்பரிலொருவனென்பர்.

இ-ள். போகியாய்-தேவிதேவனாயிருந்து. யோகியாய்-தெட்சணாமூ ர்த்தியாயிருந்து. வேகியானாற்போல் - கோபியானாற்போல. ஊகியார்-விசாரியார். மற்றதுவெளிப்பொருள். (௫௦)

இதுவுமது

ஒன்றொடொன்றொவ்வாவேடமொருவனேதரித்துக்கொண்டு
நின்றலாலுலகுநீங்கிநின்றனனென்றுமோரா
ரன்றியவ்வேடமெல்லாமருள்புரிதொழிலென்றோரார்
கொன்றதுவினையைக்கொன்றுநின்றவக்குணமென்றோரார்.

இ-ள். ஒன்றொடொன்றொவ்வாவேடம்- கிராதாதி விக்கிரகபேதக யுதபேதங்கள். கொன்றது-தக்கன்மதனாதி சங்காரம். வினையைக்கொ ன்றது - இருவினையுட்பாவத்தைப் புசிப்பித்து நாசமாக்குவது. மற்றது வெளிப்பொருள். (௫௧)

இதுவுமது.

நாயகன்கண்ணையப்பானாயகிபுதைப்பவெங்கும்
பாயிருளாகிமூடப்பரிந்துலகினுக்குநெற்றித்
தூயநேத்திரத்தினாலேசுடரொளிகொடுத்தபண்பிற்
றேயபாரொளிகளெல்லாஞ்சிவனுருத்தேசதென்றார்.

இ-ள். வெளிப்பொருள். (௫௨)

இதுவுமது.

கண்ணுதல்யோகிருப்பக்காமனின்றிடவேட்கைக்கு
விண்ணுறுதேவராதிமெலிந்தமையோரார்மாறு
னெண்ணிவேணமகனையேவவெரிவிழித்திமவான்பெற்ற
பெண்ணினைப்புணர்ந்துயிர்க்குப்பேரின்பமளித்ததோரார்.

இ-ள். வெளிப்பொருள். (௫௩)

*சுத்தாத்துவ சிருட்டி ஸ்திதி சங்காரங்கள்போற் பிரகிருதிக்குள்ளுள்ள வவாந்தரகிருத்தியம், பிரமாண்டத்துள்ளுள்ள வவாந்தரகிருத்தியஞ், சாட்சாற்சிவ கிருத்தியமாகட்டும், ஸ்ரீகண்டதேகமறைவின்ற சிவனுக்குக கிருத்தியமென்பது வேண்டாம். அது நல்லதன்று. சக்கிரவர்த்தியாயிருக்கின்ற விராசாவுக் கந்தரங்ககிருத்தியம் வெகிரங்ககிருத்தியம்போலச், சிவனுக்குமப்படி யந்தரங்க கிருத்தியம வெகிரங்ககிருத்திய மிரண்டு முறைமையிற் சாட்சாத் தன்னாலும, பிறரைச்செலுத்தி யவர்தானாகி மறைவாலு நடக்குமென்று கூறுகின்றார்.*

படைப்பாதித்தொழிலும்பத்தர்க்கருளும்பாவனையுநூலு
மிடப்பாகமாதராளோடியைந்துயிர்க்கின்பமென்று
மடைப்பானுமதுவுமுத்தியளித்திடும்யோகும்பாசந்
துடைப்பானுந்தொழிலுமேனிதொடக்கானேற்சொல்லொணாதே

இ-ள். (முறைமையிற் பிரதமமகாசிருட்டியில், சிவன் சிவதத்துவ பஞ்சகசிருட்டிபண்ணிப் பின்னனந்தேசுரசரீரசரீரியா யசுத்தமாயையினின்றுங் காலதத்துவமுதற் பிருதிவிதத்துவமந்தமான தத்துவ தாத்துவிகங்களையுண்டாக்கி, உருத்திரரை இருதயத்தினின்றும், விஷ்ணுவையும் பிரமாவையும் பாரிசுவங்களினின்றுஞ், சூரியசோமாக்கினிகளை வலதிடது நெற்றிநேத்திரங்களினின்றும், விக்கினேசுவரரையுஞ் சுப்பிரமணியரையுங்கண்டத்தினின்றும் இருதயத்தினின்றும், இப்படி வாதுளத்திற்சொன்னபடி மற்றமற்ற வங்கங்களினின்றுந் தேவர்களிருடிகள் வேதசா

த்திரங்கள், மற்றுமுள்ளன வுண்டாக்குவர். கடுவேகடுவேவரு மவாந்தரசிருட்டியில்) மேனிநுடக்கானேல்-பிரகிருதியிலைய சிறீகண்டசரீர சரீரியாயும், பிரமாண்டத்திலேய சிறீகண்ட சரீரசரீரியாயு மிராநிருந்தால்-படைப்பாதித்தொழிலும்-மத்திமப்பிரளயமுடிவினிற் குணதத்துவமுதற் பிருதிவிதத்துவமீறுகுந் தத்துவதாத்துவிக சிருட்டித் திதி சங்காரங்களும்-பத்தர்க் கருளும்பாவனையுநூலும் - தீட்சாவான்களாயிருக்குஞ் சிட்டருக்கு-அருளும்பாவனையும்-உபதேசித்துக்காண்பிக்கும் நிராலம்ப சிவத்தியானமும்--நூலும்-சிவாகமோபதேசமும்-இடப்பாகமாதராளோடியைந்துயிர்கஇன்பமென்றும்-*. அடைப்பாளுமதுவும் உண்டாக்குவதும்-முத்தியளித்திடும் போகும்-உபதேசித்துக் காண்பிக்குஞ் சாலம்ப சிவத்தியானமும்-பாசந்துடைப்பானுந்தொழிலும் - தீட்சையைப் பண்ணுவதும்-சொல்லொணாதே-ஆமென்றறையப்படாதே. எ-று.

சூரியனைக் காசிபர்புத்திரனென்பதுஞ், சந்திரனை அத்திரிபுத்திரனென்பதும், இருடிகளைப் பிரமாமுதலோர் புத்திரர்களென்பதும், வேதசாத்திரங்களைப் பிரமாமுதலோர் சொன்னதென்பதுஞ் சுப்பிரமணியர் விக்கினேசுர ரிவர்களைச் சிறீகண்டபுத்திரரென்பதும், இவைமுதலான பலவும், அவாந்தரசிருட்டியில்,முன்சொல்லியபடி மகாசிருட்டியில் மகேசரபுத்திரர்களே. மந்திரசாத்திரஞ் சதாசிவமாதலால் லெளகீகாதியதிமார்க்காந்தசாத்திரங்கள், சாட்சாத்தும் பிரகாராந்தரத்தினுலும் வந்தாலுமகேசுரசாத்திரங்களே. (௫௪)

இப்படி மூன்றுதிருமேனியு மூகிக்கப்பட்டதென் றுணர்த்துகின்றார்.

உருமேனிதரித்துக்கொண்டதென்றலுமுருவிறந்த
வருமேனியதுவுங்கண்டோமருவுருவானபோது
திருமேனியுபயம்பெற்றேஞ்செய்பியமூன்றுநந்தங்
கருமேனிகழிக்கவந்தகருணையின்வடிவுகாணே.

இ-ள். உருமேனிதரித்துக்கொண்ட தென்றலும்-சிறீகண்ட சகளசரீரத்தைத் தனதுசரீரமாய்ப் பரித்திருக்குமென்று படித்தமாத்திரத்தில் (தரிக்கப்படுவதுருத், தரிப்பது அருவென்றிரண்டுஞ்சித்தித்தலால்)-உருவிறந்தவருமேனியதுவுங்கண்டோம் - உருவாதீதமா யருவாயிருக்கு நிட்களசரீர மனுமித்தறிந்தோம்-(அருவு முருவுமாயிருக்கு மீசுரசரீரமென்று) திருமேனியுபயம்பெற்றேம் - சகளநிட்கள சரீரமுந் தியானிப்போம்-செப்பியமூன்று நந்தங்கருமேனிகழிக்கவந்த கருணையின்வடிவு காணே-(அசலஞ் சலாசலஞ் சலமென்றும்,பரஞ்சூக்குமந்தூலமென்றுஞ்) சாற்றிய மூன்றுசரீரமும் (பரசரீர சூக்குமசரீரத்தோடுகூடப் பிதிருமாதிருசுக்கிலசுரோணிதங்களிலுண்டாகிய தூலசரீரசங்காரத்தைநீக்கவந்த-கருணையின்வடிவுகாணே - சிவசத்திவடிவாயுஞ் சிவசத்தியபிவியத்தித்தானவடிவாயு மிருக்கின்றதுதானே." எ-று. (௫௫)

செப்பியது நன்றுதான். அவ்வளவிவ்வளவில் ஈசானி பூரணி யார்த்தி வாமை மூர்த்தி என்னும் பஞ்சசத்திப்புறவுருவுடைத்தாய், ஆரணி செனனி ரோதயித்திரி எனுந் திரிசத்தியுள்ளுருவுடைத்தாயிருக்குங் கிரியாசத்தி சரீரப்புறவுருவிலுதித்த சசினியாதி யட்டத்திறிம்சற்கலைகளினது பிரவிருத்தி நிவிர்த்திப்பிரவிருத்தி நிவிர்த்திவடிவாயிருக்குஞ் சகளவுருச்சரீரஞ் சகளநிட்களவுருவருச்சரீரம், நிட்களவருச்சரீரஞ் சொரூபமென்று முன்சொன்னீர்; திரும்ப அதுவன்றி மூன்றுட் சகள சரீரமாத்திரஞ் சத்திகலாசாகியத்தினிலே சகளமாதலால், மாயாகலாராகியத்தினலே நிட்களமாதலாற் சகள நிட்களமென்று முன்சொன்னீர்; திரும்ப அதுவன்றி யிப்போது சிறீகண்டதேக தேகியாயிருக்கின்ற சிவனுக்குச் சொரூபதடததங்களிலே நிட்களஞ் சகளநிட்களஞ் சகளமாயுஞ் சரீரஞ்சொன்னீர்; திரும்ப அதுவன்றி, அத்துவாமூர்த்தியாக வாகமங்கள்சொல்லுவதேதென்றாசங்கிக்க வுத்தரஞ்சொல்லுகின்றார்.

அத்துவாமூர்த்தியாகவறைகுவதென்னையென்னி
னித்தனாய்நிறைந்தவற்றினீங்கிடாநிலைமையானுஞ்
சித்துடனசித்துக்கெல்லாஞ்சேட்டிதனாதலானும்
வைத்ததாமத்துவாவும்வடிவெனமறைகளெல்லாம்.

இ-ள். அத்துவாமூர்த்தியாக வறைகுவது - * என்னையென்னில்-ஏதென்று நீவினவினால்-நித்தனாய் நிறைந்தவற்றி னீங்கிடா நிலைமையானும்-நித்தியனா யிடைவிடாது வியாபித்துப் பிரியாதிருத்தலானும்-சித்துடனசித்துக்கெல்லாஞ் சேட்டிதனாதலானும் - சேதன சடபதார்த்தங்களனைத்தினுக்கும் பிரேரகனாதலானும்—அத்துவாவும்- ஆறுமார்க்கமும்—சிவனுக்கு, வடிவென - சரீரமாக—மறைகள் - சிவாகமங்கள்— வைத்ததாம்- சொன்னதாம். எ-று.

அப்படியன்றே வாத்மாக்களுக்குச் சலையென்றும் அசலையென்றும் மூர்த்தியிரண்டு. அவற்றுள், அசலையாவது முன் பிரபஞ்சித்திருக்கின்ற ஞானக்கிரியாரூப சிற்சத்திமூர்த்தி; அது தனது சங்கற்பத்தாற்றானசைவின்றி யசைவினாற் சடகாரிய நிகழப்பண்ணும்; அதனால் மூர்த்தியென்றுபசரிக்கப்பட்டது.

சலையாவது முன்பிரபஞ்சித்திருக்கின்ற பிரணவகலாபஞ்சகரூபமாய் நாதத்துளேந்தாயிருக்குஞ் சிவதத்துவதாத்துவிகபரதேக மூர்த்தியாயும் எழிருபத்துநாலாயிருக்கும் வித்தியாதத்துவ வாத்மதத்துவதாத்துவிக சூக்குமதேகமூர்த்தியாயும் பௌவனாலதேகமூர்த்தியாயு மிருக்

கும். அது அசலையென்றுமுன்சொன்ன ஞானக்கிரியாரூப சிற்சத்திமூர்த்தி சங்கற்பத்தா லசைந்துசஞ்சரித்துக் காரியபடுமதனு லிதொன்றுமே, நிருபசரிதவாஸ்தவமூர்த்தி, கரசரணுதியாயுங் கரசரணுதிசம்பந்தமாயுங் காணப்படுதலால். அப்படிச் சிவனதிரண்டு மூர்த்திகளில், அசலையாவது ஞானக்கிரியாரூபசிற்சத்திமூர்த்தி; அது தனதுசங்கற்பத்தாற் றானசைவின்றி யசைவிஞற்சடகாரிய நிகழப்பண்ணும்; அதனுல் மூர்த்தியென்றுபசரிக்கப்பட்டது. சலையாவது சுத்தாத்துவ பரமேக மூர்த்தியாயுஞ், சுத்தாசுத்தாத்துவகுக்குமதேக மூர்த்தியாயும், அசுத்தாத்துவ தூலதேகமூர்த்தியாயுமிருக்கும். அதசலையென்று முன்சொன்ன ஞானக்கிரியாரூபசிற்சத்திமூர்த்தி சங்கற்பத்தால், அசைந்து சஞ்சரித்துக்காரியப்படும். இதனுலும் இலிங்கத்திற் கலாதிசடத்துவநியாசம்பண் முதலாலும் வாஸ்தவபெந்த மூர்த்தியல்லாதிருந்தாலும் மூர்த்தியெனறுபசரிக்கப்பட்டது. (கூகூ)

வாச்சியமந்திர மூந்தச்சத்திசரீரமென்றுசாதித்ததனுற் சங்கிக்கப்படுமதன்றென்று வாசகமந்திரத்தை மனசில்வைத்துச்சங்கித்துத்தரமுரைக்கின்றூர்.

மந்திரமத்துவாவின்மிகுத்தொருவடிவமாகத்
தந்ததென்னரனுக்கென்னிற்சகத்தினுக்குபாதானங்கள்
விந்துமோகினிமான்மூன்றுமிவற்றின்மேலாகிவிந்துச்
சிந்தையாரதீதமானசிவசத்திசேர்ந்துநிற்கும்.

இ-ள். அத்துவாவின் - ஆறத்துவாவுக்குள்— மந்திரமரனுக்கு-*மிகுத்தொருவடிவமாக-மிகுதியுமொப்பற்றமூர்த்தியாக—தந்ததென்னெனில்- சொன்னதேதென்றுசொல்லில்— சகத்தினுக்குபாதானங்கள்- உலகத்துக்குமுதற்காரணங்கள் — விந்துமோகினிமான்மூன்றும் - மகாமாயை மாயை பிரகிருதியென்று மூன்றுவகையாம் — இவற்றின்- இம்முதற்காரணமூன்றுள்— விந்து- மகாமாயையானது—சிந்தையாரதீதமான சிவசத்தி சேர்ந்துநிற்கும் -சித்தத்தைவியாபித்துக்கடந்திருக்குஞ் சிவசத்திசாட்சாற்சந்நிதிப்பட்டிருக்கும். எ-று. (கள)

அதனுலேதென்னச்சம்பந்தஞ்சாற்றுகின்றூர்,

சுத்தமாம்விந்துத்தன்னிற்றோன்றியவாதலானுஞ்
சத்திதான்பிரேரித்துப்பின்றூனதிட்டித்துக்கொண்டே
யத்தினுற்புத்திமுத்தியளித்தலாலரனுக்கென்றே
வைத்ததாமந்திரங்கள்வடிவெனமறைகளெல்லாம்.

இ-ள். சுத்தமாம்விந்துத் தன்னிற் றோன்றியவாதலானும்-சுத்தமாயையினின்றுஞ் (சிவசத்திசங்கற்பத்தாற்) றோற்றியகாரணத்தினுலும்—சத்திதான்பிரேரித்துப்பின்றூனதிட்டித்துக்கொண்டே -அந்தச்சிவசத்திதா

ன்தனை நசங்கற்பத்திலுண்டாக்கிச்சுத்தவித்தையிலிருக்குமந்தவாகீசை விசித்திவியாக்கினிசம மந்திரங்களைப் பிரேரித்து மாந்திரிகனுச்சரிக்குங்க ளிச்கொத்த வாச்சியார்த்திக மந்திரங்களிலே செலுத்திப் பறவித் தலை களிற் சாலித்தியமாய்ச் சானே—அவ்விதனுல்- (மாந்திரிகனுலே செபிக்கப் பூசிக்கப்பட்ட) அந்தமந்திரங்களினுலே — புத்திமுத்தியளித்தலால்- சித்தி மோட்சங்களைக்கொடுத்தலால் — வைத்ததாயமந்திரங்கள்வடிவெனமறைக ளெல்லாம்-சிவனுக்கு மந்திரங்கள் சரீரமென்று சிவாகமங்களெல்லாத்து ஞ் செப்பியதாம். எ-று. (௫௮)

மேற்சிறப்புணர்த்துகின்றார்.

மந்திரமதனிற்பஞ்சமந்திரவடிவமாகத்
தந்திரஞ்சொன்னவாறிங்கென்னெனிற்சாற்றக்கேணீ
முந்தியதோற்றத்தாலுமந்திரமூலத்தாலு
மந்தமில்சத்தியாதிக்கிசைத்தலுமாகுமன்றே.

இ-ள். மந்திரமதனிற்பஞ்சமந்திரம்வடிவமாக- மந்திரங்களுக்குள்ளே விசேடித் தீசானமுதலைந்துமந்திரஞ் சரீரமாக—தந்திரஞ்சொன்னவாறிங் கென்னெனில்-சிவாகமஞ்செப்பியதேதென்னில்—சாற்றக்கேணீ-சொல்ல நீகேள்—முந்தியதோற்றத்தாலும் - பிரதமசிருட்டியாதலாலும்— மந்திரமூ லத்தாலும- மந்திரங்களிற் பிரதானங்களாகையாலும் (விசேடித்துவடி வென்றுசெப்பியது. மனனத்திராணதன்மத்துவஞ் சிவசத்திசகுரூ சிவ னுக்குமே; நாதாதிருதிவாசகங்கள் மந்திரங்களென்றெப்படிச் சொல்லப் படும். சத்தியந்தானே.)—அந்தமில்சத்தியாதிக் கிசைத்தலுமாகுமன்றே- சித்தியவட்டத்திறிம்சற்கலாபேத வீசானியாதிமூர்த்தியந்த சத்திபேதசிவ சத்திக்கும், ஆதியெனுமீசானுதிசத்தியோசாதாந்த சிவபேதசிவனுக்கும் மந்திரமென்பது முக்கியமாய்ச்சொல்லலாகும். எ-று.

மனனத்திராணதன்மித்துவஞ்சாட்சாதிருக்கையாற் சிவஞ்சத்தியா கிய வாச்சிய மந்திரங்களுக்கு நாமமாதலால் வாசகமந்திரங்களுக்கு மந்தி மென்பதுபசாரம். (௫௯)

பிரமாதிசாஞ்சனநிரஞ்சனவனுமந்திரங்களை நிரஞ்சனசாம்பவமந் திரரூபங்களாகச் செப்புவதேதென்றுசங்கிக்க வுத் தரமுரைக்கின்றார்.

அயன்றனையாதியாகவரனுருவென்பதென்னை
பயந்திடுஞ்சத்தியாதிபதிதலாற்படைப்புமூல
முயன்றனரிவரேயாயின்முன்னவனென்னைமுற்று
நயந்திடுமவனிவர்க்குநண்ணுவதொரோவொன்றாமே.

இ-ள். அயன்றனையாதியாக வரனுருவென்பதென்னை-விதிமுதற்ப ஞ்சகாரணமூர்த்திவடிவன் சிவனென்று சிவாகமஞ் செப்புவதேதென்

னில் — பயந்திடுஞ்சத்தியாதிபதிதலால் - செனனி ஆரணி ரோதயித்திரி யென்கின்றசிவசத்திகளதிட்டித்தவர்களைக்கொண்டு பஞ்சகிருத்தியம்பண் ணுவித்தலாலே— படைப்புமுதலமுயன்றனரிவரேயாயின் முன்னவனென் னை (யென்னில்)- சிருட்டிமுதலியபஞ்சகிருத்தியம் பண்ணுவதிவராகிற் சிவனொருக்குக் கற்பனைகவுரவதோஷம் வருமாதலால் வேண்டியதன்றெ ன்று நீசொல்லில் (அப்படிச்சொல்லவேண்டாம்)— மூற்றுநயந்திடுமேவன்- சாம்பசதாசிவன் சுத்தமாயாகிருத்தியமைந்துஞ் சாட்சாத்தாறுயு மசுத்த மாயை பிரகிருதி கிருத்தியமைந்தும் அனந்தசிறீகண்டாதித்துவாரத்தினு லேயும் பண்ணுவன்— இவர்க்குநண்ணுவது - இவ்வனுசதாசிவன் ஈசுரன் உருத்திரன் விஷ்ணு பிரமா இவர்களுக்குப் பொருந்துவதாகிய கிருத்தி யம்— ஒரோவொன்றுமே- ஒவ்வொன்றுதானே. எ-று.

அவர்க்குள் அனுசதாசிவனுக்கு அனுக்கிரக கிருத்தியமொன்றுமே, ஈசுரனென்னு மனந்தேசுரருக்குச் சுத்தமாயையிற் றிரோதானகிருத்திய நடவாதிருந்தாலும் அசுத்தமாயாகிருத்தியமைந்து நடந்தாலுந் திரோதா னகிருத்தியம் பிரதானம், உருத்திரரெனுஞ்சிறீகண்டருக்குப் பிரகிருதிக் குமேற்சங்காரகிருத்தியநடவாதிருந்தாலும் பிரகிருதிகிருத்தியமைந்துநடந் தாலும் சங்காரகிருத்தியம் பிரதானம், குணநிலையவிஷ்ணுவுக்கும் பிரமா டநிலையவிஷ்ணுவுக்கும் பிரகிருதிக்குமேற் றிதிகிருத்தியநடவாதிருந்தாலும் பிரகிருதிக்குட் டேசசரீர போக்கியப்பொருட்டிதிகிருத்தியம் பிரதானம், குணநிலையபிரமாவுக்கும்பிரமாண்டநிலையபிரமாவுக்கும் பிரகிருதிக்குமேற் சிருட்டிகிருத்திய நடவாதிருந்தாலும் பிரகிருதிக்குட் டேசசரீரபோக்கியப் பொருட் சிருட்டிகிருத்தியம் பிரதானம், ஆதலாலொரோவொன்றென்ற தெனவறிக.

சத்திமூன்றுகிற்பஞ்சகிருத்தியமெப்படிப்பண்ணும், எப்படிப்பண்ணு விக்கும்? சத்தியந்தானே. செனனிக்குச்சிருட்டிகிருத்திய மொன்றுமே, ஆரணிக்குச்சங்காரகிருத்தியமு மனுக்கிரககிருத்தியமும், ரோதயித்திரிக் குத் திதிகிருத்தியமுந் திரோபாவகிருத்தியமு மென்பதனால் விரோதம ன்று. ஆரணிரோதயித்திரிசெனனிமூன்றுஞ் சத்திசரீரகற்பனையிலே சிவ னுக்குச் சூக்குமதேகம், ஈசானிபூரணி ஆர்த்தி வாமை மூர்த்தியெனும்பஞ் சசத்தியு மனுக்கிரகமுதலைந்து கிருத்தியத்தையு மடையிற்பண்ணுநின்ற சத்திசரீரகற்பனையிலே சிவனுக்குத்தூலசரீரமென்பதறிக. இருதயாதியா றுமந்திரமுஞ் சரீரகற்பனைக்குள்ளதன்று, சரீரமுஞ்சரீரியுஞ்சம்பந்தமா னவிடத்திற் பிரபாவசொரூபமாயிருக்கும். (௬௦)

இப்படிச்சத்தியனேகமாகிற் சத்திமானுமனேகமாமென்னுஞ்சங் கைக் குத்தரமுரைக்கின்றார்.

சத்திதான்பலவோவென்னிற்றானொன்றேயனேகமாக
வைத்திடுங்காரியத்தான்மந்திரியாதிக்கெல்லா
மூய்த்திடுமொருவன்சத்திபோலரனுடையதாகிப்
புத்திமுத்திகளையெல்லாம்புரிந்தவனினைந்தவாறும்.

இ-ள். (ஞானக்கிரியேச்சாசத்திமூன்றினுட் கிரியாசத்தி ஈசானியாதியைந்து- ஆரணியாதிமூன்றுசத்தியா யெட்டாயிருக்குமென்றதனால்) சத்திதான்பலவோவென்னில்- தானொன்றே- ஒருசத்திதானே- காரியத்தால்- வியாபாரபேதத்தினால்— அனேகமாகவைத்திடும்- அனந்தமாகச்சொல்லப்படும்— மந்திரியாதிக்கெல்லாம்- மந்திரிசேனாபதி ஊர்காவலன்முதலோரிடத்தில்— உய்த்திடுமொருவன்சத்திபோல்- ஒன்றாயிருந்துசெலுத்து மிராசாவினதாஞ்ஞாசத்தியொப்ப — அரனுடையதாகி - சிவசம்பந்தியாகி— அவனினைந்தவாறு- அந்தச்சிவன்செலுத்தினபடி — புத்திமுத்திகளையெல்லாம்புரிந்ததாம்- போகமோட்சங்களைக்கொடுத்திருப்பதாம். எ-று. (சுக)

ஞானக்கிரியேச்சாரூபிசத்தியென்றீர், அதுயிருத்தம், நடத்தப் முச்சுவரூபமாயிராது; இருக்குமென்னிற் சத்தியொன்றென்பதுகெட்டுப்போமென்று மனசிலெண்ணிச் சங்கைபண்ண வுத்தரமுரைக்கின்றார்.

சத்திதன்வடி வேதென்னிற் றடையிலாஞானமாகு
முய்த்திடுமிச்சை செய்தியிவைஞானத் துளவோவென்னி
லெத்திறஞானமுள்ள தத்திறமிச்சை செய்தி
வைத்தலான்மறைப்பின்ஞானான்மருவிடுங்கிரியையெல்லாம்.

இ-ள். சத்திதன்வடிவேதென்னில்- சத்தியினதுசொரூபமேதென்று கேட்கிறாயானால்— தடையிலாஞானமாகும்- மறைப்பில்லாவறிதற்றொழிலைப்பண்ணுமறிவாகும்— உய்த்திடுமிச்சைசெய்தி யிவைஞானத்துளவோவென்னில் - பண்ணுதற்றொழிலாகுஞ் சங்கற்பமுத்தியோகமிவைகள் வேற்றுத்தொழிலாதலான் ஞானசத்தியினுள்ளவோவென்று நீகேட்கில்— எத்திறஞானமுள்ளது - இதுகாரணமிதுகரண மிதுகாரிய மிதுபிரயோசனமென்றறிதற்றொழிலா யாதொருபிரகார ஞானசத்தித்தொழிலாகிய ஞானமிருந்தது — அத்திறம் - அந்தப்பிரகாரம் — இச்சை (இதின்னதாகக்கடவதெனு மிச்சாசத்தித்தொழிலாகி யுத்தியோகத்திற்பின்னாகிவருஞ் சங்கற்பஞான விசேடமாகவும்) — செய்தி - கிரியை (இதைப்பண்ணாநிற்போமெனுங் கிரியாசத்தித்தொழிலாகிச் சங்கற்பத்தின் முன்னாகவருமுத்தியோகஞான விசேடமாகவும்)— வைத்தலால் - சிவாகமஞ்சொல்லிநிச்சயித்ததனால் — மறைப்பின்ஞானால் - தடையற்றஞானவிசேடசத்திசங்கற்பத்தால் — எல்லாம் - காரியசடபதார்த்தமுற்றும் — கிரியைமருவிடும்- உற்பத்திதிதிநாசசலனத்தொழிலோடுபொருந்தும். எ-று.

சலனத்தொழிலுக்கேதுவாயிருக்கு ஞானவிசேடநிச்சலநித்தியசத்தியசங்கற்பங் கிரியையென்று சொல்லப்படும். (சுஉ)

சத்தியொன்றுதானே யறிதல்பண்ணுதலிச்சித்தலெனும் வியாபாரபேதத்தால் மூன்றென்றும், அவாந்தரவியாபாரபேதத்தால் அனந்தமென்றுஞ் சொன்னீர்; தன்மபேதத்தாற் றன்மிபேதிக்கும், காரியபேதத்தாற்காரணம்பேதிக்குமென்னுநியமத்தாற் சத்திபேதிக்கும்; அனந்தமாயிருக்கின்ற ஞானக்கிரியைகள் சத்திக்குச்சகசதன்மமாய்ச் சகசகாரியமாய்த் தீபசத்திக்குத்தாகப்பிரகாசமபோலிருத்தலால் ஞானந்தியங்-கிரியானந்தியமுமில்லை, ஞானமென்றுங்கிரியையென்று மிரண்டுதொழிலுமில்லை. ஆகலாற்சத்தியொன்றெனில், ஞானக்கிரியானந்தியசாங்கரியம் பிரமாதிகளாலுந் தடுக்கப்படாததாய் வந்துசாருமென்றுசொல்லச் சாற்றுகின்றார்

ஒன்றதாயிச்சாஞானக்கிரியையென்றொருமூன்றாகி
நின்றிடுஞ்சத்தியிச்சையுயிர்க்கருணையாகு
நன்றெலாஞானசத்தியானவைநயந்தறிவனாத
னன்றருட்கிரியைதன்னாலாக்குவனகிலமெல்லாம்.

இ-ள். ஒன்றதாயிச்சா ஞானக் கிரியையென்றொருமூன்றாகி நின்றிடுஞ் சத்தி-(ஞானக்கிரியையிச்சையெனுஞ் சத்திதொழில்கள் பிரிப்பாய்ப் பேதமாயிருக்குமென்று நாமபேசவில்லை, அவைகள் மதியத்திருக்குமனந்த ஞானமனந்தகிரியை யனந்தவிச்சையென்று மானந்தியமும, பிரிந்து பின்னமாயிருக்குமென்று நாமபேசவில்லை; தாகப்பிரகாசங்கள்போலப் பிரிப்பின்றிப் பேதமாயிருக்கும, பிரிப்பைக்குறித் தபேதமாயிருக்கும். ஆகையா லந்தத்தொழில்களுக்குக் காரணமாகுஞ் சத்தி யேகமாயிச்சாசத்தியென்றும் ஞானசத்தியென்றும் கிரியாசத்தியென்றும் மனந்தசத்தியென்றும் பிரிப்பின்றிமூன்றனைத்தபேதமாயிராநிற்கும. (சத்திமானாகியசிவனுமேகனாயிச்சிதாவென்று ஞாதாவென்றுங் கர்த்தாவென்று மனந்தனென்றும பிரிப்பின்றிமூவரனைத்தபேதமாகப் பூயன. அந்தச்சத்திசத்திமானையனூர்த்தொழிலாகுமா, - இச்சை - நியாமிகையென்னுமிச்சாசத்தியென்னுந்தொழில் - உயிர்க்கருணையாகும - விதிப்படியா விதிப்படியாகாதெனப்படுமுதல் நியமித்தநுக்கிரகிருபையாம - நாதன் - சிவன் - நன்றெலாம் - இருந்தியத்துகின்றதாகும் பொருளெலா மிதுகாரணமிதுகரணமிதுகாரிய மிதுபிரயோசனமென்று - ஞானசத்தியால் - ஞானத்தொழிலைப்பண்ணு ஞானசத்தியால் - நயந்தறிவன் - விருப்பிப்பாப்பன்; கிரியாசத்திதொழிற்கிரியையாதலாலிதைநான் பண்ணுகிற்கின்றே னென்றுத்திதோகிப்பன் - அருட்கிரியைதன்னால் - கிரியாசத்தியினத்தரகோடியாயிருக்குஞ் சங்கற்பயித்துரியென்னு மிச்சாசத்தி யிதிப்படியாகக்கடவதென்னுஞ்சங்கற்பத்தால் -- அகிலமெல்லாம - சகத்தனைத்தும் — ஆக்குவன் - சிருட்டிப்பன். எ-று. (௬௨)

முடிந்தபட்சம் ஞானக்கிரியேச்சாவான் சகற்கர்த்தாவென்றுசொன்னீர். புருடன்ஞானக்கிரியேச்சாவானும் அவனே கர்த்தாவாகட்டும், அப்பிரத்தியக்ஷனாயிருக்கு மீசுரன்வேண்டுவதில்லையென்று மீமாங்கிசன் சொல்ல மறுத்துரைத்துகின்றார்.

சீவனுமிச்சாஞானக்கிரியையாற்சிவனையொப்ப
னுவனென்றிடினணுகிமலமிவற்றினைமறைக்குங்
காவலனிவன்செய்கன்மத்தளவினிற்கொடுப்பக்காண்பன்
பாவியாம்புத்திமுத்திப்பயன்கொளும்பண்பிற்றாகும்.

இ-ள். சீவனு மிச்சாஞானக் கிரியையாற்சிவனையொப்பன் — அவனென்றிடில்- விசுவகர்த்தாவாவனென்னில்- (விஞ்ஞானகலப் பிரளயாகலாவத்தைகளிலே) அணுகிமலம், இவற்றினை- இச்சாஞானக கிரியைகளை—மறைக்கும் - தன்வசமாகப்பண்ணும் (ஆகையாலவரிருவருங்கர்த்தாக்களன்று)— (சகலன்கர்த்தாவென்னில், அவன்) காவலன்- சிவன்— அவன்செய்கன்மத்தளவினில் - அச்சகலாற்மாப் பண்ணினகன்மத்துக்கீடாய்ப் (பரிமிதமாயிச்சாஞானக்கிரியைகளை)— கொடுப்பக்காண்பன்- ஏகதேசத்திற்சலைகொண்டுவிளக்க வந்தப்பராக்காயிருக்குஞ் சிற்சத்தியிர்த்திரூப விச்சாஞானக் கிரியைகளைக்கொண்டு பதார்த்தங்களையும் பிரத்தியக்காய்த் தானுயிருக்குஞ் சிற்சத்திவிருத்திரூப இச்சாஞானகிரியைகளைக்கொண்டு அந்தவிச்சாஞானக்கிரியைகளையும்பார்ப்பன் — பாவியாம் புத்திமுத்திப்பயன் கொளும்பண்பிற்றாகும்-வருமதாம் போகமோட்சபலமடையு முறைமையனுவன். எ-று.

சத்தியமீதிருக்க முத்தாற்மாசருவஞ்ஞத்துவசருவகர்த்திருத்துவசிவத்துவாபிவியத்தியினாலேசிவனோடேமுற்றுபமனுதலால் அவன்போல்விசுவகர்த்தாவாகட்டுமென்று சிவசமவாதியனேகேசுரவாதிமுதலோர்செப்புவார்கள்;அஃதறிவின்மை. சிவனதுகிருபாசங்கித்தபஞ்சகிருதியத்தோடு அபின்னுவற்சனீயசங்கித்தபஞ்சகிருத்தியாதிகாரணமுத்தனென்றுமேவுத்தரிக்கையால் விசுவகர்த்தாவன்று; சிவனேவிசுவகர்த்தா. (௯௪)

சிவசத்திக்கிலயதத்துவம் போகதத்துவம் அதிகாரதத்துவமுதலியபெயர் வருமாறுரைக்கின்றார்,

ஞானமேயானபோதுசிவன்றெழின்ஞானமொக்கி
லீனமில்சுதாசிவன்பேரீசனுந்தொழிலதேறி
லூனமேற்கிரியைவித்தையுருத்திரனிலயபோக
மானபோதிகாரத்தோடதிகரணத்தனுமே,

இ-ள். ஞானமேயானபோது- (சிவனதுகிரியாசத்திமகாமாயையிலே மகாப்பிரளயத்தின்மகாமாயாகாரியமெல்லாமொடுக்கியொழிந்தாய்

ஞானத்தொழின்மாத்திரத்தைப்பண்ணி) ஞானசத்திரூபியாயிருந்துள்ளவில்—சிவன்-சிவதத்துவமென்றும், இலயதத்துவமென்றுஞ்சத்ததத்துவமென்று நிட்களதத்துவமென்றும் பேர்பெற்றுநிற்கும்— தொழின்ஞானமொக்கில்- திரும்பமகாமாயாகாரியப் பிரசவாபிமுகயோக்கியகிருத்தியத்திலே யுத்தியுத்தையா யிதிப்படியா மிதிப்படியாகாது விதுகாரண மிதுகாரண மிதுகாரிய மிதுபிரயோசனமென்னு மிச்சாஞானத்தைப்பண்ணு மிச்சாசத்திசவிகற்பஞானசத்தியிற் பின்னிச்சைதா னாம்பண்ணுநிற்பமென்று ஞானக்கிரியாத தொழிலொத்த கிரியாதொழிலேப்பண்ணிக் கிரியாசத்திரூபியாயிருந்துள்ளவில் — ஈசானமில்சதாசிவன்பேர் - ஒத்தசதாசிவதத்துவமென்றும், போகதத்துவமென்று முத்தியுத்ததத்துவமென்றுஞ் சகளநிட்களதத்துவமென்றும் பேர்பெற்றுநிற்கும் — தொழிலதேறில் - திரும்பமகாமாயாகாரியோற்பத்தியிலே பிரவிருத்தையா யிதிப்படியாகக்கடவதென்று கிரியாத்தொழிலேறி ஞானத்தொழில்குறைந்த சங்கற்பவிச்சாத்தொழிலைப்பண்ணி யிச்சாசத்திரூபியாயிருந்துள்ளவில்—ஈசுரன்-ஈசுரதத்துவமென்றும், அதிகாரதத்துவமென்றும் பிரவிருத்ததத்துவமென்றுஞ் சகளதத்துவமென்றும் பேர்பெற்றுநிற்கும் — ஞானமேற்கிரியை - அந்தவிச்சைக்குத்தானே ஞானமேறிக் கிரியைகுறைந்ததானால் அந்தவிச்சாசத்திரூபியாயிருந்துள்ளவில் — வித்தை - வித்தியாதத்துவமென்றும், தூலவீசுரதத்துவந் தூலாதிகாரதத்துவந் தூலப்பிரவிருத்திதத்துவந் தூலசகளதத்துவமென்றும் பேர்பெற்றுநிற்கும்—உருத்திரன்-சிவன் — (இப்படிச் சமவேதசத்தியிற் பிரிப்பின்றிப் பேதமாய்த்தோற்றும்) இலயபோகமான பேரதிகாரந்தோற்கூடி— அதிகரணத்தனே- சமவேதசத்தியெனு மிருப்புடையனாய்க்கொண்ட டந்தச்சத்தியிருப்புக்குவாரத்திலே மகாமாயாபரிக்கிரக சத்தியென்னும் மிருப்புடையனாமே. எ-று

ஆதலாற்சிவனுஞ்சிவனென்று மிலயனென்றுஞ் சத்தனென்று நிட்களனென்றுஞ் சதாசிவனென்றும் போகனென்று முத்தியுத்தனென்றுஞ் சகளநிட்களனென்று மீசுரனென்று மதிகாரனென்றும் பிரவிருத்தனென்றுஞ் சகளனென்றும் பன்னிரண்டுபேரு முறைமையிற்பெற்றுநிற்பன். சத்திதானமான மகாமாயையுஞ் சிவதத்துவமென்பதுமுதற் சகளதத்துவமென்பதீறாகச் சத்திபோலப் பன்னிரண்டுபெயருமுறைமையிற்பெற்றுநிற்குமென்பதறிக. (௧௫)

இப்படிச்சத்திதத்துவத்தைச் சிவதத்துவத்துளடக்கி யிருத்தலாற்
காரணசிவதத்துவ மூலைந்துங்காண்பித்துக் காரிய
சிவதத்துவ மூவைந்துங் காண்பிக்கின்றார். காணபிக்
குமிடத்துக் காரியசிவதத்துவமூவைந்துஞ் சிருட்ட
மென்றும், சிருச்சியமென்றுமிருவிதமாம். சிருட்ட
மாவது சிருச்சியசிவதத்துவமைந்தையும்பற்றிப் பரி
ணதிசெயற்படப் பண்ணிவந்தாலும், தனதிடத்தில்
விருத்தி பரிணதிவிவர்த்தமின்றி யதனாற்பிரிப்பில்லா

ளைந்து பேதமானதனது வியாபாரங்களினாலே யப்படிட பிரிப்பில்லாவைந்து பேதபின்னமாகிய சிவசத்திரூபமும் சிவபேதமுமாகும். திருச்சியசிவதத்துவமாவது "வித்தைகளைந்துமேதயீசாசதாசிவர்" என்றவிருத்தத்தாற்கூறிய மகாமாயாபரிணதிபேதப்பிரிப்புள்ளவைந்துபேதபின்ன சிவதத்துவபேதமாகும். அந்தத் திருட்டஞ் திருச்சியமிரண்டினுள், திருச்சியம் "வித்தைகள்" என்றவிருத்தத்தானே முன்சொல்லப்பட்டபடியாற் றிருட்ட சிவதத்துவமாத்திரஞ் செப்பிக்காண்பிக்கின்றார்

வித்தையோடீசர்சாதாக்கியஞ்சத்திசிவங்களோடைந்து
சுத்ததத்துவஞ்சிவன்றன்சுதந்திரவடிவமாகு
நித்தமென்றுரைப்பர்காலநீங்கியநிலைமையாலே
வைத்திலர்முற்பிற்பாடுவருவித்தார்கருமத்தாலே

இ-ள். வித்தையோடீசர்சாதாக்கியஞ் சத்திசிவங்களோடைந்து சுத்த தத்துவஞ் சிவன்றன் சுதந்திரவடிவமாகும் - இந்தத்திருட்ட சுத்த சிவதத்துவமைந்துஞ் சமவேத சத்திரூபமாதலாற் சிவனுக்குச் சிறந்தசரீரமாக வுபசரிக்கப்பட்டது. முன்சொன்ன திருச்சிய சிவதத்துவம் பரிக்கிரக சத்திசொரூபமாதலாற் பொதுசரீரமாக வுபசரிக்கப்பட்டது. இந்தத்திருட்ட சிவதத்துவமைந்தும் — காலநீங்கிய நிலைமையாலே - (விருத்தி பரிணதி விவர்த்தரூபமில்லாமையால்) காலவரையைக் கடந்திருத்தலால் (பெரியோர்) — நித்தமென்றுரைப்பர் - நித்தியமென்று சொல்லுவார்கள் (அதனால்) — முற்பிற்பாடு வைத்திலர் - முன்பின்னென்கின்றது சொல்லார் (ஆகிற்சொல்லுவானேன்?) — கருமத்தாலே - திருச்சிய சிவதத்துவத்தைப்பற்றிய சிவசத்தி வியாபாரக்கிரமத்தால், சொன்னார்கள். எ-று.

இதனைத் திருச்சியசிவதத்துவம் மகாமாயா பரிணதிரூபமாய்ச் சுத்த காலவரையறைக்குள்ளாதலால், அநித்தியமென்றும் முன்பின்னென்றுஞ் சொல்லப்பட்டது. திருட்டந் திருச்சிய நிரூபணத்திற்குப் பொதுவாகுஞ் சிவதத்துவமுஞ் சத்திதத்துவமுஞ் சிவதத்துவமென்று மிலயதத்துவமென்றுஞ் சத்ததத்துவமென்று நிட்களதத்துவமென்றுங் காரண சிவதத்துவ சத்திதத்துவப் பெயர்பெற்றுக் காரணவிலயபோகாதிகாரங்களென் மூன்றினுள், இலயத்துக்குக் கற்பிக்கப்பட்டிலயத்தடங்கும்

சதாசிவதத்துவம் சதாசிவதத்துவமென்றும் போகதத்துவமென்றும் உத்தியுக்ததத்துவமென்றுஞ் சகளநிட்களதத்துவமென்றுங் காரண சதாசிவதத்துவத்துக்குரைத்த பெயர்பெற்றுப் போகத்துக்குக் கற்பிக்கப்பட்டுப் போகத்தடங்கும்.

ஈசுரதத்துவஞ் சுத்தவித்தியாதத்துவத்தோடுகூட வீசுரதத்துவமென்று மதிகாரதத்துவமென்றும் பிரவிருத்ததத்துவமென்றுஞ் சகளதத்து

வமென்றுங் காரணேசுரத்துவத்துக்குரைத்த பேர்பெற்றதிகாரத்துக்குக் கற்பிக்கப்பட்ட திகாரத்தையடைகுவர்.

சிறீகண்டாதிகளிற் சத்திதத்துவம் போகத்திலும் சதாசிவதத்துவம் அதிகாரத்திலு மடங்குமென்று சொல்லியது மறிக.

காரியசிவ னமித்தொடுபொருந்திச் சிவனென்பதாகியாய்ச் சகளனென்பதந்தமாயக காரணசிவனுக்குரைத்த பேர்பெற்றுக் கிரமத்திற் காரணலய போகாதிகாரங்களுக்குக் கற்பிக்கப்பட்டுக் காரணலய போகாதிகாரங்கட்கு அடங்குவன். இம்மூன்று மொன்பதாயிருக்கின்ற காரியலயபோகாதிகாரங்கள் காரணாதிகாரத்துட் கற்பிக்கப்பட்டதறிக. (சுசு)

இப்படிச் சடபதார்த்தங்களெல்லாந் தனக்குச் சத்தித்துவாரந் திருமேனி சரீரம்போலப் பண்ணிக்கொண்டு செலுத்தி யசைத்து வேற்றுமைப்படுத்திக் காரியப்படுத்தினு மிந்த சிவனுக்குஞ் சிவசத்திக்கு மசைவுவேற்றுமை யில்லையென்றுரைக்கின்றார்.

ஒருவனையிராவணாதிபாவகமுற்றும்போலத்
தருவனிவ்வுருவமெல்லாந்தன்மையுந்திரியானாகும்
வரும்வடிவெல்லாஞ்சத்திசத்திதான்மரமுங்காழ்ப்பு
மிருமையும்போலமன்னிசிவந்தனோடியைந்துநிற்கும்.

இ-ள். காழ்ப்பு-வயிரம். (மரமுங்காழ்ப்புமென்றதிற்) காழ்ப்பு-பிரத்தியக்ஷரூபம்; மரம்-பரோக்ஷரூபம். அப்படிச் சிவமுஞ் சத்தியுமென்றிதன்பொருள். மற்றதுவெளிப்பொருள். (சுஎ)

மேலிதுவுமது.

பொன்மைநீலாதிவன்னம்பொருந்திடப்பளிங்கிவற்றின்
றன்மையாய்நிற்குமாபோற்சத்திதன்பேதமெல்லா
நின்மலன்றனுந்தோன்றிநிலைமையொன்றாயேநிற்பன்
முன்னருட்சத்திதன்பான்முகிழ்க்குந்தான்முளையானன்றே.

இ-ள். பொன்மைநீலாதிவன்னம்பொருந்திடப்பளிங்கிவற்றின் றன்மையாய்நிற்குமாபோற் சத்திதன்பேதமெல்லாம்-* (இது ஏகதேசதிருட்டாந்தம். நிருச்சியசிவதத்துவமைந்துமுதலான ஞேயகாரியங்கள் சிவசிற்சத்தியிலே பிரதிவிம்பித்தாற் சிவசத்தியுஞ் சடமாய்ப்போமாதலால் விம்பப்பிரதிவிம்பத்துவம் பரிணதசடங்களுக்கல்லாமற் சித்துக்களுக்கில்லையென்று, பவுட்கரத்திற் சொல்லப்பட்டது. அதனால், ஞானசத்திசொரூபமாயிருக்கின்ற சிவசத்திக்குஞ், நிருச்சிய சிவதத்துவமுதலானஞேயபதார்த்தங்களுக்கு ஞாப்பியஞாபகபாவசம்பந்தமாத்திரம்; கிரியாசத்திசொரூபமாயிருக்கின்ற சிவசத்திக்கு மந்தநிருச்சிய சிவதத்துவமுதலான கா

ரியபதார்த்தங்களுக்குஞ் சங்கற்ப சமுத்திரேக விஷயவிஷயீபாவசம்பந்தமாத்திரம்; பிரதிவிம்ப சங்யோக சமவாயாதிகள் சித்துக்குச் சடத்தன்மைவருமாதலாற் சொல்லப்படாது. நாஞ்சொல்லியவிரண்டுசம்பந்தமாத்திரத்திலே சிவசத்திகட்குப் பிரிப்பில்லா வந்தரங்கவானந்தியமியற்கையாய் நிருபசரிதமாயும் பிரிப்புள்ள வெகிரங்கவானந்தியஞ் செயற்கையாயுபசரிதமாயு மிருக்குமென்றப்படியே சிவசத்திக்கானந்தியமென்றுசொல்லப்பட்ட வனந்தபேதமறிக) — நின்மலன் ஒன்றாய்த்தோன்றி, நிலைமையொன்றேயேநிற்பன் - (அனந்தசத்திபேத பேதனாயிருந்து அந்தரங்கபேதஞ்சொரூபமாயும் வெகிரங்கபேதந் தடத்தமாயு மிருத்தலால்) ஏக சொரூபவானாகத்தானே யிருப்பன் — முன்னருட்சத்திதன்பான்முகிழ்க்குந் தான்முளையானன்றே - (மகாப்பிரளயமாய்ப் பின் சுயபாவகாலத்திலே தூலபஞ்சகிருத்தியத்திலே யுதாசீனையாய், நிருவிகற்ப ஞானரூபியாய் லயசிவனிடத்திலேயிருந்து கிரியாசத்திநிருபிச் சூக்கும பராசத்தி ரூபியாயிருந்து மகாமாயா மாயா சத்தியைத் திரோதாயியாகிய முதலாகிய சூக்குமபஞ்சகிருத்தியத்தைப் பண்ணிநின்று மகாசிருட்டிவருமிடத்துத் தூலபஞ்சகிருத்தியமபண்ணும்படி) தன்பால்-சிவன்பால — முன்னருட்சத்தி-முந்தவந்தத் தூலபராசத்திரூபியாய்—முகிழ்க்கும்- (சிவன்செலுத்த விச்சாசத்தி சவிகற்ப ஞானசத்தி கிரியாசத்தியாகிய போகரூபியாய்க் கொண்டு) உதித்தியுத்தையாம—தான்முளையானன்றே-சிவன் (சத்தியாலே வப்பட்டு) உதித்தியுத்தனுகான் (சத்தியையியலி யந்தச் சத்தித்துவாரத்திலே யுத்தியுத்தனுபிருப்பன்)— (பின்னுமிதன்பொருள்) தன்பால்-தற்பொருளறிவாகிய சுத்தசிவனிடத்தில்—முன்னருட்சத்தி- (முலயபோகாதிகாரங்களைக்கடந்த பிறபொருளறிவாகிய) முந்திய சுத்தசிவசத்தியானது—முகிழ்க்கும்—(நிருசியமின்றித திருக்குரூபமாய்ப்புரித்துத் தோற்றியறியப்படும பிறபொருளறிவாகிய வந்தசிவசத்தியிலே) தான்-சிவன— முளையானன்றே - புரித்துத்தோற்றான். தானபபடிப்புரித்துததோற்றியறியப்படுவானுகிற் பிறபொருளாய்ப்போவனென்றுமாம. எ-று. (௬௮)

உலகினிற்பதார்த்தங்கள் சில வவயவங்களொத்துஞ்சிலவவயவங்களொவ்வாமலு மிருக்கின்ற வாணபெண் ணீட்சியுருட்சிமுதலிய குணிகுண மிலிங்கபீடமென்கின்றசடபதார்த்தங்களிலேயுந், தறபொருளறிவு பிறபொருளறிவென்கின்ற சிற்குணிகுணங்களிலேயுஞ், சிவனுககுஞ் சத்திக்குமுறைமையிலகிட்டானங் கற்பித்தருககையா லெல்லாஞ் சிவ சிவசத்திமயமென்று செபபுகின்றார்.

சத்தியுஞ்சிவமுமாயதன்மையிவ்வுலகமெல்லா
மொத்தொவ்வாவாணும்பெண்ணுமுயர்குணகுணியுமாக
வைத்தனனவளால்வந்தவாக்கமிவ்வாழ்க்கையெல்லா
மித்தையுமறியார்பீடலிங்கத்தினியல்புமோரார்.

இ-ள். வெளிப்பொருள். (௬௯)

சிவனொருபொருளோடுமுடமைக்கப்படானென்று செப்புகின்றார்.

சிவனுருவருவுமல்லன் சித்தினோடசித்துமல்லன்
பவமுதற்றொழில்களொன்றும்பண்ணிடுவானுமல்லன்
றவமுதல்யோகபோகந்தரிப்பவனல்லன்றானே
யிவைபெறவியைந்துமொன்றுமியைந்திடாவியல்பினானே.

இ-ள். சிவனுருவருவுமல்லன் - (சிவன் சத்தியுருவனென்று முதற்சாதித்தலால்) மாயாசரீரவுருவனன்று, (சத்தியருவனென்றுமுதற் சாதித்தலால்) மாயாவருவனன்று — சித்தினோடசித்துமல்லன் - (சிவன் சத்தியுருவனென்றுமுதற்சாதித்தலால்) ஆற்மவருச்சடவுருவனன்று — பவமுதற்றொழில்களொன்றும் பண்ணிடுவானுமல்லன் - (சங்கற்பலக்கணசன்னிதிமாத்திரத்தாலே விகிர்திவிரவாமற் சிருட்டியாதிபஞ்சகிருத்தியகர்த்தாவென்று சாதித்தலால்) குலாலாதிபோற் சரீரகரசலனத்தினாலே, சிருட்டிமுதற்கிருத்தியங்களைப்பண்ணுகிறவனன்று — தவமுதல்யோகபோகந்தரிப்பவனல்லன் - (சிறீகண்டதேகதேசியாய்ச்சனகாதிகளுக்குத் தவாபிநயம் யோகாபிநயம் கவுரிகலியாண மிவைகளைப்பண்ணுமவனென்றுசாதித்தலால்) தவம்யோகம்போகங்கள் தானாய்ப்பண்ணுகிறவனன்று — தானேயிவைபெறவியைந்துமொன்றுமியைந்திடாவியல்பினானே - தானே - சிவன்றானே — முன்சொன்னமுறைமையினாலே சிருட்டிமுதற்றவமுதற்கிருத்தியங்களைப்பண்ணப்பொருந்தியும்பொருந்திடாவியற்கையன்றானே. எ-று. (௰)

முதலாஞ்சூத்திர முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௯௨.

---

# இரண்டாஞ் சூத்திரம்.

---

முதற்சூத்திரத்திற் சிருட்டித்திதிசங்காரகிருத்தியகர்த்தா சிவனென்றறிவித்ததனால், மேலனுக்கிரககர்த்தாவென்றறிவிக்கப்போகிறபடியால், இப்போது திரோபாவகிருத்தியகர்த்தாவென்பதுரைக்கின்றார்.

உலகெலாமாகிவேறாயுடனுமாயொளியாயோங்கி
யலகிலாவுயிர்கள்கன்மத்தாணையினமர்ந்துசெல்லத்
தலைவனாயிவற்றின்றன்மைதனக்கெய்தலின்றித்தானே
நிலவுசீரமலனாகிநின்றனனீங்காதெங்கும்.

இ-ள். (சிவன்) உலகெலாமாகி - சித்சித்பிரபஞ்சமெல்லாந் தானாகி (பிரமந்தானே யஞ்ஞானகலுஷித அவிவேகத்தினாற் சத்தியப்பிரபஞ்சமாய்த்தோற்றி விவேகத்தினாற் சத்தியப்பிரமமொன்றுமாயே சேடிக்குமென்னும் விவர்த்தவேதாந்தியோர், அதுவன்றிப் பிரமந்தானே சத்தியப்பிரபஞ்சமாய்ப் பரிணமித்துத தானாயிருக்குமென்னும் பரிணாமவேதாந்தியோ. நீரென்ன, நாமிருவகைவேதாந்தியுமன்று சைவசித்தாந்தியென்று சாற்றுகின்றீர்)—வேறாய் (சித்சித் பிரபஞ்சத்துக்கெல்லாம பொருளினாலே) வேற்றுமையாய் (ஆனால், நையாயிகாதிகள்போலப் பேதவாதியோ நீரென்னப் பேசுகின்றீர்)— உடனுமாய் - அசித்பிரபஞ்சத்துக்கெல்லாஞ் சித்சித்பொருட்சொரூபத்தினாலே வேற்றுமையாய் வியாத்தியினாலேயுள்ளடக்கி வேற்றுமையற்றும பொருண்மாத்திரச் சொரூபத்தினாலேயும் வேற்றுமையற்றுத்தோற்றிச் சித்பிரபஞ்சத்துக்கெல்லாம் வேற்றசித்தானாலும் சித்துருபப்பொருட்சொரூபத்தினாலேயுமொத்தவியாத்தியினாலேயும் வேற்றுமையற்று முற்றுமொத்து — ஒளியாயோங்கி- (வியோமவியாபித்தோத்திரத் துரைத்தபடி மலமுதற்பாசபாசவாசனைவிஷயதாகக் கிரியாசாதகக் கிரியாசத்தியக்கினி யசற்கன்னியவத்துப்பிரகாசஞானசாதக ஞானசத்தியக்கினிப்) பிரகாசப்பெருக்குடையனாய்— அலகிலாவுயிர்கள் - அளவிறந்தவாத்மாக்கள் — சன்மத்தாலேயினமர்ந்துசெல்ல- அவரவர்பண்ணின நல்வினை தீவினைக்கேற்ப விதிநிஷேதப் பிரபோதிகையாயிருக்கின்ற தனதாஞ்ஞாசத்தியினாலே நல்லபொல்லாத போக்கியப்பொருள்களி லமிழ்ந்தி யதனாலுண்டான சுகதுக்கமோகங்களை யனுபவித்துச் சங்காரம்பண்ணப்பண்ணி — தலைவனாய்- சிவன்சுய மபின்னநிமித்தோபாதானங் கேவலமுபாதானமென்று மாயாதடத்திற் பரியவசிதபரிணதிபடிக்குங் குதிருட்டிவாதங்கட் கிடங்கொடாத நிமித்தகாரணமாத்திரக்குறிக் கர்த்தாவாகி— அவற்றின்றன்மை- அந்தவாத்மாக்களது சுகதுக்கமோகங்கள்— தனக்கெய்தலின்றி- (பிறபிரிப்பின்றி யுட்பிரிந் துடனாய் நின்றாலும்) தனக்கனுபவிக்கப்படுமவைகளன்றி—தானே— நிலவுசீரமலனாகி- சுவயம்பிரகாச சத்திசுவபாவ நின்மலனாய் —நின்றனனீங்காதெங்கும்- எங்கும்வியாபித் தொருகாலத்து மிடைவிடாதிருந்தான். எ—று.

ஆகையால், நிருபாதிகாதம சிவோபயச சொரூபமொத்த சித்துருபமே சின்மூலமன்று, பின்னேதோவொன்றென்றுஞ் செப்புவதன்று; நையாயிகன்முதலோருக்குப்போற் சடரூபமாய்ப்போம். சின்மூலமென்பது மேதோவொன்றென்பதுஞ் சித்துக்காணுமென்னிலனவத்தைவரும்; அதனாற் சித்துருபந்தானே சித்துருபனாலும் வேதாந்திகட்குப்போலச் சின்மாத்திரமன்று, பின்னேதோவொன்றென்னு மநிர்வசனீயமுமன்று. அநிர்வசனீயமுமன்றுமாகிற் "தற்பதங்கிமபித்திதம்" என்று சிவாகமஞ் செப்பியதேது? சத்தியம். நிருசியமுமன்று அநிருசியமுமன்றென்று சொல்லி மெள்ளத நிருக்குருபத்தைக காண்பித்தது. பராகவைய மிருகேந்திரங்களிலே,

"சித்துரூபமான்மனோரூபம் திருக்கிரியாகுணலட்சிதம்।
ஞானரூபஸ்யதஸ்யாபி சுவரூபந்திருக்கிரியாற்மகம்॥
சைதன்னியம்திருக்கிரியாரூபட ததத்தியாற்மனிசறுவதா।
சறுவதச்சியதோமுத்தௌ சுறாயதேசறுவதோமுகம்॥
அதானுதிமலாபேத சறுவகிறுற்சறுவவிற்சிவ:।"

என்று வசனமிருக்கையால், ஞேயகாரிய திருசியதிருக்குரூப திரு கந்தரதிருகுரூப சுவதிருக்குரூப சுவரூப சச்சிதானந்த சருவஞ்ஞத்துவ சருவகர்த்திருத்துவ சிவத்துவைகரூப நிருபாதிகாத்ம சிவோபயபதிரூபஞ் சருவாபேட்சமானுமம அக்கினிக்குத் தாகப்பிரகாசரூபம்போ லிருவரு க்கு மொன்றுக்கொன்று பரிசியாமலொப்ப விருவருக்குஞ் சொரூபலக்க ணந்தானே தடத்தலக்கணமன்று, அஞ்ஞத்துவாகர்த்திருத்துவலக்கண பாசசடதடத்திலு மப்பாசௌபாதிககிஞ்சிஞ்ஞத்துவ கிஞ்சிற்கர்த்தி ருத்துவ போத்திருத்துவ லக்கணபசுவசடதடத்திலும் அவ்விருபதி சொரூபமில்லாமையால். ஆதலால் "கிஞ்சிஞ்ஞத்துவந்துகாரணுத்" எனும் வசனத்தினுற் கிஞ்சிஞ்ஞத்துவ கிஞ்சிற்கர்த்திருத்துவ போ த்திருத்துவ மஞ்ஞத்துவ மகர்த்திருத்துவங்களே ஔபாதிகங்களெ ன்பதறியாது கிஞ்சிஞ்ஞத்துவங் கிஞ்சிற்கர்த்திருத்துவம் போத்திரு த்துவ மஞ்ஞத்துவ மகர்த்திருத்துவ மிவைபோலச் சருவஞ்ஞத்துவஞ் சருவகர்த்திருத்துவ மிரண்டும் ஔபாதிகங்களே, தடத்தலக்கணஞ் சுவரூபலக்கணமன்று; சின்மாத்திரமே சுவரூபலக்கணமென்று வேதா ந்தவியவகார சோரர்களாய்ப் பிரட்டசித்தாந்த வியவகாரர்களாய்ச் சை வசித்தாந்தியாபாசர்களாயிருக்குஞ் சிலர் சொல்லியது தூரம்போய்த் துச்சமாய்ப்போயிற்று.

திரும்பவிவர்கள சிவனுக்கும் ஆத்மாவுக்கும் எள்ளுக்கும் எண்ணெ ய்க்கும் பழத்துக்கும் இரசத்துக்குமப்பா லௌபச்சிலேஷிக வியாத்தியி லேல வியாப்பிய வியாபக பாவமதுவும் அனுதிசங்யோகமதுவே முத்தி யென்று சொல்லியதும் அப்படியேபோயிற்று.

ஆகாசாதி அமூர்த்த பதார்த்தங்களும் அதிலும் அத்தியந்தமமூர்த்த பதார்த்தங்களுஞ் சமசமயத்திற் சந்நிதானிடத்திலொத்து விழுந்த கண் ணொளிகள் ஒன்றோடொன்று தட்டாதொத்திருந்ததுபோலத் தட்டாதிரு க்குமாதலால், நிருபாதிகாத்மசிவன்கள் சமசமயத்திற் சர்வபதார்த்தங்க ளிலொத்து விழாது விழுந்தொன்றோடொன்று தட்டாமல் ஒன்றோன் றிருக்குமிடத் தொன்றோன்றிருப்புவிடா துட்புறம் பெனுதொத்திருத் தலால், அந்த வாத்மசிவனகளுக்குச் சங்யோக சமவாய வியாப்பிய வியாபகபாவ சம்பந்த முதற்சம்பந்தங்கள் கிட்டாது; சாதிருசிய சாதிச ம்பந்தமொன்றுமே சாதாத்திகமாய்க் கொண்டு சம்பூச்சியம். இரௌரவ விருத்திக்காரரு மப்படியேசொன்னர், சிவனுமாத்மாவுக்குச் சமானசா தியென்று.

பிரமமொன்றுமே நானுசைதன்னிய மில்லையென்னுஞ் சுருதிக்குத்
தாற்பரியமுரைக்கின்றார்.

ஒன்றெனமறைகளெல்லாமுரைத்திடவுயிர்களொன்றி
நின்றனனென்றுபன்மைநிகழ்த்துவதென்னையெனி
னன்றவைபதிதானென்றென்றறையுமக்கரங்கடோறுஞ்
சென்றிடுமகரம்போலநின்றனன்சிவனுஞ்சேர்ந்தே.

இ-ள். ஒன்றெனமறைகளெல்லாமுரைத்திட - வேதங்களெல்லாம் பிரமசைதன்னியமொன்றுமே (நானுசைதன்னியமில்லையென்று) சொல்ல—உயிர்களொன்றிநின்றனனென்றுபன்மைநிகழ்த்துவதென்னையென்னில்-(சிவன்)உயிர்களொன்றி- ஆத்மாக்களுக்குள்முத்தரிடத்திலேயெங்குமொக்கச் சிவசத்திக் கொத்துச்சிற்சத்திவிளங்குதலாற்சாதிருசியசம்பந்தசம்பந்தியாயும், பெத்தரிடத்திலே யேகதேசத்திலே சிவசத்திக்கொவ்வாமற் சிற்சத்திவிளங்குதலால் அனுக்கிராகியானுக்கிராகக சம்பந்தமென்றுஞ் சாற்றப்படும்; வியங்கிய வியஞ்சக பாவசம்பந்தத்தோடு வியாப்பியவியாபக பாவசம்பந்த சம்பந்தியாய் இருப்பனென்று, அனேகாற்மவாதியாய் நீர்சொன்னதேதென்னில் — அன்றவைபதிதானென்றென்றறையும்-அவை-அந்தவேதங்கள்—அன்று— அனாதி சித்தபதியெனும் கர்த்தாவொருவனென்றும (ஆதிசித்தபதிகளும பசுக்களும் அனந்தமென்றும்) உரைக்கும்—(அனாதிமுத்தபதி ஆதிமுத்தபதிபசுக்களுக்குப் பின்னப்பிரதேசத்திலே யிருப்பனோவென்ன உத்தரம) அக்கரங்கடோறுஞ்சென்றிடுமகரம்போல நின்றனன் சிவனுஞ்சேர்ந்தே. எ-று.

அக்கரங்களுக்கும் அகாரத்துக்குஞ் சமவாயசம்பந்தத்தினாலே தாதாற்மியம். அனாதிமுத்த பதிக்கும் ஆதிமுத்தபதி பசுக்களுக்குமுன்சொன்னபடி சாதிருசியசம்பந்தத்தினாலேயும் வியாப்பிய வியாபக பாவசம்பந்தத்தினாலேயும், தாதாற்மிய மில்லாமையா லேகதேசவுவமை. முற்றுவமையன்றென்பதறிக.) (உ)

சிவனுக்குமாத்மாவுக்கு மிப்போது சொல்லிய சம்பந்தத்தினாலே
யொருபிரகாரம் அத்துவைத மறிவிக்கப்பட்டதானாலும் வத்துவினாலே பேதம புடமென்ப துரைக்கின்றார்.

உருவொடுகருவியெல்லாமுயிர்கொடுநின்றுவேறாய்
வருவதுபோலவீசனுயிர்களின்மருவிவாழ்வன்
றருமுயிரவனையாகாவுயிரவைதானுமாகான்
வருமவனிவைதானும்வேறுமாய்மன்னிநின்றே.

இ-ள். உயிர்-ஆத்மா—உருவொடுகருவியெல்லாங்கொடுநின்று-தூலதேகஞ் சூக்குமதேகம் பரதேகமிவைகளைக் கொண்டு நின்று (தனதுசங்

கற்பரூபசன்னிதி மாத்திரத்தாற் செலுத்தித் தொழில்களைப் பண்ணுவித்து நின்று)—வேறாய்வருவது போல உயிர்க்குட் சரீரமேவெறென்று நின்றாற்போல—தன்—உயிர்களின்மாட்டுவைமுழுவன—ஆத்மாக்களிடத்துச் சம்பந்தித்துத் தனது சங்கற்பரூபசன்னிதி மாத்திரத்தினாலே செலுத்துகிற்பன்—(அமூர்த்தமாய் வியாபகமாயிருக்கின்ற வாத்மாக்களைச் செலுத்துமவகையெப்படியென்னில், சரீரத்தி லையவாகளை யக்கங்குப் பிரேரித்து. ஆத்மாக்களிடத்து லறிவுதொழில்களையர்த்தச் சரீரத்தி லவயவங்களைக்கொண்டு விளக்கிக் காரியநிகழப்பண்ணுவதே செலுத்துவதென்றபடியாதலால்) தருமுயிரவினையாகாவுயிரவை தானுமாகா—செலுத்தப்படும் பொருளாகிய வாத்மாக்களுஞ், செலுத்தும் பொருளாகிய சிவனு மொரு பொருளாகா—வருமவனிவைதானுமல்லேறுமாய்மன்னினின்றே—அவன—அந்தச்சிவன்—முன்சொல்லிய வியாபிய வியாபகபாவ சம்பந்தத்தினாலே) இவைதானுமா—இந்த வாத்மாக்களாயும்—வதநுவினாலேவேறாய்த் தனித்தொருபொருளாயும—வரும்—இருப்பன். எ-று.

முத்தாத்மாக்கள் நிரஞ்சனாகளாதலால் சிவம்போற் சிவப்பிரேரியர்களன்று, "வச்சியோஞ்விறுதவீரியஞ்சியசோதயேவாபிமோட்சஞைத்!" என்று, மோட்சபரியர்தஞ் சிவனுக்கு வச்சியன் என்று மிருகேந்திரவசனத்தினால். (௩)

மேல்வினையான்மாறிப்பிறந்து வருமாறுணர்த்துகின்றார்.

இருவினையின்பத் துன்பத்திவையுயிர் பிறந்திறந்து
வருவதுபோவதாகும் மன்னியவினைப்பயன்க
டருமரன்றரணியோடு தராபதிபோலத்தாமே
மருவிடாவடிவு மாகமபலவகைக்குறுமைக்கண்ணே.

இ-ள. தரணியோடுதராபதிபோல-பூமியோடு கூடிய விராசா (கிருஷியாதி பலன்களை யவரவர்செய்தியறிந்து கொடுப்பது) போல—அரன்-(மாயையோடு கூடிய) சிவன—மன்னியவினைப்பயன்—டரும்-அவனவனுக்குப்பொருந்திய சுகதுக்கபோகங்களைக்கொடுப்பன். (தரணியாகிய முதற்காரணமின்றித் தராபதிபலன் கொடுக்கமாட்டான். தராபதியன்றித் தரணியறிவின்மையால், பலன்கொடுக்கமாட்டாது. கிருஷித்தொழிலுமப்படியே. அப்படிச்சிவன் மாயை கன்ம மூன்றும் பிரிந்து பலன் கொடுக்கமாட்டாது. இருவினையின்பத்தென்றவிடத்து இருவினைகளாலெனவிரிக்க.) இன்பதுன்பத்து-சுகதுக்ககாரணயோனிகளில். வருவது போவது சுவர்க்கநரகங்களில். மற்றதுவெளிப்பொருள். எ-று. (௪)

உலோகாயதன்மத மாசங்கித்துத் தூஷிக்கின்றார்.

இருவினை யென்னையின்பதுன்பங்களியல்பதென்னி
னொருதன்மையியல்புக்குள்ள தொருவனுக்கிரண்டுசெய்தி
வருவதென்மலருக்கீயுமருவவின்வாசம்வெம்மை
கருவதெனீரென்செய்துதானியல்பாகுமன்றே.

இருவினையென்னை - பாவபுண்ணியமென்பதேது (பிரத்தியக்ஷப்பிரமாணமொன்றுக்குமே விஷயமாகக் காண்பித்தீராணுலும், நிட்பிரயோசனம்.) —இன்பதுன்பங்களியல்பதென்னில்- (சரீரத்தைத்தவிர வாத்மாவில்லைச் சரீராத்மாவுக்குச்) சுகதுக்கங்கள் சுவபாவமென்றுநீ சொல்லில்—ஒருதன்மையியல்புக்குள்ளது — (சீதகுணசலத்துக்குச் சீதமாயிருப்பதியற்கை) ஒருவனுக்கிரண்டுசெய்தியருவதென் - ஒருபுருடனுக்குச் சுகதுக்கானுபவமிரண்டு வருவதேது?—மலருந்தீயுமருவலின்வாசம்வெம்மைதருவதெனின்—என்செய்துதான்- நீர்- சலம்—என்செய்துதான்- என்னகன்மத்தைப் பண்ணித்தான்—மலருந்தீயுமருவலின் - புட்பாக்கினிகள் பொருந்தியவிடத்து—வாசம்வெம்மைதருவதென் - மணஞ்சூடுகொடுப்பதேது? (காரணமில்லை)—இயல்பாகுமன்றே - பொருளினியற்கைதானே. எ-று. (௫)

நீசொன்னதிருட்டாந்தத்திலாத்மாவுக்குச் சுகதுக்கங்களியற்கையன்று செயற்கையென்றுதானே சித்தித்துப்போயிற்றென்று செப்புகின்றார்.

தன்னியல்பொழியப்பூவுந்தழலும்வந்தணையநீரின்
மன்னியகிரண்டுசெய்திவருமிருவினையினாலு
முன்னியவின்பதுன்பமுறுமுயிருணர்விலாத
துன்னியவசித்தையின்பதுன்பங்கள்சூழ்ந்திடாவே.

இ-ள். தன்னியல்பொழிய-தனதியற்கைச் சீதகுணமறைய—பூவுந்தழலும்வந்து—அணைய-பொருந்த—நீரின்—மன்னியகிரண்டுசெய்தி-மணஞ்சூடெனுஞ் செயற்கைக்குணமிரண்டும் வந்துசேர்ந்தது—(அப்படி) வருமிருவினையினாலும்- புத்தியில்லாதுபொருந்திய புண்ணியபாவங்களினாலும்—உன்னியவின்பதுன்பம்-உண்டாகிய செயற்கைச் சுகதுக்கங்களை—உயிருறும்-ஆத்மாவனுபவிப்பன்—துன்னியவசித்தையின்பதுன்பங்கள்சூழ்ந்திடாவே-ஆற்மாவைப்பொருந்திய சரீரேந்திராதிகள் அறிவின்மையாதலால் அந்தச்சுகதுக்கங்களை யனுபவியா. எ-று.

அசித்தைப் பொருந்திராவென்றுரைபன்னலாகாது சுகதுக்கங்கள் புத்திதத்துவத்திலுண்டாய்ப் பொருந்தியிருத்தலால். (௬)

காரணமாகக் காணப்பட்டபொருளைக் காரணமாக இஃதமையுமென்று கற்பிப்பதே முக்கியம் சாதாரணகற்பனைநிட்பிரயோசனமென் றாசங்கிக்கின்றான்.

இம்மையின்முயற்சியாலேயிருநிதியீட்டியின்ப
மிம்மையேநுகர்வர்செய்தியிலாதவர்பொருளுமின்றி
யிம்மையேயிடருழப்பர்வேறிருவினையதுண்டே
லிம்மையின்முயற்சியின்றியெய்திடவேண்டுமிங்கே.

இ-ள். வெளிப்பொருள். (௭)

இல்லையென்றுமுயற்சியாற் செய்யுங்கன்ம போகிடத்துற் பலத்தைப் பொருந்தி யோகிடத்தனீங்கி யப்பிசாரியாதலால் வியபிசாரிதவிடத்துக் காரணத்தையுங் கற்பிக்கவேணுமென்று காட்டுகின்றார்.

இருவினைச்செயல்காணியமைபிரும்பொருளின்பம்வேணுடி
வருவினைசெய்யுங்காலையடிவருமடியமின்றித்
தருவினையதனிலத்தந்தானுறுந்துயரந்தங்கு
மொருவினைசெய்யாதோருமுடையரிவ்வுலகத்துள்ளே.

இ-ள். வெளிப்பொருள். (அ)

பிராரத்தம் புசிக்குமிடத் தாகாமியமேறுமுறைமையும், அதுசஞ்சிதத்தோடுகலந்து காலாந்தரத்திற் பலன்கொடுக்குமென்பதும், பலமாறுமென்பதும், படித்தறிவிக்கின்றார்

பேறிழவின்பமேபிணிமூப்புச்சாக்காடென்னு
மாறுமுன்கருவுட்பட்டதவ்விதியனுபவத்தா
லேறிடுமுன்புசெய்தகன்மமிங்கிதனுக்கேது
தேறுநீயினிச்செய்கன்மமேலுடற்சேருமன்றே.

இ-ள். பேறு-தனக்குயோக்கிய போகியப்பொருளைப் பொருந்துதல்—இழவு-நியமித்த காலாந்தரத்தில் அதைப்பிரிதல்—இன்பமேபிணி சுகதுக்கம்—மூப்பு-நரைதிரை—சாக்காடு-மரணம் (என்கின்ற)—ஆறும்—கருவுட்பட்டது-சரீரத்தடைத்தது — அவ்விதியனுபவத்தால் - நியமித்தவாறின தனுபூதியால்—ஏறிடும்- (ஆகாமியகன்மம்) வந்துபொருந்தும்—முன்புசெய்தகன்ம மிங்கிதனுக்கேது-முற்சன்மங்களிற் பண்ணிச்சஞ்சிதமாய்க் கட்டுப்பட்ட கன்மத்துட் பக்குவமாகிய பிராரத்தகன்ம மிவ்வாறுக்குங் காரணம் (கண்டகாரியானுமானத்தாற் காணுதகாரணமனுமிதிக்கப்பட்டது)—தேறுநீ- இப்படி யனுமிதித்தறி—இனிச்செய்கன்மமேலுடற்சேருமன்றே-இப்போதேறு மாகாமியகன்ம (மேற்சஞ்சிதத்தோடுகலந்து சிறிதுபக்குவமாய்ப் பிராரத்தகன்மத்தோடுகூடி.) மேல்வருஞ் சன்மங்களிலெடுக்குஞ் சரீரங்களிற் (பேறிழவின்பமுதல் ஆறுபலத்தோடும்) பொருந்தும். கண்டகாரணனுமானத்தாற் காணுதகாரிய மனுமிதிக்கப்பட்டது. எ-று. (கூ)

சரீரகன்மப்பிரபந்தம் பிரவாகாநாதியென்று பேசுகின்றார்.

உடற்செயல்கன்மமிந்தவுடல்வந்தவாறேதென்னில்
விடப்படுமுன்னுடயபின்வினையிந்தவுடல்விளைக்குந்
தொடர்ச்சியாலொன்றுக்கொன்றுதொன்றுதொட்டநாதிவித்தி
னிடத்தினின்மரமரத்தில்வித்தும்வந்திசையுமாபோல்.

இ-ள். ஸ்ரோத்ராதி ஞானேந்திரியங் கன்மேந்திரியங் சரீராந்தரத்துக் குக் காரணமாதலால், இதரேதராச்ரய தோஷமில்லையென்றிருதயம் வெளிப்பொருள். (௧௦)

ஆகாமியம்வருமாறு கூறுகின்றார்.

முற்செயல்வினையைப்புசித்து முயற்சியோடனுபவித்தா
லிச்செயல்பலிக்குமாறெ னிதமகிதங்கண் முன்னா
னச்செயலானாலிங் கவைசெயின்மேலைக்காகும்
பிற்செயாதனுபவிப்பதின்றுபின்றொடருஞ்செய்தி.

இ-ள். முற்செயல்வினையை-முற்சனனத்திற் பண்ணின கன்மபலசுகதுக்கங்களை-இந்தமுயற்சியோடு-(அந்தச் சுகதுக்கங்களுக்கு முதற்காரணமாகிய போக்கியகன்மமும் சுகதுக்கமாய்ப் பரிணமித்தற்கு நிமித்தமாய்ச் சென்மாந்தரகமாய் வந்த முற்செயலுட்டானே யிருக்கும் போசககன்மம்) இப்பிரயத்தனத்தை யுண்டாக்கி அதனோடு கூடியுண்டாக்க வந்தச்சுகதுக்கங்களை-அனுபவித்தால்-புசித்தால்-இச்செயல் பலிக்குமாறென்-இவ்வாகாமியம் வருதற்குக் காரணமேது? — (முற்செயலெப்படி வந்தது? இதமகிதங்களாலென்னில்) இதமகிதங்கள் — முன்னா-முன்னாக-அச்செயலானால்-அந்தமுற்சன்மகன்மமுண்டாமானால்-அவைசெயின்மேலைக்காகும்-அந்த இதமகிதங்களையிப்போது பண்ணினால்—மேலைக்காகும்-மேல்-மறுசன்மத்திற் சுகதுக்க காரணமாகுமாகாமியமேனும் (இதமகிதமு மேவுதற்கர்த்தாபண்ணுவிக்கு முற்கன்மபலமன்றோ? பின்னாகாமிய மியற்றுதற்கர்த்தாவாயிருக்கு மிவனுக்குண்டாதற்குக் காரணமேது? சத்தியம், விவேகமின்றி நானேபண்ணுகின்றேனெனுங் கர்வராகபயாவேசத்தாற் சுதந்தரகன்மகர்த்தாவாய்ப் பலன்கொள்பவனாயுந் தனக்குத்தானே தோற்றியிருத்தலா லாகாமிய மிந்தமூன்றுகாரணத்தாலேனும்)—பிற்செயாதனுபவிப்பதின்று-முன்பண்ணாது பின்னனுபவிப்பதின்று—(செய்திபின்றொடருமென்றுமாறுக) செய்தி-(மனோவாக்குக் காயங்களிற் சமவாயசம்பந்தியாய்வரு மிதமகிதமென்கின்ற வியாபாரனால கன்மம் கிருஷிகன்மம்போற் றொழிலாதலால் இங்கேகெட்ட தெங்கே போய்ப் பின்வந்துதான் பலந்தரும். கிருஷிகன்மத்தொழில் கெட்டாலும் அதனாற் பூமியிலுண்டாஞ் சம்ஸ்காரம்போல மனோவாக்குக்காயத்தொழில் உடனே கெட்டாலுங் கெடுமுற்கணத்திற்றொழிலினாற் புத்திதத்துவத்திற் சமவாயசம்பந்தியாய் வைக்கப்பட்டுப் பலபரியந்தமிருக்குஞ் சம்ஸ்காரமாகி) அதிருட்டமெனும்பெயர்ச்சூக்கும கன்மம் — பின்றொடரும்-(சொர்க்கநரகபூமிகளிற் சூக்குமதேகத்தோடிருந்து) போம் வரும். எ-று.

ஆகாமியமே சஞ்சிதம் பிராரத்தமாய் வருமென்பதற்குத் திருஷ்டாந்தம்.

மேலைக்குவித்துமாகிவிளைந்தவையுணவுமாகி
ஞாலத்துவருமாபோலநாஞ்செயும்வினைகளெல்லா
மேலத்தான்பலமாய்ச்செய்யுமிதமகிதங்கட்கெல்லா
மூலத்ததாகியென்றும்வந்திடுமுறைமையோடே.

இ-ள். விளைந்தவை மேலைக்கு வித்துமாகி யுணவுமாகி வருமாபோ லென்று பொருட் புணர்ச்சி. மற்றது வெளிப்பொருள். (௧௨)

இதமகிதங்க ளிவையென்பதும் அவைகளை யறிந்து சிவனே பலங் கொடுப்பனென்பது முணர்த்துகின்றார்.

இதமகிதங்களென்பதிங்குமன்னவாக்குக்காயத்
திதமுயிர்க்குறுதிசெய்தலகிதமற்றதுசெய்யாமை
யிதமகிதங்களெல்லாமிறைவனேயேற்றுக்கொண்டங்
கிதமகிதத்தாலின்பதுன்பங்களீவனன்றே.

இ-ள் இதமகிதங்களென்பதேதென்னில் — இங்கு - ஒன்றுக்கொன்று மாறுபாடு — (அவற்றுள்) இதம் — மன்னவாக்குக்காயத்து - மனவாக்குக் காயங்களிலே — உயிர்க்குறுதிசெய்தல் - ஆத்மாக்களுக்கு நன்மை பண்ணல் — அகிதமற்றது செய்யாமை - அகிதமாவது நன்மை செய்யாமற் றீமைசெய்வது (அவற்றுள் மனத்தினாற் செய்தல், பிரியங் கோபமுதலியன. வாக்கினாற் செய்தல், துதி நிந்தை முதலியன. காயத்தினாற் செய்தல், அணைத்தல் அடித்தல் முதலியன) — இதமகிதங்களெல்லாம் - இதமகிதங்களால் வரும்பாவபுண்ணியங்களாகிய வினைகளையும் — இறைவனேயேற்றுக்கொண்டு - சிவனே கைக்கொண்டு — இதமகிதத்தால் (வரும் சனகம் தாரகம் போக்கியமெனு முத்திற வினைகளிலே) — இன்ப துன்பங்களீவனன்றே - சுகதுக்கங்களைப் போக்கிய கன்மத்திலே நின்று முன்னூட்டிப் புசிக்கப் பண்ணுவனன்றே எ-று. (௧௩)

மீமாஞ்சகன் சங்கிக்க வுத்தர முரைக்கின்றார்.

இறைவனிங்கேற்பதென்னையிதமகிதங்களென்னி
னிறையருளுயிர்கள்வைத்தநேயத்தினிலைமையாகு
மறமலியிதஞ்செய்வோர்க்கனுக்கிரகத்தைச்செய்வன்
மறமலியகிதஞ்செய்யினிக்கிரகத்தைவைப்பன்.

இ-ள். இறைவனிங் கேற்பதென்னை-சிவனபிமானிப்பதேதது? அநுக்கிரகம்-இன்பம். நிக்கிரகம்-துன்பம். வைப்பன்-பண்ணுவன். மற்றது வெளிப்பொருள். (௧௪)

இதுவுமது.

நிக்கிரகங்கடாணுநேசத்தாலீசன்செய்வ
தக்கிரமத்தாற்குற்றமடித்துத்தீர்த்தச்சம்பண்ணி
யிக்கிரமத்தினாலேயீண்டறமியற்றிடென்பா
னெக்கிரமத்தினாலுமிறைசெயலருளேயென்றும்.

இ-ள். வெளிப்பொருள். (௧௫)

இதுவுமது.

தந்தைதாய்பெற்றதத்தம்புதல்வர்கடஞ்சொலாற்றின்
வந்திடாவிடினுறுக்கிவளாரினாலடித்துத்தீய
பந்தமுமிடுவரெல்லாம்பார்த்திடிற்பரிவேயாகு
மிந்தநீர்முறைமையன்றோவீசனார்முனிவுமென்றும்.

இ-ள். வெளிப்பொருள். (௧௬)

மீமாம்சகன் கன்மந்தானே கர்த்தாவென்று சொல்ல[illegible] னைர்த்து இன்றார்.

செயல்களேபலத்தைச்செய்யுந்தெய்வம்வேண்டாவிங்கென்னின்
முயலுமிச்செயல்களிங்கேமுழுவதுமழியுமெங்கே
பயனளிப்பனவழிந்தேபலன்களைப்பண்ணுங்கெட்டே
வயலிடுந்தழையுந்தின்றமருந்தும்பின்பலிக்குமாபோல்

இ-ள். செயல்களே பலத்தைச்செய்யும்-(அவரவர் பண்ணின) கன்மங்களே சுகதுக்கங்களைக் கொடுக்கும்—தெய்வம் வேண்டாவிங் கென்னில் - ஒருகர்த்தா வேண்டுவதில்லை யென்று நீசொல்லில்—முயலுமிச் செயல்களிங்கே முழுவதுமழியும் - பண்ணப்பட்ட வித்தக் கன்மங்களெல்லாம் (மனோவாக்குக் காயத்தொழில்களானமையால்) பண்ணின விடத்து முற்றுங்கெடும்—எங்கே பயனளிப்பன - சுகதுக்கங்களைக் கொடுப்பதெங்கே?—வயலிடு தழையுந் தின்ற மருந்துங் கெட்டே பலிக்குமாபோல்—அழிந்தே பலன்களைப் பண்ணும்-(கன்மங்களும்) கெட்டே பலத்தைக் கொடுக்கும், எ-று. (௧௭)

அதுதன்னைத்தானே யநுவதித்துத் தூஷிக்கின்றார்.

செய்க்கிடுந்தழையுங்கின்றுந்திரவியமதுவும்போல
வுய்த்திடுஞ்செய்திகெட்டேயுறுவிக்கும்பலத்தையென்னில்
வைத்திடுஞ்சோறும்பாக்குமருந்தினர்வயிற்றின்மாய்ந்தால்
மெய்த்திடும்பலமுனக்குமலமலால்வேறுமுண்டோ.

இ-ள். செய்க்கிடுந் தழையுந்தின்றுந்திரவிய மதுவும்-தழையு மருந்தும்—(தாங்கள் போய்ப் பொருந்திய விடத்துச் சாரத்தை வைத்துக் கெட்டுச் சாரத்துவாரத்தினாலே விளைவு வியாதிநீங்கல் முதலியபலங்களைக் கொடுப்பது) போல—உய்த்திடுஞ் செய்திகெட்டே யுறுவிக்கும் பலத்தை யெனனில-பண்ணிய கன்மந்தானே (போய்ப் பொருந்திய விடத்துச்சாரத்தைவைத்துக்) கெட்டுச் (சாரத்துவாரத்தினாலே) சொற்க நரக சுகதுக்க பலங்களைக் கொடுக்கு மென்னில்—வைத்திடுஞ் சோறும் பாக்கும் - (நீ வலல பாத்திரமிவர்களென்று குறித்துப் பாத்திரத்திற்)படைத்த (வியஞ்சன விதத்தோடு கூடிய) அன்னமும் பாக்கு வெற்றிலை கருப்பூரமுதலிய முகவாசங்களும்—அருந்தினர் வயிற்றிற பொருந்திச் சாரத்தை வைத்துக் கெட்டுச் சாரத்து வாரத்தினாலே—மெய்த்திடும்பலம்-வரும்பிரயோசனம்—மலமலால வேறுமுண்டோ (சுவர்க்க நரக சுகதுக்கங்களை விளைவு தரையிட்ட பூமியிறப்பால் அவர்கள் வயிற்றி லுண்டாய் நிறையபமலமல்லவோ) எ-று. (௧௫)

அதுவன்றியுந் திருட்டாந்த விரோத முண்டென்று செப்புகின்றார்.

திரவியமுவமையன்றுசெய்திகட்டிரவியங்கள்
பிரவியவிடத்தேவீந்துபலந்தருமிம்மையம்மை
பரவிநீபாத்திரத்திட்டவெல்லாங்
காவிடுமிங்கேயங்கேபலங்கொளக்கருதிறையே.

இ-ள். செய்திகள்-இருவினையாகிய குணப்பொருளில்—(செய்க்கிடுந் தழையுந்தின்று மருந்து மென்று சொலலிய) திரவியம் (குணிப்பொருள்)—உவமையன்று-திருட்டாந்த மன்று (வினையென்று சொல்லவேண்டிய தில்லை)—திரவியங்கள்-தழைமருந்து முதலியன, (எள்ளுநெய் அன்னமுதலியனவும்)—விரவிய விடத்தே வீந்து - தாங்கள் பொருந்திய விடத்தே கெட்டு—இம்மையம்மை-பூமியிலுஞ் சொறக நரகங்களிலும்—பலந்தரும் - பிரயோசனத்தைப்பண்ணும்—பரவிநீபார் - (பண்ணுமென்ப

இ-ள். தான்ஞ்செய் பொருடனித்தோர்-தானத்திரவியம்வாங்கினோர்—செய்தவர் - தானத்திரவியங் கொடுத்தபேர் (இவர்களிருவர்களுக்கு)—தக்கசெய்தி-யோக்கியமாகிய வாங்குதல் கொடுத்தற் கிரியைகள்—ஊனம் பின்னுறவே காண்டும்-நாசமுடனுறக் காணுகின்றேம்—(பின்னென்பது பின்னுங் கூட்டுக) பின் பலமுறு விப்பான் வேண்டும் - (கெடுமுன்பலங் கொடுப்பதில்லாமையினால்) காலாந்தரத்தில் வினைப்பலன்களாகிய சுகதுக்கங்களைக் கூட்டுவானொருகர்த்தா விரும்பப்படுவன் (மனோவாக்குக்காயங்களினாற்பிறக்குந் தூலகன்மங்கள் கெட்டாலும் புத்திதத்துவத்திற் கெடு முற்கணை மவைகளால் வைக்கப்பட்ட சம்ஸ்காரரூப சூக்குமகன்மங்கள் பலபரியந்த மிருக்கும்; அவைகள் பலத்தைக் கொடுக்குமென்று முன் சொன்னேமே. சத்தியம், சூக்குமகன்ம மிப்படியிருந்தாலும் அசேதனமாதலாற் சுவதந்திரமாய்ப் பலத்தைக்கொடாது)—ஊனமில் செய்தி-புண்ணியகன்மம்—ஈசனிடும்பணி - சிவன் பண்ணென்று கற்பித்தது, அதற்கு மாறுபாடாயிருக்கும் பாவத்தைப் பண்ணாதே யென்று கற்பித்தது—இவை நாஞ்செய்தால்-இந்தக்கிரியைகளை நாம் பண்ணினால்—நானங்களதிகநோக்கி-ஏற்றக் குறைச்சல்களைப் பார்த்து—வினைநோய் நிர-(அந்த மனோவாக்குக் காயக்கிரியைகளாற் புத்திதத்துவத்தி லுண்டாகப்பட்ட வாசனாகார சூக்கும கன்மஞ் சுகதுக்க ரூபமாய்ப் பரிணமித்துப் புசிக்கப்பட்டுக் கெடும்படி—நுகர்விப்பன்-புசிப்பிப்பன். எ-று. (உக)

கன்மத்துக்குச் சுவதந்திர மில்லாதிருந்தாற் கன்மகர்த்தாவாகிய புருடன்றானே பொருந்திப் புசிப்பனென்பதனை மறுத்துரைக்கின்றார்.

உலகுடல்கரணங்காலமுறும்பலநியதிசெய்தி
பலவிவைகொண்டுகன்மம்பண்ணுவதுண்பதானு
னிலவிடாவிவைதான்சென்றுநினைந்துயிர்நிறுத்திக்கொள்ளா
தலகிலாவறிவனாணையணைத்திடுமருளினாலே.

இ-ள். உலகு-புவனம்—உடல்-தூலசரீரம்—கரணம்-சூக்கும சரீரம்—காலம்-நிகழ்காலம்—உறும்பலன் - திரவிய முதலியனவுஞ் சுகதுக்கங்களுமாம்—நியதி - (சுகதுக்கங்களையு மிடமுதலியவற்றையும் நியமிக்கும்) நியதிதத்துவம்—செய்தி-(மனோவாக்குக் காயங்களினுடைய தொழிலாகிய) தூலகன்மம்—பலவிவைகொண்டு - இவ்விடமுதலிய வெகுசாதனங்கள் கொண்டு—கன்மம்பண்ணுவ துண்பதானால் - புத்திதத்துவத்திற் சம்ஸ்காரரூப சூக்கும கன்மத்தை யுண்டாக்குவது திரும்பவது சுக

தூக்கமாய்ப் பரிணமிக்க வகைப்புசிப்பனுகில்—நிலவிடாவினைதான் சென்று-(சொர்க்க நரகங்களிற்போகம்புசிக்குமிடத்து)இடமுதலிய வினைசுதந்தரமேயாய் (உயிரை) யுறு—உயிரும்—நினைந்தவை நிறுத்திக்கொள்ளாது-சங்கற்பித் திவைகளை யுண்டாக்கி யவைகளோடு கூடமாட்டாது. (ஆகையால்)அலகிலாவறிவனுணை யணைத்திடுமெருளினுலே - சருவஞ்ஞனுகிய சிவனது கிரியாசத்தி கிருபையினுலேசிருட்டித்துப்பொருத்தும்.எ-று.(உஉ)

தேவதாப் பிரசாதத்தினுலே சகலமும் வருவதென்று சாற்றுகின்றார்.

ஒழுக்கமன்பருளாசாரமுபசாரமுறவுசீலம்
வழுக்கிலாத்தவந்தானங்கள்வந்தித்தல்வணங்கல்வாய்மை
யழுக்கிலாத்துறவடக்கமறிவொடர்ச்சித்தலாதி
யிழுக்கிலாவறங்களானுலிரங்குவான்பணியறங்கள்.

(இ-ள்) ஒழுக்கம்-அந்தந்தச்சாதியாசாரம்வழுவாது நடத்தல்—அன்பு - மாதாபிதாகுருதேவதா பத்தி—அருள் - சருவான்மாக்களிடங்களிலும் வைத்த விரக்கம்—ஆசாரம்- வருணாச்சிரமங்களுக்கு ஏற்றசெளசாசமஞதிகள்—உபசாரம்-அதிதிசற்காரம்—உறவு- ஞாதிமுதலான பந்துக்களிடங்களிலே யினக்கம்—சீலம்- ஒருநெறிப்பட்டுப் பிறரையுபரஞ்சிப்பிக்குங்குணம்—வழுக்கிலாத்தவம் - சாந்திராயணமுதலியநியமவிரதம்—தானங்கள்-சற்பாத்திரத்திலுறுன்றேடியபொருளைச்செலுத்தல்—வந்தித்தல் - குருசரணங்களையுநமஸ்கரித்தல்—வணங்கல் - பெரியோரிடத்திற்றூழ்ந்ததன்மைகாண்பித்தல்—வாய்மை-உள்ளதுசொல்லுதல்—அழுக்கிலாத்துறவு - சருவசங்கபரித்தியாகம்—அடக்கம் - குலங்கல்வி நிறைவாயிருந்தாலுங்கர்வமறவிருத்தல்—அறிவொடர்ச்சித்தல்-அவரவர் சாத்திரஞ்சூத்திரங்களி லோதியபடியவரவர்கொண்ட தேவதையைப்பூசித்தல்—ஆதி - இவைமுதலானவை—இழுக்கிலாவறங்களானுல்—குற்றமற்றதன்மங்களாகச் சாத்திரங்கொண்டு நிச்சயிக்கப்பட்டவையானுல்—இரங்குவானபணியறங்கள் - பரமேசுரன் கற்பித்த புண்ணியகன்மங்கள். (இவைக்குமாறுய் வருவன பாவகன்மங்கள்.) எ-று. (உ௩)

ஆகையால், அவரவர்கொண்டதெய்வமே யவரவர்செய்யுங்கன்மங்கட்கு முன்னிலையாய்நின்று பலங்கொடுக்கும்;கன்மந்தானுய்ப் பலங்கொடாதென்பது சாற்றுகின்றார்.

மனமதுநினையவாக்குவழுத்தமந்திரங்கள்சொல்ல
வினமலர்கையிற்கொண்டங்கிச்சித்ததெய்வம்போற்றிச்

சினமுதலகற்றிவாழுஞ்செயலறமானல்யார்க்கு
முனமொருதெய்வமெங்குஞ்செயற்குமுன்னிலையாமன்றே.

இ-ள், வெளிப்பொருள். (உச)

பரமேசுரன் கர்த்தாவென்று முன்படித் திப்போது பிரமாவிஷ்ணுஅருகதேவதை பவுத்ததேவதைஇந்திரன்சந்திரன் சூரியன் முதலுள்ளோரில்ஓரொருகர்த்தாவோரொருவர்க்குக்கன்மசாக்ஷியாய்க்கன்மபலத்தைக் கொடுப்பானென்று சொல்லியதேதென்ன,ஏவுதற்கர்த்தாவியற்றுதற்கர்த்தாவென்றுமுறைமையினாற்சொல்லியதென்று சொல்லுகின்றார்.

யாதொருதெய்வங்கொண்டீரத்தெய்வமாகியங்கே
மாதொருபாகனார்தாம்வருவர்மற்றத்தெய்வங்கள்
வேதனைப்படும்பிறக்குமிறக்குமேல்வினையுஞ்செய்யு
மாதலாலிவையிலாதானறிந்தருள்செய்வனன்றே.

இ-ள். வேதனைப்படும்பிறக்கு மிறக்குமேல்வினையுஞ் செய்யுமென்றதற்கு, பிரமாதிகளுக்குத் தாங்களிருந்த தானங்களுக்கு ஊர்த்துவ கதியன்றி, யதோகதி யில்லாமையால், அவர்க்கு ஏற்பதெய்வங்க ளொன்று பொருள். மற்றது வெளிப்பொருள் எ-று. (உரு)

எல்லாச் செய்திக்குஞ் சிவனே பரமகாரணமெனப உணர்த்துகின்றார்.

இங்குநாஞ்சிலர்க்குப்பூசையியற்றினாலிவர்களோவந்
தங்குவான்றருவாரன்றேலத்தெய்வமத்தனைககா
ணைங்குதம்வாழ்தெய்வமெல்லாமிறைவனாணையினானிற்ப
தங்குநாஞ்செய்யுஞ்செய்திக்காணைவைப்பாலளிப்பன்

இ-ள். இங்கு - இந்தலோகத்தில்—சிலர்க்கு-சிலபிராமணர்க்குச் சிலசங்கமர்க்கு—நாம்பூசையியற்றினால்-அன்னபான தாம்பூலாதிகள் தானம்பண்ணினால்—இவர்களோ வந்தங்கு வான்றருவார் - இந்தப் பிராமணர் சங்கமர்களோ சொற்கஞ் சிவலோகந் தருவார்கள்—அன்றேல்-அல்லவா மென்று சொலலில்—அத்தெய்வ மத்தனைக்காண்-அந்தத்தெய்வங்களந்த மரியாதிகாண் (அதெப்படிச் சொன்னீர் இவ்வுலகத்தில் ஐயனார்க்கை கணங்கள் பூசை கொண்டு பலங்கொடுப்பது கண்டோம், அவ்வுல

கத்தும் பிரமேந்திராதிகள் பலங்கொடுப்பது கேட்டோம். சத்தியம்)—எங்கும் வாழ்தெய்வ மெல்லாம் - இவ்வுலகவ்வுலகிற் றெய்வங்க ளெல்லாம்—இறைவனாணையினா னிற்பது - சிவனது சத்தியாலேவப்பட்டுக்கொண்டிருக்கும்(ஆதலால்)—அங்குநாஞ் செய்யுஞ்செய்திக்கு-அந்தத்தெய்வங்களிடத்தில் நாம் பண்ணும் பூசைக்கு—ஆணைவைப்பால்-தனதாஞ்ஞாசத்தி செலுத்த விசைவித்தலால் (பலங்களை)—அளிப்பன்-(அந்தத்தேவதைகளைக்கொண்டு) கொடுப்பிப்பன் எ-று. (௨௬)

அந்தத் திரமற்ற தேவதா பூசாபலத்தையுஞ் சிவனே கொடுப்பனாகையாற் சிவபூசாபலந் திரமாதலாற் சிவபூசையேசெய்யவேண்டுமென்று செப்புகின்றார்.

காண்பவன்சிவனேயாகிலவனடிக்கன்புசெய்கை
மாண்பறமரன்றன்பாதமறந்துசெய்யறங்களெல்லாம்
வீண்செயலிறைவன்சொன்னவிதியறம்விருப்பொன்றில்லா
பூண்டனன்வேண்டல்செய்யும்பூசனைபுரிந்துகொள்ளே. [௨௭

இ-ள். காண்பவன்-பலமுண்டாக்குமவன். விருப்பொன்றில்லான்-விருப்பில்லானாயினும். பூண்டனன்வேண்டல்செய்யும் - அநுக்கிரகிக்கிற நிமித்தம் பூசைக்குட்பட்டவனாய் விருப்பஞ் செய்யும். மற்றது வெளிப்பொருள் எ-று. (௨௭)

அருவாகிய சிவனைப் பூசிக்கும் வகைபோதிக்கின்றார்,

தாபரசங்கமங்களென்றிரண்டுருவினின்று
மாபரன்பூசைகொண்டுமன்னுயிர்க்கருளைவைப்ப
னீபரன்றன்னைநெஞ்சினினைவையேனிறைந்தபூசை
யாய்பரம்பொருளைநாளுமர்ச்சிநீயன்புசெய்தே

இ-ள். தாபரம்-லிங்கம்—சங்கமங்கள் - சிவபத்தர்கள்—என்றிரண்டுருவினின்று மாபரன் பூசைகொண்டுமன்னுயிர்க்கருளைவைப்பன்—நீபரன்றன்னை—நெஞ்சினினைவையேல் - இருதயகமலத்தில் மனதை லயம்பண்ணிச் சிவசத்தியால விளக்கப்பட்ட சிற்சத்தியாகிய மனசினாற் றியானம்பண்ணுமற் றியானம் பண்ணுவையாகில் (அது)—நிறைந்தபூசை - யோகபூசை சமாதியா யதுஞான பூசையுமாம் (அதுவன்றி)—ஆய்பரம்பொருளை-சிவாகமவாக்கியங்கொண்டு திரிபதார்த்த விவேகம்பண்ணிப் பசுபாச பதார்த்தத்தினின்றும் விலக்கணனாகத் தியான நிமித்தமறி (அதுவும், நி

றைந்தபூசையாதலால்)—நாளுமர்ச்சி நீயன்புசெய்தே-பத்தியோடேகூடித் தினந்தோறுஞ் சொன்ன பிரகாரங் கிரியாபூசை யோகபூசை ஞான பூசைகளினாற் சிவனைப் பூசைபண்ணு. எ-று. (உஅ)

நிரீச்சுர வாதியாயிருக்கின்ற மீமாங்கிசன் முதலோர்க்குஞ் சத்த முதற்றேவதை கன்மசாக்ஷியாதலால் சிவனைத்தான் கன்மசாக்ஷியாகப் பண்ணிக் கொண்டு சிவனுக்குமாறுபாடுமனசினினையாமற் சிவனிடத் ததிகாரம்பெற்ற இஷ்ட தேவதாசாக்ஷியாகத்தான் பண்ணிக்கொண்டு பண்ணுதகன்மம் பலங்கொடாது, அப்படி பண்ணிப் பண்ணின கன்மம் பாவகன்மக்கலப்பானாலும்[பலங் கொடுக்குமென்பதற் குதாரணம்.

அரனடிக்கன்பர்செய்யும்பாவமுமறமதாகும்
பரனடிக்கன்பிலாதார்புண்ணியம்பாவமாகும்
வரமுடைத்தக்கன்செய்தமாவேள்விதீமையாகி
நரரினிற்பாலன்செய்தபாதகநன்மையாய்த்தே.

இ-ள், வெளிப்பொருள். (உகூ)

வேதாகமவாக்கியங்கள் பரம்பரையினாலுஞ் சாக்ஷாத்தாகவும் சிவபணிவிதிவாக்கியமாதலால், அந்தப்பணி விதிவழி நடப்போர்க்கு நடவாதோர்க்கு நிக்கிரகமனுக்கிரக மிவையென்று நிகழ்த்துகின்றார்.

மறைகளீசன்சொல்லச்சொல்வழிவாராவுபிரைவைக்குஞ்
சிறைகண்மாநிரயமிட்டபணிசெய்வோர்செல்வத்தோடு
முறையுமாபதிகளும்பருலகங்கள்யோனிக்கெல்லா
மிறைவனாணையினாலின்பதுன்பங்களிசைவதாகும்.

(இ-ள். வெளிப்பொருள். (ரு0)

மேலதற்குதாரணம்.

ஆணையாலவனிமன்னனருமறைமுறைசெய்யானை
யாணையாற்றண்டஞ்செய்துமருஞ்சிறையிட்டுவைப்ப
னாணைவழிசெய்வோருக்கரும்பதிசெல்வநல்கி
யாணையும்வைப்பனெங்குமாணையேயாணையேகாண்.

(இ-ள்.) ஆணையும்வைப்பன் (சிட்டர்களையனுக்கிரகம்பண்ணுவோந் துட்டர்களைநிக்கிரகம்பண்ணுவோமென்று தனதிடத்திருக்கும்) ஆஞ்ஞா சத்திசாமர்த்தியத்தை யுலகத்துக்கறிவிப்பன். (இப்படி யிராசாவுக்கு நிக்கிரகானுக்கிரக கர்த்திருத்துவஞ்சொன்னாற் சிவனுக்குச் சருவகர்த்திருத்துவ மெப்படிப்போம். அதில்லை) எங்குமாணையேயாணையேகாண்-இராசாக்கள் முதலோரிடத்திருக்கு மாஞ்ஞாசத்தியே சிவனதாஞ்ஞாசத்தி. மற்றது வெளிப்பொருள். (௯௧)

அஃதேதிஞலென்னச் சிவனதாஞ்ஞாசத்தி யவர்களதாஞ்ஞாசத்தியை விடாது செலுத்திநிற்றலாலென்று செப்புகின்றார்.

அரசனுஞ்செய்வதீசனருள்வழியருந்பாவங்க
டரையுளோர்செய்யிற்றீயதண்டலின்வைத்துத்தண்டத்
துறைசெய்துதீர்ப்பன்பின்புசொல்வழிநடப்பர்தூயோர்
நிரயமுஞ்சேரார்ந்தநிரயமுநீர்மைமீதாம்.

(இ-ள்.) தண்டத்துறை-தண்டிக்குமிடத்துக்குருரவார்த்தை, மநுசாத்திராதிவசனமுமாம். நிரயமுநீர்மைமீதாம்-நரகத்திலுந்தண்டிக்குமுறைமையு மிராசதண்டனைபோல (இராசதண்டனைப்பட்டபேர்க்கு நரகமில்லாமையால்.) மற்றதுவெளிப்பொருள். (௯௨)

பின்னுமுதாகரிக்கின்றார்.

அருளினூலுரைத்தநூலின்வழிவராததன்மஞ்செய்யி
னிருளுலாநிரயத்துன்பத்திட்டிரும்பாவந்தீர்ப்பன்
பொருளுலாஞ்சுவர்க்கமாதிபோகத்தாற்புண்யந்தீர்ப்பன்
மருளுலாமலங்கடீர்க்குமருந்திவைவயித்தியன்றான்

(இ-ள்.) அருளினூலுரைத்தநூல்-வேதாகமங்கள். இருளுலாநிரயம்-அந்தகாரம்பொருந்தியநரகம். மருளுலாமலம்-மயக்கம் பொருந்திய பாவபுண்ணியங்கள். மருந்து-நரகசொர்க்கம். தான-சிவன்றானே. வயித்தியன்-பண்டிதன். மற்றதுவெளிப்பொருள். (௯௩)

வயித்தியனென்றதேதிஞலென்ன வொப்புரைக்கின்றார்.

மருத்துவனுரைத்தநூலின்வழிவரிற்பிணிகள்வாரா
வருத்திடிற்பிணிகடப்பிற்றப்பியவழியுஞ்செய்யத்

திருத்தினன்மருந்துசெய்யாதுறும்பிணிசென்றுதீர்ப்ப
னுரைத்தநூற்சிவனுமின்னேயுறுங்கன்மமூட்டித்தீர்ப்பன்.

(இ-ள்.) மருத்துவனுரைத்தநூல்-வயித்தியசாத்திரம். தப்பிற்பிணி வருத்திடுமென்று மாறுக. உறுங்கன்மமூட்டித்தீர்ப்பன்-(பிராயச்சித்தம்ப ண்ணுத விடத்து) ஏறினகன்மத்தைப் புசிப்பித்துத் தொலைப்பன். மற்றது வெளிப்பொருள். (ருச)

இன்பதுன்பமூட்டி யிருவினைதொலைத்தற் குதாரணம்.

மண்ணுளேசிலவியாதிமருத்துவனருத்தியோடுந்
திண்ணமாயறுத்துக்கீறித்தீர்த்திடுஞ்சிலநோயெல்லாங்
கண்ணியகட்டிபாலுங்கலந்துடன்கொடுத்துத்தீர்ப்ப
னண்ணலுமின்பதுன்பமருத்தியேவினையறுப்பன்.

(இ-ள்) வெளிப்பொருள். (ருரு)

கன்மபலத்தை யனுபவிக்குமுறைமையை யறிவிக்கின்றார்.

பூதனுசரீரம்போனாற்புரியட்டதேகந்தானே
யாதனுசரீரமாகவின்பதுன்பங்களெல்லா
நாதனாராணையுய்க்கநரகசொர்க்கந்துய்த்துத்
தீதிலாவணுவாயோனிசேர்ந்திடுஞ்சீவனெல்லாம்.

(இ-ள்) பூதனுசரீரம் போனால்-பஞ்சபூத பரிணாமசமுற்பூதமாகிய தூலசரீரம் விட்டால்—புரியட்ட தேகந்தானே-சூக்குமசரீரந்தானே— நாதனாராணையுய்க்க - சிவாஞ்ஞை செலுத்த—யாதனுசரீரமாக - பூதோற் பூத நரகசரீரத்தைத்தான் பூதசாரசமுற்பூத சொர்க்க சரீரத்தைத்தான் பொருந்த வதனோடு பொருந்தி—சீவனெல்லாம் - சகலாத்மாக்களும்— இன்பதுன்பங்களெல்லாம் - சுகதுக்கங்களனைத்தும்—நரகசொர்க்கந்து ய்த்து- நரகசொர்க்கங்களி லனுபவித்து(பின்னந்தயாதனு சரீரம்விட்டு)— தீதிலாவணுவாயோனி சேர்ந்திடும்-குற்றமற்ற சூக்குமதேகியாய்ப் பூலோ கத்திற் பூதபரிணாம சமுற்பூத தூலதேகத்தில் வந்து பொருந்தும். எ—று. இப்படியன்றி யாதனுசரீரமாக வென்கின்ற பாடங் கொள்ளாமல் யாதனு சரீரமாகி யென்றுபாடங்கொண்டாற் பொருளிசையா தென்பதறிக. புரிய ட்டதேகந்தானே யாதனு சரீரமாக வென்பதற்குச் சுத்தமாயையி லசுத்த மாயை தோன்றுமென்னுஞ் சைவபவுராணிகமதானுசாரியாயிருக்கு மா

சாரியர்கருத்துக்கு யாதனாசரீரமாய்ப் பரிணமிக்கவென்றுபொருள்கொள்க; சுத்தசைவ சித்தாந்தியாகிய வாசாரியர் கருத்துக்கு யாதனாசரீரத்தைப் பொருந்தவென்று பொருள்கொள்க. (௩௬)

சூக்கும தேகத்தோடுங் கூடியவுயி ருடல்விட்டு உடலெடுக்குமென்றுந் தூலசரீரத்துக் கேற்ற கன்மபரிபக்குவ மில்லாதிருந்தால் சூக்கும சரீரத்தோடுங் கூடியவறிவின்றி யாகாசத்தைப் பற்றி யர்தாத்மாவா யிருந்து கன்ம பரிபாகத்திற் காலாந்தரத்தி லுடலுறுமென்று முரைக்கின்றார்.

உடல்விடாயோனிபற்றியுதிப்பினுமுதிக்குமொன்றிற்
படர்வுறாதுறும்பாவத்தாற்பாடாணம்போற்கிடந்து
கடனதாங்காலஞ்சென்றாற்கடுநரகதனில்வீழ்ந்தங்
கிடருறுமுருவங்கன்மத்தளவினிலெடுக்குமன்றே.

(இ-ள்) வெளிப்பொருள். (௩௭)

தூலதேகம் விட்டுச் சூக்கும தேகத்தோடு போய்த் தூலதேகாந்தரத்தைப் பொருந்துதற் குவமை யுரைக்கின்றார்.

பன்னகமண்டசங்கள்பரகாயந்தன்னிற்பாய்வோர்
துன்றுதோன்முட்டையாக்கைதுறந்துசெல்வதுவேபோலத்
துன்னியவுயிர்கலேவுடல்விட்டுவானினூடு
மன்னிடுநனவுமாயிக்கனவினைமருவுமாபோல்.

(இ-ள்) பன்னகம்-பாம்பு. அண்டசங்கள்-பட்சிகள். பரகாயந்தன்னிற் பாய்வோர் - வேறொருவர் சரீரத்திற் பிரவேசிக்கும் யோகிகள். இவர்கட்குப்பொருந்திய தோல்முதலிய மூன்றையு நிரனிறையாகக்கொள்க. மற்றது வெளிப்பொருள். (௩௮)

கன்மச்சுவரூபங் காண்பிக்கின்றார்.

தன்மமோடதன்மமாகித்தானிருபயனுந்தந்து
நன்மைதீமையினுமின்பதுன்பினுநாடிக்காண
முன்னமேயான்மாவின்றன்மும்மலத்தொன்றதாகிக்
கன்மமுமூலங்காட்டிக்காண்மியமலமாய்நிற்கும்.

(இ-ள்) தன்மமோட தன்மமாகி-பாவபுண்ணியமென் றிருவிதமாய் (திரும்பச் சனகந் தாரகம் போக்கியமென்று திரிவிதமாய்த் திரும்பத் திருட்டபோக்கிய மதிருட்டபோக்கிய மனியதபோக்கியமென்று மூன் று விதமாய்த் திரும்ப வாயுப்பிரதஞ் சாதிப்பிரதம் போகப்பிரதமென்று மூன்று விதமாய்த் திரும்பச் சஞ்சிதம் பிராரத்த மாகாமியமென்று மூன் று விதமாய்ப் பின்று மனந்த விதமா யிருக்கும்)—கன்மமானது—தானிரு பயனுந்தந்து-தான்றானே முதற் காரணமாயு நிமித்த காரணமாகிய சிவனு க்குத் துணைக் காரணமாகிய நிமித்த காரணமு மாய்ச் சுகதுக்கங்களை யுண் டாக்கி (தான் பிரத்தியக்ஷ மல்லாத பொருளாகையால்)—நன்மை தீமையி னு மின்பதுன்பினு நாடிக்காண-பே றிழவு சுகதுக்க மென்கின்ற காரியா னுமானத்தா லனுமித்தறிய—முன்னமே யான்மாவின்றன் மும்மலத்தொ ன்றதாகி-அனாதியே ஆணவம் மாயேயங் கான்மியமென்கின்ற திரிமல த்தொன்றாய்—மூலங்காட்டி-தானு மவைகள்போல வனாதி யென்பதைத் தோற்றுவித்து—கான்மியமலமாய் நிற்கும். (கான்மியமென்கின்ற மலங் கான்மியமலம்.) எ-று. (௩௯)

கன்மமானது மலமாயைகள்போலக் கூடத்தநித்தியவநாதியோ மாயாகாரியம் போலப் பிரவாக நித்திய வநாதியோ வென்று வினவப் பிரவாகாநாதியென்று பேசுகின்றார்.

இருவினையநாதியாதியியற்றலானுகர்வாலந்தம்
வருமலஞ்சார்ந்துமாயாவுருவுகண்மருவியார்த்துத்
தருசெயன்முறைமையாலேதான்பலபேதங்காட்டி
யருவதாய்நின்றான்றனையினமர்ந்துசெல்லும்.

(இ-ள்) இருவினையநாதி- (சமுதாயத்தினாலே முற்கோடிபிற்கோடி காணப்படாத படியினாலே) கன்மநாதி—ஆதியியற்றலா னுகர்வா லந்தம் வரும் - தனித்தனி பண்ணப்படுகிறபடியினாலும் புசிக்கப்பட்டுச் சிலநாச மாதலானும் விஞ்ஞான கைவல்லிய மடைபவனைக் குறித்தும் முத்தியடை பவனைக் குறித்தும் முற்று நாசமாதலானும் முற்கோடிபிற்கோடி காணலா ல் ஆதியுமாமந்தமுமாம் (ஆதலாற் பிரவாகாநாதி)—(அந்தக்கன்மம்) மலஞ் சார்ந்து-ஆணவமலத்தோடும் பொருந்தி—மாயாவுருவுகண் மருவியார்த்து- மாயா சரீரங்களை யுண்டாக்கி யவைகளோடு பொருந்தி யந்தத்துவார த்தினா லாத்மாக்களைக் கட்டி—தருசெயன் முறைமையாலே-மனோவாக்கு க்காயங்களா லியற்றப்பட்ட வியாபாரக் கிரமத்தினாலே—தான் பலபேத ங்காட்டி-தானருவாயிருந்தாலுந் தனது காணப்பட்ட மநாதிகாரண பேத

த்தினாலேயுந் தனது சுகாதிகாரிய பேதத்தினாலேயுந் தனது வைசித்திரியத்தைக் காண்பித்து—அருவதாய் நின்று-புத்தியி லதிருட்டவாசனையா யிருந்து (பலத்துக்குப் போகும்போது சடமாதலாற் சுவதந்திரப் பிரவிருத்தி யில்லாமையால்)—அரன்றனாணையி னமர்ந்து செல்லும்-சிவாஞ்ஞை செலுத்தப் புத்தியோடு நடக்கும். எ-று. (௪0)

மேற்றத்துவவாதி நரமிருக பசுபட்சி தாபராதிகள் கன்மத்துக்கேற்க அந்தந்த யோனிகளிலே மாறிப் பிறப்பதின்று மனுஷர்முதலிய சாதிகள் மோக்ஷத்தானமாகிய வைகுண்டத்திலுமாறுதென்பதை யேழுதிருவிருத்தத்தினாலே நிராகரிக்கின்றார். பவுராணிகம் வெளிப்பொருளாதலால் "அகலிகை கல்லதானு" வென்ற திருவிருத்த மட்டாப் பொருளுகித் துணர்ந்து கொள்க.

சங்கமந்தாபரங்கடத்தங்கன்மத்துக்கீடா
யங்குருயோனிமாறுமச்சுமாறுதிங்கென்னி
னிங்குமானுடரியற்றும்புண்ணியத்தின்பத்திட்ட
மங்குவான்சுரர்களாயோநரர்களாயருந்துவாரோ. (௪க)

நரர்களாய்த்துய்ப்பரென்னினரர்பதிசாருலோகஞ்
சுரர்களாய்த்துய்ப்பரென்னிற்சொன்னவச்சமுமாகுஞ்
சுரர்களாய்ப்பலங்கடுய்த்துத்தாமிங்குத்தோன்றும்போது
நரர்களாய்ப்பிறப்பர்ஞாலத்தமரராய்நண்ணிடாரே. (௪௨)

வண்டுகளாகிமாறுமயிர்க்குட்டிமற்றோர்செந்துப்
பண்டையவுருவந்தானேவேட்டுவனாய்ப்பிறக்குங்
கண்டுகொள்யோனியெல்லாங்கன்மத்தான்மாறுமென்றே
கொண்டனைசமயமெல்லாமிச்சொலீகொண்டதெங்கே. (௪௩)

அகலிகைகல்லதானாளரிபலபிறவியானான்
பகலவன்குலத்திற்றோன்றிப்பாரெலாமுழுதுமாண்டு
நிகரிலாவரசனாகுஞ்சிலந்திநீடுலகம்போற்றச்
சகமதிலெலிதானன்றோமாபலியாயினானே. (௪௪)

அகலிகைமுதலோர் சாபத்தாலுருமாறினது சுவபாவத்தினு லல்லவென்ன வுத்தரமுரைக்கின்றார்.

செப்பினுய்மாறவேறுசிலர்விதியாலேகன்மால்
வைப்புறும்யோனியெல்லாமாறிவந்திடாவிங்கென்னி
லெப்படியானுஞ்செய்திக்கிறைகரியாவனென்றே
முற்படமொழிந்தேனெல்லாமுதல்வன்றன்விதியேயாகும்

இ-ள். சிலர்விதியாலே-(சாபானுக்கிரகம் வல்ல) சிலபேர் சாபத்தினுலும் வரத்தினுலும்—மாற - யோனிகள் பேதிக்க—வேறுசெப்பினுய்-கன்மத்தினுன்மாறுமென்று சொன்னீர்—கன்மால் வைப்புறும் யோனியெல்லாம் - கன்மநிமித்தமாயுண்டாகுஞ் சரீரங்களனைத்தும்—மாறிவந்திடாவிங்கென்னில்-பேதித்து வாராதென்று நீசொல்லில்—எப்படியானுஞ் செய்திக்கு-சாபத்தினுலே மாறுதலுக்குங் கன்மத்தினுலே மாறுதலுக்கும்—இறைகரியாவனென்றெ முற்பட மொழிந்தேன் - ஈசுரன்சாக்ஷியென்று முன்னமேசொனேனும்—(ஈசுராஞ்ஞையினுற் கன்மவேதுவாகச்சபிக்கும்பேர் சபித்தலால் வரங்கொடுக்கும்பேர் வரங்கொடுத்தலால்) எல்லாம் (யோனிமாறுதன்முதல்) அனைத்தும்—முதல்வன்றன் விதியேயாகும் - கன்மானுசார வீசுர சங்கற்ப காரியமாமே. எ-று. (௪௫)

பின்செயலாற் சீவன்கன்மமிரண்டும் பொருந்தி யுருமாறுதல் முதற்பலத்துக், குபயோகங்களாமென் றுரைக்கின்றார்.

அவ்வவயோனிதோறுமவ்வவவுலகந்தோறுஞ்
செவ்விதினறிந்துகன்மஞ்சேர்த்திடாசீவன்சேரா
விவ்வகைதம்மிற்சேர்வுமிறைசெயலானுற்செய்த
வெவ்வுருவுந்தங்கன்மாலியற்றுவனிறைவன்றானே

இ-ள். அவ்வவ வுலகந்தோறும் - பூலோகமுதலிய புவனங்கடோறும்—அவ்வவயோனிதோறும் - அந்தந்தப் புவனத்தி லுதிக்குந் தேகங்கடோறும்—செவ்விதினறிந்து - மாறுபாடின்றிப் புத்திபண்ணி—கன்மம் (அறிவின்மையாற்சீவனை)—சேர்த்திடா-பொருத்தாது (சேர்ந்திடாவென்று பாடமோதிற் கன்மந்தானே போகம்புசிப்பவனுகுஞ் சீவனைப் பொருந்தாது)—சீவன் (சிற்றறிவாதலா லவைகளை யறிந்து)—சேரா-பொருந்தாது—இவ்வகைதம்மிற்சேர்வும் - (சேர்ந்திடா வென்ற பாடத்தால்)இந்த முறைமை யொன்றுக்கொன்று சீவசரீரங்கள் பொருந்துதலுஞ்சீவகன்மங்கள் பொருந்துதலுஞ் சரீரகன்மங்கள் *காரிய காரணமாய்ப் பொருந்து

தலும்—இறைசெயலானால் - சிவன்செலுத்தவுண்டாகலாமானால்—செய்த வெவ்வுருவும் - பண்ணப்பட்ட வடிவங்களெல்லாம்—தங்கன்மால் - அவரவர்பண்ணின கன்மத்துக்கீடாக—இயற்றுவ னிறைவன்றானே. சிவன்றானே பண்ணுவன். எ-று. (௬௬)

உருமாறுத லொத்துக்கொண்டு மாறிவருதற்கு முதற்காரணமே தென்னச் சைவபவுராணிக மதானுசாரியர்களா யிருக்கின்ற வாசாரியர்கள்மதத்தினு லுத்தாமுரைக்கின்றார்.

மாறியிவ்வுருவமெல்லாம்வருவதெங்கேநின்றென்னிற்
கூறியசூக்குமத்தாமுருவெனிற்குறியொன்றென்னின்
வேறொருகுறியாமாரம்வீரசங்கிலியுமாகுந்
தேறுநீயொருவனாலிச்செயலெலாஞ்சிவனாலாகும்

இ-ள், மாறியிவ்வுருவமெல்லாம் வருவதெங்கேநின்றென்னில்-இந்தச்சுரர் நரர் பசு மிருகபட்சி ரூபமாயிருக்குந் தூலதேகங்கள் மாறி மாறி வருதற்கு முதற்காரண மேதென்று நீ கேட்கின்றாயானால்—கூறியசூக்குமத்தாமுருவெனில் - சொல்லிய சூக்கும தேகத்திலே நின்றுந் தூலதேகமுண்டாமென்று நீர் சொல்லில்—குறியொன்றெனனில் - சூக்கும தேகத்தில் வைசித்திரிய மில்லாமையாற் றூலதேகங்களிலும், வைசித்திரிய மில்லாதே போமென்று நீ சொல்லில் (பொற்பொருளாகிய வொரு முதற்காரணத்தி னின்று)—வேறொரு குறியாமாரம் - பதக்கமும் வேறொரு குறியாம்—வீரசங்கிலியும் - சரப்பளியும்—ஆகும் - உண்டாம்—தேறுநீ - நீதெளிந்தறி—இச்செயலெலாம்-இந்தக்காரியவைசித்திரியமும்-ஒருவனால்—(ஆகும்)—(எவனால்) சிவனால் ஆகும் - உண்டாம். (ஒப்பற்ற பரமேசுரனாலுண்டாதுமென்றுமாம்) எ-று. (௬௭)

பால் தயிரானது போலச் சூக்குமதேகந் தூலதேகமாய்ப் பரிணமித்துக் கெடுமோ வென்னக் கெடாதென் றுணர்த்து கின்றார்.

சூக்குமங்கெட்டுத்தூலந்தோன்றிடாசூக்குமந்தி
ருக்கியோருடல்கிடப்பநின்றுடலாக்குந்தன்மைக்
கோக்கியசத்தியுண்டாயுடறருங்காலமுற்று
நீக்கிடமாம்பின்வேரோர்நீண்மரநிகழ்ந்துமாபோல்.

இ-ள். சூக்குமங்கெட்டுத்தூலந்தோன்றிடா - சூக்குமசரீரமுற்றுந் திரிந்து தூலசரீரமாகாது—சூக்குமத்திருக்கியோருடல்கிடப்பதின்று-(தாய்சரீரத்திற் பிள்ளைசரீரம்போல) சூக்குமசரீரத்துட் டூலசரீரம் பரிணமித்திருந் துண்டாவதில்லை—உடலாக்குந் தன்மைக்கோக்கிய சத்தியுண்டா யுடறரும் - தூலசரீரமாக்குதற்கு அருகமாகிய சாமர்த்தியஞ் சூக்குமசரீரத்துக்குள்ளதாய்ச் சூக்குமசரீரந் தூலசரீரத்தை யுண்டாக்கும்—கால்முற்றும் - காலந்தொறும்—நீக்கிடமரம் - விருக்ஷத்தைச் சேதிக்க—பின்—வேர் - அந்த விருக்ஷமூலம்—(வேறு) ஓர் நீண்மர நிகழ்த்துமாபோல்- மற்றொரு நீண்ட மரத்தை யுண்டாக்குவதுபோல. எ-று. (௪௮)

மேலுமதற்கே புறனடை,

விதிப்படிசூக்குமத்தேயுருவரும்வினையாலிங்கே
யுதித்திடாவுருவமாகவுருவருமரங்கள்வித்திற்
கதித்தெழுமாமும்வித்துங்கழியும்பின்னழியுஞ்சூக்க
மதிக்கெழுகலைகள்போலவருவதுபோவதாமே.

(இ-ள்.) விதிப்படிசூக்குமத்தேயுருவருப் வினையால் - கன்மானுசாரமாய்ச் சிவசங்கற்பத்தின்படி சூக்குமதேகத்திலின்றுந் தூலசரீரமுண்டாம்—உதித்திடாவுருவமாக-(சூக்கும சரீரந்தானேதிரிந்து) தூலசரீரமாகாது—இங்கேயுருவருமரங்கள் வித்திற்கதித்தெழும்-இவ்விடத்து வடிவுற்றவிருக்ஷங்கள் பீசத்திலுண்டாம்—(வந்த) மரமும்வித்துங்கழியும்—(அப்படி) சூக்கம்பின்னழியும்-சூக்குமதேக மொருங்குன்றிய கெட்டுப்போம் (அதுபோலப்படியன்று)—மதிக்கெழுகலைகள்போல வருவதுபோவதாமே-(சூக்குமசரீரத்திலேயின்றுந்தூலசரீரங்கள் ஒருகலையாய்ச் சேடித்த) சந்திரனிடத்தேநின்று முதிக்கு மற்றுள்ள கலைகள்போல—வருவது போவதாமே-உண்டாய்த்தானே கெடும். எ-று. (௪௯)

காரணபாரம்பரை யந்தச்சைவபைராலிக மதாசாரியரசாரியர்கள் மதத்திறுற்றுனே காண்பிக்கிறது.

தூலமாமுருவினுக்குச்சூக்குமமுதலதற்கு
மூலமானதற்குமூலமோகினியதன்முதற்றுன்
மேலதாம்விந்துசத்திசிவமிவைவமிசையாமெல்லாஞ்
சாலவின்றுகுமான்மாச்சிவத்தினைச்சார்ந்தபோது.

(இ-ள்) தூலமாமுருவினுக்குச்சூக்குமமுதல் - தூலதேகத்துக்குச் சூக்குமதேகமுதற்காரணம்—அதற்கு மூலமான் - அந்தச்சூக்குமதேகத்துக்கு

முதற்காரணம் பிரகிருதி (தன்மாத்திரையைந்தும், மனம் புத்தி யாங்காரம் ஆகவெட்டென்னும் வசனத்துக்குப் பிரகிருதி முதற்காரணம். எட்டுக்கொத்தென்று கொள்ளுமிடத்துப் பூதமொருகொத்து; தன்மாத்திரையொருகொத்து கன்மேந்திரிய மொருகொத்து; ஞானேந்திரிய மொருகொத்து; அந்தக்கரணமொருகொத்து; குணமொருகொத்து; பிரகிருதியொருகொத்து; கலாதியைந்துமொருகொத்து-ஆகக்கொத்தெட்டும், புரியில் சூக்குமதேகத்தில்—அட்டகம் - புரியட்டகமென்றுகொள்ளுமிடத்துப்பிரகிருதிமாயையிரண்டு முதற்காரணமெனவறிக)—அதற்குமூலமோகினி - அந்தப்பிரகிருதிக்கு முதற்காரண மசுத்தமாயை—அதன்முதற்றன்மேலதாம்விந்து - அந்த வசுத்தமாயைக்கு முதற்காரணம் உபரிவிரியுஞ்சுத்தமாயை—சத்திசிவமிவைமிசையாம் - அந்தச்சுத்தமாயையைச் செலுத்தும் பராசத்தியும் பராசத்தியைச்செலுத்தும் பரசிவமு மேலாய்விரியும்—எல்லாம் - இப்போது சொல்லிய பிரபஞ்சபிரபஞ்சிகளெல்லாம்—ஆன்மா—சிவத்தினைச்சார்ந்தபோது - தனதுசொருபமாகிய சிவத்துவாபிவியத்தியைப் பெற்றபோது—சாலவின்றாகும்- பந்திக்கும் பந்திப்பிக்கும் முறைமையைவிட்டிருக்கும். எ-று. மதங்கபாரமேசுரத்திற்சிவத்துவம்பெற்றமுத்தாத்மாவைக்குறித்துச் சிவன்பிரேரகரல்ல சிவனைக்குறித் தவனும்பிரேரியனல்லவென்றுபேசப்பட்டது.

"பச்சாந்தெத்தேசிவத்துவேனே காரணத்துவேனகாரணம்,
நதம்பிரிகதாசிற்சியா சோபிகாரியத்துவகோசராத்,
அதிதப்பரிபூரணச்ச சச்சோதந்திரச்சர்வதோமுக;" என்று. (௫௦)

சுத்தமாயையி லசுத்தமாயை தோன்றுமென்றுஞ் சூக்குமதேகத்திற் றூலதேகந் தோன்றுமென்றுஞ் சொல்லுஞ் சைவபவுராணிக மதானுசாரிகளாயிருக்கின்ற வாசாரியர்மத மனுபாஷித்துச் சுத்தசைவசித்தாந்தா சாரியர் சொல்லுமதானுசாரமா யசுத்தமாயைநித்தியமென்றும், முடிவில் "அண்டசம்" என்னுந் திருவிருத்தத்தாற்றூலதேகஞ் சாதாரணதத்துவபுவனமாகிய முதற்காரணத்தினின்றுஞ் சூக்குமதேகத்தை நிமித்தகாரணமாகப் பண்ணிக்கொண் டுண்டாமென்று மெதாகரிக்கற் குபக்கிரமிக்கின்றார்.

அரன்விதியருளதென்றேயறைந்தனமதுவுமுன்னே
தனைநரகந்துறக்கந்தனுகரணாதியெல்லாம்

வருவதுஞ்செய்தனுதிமலங்களிம்மருந்தாற்றீர்த்துப்
பரகதியதுவுந்தந்துபாதபங்கயமுஞ்சூட்டுமே.

(இ-ள்) அரன்விதி-பதிபஞ்சகிருத்தியம்—அருளதென்றேமுன்னே யறைந்தனம்-அது-அந்தச்சிவனது பஞ்சகிருத்தியம்—(நிக்கிரகரூபமாயிருக்கின்றதும்)அநுக்கிரகந்தானேயென்று (முன்பதிபரீக்ஷையில்) சொன்னோம்—(அப்படியே) அதுவும் - அந்தவருளுந் தொழிலும்—நரைநரகந்துறக்கம்—தனுகரணாதியெல்லாம்-(தங்களதுகலப்பினாலே மலபரிபாகத்தைப்பண்ணும்) சூக்குமதேகந் தூலதேகமுதலிய மாயாகாரியங்களை—வருவதுஞ் செய்து - (மாயையினின்றும்) - உற்பத்திபண்ணி—இம்மருந்தால்-இந்தமாயாகாரியமாகிய அவுடதத்தால்—மலங்கள் தீர்த்து - மலமாயாகன்மங்களைப் போக்கி—பரகதியதுவுந்தந்து - பரத்தில்யோசித்து—பாதபங்கயமுஞ்சூட்டும் - சிவத்துவாபிவியத்தியுஞ் செய்யும். எ-று. (ருக)

மாயாகாரியத்தான் மலத்தைப் போக்குமென்ப தடாதென்ன வடுக்குமென் றறைகின்றார்.

எழுமுடல்கரணமாதியிவைமலமலமலத்தாற்
கழுவுவனென்றுசொன்னகாரணமென்னையென்னிற்
செழுநவவறுவைசாணியுவர்செறிவித்தழுக்கை [ன்.
முழுவதுங்கழிப்பன்மாயைகொடுமலமொழிப்பன்முன்னோ

(இ-ள்.) எழுமுடல்கரணமாதியிவைமலம் - மாயையினுண்டாகிய தனுகரணாதிகளெல்லா மழுக்கு—மலமலத்தாற்கழுவுவனென்று சொன்ன காரணமென்னையென்னில் - ஆணவமலமாகிய வழுக்கை மாயாமலமாகிய வழுக்கினாற் போக்குவனென் றுரைத்த நிமித்தமேதென்னில்—செழுநவவறுவைசாணியுவர்செறிவித்து - அழகிய கோடிப்புடைவையிற் சாணியுவர் மண்முதலியவற்றைப்பிசறி—அழுக்கைமுழுவதுங்கழிப்பன் - புடைவையின் முன்னிருந்த தோஷத்தோடாகந்துகதோஷமுற்றுங் காருவனானவனீக்குவன் (அப்படி)—மாயைகொடு - மாயாமலத்தினால்—முன்னோன் - சிவன்—மலம் - ஆணவமலத்தை—ஒழிப்பன். எ-று. (ருஉ)

ஆறலசுத்தமாயையின திலக்கண மேதென்ன விசைக்கின்றார்.

நித்தமாயருவாயேகநிலையதாயகிலத்துக்கோர்
வித்துமாயசித்தாயெங்கும்வியாபியாய்விமலனுக்கோர்

சத்தியாய்ப்புவனபோகந்தனுகரணமுமுயிர்க்காய்
வைத்ததோர்மலமாய்மாயைமயக்கமுஞ்செய்யுமன்றே.

(இ-ள்.) நித்தமாய் - (காரியகாரணங்களிரண்டு மநித்தியமென்னும் பவுத்தருக்குப்போல) அநித்தியமின்றி—அருவாய் - (உருவாகிய பரமாணுவே காரணமென்னுநையாயிகருக்குப்போல) உருவன்றி—ஏகநிலையதாய் - (மாயையனிர்வசனமென்றுஞ் சத்தென்றுஞ் சொல்லும் வேதாந்தைகதேசிக்குஞ்சத்தசிவவாதிகட்கும்போல) முறைமையி னநேகமன்றிச் சத்தன்றி—அகிலத்துக்கோர்வித்துமாய் - (சூனியமேயுபாதானஞ் சூனியம்பிரபஞ்சமென்றும் பவுத்தைகதேசிக்குப்போல) சூனியமன்றி—அசித்தாய் - (சிற்சத்தியேயுபாதானமதனின்றுஞ் சடமுற்பத்தியாமென்னும் பரிணாமவேதாந்திக்கும், நாராயணப் பிரகிருதியி னின்றுஞ் சடசித்துண்டாமென்னும் பாஞ்சராத்திரிகருக்கும்போல) சித்தன்றி—எங்கும் வியாபியாய்- (கண்ணுக்குத் தோற்றிய பூதங்காரணமென்னு முலோகாயதனுக்குப் போல அவ்வியாபியன்றி—மேலவனுக்கோர் சத்தியாய்-சிவனுக்குச் (சமவேத சிற்சத்தி யொன்று பரிக்கிரக சடசத்தி யிரண்டுஆக மூன்றினுள்) ஒரு பரிக்கிரக சடசத்தியாய்—புவனபோகந் தனுகரணமுமுயிர்க்காயவைத்ததோர் மலமாய-புவனபோகமியப் பொருள் தூலசரீர சூக்கும சரீரங்களையும்(இலக்கியமாலவையேயா முண்டாகிய சிற்றறிவையும்) கொடுத்த மாயாமலமாய்—மாயையமயக்கமுஞ் செய்யுமன்றே - மாயையானது அந்தச்சிற்றறிவைப்பற்றி நான்கனி நான்சுகி யென்றுவரும் விபரீதஞானத்தையு முயிர்க்குப்பண்ணுவந்தானே எ-று. (௫௫)

மாயையினின்றுந் தத்துவங்களினது தோற்றமுந் தொழிலு முரைக்கின்றார்.

மாயையிற்காலமோடுநியதிபின்கலாதிதோன்று
மாயவக்காலமூன்றுமாக்கியுமளித்தும்போக்கிக்
காயமோடுலகுக்கெல்லாங்காலசங்கையினைப்பண்ணி
நாயகனாணையாலேநடத்திடுஞ்சகத்தையெல்லாம்.

(இ-ள்) மாயையிற்காலமோடு நியதிபின் கலாதிதோன்றும்-(சுத்தமாயையிற் சிவன்சிருட்டித்த நாதபர்த்தத்திற் பின்பந்தமா யனந்தேசுரசத்திகலக்கிய) மாயையினின்றுங் காலதத்துவம் நியதிதத்துவம் கலாதத்துவம் (ஆதியென்றதனாற்புருடதத்துவமும் உண்டாம்—(முன் மானதப்

பிரத்தியக்ஷப் பிரத்தாவத்திலே தத்துவங்களினதுவியாபாரக்கிரமம் விஸ்தரிக்கப்பட்டது ; இப்போதுற்பத்திக்கிரமமாசாரியர்தாமே யுரைக்கின்றார்) ஆயவக்காலம் - சூக்கும தேகத்துள்ளசாதாரணமாயிருக்குங் காலதத்துவம் புறம்பிற் சாதாரண காலதத்துவத்தினது விருத்தி யாதி முதலிய கலைகளை முன்னிட்டுக் கொண்டு போக்கியப்பொருளிற்போகத்தின்பொருட் டியினைச் செலுத்தி மகாப்பிரளயபரியந்த மிருக்கும் புறம்பிற்சாதாரணகாலம்—மூன்றாயாக்கியு மளித்தும்போக்கி - போகாவதிப்பரிச்சேதகமாய்த் துடிலவகாட்டாதி காலபேதத்தினாலே செல்காலம் வருகால மிரண்டின் மத்தியத்தி னிகழ்காலமாயுஞ் சரீரமுதலிய தாத்துவிகப்பொருள்களின தீறுதோற்றனிற்ற னிமித்தமாய் நிற்குங்காலதத்துவத்தோற்றத்திலுங் காலம்வேண்டி லனவத்தைவரும்; ஆதலாற்றத்துவதோற்றத்திற்கால நிமித்தமன்று. நியதியை நியமிக்குங் காலதத்துவம்போலச் சங்காரத்தை நியமிக்குங் கலையித் திரியென்கின்ற சங்காரசத்தியே தத்துவதோற்றத்தில் நிமித்தம்—காயமோலெகுக்கெல்லாம் - தநுகரணபுவன போகங்கட்கு—காலசங்கை யினைப்பண்ணி-ஏகமுதற் பரார்த்த பரியந்த காலவெண்ணிக்கையை யுண்டாக்கி—நாயகனாணையாலே - சிவாக்கினையா லேவப்பட்ட காலதேவதையினா லதிட்டிக்கப்பட்டு—நடத்திநின்று சகத்தையெல்லாம் - சடசித்துக்களனைத்தையும் உற்பத்தி யோக்கியத்தை யுற்பத்திபண்ணிச்) செலுத்தும் எ-று. (ருச)

நியதிமுதலியவற்றின் றொழில் நிச்சயிக்கின்றார்.

நியதிபின்றோன்றிக்கன்மநிச்சயம்பண்ணிநிற்கு
மயர்விலாக்கலைபின்றோன்றியாணவமொதுக்கிச்சித்தின்
செயல்புரிகிரியாசத்திதெரிவிக்குஞ்சிறிதேவித்தை
யுயர்கலையதனிற்றோன்றியறிவினையுதிக்கப்பண்ணும்,

(இ-ள்) நியதிபின்றோன்றி - பின்புமாயையினின்றும்நியதிதத்துவமுண்டாய்—கன்மநிச்சயம் பண்ணிநிற்கும் - தனதுகன்மபலமாகிய சுகதுக்கங்களைப் பிறநியதிசம்பந்திப்பிறர் புசியாமற் பிறரவைகளைத் தனதுசம்பந்தியாயிருக்கின்ற வாத்மாப்புசியாமல் வரையறைபண்ணிநிற்கும்—அயர்விலாக்கலைபின்றோன்றியாணவமொதுக்கிச்சித்தின்செயல்புரிகிரியாசத்தி தெரிவிக்கும் - பின்புபிரகாசமான கலாதத்துவ மாயையினின்றுண்டாய் ஒருபிரதேசத்திலே மலசத்திவியாபாரத்தை மறைத் தாத்மாவினது பிறபொருளறிவாகிய ஞானக்கிரியாசத்தி வியாபாரங்களைக் கிரியாதிக்கமாய்ச் சிறிதுவிளக்கித் திரும்பத் தற்பொரு ளறிவாகிய சத்திமறக்கர்த்தாவைப்

பொருந்திக் கர்த்திருகாரகமென்று பேர்பெற்றுநிற்கும்—வித்தையுயர்கலை யதனிற்றோன்றியறிவினை யுதிக்கப்பண்ணும் - பின்பு வித்தியாதத்துவங் கலாதத்துவத்தி லுண்டாய்க் கலையினு லொருபிரகாரம் விளக்கப்பட்ட ஞானசத்திவியாபாரத்தை மலவாசனைபோக்கி விளக்கிப் பிறபொருளறி வாகிய சத்திகரணத்தைப் பொருந்திக் கரணகாரகமென்று பேர்பெறறு நிற்கும் எ-று. (ருரு)

இராகதத்துவ சமுற்பத்திவியாபாரம் விளம்புகின்றார்.

விச்சையிவிராகந்தோன்றிவினைவழிபோகத்தின்க
ணிச்சையைப்பண்ணிநிற்குந்தொழிலறிவிச்சைமூன்றும்
வைசசபோநிச்சாஞானக்கிரியைமுன்மருவியான்மா
நிச்சயபுருடனுகிப்பொதுமையினிற்பனன்றே.

(இ-ள்) விச்சையி லிராகந்தோன்றி - கலாதத்துவத்திலே நின்றுந் தானே வித்தியாதத்துவத்தோடொத் தேககாலத்தி லிராகதத்துவமுண்டாய்— வினைவழி - கன்மத்தைமுன்னிட்டு—போகத்தின்கணிச்சையைப் பண்ணிநிற்கும் - போக்கியப்பொருள்களிலே சிறப்புவிருப்பத்தைப் புத்திக்கே தாரகமபண்ணு மாதலாற் பொதுவிருப்பமாகிய விச்சாசத்திவியாபாரத் தை விளக்கிக்கரணகாரகமென்று பேர்பெற்றுநிற்கும்—தொழிலறி விச் சைமூன்றும் - கிரியைமுதலாகிய மூன்றுவியாபாரங்களையுங் காலமுதலிய மூன்றுதத்துவமும்—வைச்சபோது - விளக்ினவிடத்து—இச்சா ஞானக் கிரியைமுன்மருவி-காலமுத லிராகமுடிவாகியபஞ்சகஞ்சுகனுய் அவித்தை யச்மிதை யிராகந் துவேஷ மபினிவேசமென்கின்ற புமலத்துவமல சித் தமலப் பெயர்ப் பஞ்சகிலேசியாய்—ஆன்மா—நிச்சயபுருடனுகிப்பொது மையினிற்பனன்றே - போத்தாவாய்ப் போகோன்முகனுய்ப் புருடதத்துவ மென்று பேர்பெற்றுநிற்பன். எ-று. முன்சொன்னகாலநியதித்துவங்களி னது வியாபார மிராகதத்துவ வியாபாரத்தின் பின்னெனவறிக. அவ்விர ண்டும்பிரதானமாதலாற் கர்த்திருகாரகமென்றுபசரிக்கப்படும். (ருசு)

பிரகிருதித்தத்துவோற்பத்தியைப்பேசுகின்றார்.

வருங்குணவடிவாய்மூலப்பிரகிர்திகலையிற்றோன்றித்
தருங்குணமூன்றுமொன்றிற்றான்மூன்றாய்மும்மூன்றுது
மிருங்குணரூபமாகியிசைந்திடுமெங்குமான்மாப்
பெருங்குணவடிவாய்ப்போகசாதனப்பெத்தமாமே.

(இ-ள்) வருங்குணவடிவாய்மூலப்பிரகிர்திகலையிற்றேன்றி - தனதிடத்திலவிவியத்தமா யுண்டாகு மனபிவியத்த குணரூபமாய்க் கலாதத்துவத்திலுண்டாய்—தருங்குணம் - குணதத்துவத்தையுண்டாக்கும் (அந்தக்குணம்)—மூன்றாய் - சாத்துவிகமிராசதந்தாமதமென்று மூன்றுபிரகாரமாய்த் (திரும்ப)—ஒன்றிற்றான்மூன்றாய்மும்மூன்றாகும் - சாத்துவிகத்திற்சாத்துவிகம்,சாத்துவிகத்தி லிராசதம்,சாத்துவிகத்திறாமதம்இந்தமுறைமையிலொன்பதாகி—இருங்குணரூபமாகியிசைந்திடுமெங்குமான்மா-எவ்விடத்தும்போக்கியப்பொருள்களிற்பிரவிருத்திமானாகியவான்மாப்பெரிதாகியகுணவடிவாகிப்போக்கியபொருள்களோடு பொருந்தும் (அப்படி)—பெருங்குணவடிவாய்—போகசாதனப்பெத்தமாமே- (கலைமுதற்பூதாந்தமான) போகோபாயங்களினாற் கட்டப்படும். எ-று.சாத்துவிககுணத்தினதுவியாபாரம் பிரகாசமுதலியன; இராசதகுணத்தினது வியாபாரம் பிரவிருத்திமுதலியன; தாமதகுணத்தினதுவியாபாரம் நியமமென்கின்ற நிவிர்த்திமுதலியன; ஸ்ரீமன்மதங்கமுதலிய வாகமங்களிற்கேட்டறிக. (நஎ)

சித்ததத்துவம் புத்திதத்துவ மிரண்டினதுற்பத்தி வியாபாரங்களை யுரைக்கின்றார்.

சித்தமாயவ்வியத்தஞ்சிந்தனையதுவுஞ்செய்யும்
புத்தியவ்வியத்திற்றேன்றிப்புண்ணியபாவஞ்சார்ந்து
வத்துநிச்சயமும்பண்ணிவருஞ்சுகதுக்கமோகப்
பித்தினின்மயங்கிஞானக்கிரியையும்பேணிநிற்கும்.

(இ-ள்) சித்தமாயவ்வியத்தஞ்சிந்தனையதுவுஞ்செய்யும் - (குணத்துவாரத்தினாலேபிரகிருதிமனசினதவத்தாவிசேடமாகியசித்தமாய்அவித்தையினா லிந்திரியத்துவாரத்தாற நிருட்டமாயிருக்கின்ற போக்கியப்பொருள்களில் ஒன்றைத்தாக்கி மனசுக்குச்சங்கற்பிக்கும்பொருட்டுக் கொடுக்கும் மனசுசங்கற்பிதது ஆங்காரத்தைக்கொண்டபிமானித்துப் புத்தியைக்கொண்டு நிச்சயம்பண்ணுவிக்குமாதலால்) பிரகிருதி குணத்துவாரத்தினாற் சித்தமாய்ப்பரிணமித் தொருபொருளைத்தூக்கிச் சிந்திக்கும் (மனசு ஆங்காரத்தினுண்டாகியதானது மாங்காரத்தின தபிமானத்துக்கும் புத்தியினது நிச்சயத்துக்கு முந்தவிஃதின்னதாகவேண்டுமென்றுசங்கற்பிக்கும்)—புத்தியவ்வியத்திற்றேன்றி - புத்திதத்துவம் பிரகிருதியிலுண்டான குணதத்துவத்திலுண்டாய்—புண்ணியபாவஞ்சார்ந்து - பாவபுண்ணியத்துக்சேற்ப—வத்துநிச்சயமும்பண்ணி-மாலை சந்தன மகளிர் பாம்பு முள்ளு நஞ்சு உதிரமுதலியபொருள்களை யகங்காரவிருத்திகருப்பின் ⋅ னறுதியிட்டு—வருஞ்சு

கதுக்கமோகப்பித்தினின்மயங்கி - அந்தப்போக்கியப்பொருள்களுக் கேற்பவுண்டாகுஞ் சுகதுக்கமோகரூபத்திஞலே பரிணமித்து—ஞானக்கிரியையும் பேணிநிற்கும் - வித்தியாதத்துவத்திஞல் விளக்கப்பட்ட சிற்சத்தியினது ஞானரூப யோகக்கிரியானுபவத்துக்கு விஷயமாயனுபவிக்கப்பட்டிருக்கும். எ-று. (௫அ)

ஆங்காரத்தோற்றந்தொழில்களை யறிவிக்கின்றார்.

ஆங்காரம்புத்தியின்கணுதித்தகந்தைக்குவித்தா
யீங்கார்தானென்றேடொப்பாரெந்தியாரென்னதென்றே
நீங்காதேநிற்குந்தானுமூன்றதாய்நிகழுமென்பர்
பாங்கார்பூதாதிவைகாரிகந்தைசதந்தானென்றே.

(இ-ள்) ஆங்காரம்புத்தியின்கணுதித்து-ஆங்காரதத்துவஞ் சாத்துவிகருணுதிக்கமாயிருக்கின்ற புத்தியினின்று மிராசதருணுதிக்கமாயுற்பவித்து—அகந்தைக்குவித்தாய் - விஷயபராமரிச புத்திபோதத்துக்கு வேறாகிய வாத்மபராமரிச போதகாரணமாய்—ஈங்கார்தானென்றேடொப்பாரெந்தியாரென்னதென்றேநீங்காதேநிற்கும் - (இதுலோகஞ்சொல்லும் வியாபாரம்:—போகத்துக்குயோகமுரியவியாபாரம்) வித்தியாதத்துவப்பொருந்து மிந்திரியங்களிஞல்வந்த நிருவிசற்பஞானுலோசிதமாய் மனச்சங்கற்பிதமாய்ச் சந்திட்டமாய் இருக்கின்றவந்துவில் நானிச்சயம்பண்ணுவேனென்றும் நிருமிப்பேனென்றுங் கருவசங்கிரப்ப ஞானக்கிரியாவியாபாரத்தைப் பண்ணிநிற்கும்—தானும் - அந்தவகங்காரமும் (மனசோடுகூடிய ஞானேந்திரியக் கரணக்கொத்து,கன்மேந்திரியக் கரணக்கொத்து, தன்மாத்திரைக் கரணக்கொத்தெனறு)—மூன்றதாய்நிகழுமென்பர்—(தன்மாத்திரைக்கொத்துக்கிரமத்திலே கொத்துக்கள்) பாங்கார் பூதாதிவைகாரிகந்தைசதந்தானென்றே (அக்கிரமத்திலேதாமதமிராசதஞ்சாத்துவிக மென்றும்பேர்பெற்றுநிற்கும். எ-று. (௫௧)

அகங்காரத்தினின்று மனமுதலிய பதினறு தத்துவந் தோன்றுமென்று சொல்வாராய் மனத்தோடு ஞானேந்திரிய கன்மேந்திரியந் தோற்ற முரைக்கின்றார்.

மனமதுதைசதத்திலவந்தொருபொருளைப்பற்றி
நினைவதுஞ்செய்தங்கையநிலைமையினிற்குமாங்கே
யினமலிசோத்திராதிகன்மவிந்திரியமெல்லா
முனமுறைசெய்தவைகாரிகந்தருமென்பர்முன்னோர்.

(இ-ள்) மனமதுதைசதத்தின்வந்து - மனத்தத்துவஞ் சாத்துவிகா ங்காரத்தி லுண்டாய்—ஒருபொருளைப்பற்றிநினைவதுஞ்செய்தலுமையதினை மையினிற்கும் - வித்தியாதத்துவத்தோடுகோத்த ஞானேந்திரியமொன்றி னால் விளங்கிய சிற்சத்தியிற்சனித்த நிருவிகற்பஞானவிஷயப் பொருள்க ளிலே யொருபொருளைச் சித்தமாய்ப்பொருந்தித்தாகவி யிஃதின்னதாகவே ண்டுமென்று சங்கற்பித தநிற்சந்தேகித்துநிற்கும்—ஆங்கே-அந்தச்சாத்து விகாங்காரத்திலேதானே—இனமல்சோத்திராதி - வருக்கமிகுந்த ஞானே ந்திரிய மைந்தும்(தோன்றிச் சிற்சததிவித்தியாதத்துவத்தோடுகூடி யிராக தத்துவங்கலக்க மனச்சங்கற்பத்துக்குமுன் பொருளைப்பார்க்கும்)—கன்ம விந்திரியமெல்லாம் - கன்மவிந்திரியங்க ளைந்தையும் —முறைமுறையாசெய்த வைகாரிகந்தருமென்பர் முன்னோர்-முந்தச்சொல்லியவிராசதாங்காரமுண் டாக்குமென்று பெரியோர் சொல்லுவார்கள். எ-று. (௬௦)

ஞானேந்திரியம் பார்க்கும் பொருளைப் பகர்கின்றார்.

நற்செவி துவக்குக்கண்ணுநாசியையந்தினோயுநல்லோர்
புத்தியிந்திரியமென்றுபுகன்றனரிவைகளாக்குச்
சததநற்பரிசரூபவிரதகந்தங்களைந்தும்
வைத்தனர்விடயமாகவடைவினைமருவுமன்றே.

(இ-ள்) கட்டில் கூயபிட்டென்ற விடத்துச் சகலக்கலையிறுமே கட்டிலி லிருக்கும் புருடனென்பதுபோலச் செவிமுதலியவுற்றிலிருக்கு மிந்திரியங்கள செவிமுதலாகச்சொல்லப்பட்டன. வெளிப்பொருள் எ-று.

கன்மவிந்திரிய வியாபாரத்தை விளம்புகின்றார்.

வாககொடுபாதபாணியாயுவோடுபத்தமைந்து
நீக்கினர்முன்னோகன்மேந்திரியங்களெனவினைந்தே
யாககியவசனகமனதானமுய்விசர்க்காளந்த
மூகககமாரைந்துமைந்தின்றொழிலெனவோதினாரே.

(இ-ள்.) முன்சொன்ன முறைமையில் வாக்காதிகளி லிருக்கு மிந் திரியங்கள் வாக்காதியாகச்சொல்லப்பட்டன. மனச்சங்கற்பத்தாற்செலு த்தப்பட்டு ஞானேந்திரியம் ஞானசத்தியை விளக்கினபோது, கன்மேந்தி ரிய மகங்காரத்தோடு கோத்துக் கிரியாசத்தியை விளக்கக் கிரியாசத்திச ங்கிரம்பத்தோ டகங்காரங்களடபி யுதானுதிவாயுசேட்டையைப்பண்ண வசனாதித்தொழில்வரும். மற்றது வெளிப்பொருள். எ-று. (௬௨)

அந்தரங்கவெகிரங்கமறிவிக்கின்றார்.

வாயாதிசோத்திராதிபுறத்துவாழ்கருவியாகு
மோயாதமனாதிகாயத்துணருமுட்கருவியாகு
மாய்வரார்கட்கிராகமாதியவற்றினுட்கருவியாகு
மாயாடன்வயிற்றிவற்றூற்றுடக்குண்டுவாழுமான்மா.

(இ-ள்) மனாதி - மனம்புத்தியகங்காரஞ்சித்தம். இராகமாதி-காலநியதிகளொருபிரகாரத்தாற் கர்த்திருகாரகமாறாலுங் காரணகாரகமாகியகருவியென்று சொல்லப்படாதாதலாற் கலைவித்தையிராகம். மற்றதுவெளிப்பொருள். எ-று. (சரு)

தன்மாத்திரா சமுற்பத்தியைச் சாற்றுகின்றார்.

ஓசைநற்பரிசரூபவிரதகந்தங்களென்று
பேசுமாத்திரைகளைந்தும்பிறக்கும்பூதாதிகத்தி
னேசவிந்திரியங்கட்குநிகழுவிதனாற்காண்டு
மாசைசேர்மனாதிதன்மாத்திரைபுரியட்டகந்தான்.

(இ-ள்) ஓசைநற்பரிசரூபவிரதகந்தங்களென்று பேசுமாத்திரைகளைந்தும்பிறக்கும்பூதாதிகத்தில்-நிவிர்த்தாதி பேதபின்ன சத்தகுணமொன்றுமுடையது சத்ததன்மாத்திரை; சத்தப்பரிசகுணமிரண்டுமுடையது பரிசதன்மாத்திரை; சத்தப்பரிசரூபகுணமூன்றுமுடையதுரூபதன்மாத்திரை; சத்தப்பரிசரூபரசகுணநான்குமுடையதுரசதன்மாத்திரை; சத்தப்பரிசரூபரசகந்தகுணமைந்துமுடையதுகந்ததன்மாத்திரையெனச்சொல்லப்படும்பஞ்சதன்மாத்திரைகள்தாமதாகங்காரத்திலுண்டாம்—நேசவிந்திரியங்கட்குநிகழுவிதனாற்காண்டும் - பற்றுற்ற விருவகையிந்திரியங்களுக்கிந்தப்பஞ்சபூதத்தோடுகூடிய பஞ்சதன்மாத்திரைகளாலிருவகையிந்திரியசத்திகளைவிளக்குமறிவென்றுபசரிக்கப்படும் பஞ்சதன்மாத்திரையுற்பத்தியாம். (அதுவருமாறு:—சத்ததன்மாத்திரையு மாகாசமுங்கூடித் தேதிரோத்திராதிமுறைமையிற் சுரோத்திரேந்திரியத்துக்கும் வாக்கிந்திரியத்துக்கு மிடமாயிருக்கும்; பரிசதன்மாத்திரையும் வாயுவுங்கூடித் தொக்கிந்திரியத்துக்கும் பாதேந்திரியத்துக்கு முன்சொல்லியமுறைமையிலிடமாயிருக்கும்; உரூபதன்மாத்திரையு மக்கினியுங்கூடி நேத்திரேந்திரியத்துக்கும் பாணியிந்திரியத்துக்கு முன்சொன்னமுறைமையி லிடமாயிருக்கும்; இரசதன்மாத்திரையு மப்புவுங்கூடிச்சிங்குவையிந்திரியத்துக்கு பாயுவிந்திரியத்துக்கு முன்சொன்னமுறைமையி லிடமா

யிருக்கும்; கந்ததன்மாத்திரையும் பிருதிவியுங்கூடி யாக்கிராணவிந்திரியத்துக்கு முபத்தவிந்திரியத்துக்கு முன்சொன்னமுறைமையிலிடமாயிருக்கும்)—ஆசைசேர்மனுதிதன்மாத்திரை புரியட்டகந்தான்-இச்சைபொருந்திய மனம் புத்தி யகங்காரந்தன்மாத்திரையைந்துந்தான—புரியட்டகம்-சூக்குமதேகம். எ-று. திருப்பப் புரி - சூக்குமதேகத்திலே—அட்டகம் - எட்டுக்கொத்தென்றுபண்ணிப் பூதக்கொத்து தன்மாத்திரைக்கொத்து கன்மேந்திரியக்கொத்து ஞானேந்திரியக்கொத்து அந்தக்கரணக்கொத்து குணக்கொத்து பிரகிருதிக்கொத்து கலாதிக்கொத்து இவைகளைத் தன்மாத்திரையந்தக்கரணங்களாகிய வெட்டிலுமடக்கி முப்பதுதத்துவம் புரியட்டகம். முன்னுஞ் சாதித்தோம். "முன்சொல்லியமுறைமையிற் குணமுடைத்திரவியங்களாயப் பூதகாரணங்களாய்ப் பிரத்தியக்ஷங்களா யிருக்கின்ற தன்மாத்திரைகளைப் பஞ்சேந்திரியவிஷயப் பிரத்தியக்ஷமாகிய பூதகுணங்களாகச் சிறிதும் சிறிதுதத்துவக்கட்டளைமுதலியவற்றுட்சொல்லிய தறியாமையினாலெனவறிக. (௬௪)

பூதங்களினதுற்பத்திபுகலுகின்றார்.

சாற்றியபஞ்சதன்மாத்திரைகளிற்சத்தமுன்றுத்
தோற்றுபவான்வளிதீநீர்மண்டொடக்கியேயொன்றுகொன்ற
கேற்றமாமோசையாதியிருங்குணமிசைந்துநிற்கு [ம்
மாற்றவேவிடயம்பூதமங்காங்கிபாவத்தாமே.

(இ-ள்.) சாற்றியபஞ்சதன்மாத்திரைகளில்—சத்தமுன்றுச-சத்ததன்மாத்திரைக்கிரமத்திலே—வான்வளிதீநீர்மண்—தோற்றும்-உண்டாம்—தொடக்கியேயொன்றுக்கொன்றங்கேற்றமாமோசையாதியிருங்குணமிசைந்துநிற்கும்-ஆகாசமாதியாய்த்தொட்டொவ்வொன்றுக்கொவ்வொன்றவ்விடத்ததிகமாஞ்சத்தபரிசரூபரசகந்தகுணங்கள் பொருந்தியிருக்கும். (அதுவருமாறு.—ஆகாசத்துக்குச்சத்தகுணம், வாயுவுக்குச்சத்தபரிசகுணம், தேயுவுக்குச்சத்தப்பரிசரூபகுணம், அப்புவுக்குச்சத்தப்பரிசரூபரசகுணம், பிருதிவிக்குச்சத்தப்பரிசரூபரசகந்தகுணம்)—ஆற்றவேவிடயம்பூதமங்காங்கிபாவத்தாமே-(சத்தாதிவிடயகுணங்கட்காதாரமாகையால் ஆகுபெயராய் விடயமென்றது பூதகாரணசத்தாதிதன்மாத்திரைகளை ஞானேந்திரியவிஷயமாகிய சத்தாதிபூதகுணங்களையன்று. கடமுங் கடத்தினதுபூச்சும்போலவும்) தன்மாத்திரையும் பூதமுமங்காங்கிபாவமாயிருக்கும். எ-று. பூதங்கள் முறைமையிற் சூக்குமம் ஆந்தரம் வாகியமென்று மூன்றுபிரகாரமாம்; இவற்றுட் சூக்குமஞ்சூக்குமதேகத்திருந் திந்திரியவாதாரமாம்; ஆந்தரந்தூலதேகத்திருந்து சரீரத்தைவளர்த் துள்ளிடங்கொடுத்தன்முதலிய தொழில்களை

வியற்றும்; வாகியம் அண்டபுவனபோக்கியப்பொருளாகாரமா யிடங்கொ டுத்தன்முதலிய தொழில்களையியற்றும். (௬௫)

ஆந்தரவாகியவாகாசமுதலிய பூதமைந்திற்குந் தொழி லாகிருதி வன்ன பிசாக்கர மடையாளந் தேவதை முதலியவற்றை முறைமையின் மூ ன்று திருவிருத்தத்தா லறைகின்றார்.

இரந்தரமாகிவான்றானிடங்கொடுத்திடுஞ்சலித்தே
பரந்தவைதிரட்டிடுங்காற்சுட்டொன்றுவித்தல்பண்ணு
நிரந்தரங்குளிர்ந்துநின்றுபதஞ்செய்நீர்மண்டானு
முரந்தருங்கடினமாகித்தரித்திடுமுணர்ந்துகொள்ளே.

மண்புனலனல்கால்வான்பால்வடிவுநாற்கோணமாகுந்
தண்பிறைமூன்றுகோணந்தகுமறுகோணம்வட்டம்
வணபொன்மைவெண்மைசெம்மைகறுப்பொடுதூமம்வன்ன
மெண்டருமெழுத்துக்காறுமிலவரயவ்வவ்வாமே.

குலிசம்வச்சிரத்திரேகைகோகனகஞ்சுவத்தி
யறுபுள்ளியமுதலிற் புவதிடையமயன்மாலாதி
செறிபுகழீசனோடுசதாசிவம்பூததெய்வ
நெறிதருகலையைந்திற்குறிம்தத்துவர்ந்தநீர்மை

(இ-ள்.) சாங்கிய நிசாதி பஞ்சகலைகளுக்கும் பஞ்சபூதத்துக்குப் போல வாகிருதிமுதலியனவறிக மற்றுவெளிப்பொருள். எ-று. (௬௬)

இப்படி தத்துவங்கள்முறைமைசொல்லித் தொகுக்கின்றார்.

சுத்ததத்துவங்களைந்துமுன்னமேசொன்னவைந்து
மித்தகைமையினியம்புமிவைமூபபததொன்றுமாகத்
தத்துவமுப்பத்தாறுஞ்சைதன்னியங்களைந்துஞ்
சித்தசித்தான்மாவொன்றுமுப்பதுமசித்தேசெப்பில்.

(இ-ள்.) சைதன்னியங்களைந்தும்-சிருட்டசிவதத்துவமைந்துஞ் சி வசத்திரூபமாதலாற் சாக்ஷாத்சைதன்னியம், சிருச்சியசிவதத்துவமைந்தும் மாமாயாரூபமாயச் சைதன்னியவியஞ்சகோபகாரத்தினு லுபசாரசைதன் னியம்—சித்தசித்தான்மாவொன்றும் - புருஷதத்துவமொன்றும் (கலாதி பஞ்சகஞ்சுகாவித்தியாதிபஞ்சக்கிலேசகலுஷிதமாதலால் இயற்கையாற்சி

த்தாலுஞ் செயற்கையால்) சித்தசித்து—முப்பது மசித்தேசெப்பில்-சொல்லுமிடத்துக் கலாதிசிறிதுசைதன்னியவியஞ்சகமாதலாற் சித்தசித்தென்றுசெப்பப்பட்டாலு மோகபோதபோதகமாதலாலஇயற்கையாற் கலாதிமும்பதுமசித்தே. மற்றதுவெளிப்பொருள். எ-று. (சுகூ)

தத்துவங்களினதுஸ்வரூபஞ்சொல்லுகின்றூர்.

ஐந்துசுத்தத்தின்கீழேழ்சுத்தாசுத்தமசுத்தந்
தந்திடும்புமான்கீழெண்மூன்றாயதத்துவஞ்சீவற்கு
வந்திடும்பிரேரகாண்டமருவுபோசயித்திரியத்தோ
டந்தமிலணுககளுககுப்போகயகாண்டமாமே

(இ ள்.) (ஐந்துசுத்தமெனவருவித்துக்கொள்க) சிவதத்துவமைந்து (ஞானிகளிடத்திருப்போர்க்கு மிங்குயோகிகட்குமொருபிரகாரஞ்சருவஞ்ஞ சருவகாதிருரூப சிவத்துவவிளக்காதலால்) பவித்திரம்—சுத்தத்தின்கீழேழ்-கலாதிபிரகிருதியந்தம்விதநியாதத்துவமேழும் (கிஞ்சிஞ்ஞத்துவகிஞ்சித்காந்திருத்துவமோகவிளக்காதலால்)—சுத்தாசுத்தம் - பவித்திராபவித்திரம (விந்துபாதத்துவத்தில் மாயையைக்கூட்டிய பிரகிருதியைவிட்டுனைப் பாருமுளார். அப்படிசொல்லிற் காரணதத்துவ காரியதத்துவ சாங்கரியம் வரும.) — அசுத்தந்தந்திடும்புமான்கீழெணமூன்றாயதத்துவம் - புருஷதத்துவம்பொருந்தியபிரகிருதிதத்துவந்துக்குக்கீழாத்மதத்துவமிருபத்திநாலும(இருசிறபோதகமாலும்வெகுமோககமாதலால்)அசுத்தம்—(மூவாக்கத்துட்பெசத்துவமைந்தும) சீவற்கு - ஆத்மாவுக்கு— பிரேரகாண்டம்வந்திட - (பிரணவகலாபஞ்சக வாக்குப்பஞ்சகசொரூபமாயிருந்து அசுத்ததத்துவங்களைமுறைமையில்) செலுத்துங்கொத்தாகப்பொருந்தும—(வித்தியாததுவமேழும் ஆத்மதத்துவமிருபத்திநாலும்) மருவுபோசயித்திரியத்தோடந்தமிலணுக்களுக்குப்போக்கியகாண்டமாமே - நாசமிலாத்மாக்களுக்கு முறைமையிறபொருந்தும்போசயித்திருவென்றுசொல்லப்பட்டபுசிப்பிக்கின்றகொத்தது, அதனோடுபோக்கியமென்றுசொல்லப்பட்ட புசிக்கப்படுகின்றகொத்தன்றுந்தானேயாம. எ-று. (எ0)

காரணப்பொருள் காரியப்பொரு ளிரண்டினுந் தத்துவச்சொன் னடக்குமென்று சாற்றுகினறூர்.

தத்துவரூபமாகுந்தருமருவுருவமெல்லாந்
தத்துவாந்தாலநுக்கபரங்களுமாகிநிற்குந்

தத்துவந்தன்னிற்சாருமணுக்கள்சாதாக்கியத்திற்
றத்துவசத்தஞ்சாருஞ்சகலமுந்தத்துவங்காண்.

(இ-ள்) அருவந்தருமுருவங்காரியப்பொருள், அருவங் காரணப்பொருள். (இவைகள்) எல்லாந்—தத்துவரூபமாகும் - (ஸ்ரீமன்மதங்காதிகளிற் சொன்னபடி) தத்துவலக்கணத்தை யுடையதாம்—தத்துவந்தூலசூக்கபரங்களுமாகி நிற்கும் (அவற்றுள் பாசதத்துவந்தூலம், பசுதத்துவஞ்சூக்குமம், மகாமாயாபாசதத்துவத்தைக்குறித்துப் பசுதத்துவந்தூலம், பரமலவாசனுமணைப்புற்ற சின்மாத்திரபசுதத்துவத்தைக்குறித்து மாமாயாபாசதத்துவந் தூலம், பதிதத்துவம்பரம், மலம் பசுதத்துவத்துட்படுத்திப் பசுதத்துவமென்றுபகாரப்படும்; கன்மம் பாசதத்துவத்துட்படுத்திப்பாசதத்துவமென்றுபகாரப்படும்; திரோதானசத்தியு மப்படிபடுத்தி யப்படிபகாரப்படும்; அனுக்கிரகசத்தி பதிதத்துவத்துட்படுத்திப் பதிதத்துவமென்று பகரப்படும்; நான்குஞ் சுதந்திரதத்துவங்களாகச் சொல்லப்படாது; பின்னந்தத்தத்துவங்களுங் காரியகாரணரூபமாயிருக்கும். அவற்றுள் நிமித்தகாரணரூபபதியாகிய வநாதிமுத்தஆதிமுத்தசிவதததுவ விருமூப்பேத தத்துவத்துக்குள் அதிகாரசிவதத்துவந் தூலம்;போக சிவதத்துவஞ் சூக்குமம்; இலயசிவதத்துவம் பரம்;முதற்காரணமாகியமகாமாயாதத்துவத்திலுந் தூலசூக்கும பரங்க ளப்படியே யதிகாரமுதலிலயாந்தபேதகாரியப் பிரகுதிப்பிரவிருத்தி நிவிர்த்திப்பிரவிருத்தி நிவிர்த்திக் குறிகளாலறிக. இரும்பமுதற்காரண மூன்றினுள் பிரகிருதிதத்துவந்தூலம்;மாயாதத்துவஞ்சூக்குமம், மகாமாயாதத்துவம்பரம்; காரியதத்துவங்களுக்குள் ஆத்மதத்துவந்தூலம்; வித்தியாதத்துவஞ்சூக்குமம்; சிவதத்துவம்பரம்; பசுதத்துவங்களுக்குள் சகலபசுதத்துவந்தூலம்; பிரளயாகலாபசுதத்துவஞ்சூக்குமம்; விஞ்ஞானகலாபசுதத்துவம்பரம். பதிதத்துவமூன்றினுள் அபாமுத்தபதிதத்துவந்தூலம்; ஆதிமுத்தபதிதத்துவஞ்சூக்குமம்; அநாதிமுத்தபதிதத்துவம்பரம்;அந்தரங்க விசாரத்திலுலாதிமுத்தபதிதத்துவமும் பரமாதலால்.அபரமுத்தபதிதத்துவத்துக்குள் மந்திரேசுரதத்துவந்தூலம்; அணுசதாசிவதத்துவஞ் சூக்குமம்; அநாதிமுத்தாதிமுத்தபதிதத்துவமிரண்டும்பரம. சரீரமூன்றினுள் பவுதிகசரீரந்தூலம்; அசுத்தபுரியட்டசரீரஞ்சூக்குமம்;சுத்தபுரியட்டசரீரம் பரம்.)—தத்துவந்தன்னிற்சாருமணுக்கள் சாதாக்கியத்திற் றத்துவசத்தஞ் சாரும்-தத்துவமுதலிய சடத்துவாவைப்பொருந்துஞ் சதாசிவதத்துவத்திலிருக்கு மீசானுதிமந்திரங்களுந் தத்துவமெனனும் பேர்பெறும்—சகலமுந்தத்துவங்காண்-(இப்படி) எல்லாப்பொருள்களுந் தத்துவதாத்துவிகங்களாயிருப்பது காண்பாயாக. எ-று. (எக)

சைவபவுராணிக மதானுசாரியாசாரியர் மதத்தினுற் சுத்தமா யையிலசுத்தமாயையொடுங்குமென்றுசொன்னதல்லாமல் ம ற்றவைசுத்தசைவசித்தாந்திகட்குமொத்திருக்குந் தத்துவங்க ளினதொடுக்கஞ்சாற்றுகின்றார்.

தத்துவமெண்மூன்றுஞ்சென்றான்மதத்துவத்தொடுங்கும்
வித்தையிலொடுங்குமாறுஞ்சிவத்தினிலொடுங்குமூன்று
நித்ததத்துவமிம்மூன்றுமென்பர்களிரண்டுநின்ற
சுத்தமாஞ்சிவத்தொடுங்குந்தோற்றமுமிதுபோலாகும்.

(இ-ள்) தத்துவமெண்மூன்றுஞ்சென்றான்மதத்துவத்தொடுங்கும்- ஆத்மதத்துவமிருபத்தினுலும் புருஷதத்துவத்தோடு புணர்ந்த பிரகிருதி யெனு மாத்மதத்துவத்திற் பிரளயமாம்—வித்தையி லொடுங்குமாறும்- கலாதிபுருஷ தத்துவாந்ததத்துவமாறும் மாயையிற்பிரளயமாம்—சிவத் தினிலொடுங்குமூன்றும்-சுத்தவித்தைஈசுரம்சாதாக்கியம் என்கின்றதத்து வமூன்றுஞ் சுத்தமாயையிற்பிரளயமாம்—நித்ததத்துவ மிம்மூன்றுமென் பர்களிரண்டுநின்றசுத்தமாஞ்சிவத்தொடுங்கும்—(சைவபவுராணிகமதானு சாரியாசாரியர் மதத்துப்பொருள்முதலுரைப்பாம். பிரகிருதி யசுத்தமா யை சுத்தமாயை நித்தமென்று சாங்கியன்முதலோர் சொல்லுவார்கள்;அ துநமதுமதமன்று) இரண்டும்-பிரகிருதியு மசுத்தமாயையும்—முறைமையி ற்சுத்தமாயையிற் பிரளயமாம். உற்பத்தியுமொடுக்கம்போல "விந்துவின் மாயையாகிமாயையினவ்வியத்தவ்வந்திடும்" என்று முன்சொன்னபடியா ம். (சுத்தசைவசித்தாந்தாசாரியர் மதத்துப்பொருளினை யுரைப்பாம் சுத்த வித்தை யீசுரஞ் சாதாக்கிய மென்கின்ற தத்துவமூன்று நித்தியமென்று சைவருட்சிலபேர்சாற்றுவார்கள்; அதுநமதுமதமன்று) பின்னிம்மூன்றும் இரண்டும் - சத்திதத்துவங் காரியசிவதத்துவமாகவைந்துங் காரணசுத் தசிவதத்துவமென்று சொல்லப்பட்ட சுத்தமாயையிற் பிரளயமாம். உற்ப த்தியுமொடுக்கம்போல "ஞானமேயானபோதுசிவன்" என்பதுமுதல் மு ன்சொன்னபடியாம். எ-று. (எஉ)

மறுசமயிகள்முத்தித்தானங்களை வகுத்துரைக்கின்றார்.

மொய்தருபூதமாதிமோகினியந்தமாகப்
பொய்தருஞ்சமயமெல்லாம்புக்குநின்றிடும்புகன்ற
மெய்தருசைவமாதியிருமூன்றும்வித்தையாதி
யெய்துதத்துவங்களோயுமொன்றுமின்றெம்மிறைக்கே.

வபங்கம்வரும். "முத்தாணூன்பாதி" என்னும் வசனவிரோதமும்வரும். அஃதில்லை;ஏவியோக்கியனை ஏவாதிருந்தாற் சருவகர்த்திருத்துவபங்கம்; மல மில்லாமையால் ஏவயோக்கியனல்லாமையா லதுவில்லை; ஏவயோக்கியமல் லானை யேவினாற்சிருட்டிமுதற்கிருத்திய மவனைக்கு நித்துவருமென்றதனா ற் சிவனுக்குச்சருவஞ்ஞத்துவ பங்கம்வரும்; அதனாற் சருவகர்த்திருத்துவ பங்கமுந் தானேவரும். "முத்தாணூன்பாதி" என்பதற்கும்பொருள், அபர முத்தர்களை யிரட்சிப்பனென்றுதலால் வசனவிரோதமுமில்லை. ஆகையால் முத்தசிவாத்மாவுக்குஞ் சருவகர்த்திருத்துவ சத்தியுண்டு. சிவனுக்குப்போ ல வுண்டாகிலும் வியத்தமாகாதென்னில் முத்தனுக்கும் பெத்தனுக்கும் வி சேடமில்லாதேபோம்; சத்திநிரங்கிசமாதலால் ஞானசாகத்தி லபிவியத்தி கிரியாபாகத்தி லனபிவியத்தியென்று சொல்லவும்படாது. ஆகிலு முன் சொன்ன விருவருக்கும் விசேஷமில்லையாம். ஆதலா லபிவியத்தி சருவகர் த்திருசத்தி சிவனிடத்துப்போல முத்தசிவாத்மாவிடத்துமுண்டு; சருவகர்த் திருசத்திக் கபிவியத்தியுஞ் சருவகிருத்தியத்திற் பண்ணுதலாகிய வி முதல் ஆதலால், வியத்தமானாலும் வியத்தமல்லாததுபோலப் பண்ணமற் சும்மாயிருக்குமென்பதடாது. பண்ணுமென்றாற் பின்னசங்கற்பமில்லாமை யா லனேகேசுரவாதம் வருவதுமின்று. பின்னைப்பண்ணட்டுமேனென்றால் சிவத்துவாபிவியத்திலக்கண சொப்பிரயோசனஞ் சித்தித்துப்போதலாற் றனக்குப் பிரயோசனத்தின்பொருட்டுப் பிரவிருத்திமானாகான். எக்காலத் து மிளைப்பற்றிருக்குஞ் சிவ னெங்கும்வியாபித் தெக்காலமு மிடைவிடாம ற் பிறர்பிரயோசனம் பண்ணிவருதலாற் பிறர்பிரயோசனத்தின்பொருட் டும் பிரவிருத்திமானாகான்; சருவகர்த்திருசத்திக் கபிவியத்தியுஞ் சருவகி ருத்தியத்திலுஞ் சங்கற்பமென்கின்ற விழுதலென்று முன்சாற்றினோம்; தி ரும்பவது சிவசங்கற்பத்தினின்றுங் குறைத்துச் சுருக்கப்படாதாகையாற் சிவனுக்குக் கிருபாசங்கித்த பஞ்சகிருத்தியம்; முத்தசிவாத்மாவுக்குப பிரி தசபின்னகிருத்தியபலமின்றி யபின்னபலவுவர்ச்சனீய சங்கித்தபஞ்சகிரு த்தியம்; ஆகையால் விரோத வேற்றுமைகளின்று. இதற்குச் சித்தியவிசுவ சாதாக்கியமுத லாகமங்களில் வசனங்கேட்டறிக. (எஉ)

சிவபேதமனுபேதமெனப் பிரமாதி நவபேதமாம், அவற்றி லனுபேதஞ் சத்தியலோகமுதற்புவனாதிபதியாய் வாஸ்தவபேத தேகியாயிருக்கும் சிவபேத மனுபேதத்தை யதிட்டித்துக் கா ற்பனிகபேத தேகியா யிருக்கும்;அவற்றிற் சிவபேதத்தைத் தரிசிப்பிக்கின்றார்.

சிவஞ்சத்திநாதம்விந்து சதாசிவன்றிகழுமீச
னுவந்தருளுருத்திரன்றான் மாலயனொன்றினொன்றாய்

பவந்தருமருவநாலிங்குருவநாலுபயமொன்றாய்
நவந்தருபேதமேகநாதனேநடிப்பனென்பர்

(இ-ள்) சிவஞ்சத்தி - சிவம் - அதிக்கிராந்தவிந்துகபரசிவம்—சத்தி- அதிக்கிராந்த விந்துகபராசத்தி—நாதம்விந்து - நாதம்-பரநாதம்—விந்து- பரவிந்து (பரநாதமென்பதுன்மனாகலாதி சாந்தியதீதகலாந்த காரியசிவ கலாசத்தி சமனாதியபரவிந்து நிவிர்த்தியந்தகாரியசத்திகலாசத்தி சமாகா- ராத்ம காரண சாந்தியதீதகலாரூப மகாமாயை.பரவிந்துவென்ப துன்மனா கலாதிகாரியப் பிரபஞ்சமொருபிரதேசத்துண்டாய் ஒடுங்கின மகாமாயை யின தோரிடம். ஆகையால் மகாமாயையினது பரநாதப்பிரதேசத்தை யதி ட்டிக்கு மனதிக்கிராந்த விந்துக பரசிவம் நவபேதவிருத்தத்தில் நாதமென் றுசொல்லப்பட்டது. பரவிந்துவையதிட்டிக்கு மனதிக்கிராந்தவிந்துகபரா சத்தி விந்துவென்று சொல்லப்பட்டது. மகாமாயாகாரிய பரநாதபரவிந் துக்கள் மகாமாயாகாரிய வபரநாதவபரவிந்துக்கள் காண்பிக்கப்படாநிறகி ன்றன.உன்மனை பராற்பரநாதம்;சமனை பராறபரவிந்து;வியாபினிவியோம ரூபை, அனந்தை, அனாதை, அனாசிருதை என்கின்ற பஞ்சகலாகர்ப்ப சத்த ரூபவர்த்தரூப சிவகலைகளும்,அர்த்தரூபமாத்திர பஞ்சசிவகலாபுவனங்களு ம் பரசிவதத்துவமென்கின்ற பரநாதம். சூக்குமை, அதிசூக்குமை, அமிர் தை, அமிர்தாமிர்தை, வியாபினி, என்கின்ற பஞ்சகலாகர்ப்ப சத்தரூபவர் த்தரூப பராசத்திகலைகளு மர்த்தரூபமாத்திர சத்திகலாபுவனங்களும் பரா சத்திதத்துவமென்கின்ற பரவிந்து. இவைகள் யோகியினுடையவும் மகா விராட் புருடனுடையவும் பிரமரந்திரத்துக்குமேல், முறைமையிற சத்தரூ பமாத்திரங்களாகவுஞ் சத்தரூபவர்த்தரூபங்களாகவு மறியப்படும். பிரமர ந்திரத்துக்குள் இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகை யெ ன்கின்ற பஞ்சகலாகர்ப்ப சத்தரூப வர்த்தரூப சிவகலைகளு மாத்தரூபமாத் திர சிவகலாபுவனங்களும் அபரசிவதத்துவமென்கின்ற நாதநாதாந்த வப ரநாதமாக வறியப்படும். நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்திய தீதை, யென்கின்றபஞ்சகலாகர்ப்ப சத்தரூபவர்த்தரூப சத்திகலைகளும்,அர் த்தரூபமாத்திர சத்திகலாபுவனங்களும் அபரசத்திதத்துவமென்கின்ற வ பரவிந்துவாக வறியப்படும். உன்மனாதி யபரவிந்துவந்தம் கிரமத்திற் பர சிவபராசத்தித்தானமாகவூகித்தறிக.சத்தரூப வாத்தரூபபஞ்சபஞ்சகலைகள் அர்த்தரூபமாத்திர பஞ்சபஞ்சகலாபுவனங்கள் பகுப்பாயிருக்கும். அர்த்த சந்திரன் நிரோதியிரண்டும் அபரவிந்துவிலடங்கும். மகாரவுகார ஔகார ங்கள் கிரமத்திற் சாதாக்கியதத்துவ மீசுரதத்துவஞ் சுத்தவித்தியாதத்துவ

மென்கின்ற வபரவிந்துகோடிக்குள்ளாகும், அபராநாதவபரவிந்துக்கள் சதாசிவவீசுர வித்தியாதிபதியுருத்திர வதிட்டானங்களாகவு மறியப்படும் கீழேகீழே நிவிர்த்தியாதி கலாரூபமாக வியாபித்த ஔகாராதி நாதாந்தம் பிரமாதி பஞ்சதேவதாத்தானமுமாம்)—சதாசிவன்றிகழுமீசனு வந்தருளுருத்திரன்முன் மாலயனென்றின்றொன்றாய்—பலந்தரும் - சன்மிக்கும் (அணுபேதத்திற்சன்ம முபசாரமாயாரோபித்துச் சம்புபட்சத்துக்குக் கற்பிக்கப்படும்)—இங்கு - சிவாதிபிரமாந்தத்துள்—அருவநாலும் - (காரண மகாமாயாவத்தாசாக்ஷியதிட்டானமாதலால்) சிவாதிநான்கும் நிஷ்களம்—உருவநாலும் - (காரியாதிட்டானமாதலால்)ஈசன்முதலிய நான்குஞ் சகளம்—உபயமொன்றும் - (சதாசிவங் காரணத்தைத்தொட்டுன்மனாதிசாதாக்கியாதே காரியாதிட்டானமாகையால்)சகள நிஷ்களம்—நவந்தருபேதமேகநாதனே நடிப்பனென்பர் - சிவபேதமென்கின்ற நவபேதத்தை யொருபொருளாகிய சிவன்றானே யதிட்டேய பேதத்தையொட்டி யபிநயித்துத் தடத்தகற்பனையினாற் காண்பிப்பன். எ-று. அணுபேதமென்கின்ற நவபேதத்தை யணுப்பிரமாதி யணுபரசிவாந்த வனேகேசுரர்கள் சொரூபத்தினாற் காண்பிப்பர்.சிவஞ்சத்திநாதம்விந்து வென்பதுஞ்சாந்திமுதல் நாற்கலையென்பது மொருபொருளுணாத் திருப்பதுணர்க. (எ௪)

சிவபேதமுணர்த்தி யணுசத்தி பேதமானது கொடுக்குஞ் சிவசத்தி பேத முணர்த்துகின்றார்.

சத்தியாய்விந்துச்சத்தியாய்மனோன்மணிதானாகி
யொத்துறுமகேசையாகியுமைதிருவாணியாகி
வைத்துறுஞ்சிவாதிக்கிங்ஙன்வருஞ்சததியொருத்தியாகு
மெத்திறநின்றானீசனத்திறமவளுநிற்பள்.

(இ-ள்) சத்தியாய் - (அதிக்கிராந்தவிந்துகபரசிவத்துக்கு) அதிக்கிராந்தவிந்துக பராசத்தியாய்—விந்துச்சத்தியாய் - (நாதரூபியா யிருக்கின்ற வனதிக்கிராந்த விந்துக பரசிவத்துக்கு) அனதிக்கிராந்த விந்துக பராசத்தியாய்—மனோன்மணிதானாகி - (சதாசிவத்துக்கு) மனோன்மணி தேவியாய்—ஒத்துறுமகேசையாகி-(மகேசுரனுக்கு) இணங்கிய மகேசுவரி தேவியாகி—உமைதிருவாணியாகி - (உருத்திரனுக்கு)உமாதேவியாகி-(மாலுக்கு) மகா லட்சுமிதேவியாகி (பிரமாவுக்குச்) சரசுவதிதேவியாகி—வைத்துறுஞ் சிவாதிக்கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தியாகும் - சிவமுதல் நவபேதத்துக்கு மிவ்விடத்துப் பேதமாய்த் தோற்றுஞ்சத்தி யொன்றாகும்—எத்திறநின்றானீசனத்திறமவளு நிற்பள் - சிவன்கற்பித நவபேதமா யாதொரு

பிரகாரமிருந்தான் சத்தியுங் கற்பித நவபேதமா யந்தப்பிரகார மிருக்கும் எ-று. சத்திபேத மேழென்று சொல்லியிருக்கச் சிவபேத நவபேதமென்றது விரோதம். சிவபேத நவபேதமென்று சொல்லி யிருக்கச் சத்திபேத மெழுபேதமென்றதும் விரோதம். இப்படியாகில் விரோதபரி காரமெப்படி? ஒருபிரகாரஞ் சொல்லுவோங்கேள்: அனுசிருதை முதல் சிவகலாசாதிய வியாபினியீறாகும் பஞ்சகலாபுஞ்சவடிவுற்றுச் சிவகலாசாதிய வுன்மனைநோக்கந்தாக்கும் பரநாதமென்றும், சத்திகலாசாதிய வியாபினிமுதற் சூக்குமையீறாகும் பஞ்சகலாபுஞ்சவடிவுற்றுச் சத்திகலாசாதிய சமனைநோக்கந்தாக்கும் பரவிந்து வென்றும், ஊர்த்துவகைமுத லிந்திகை யீறாகும் பஞ்சகலாபுஞ்சவடிவுற்றுச் சிவகலாசாதிய வியாபினிநோக்கந்தாக்கு மபரநாதமென்றும், சாந்தியதீதை முதல் நிவிர்த்தியீறாகும் பஞ்சகலாபுஞ்சவடிவுற்றுச் சத்திகலாசாதிய சூக்குமை நோக்கந்தாக்கு மபரவிந்து வென்றும், இருக்கும் பராபரசிவதத்துவ பராபரசத்திதத்துவ வர்க்கநான்கிற் பேர்மாறியுமாறாதுந் தனித்தனி யிருக்குஞ் சாந்தியதீதகலை. அக்கலைமணப்புற் றத்தன்மைபெற் றப்பெயர்பெறு முன்மனைகலையாகும் பரசிவ மூர்த்தியாஞ் சிவகலையும் அதிலடங்கும். அப்படிநான்கினுமிருக்கும் வித்தை பிரதிட்டை நிவிர்த்தியுள்ளடங்குஞ் சாந்திகலை. அக்கலைமணப்புற் றத்தன்மை பெற்றப்பெயர்பெறுஞ் சமனைகலையாகு மனுகதசிவமூர்த்தியாஞ் சத்திகலையுமதிலடங்கும். ஆகநாலிரண் டெட்டுச் சடசிவகலை சடசத்திகலை சற்காரியகர்ப்ப மகாமாயையினது தாத்துவிக பிரளயத் தெண்கலைபிரியாப்பிரிவுருறித்துப் பொறித்துபசரிக்கும் பிரியாப்பிரிவுச் சிற்சிவகலை சிற்சத்திகலை சற்காரியகர்ப்பவதனுக்கலாம்; பரசிவம் பராசத்தி யனதிக்கிராந்தவிந்துகபரசிவ மெனும் பரநாத மனதிக்கிராந்த விந்துக பராசத்தியெனும் பரவிந்து இவைகள்நான்குந் தனித்தனி சிவபேதஞ் சத்திபேத மிருபேதமுற் றிருநான்குபேதமாயிருத்தலாற் சிவபேதநான்கொடு சதாசிவமுதற் பிரமாவீறுகுஞ் சிவபேதமைந்துங் கூட்டிச் சிவபேத நவபேதம்; அச்சத்திபேதநான்கொடு மனோன்மணிமுதற் சரசுவதியீறுகுஞ்சத்திபேதமைந்துங்கூட்டிச் சத்திபேத நவபேதமென்றும் கருத்திற்கருதி, "நவந்தருபேதமேகநாதனே நடிப்பன்" என்றும் "எத்திறநின்றானீசனத்திறமவளுநிற்பள்" எனறும் ஆசாரியர் சொல்லியதேதென் றொருசொற்றோஷமுமில்லை. (௭௫)

சத்தியாதி யெண்பேதங்களுக்குப் பரசிவம்மூலம் நாதாதியெழு பேதங்களுக்குப் பராசத்தி மூலமென்பது பகர்கின்றார்.

சத்திதானாதமாதிதானுஞ்சிவமுமந்தச்
சத்திதானாதியாகுந்தரும்வடிவானவெல்லாந்

சத்தியுஞ்சிவமுமாகுஞ்சத்திதான்சத்தனுக்குச்
சத்தியாஞ்சத்தன்வேண்டிற்றெல்லாமாஞ்சத்திதானே.

(இ-ள்) சத்தன் - பரசிவன். சத்தி - பராசத்தி. வேண்டிற்றெல்லாம் - நாநாவிதபேதமனைத்தும் மற்றது வெளிப்பொருள். எ-று. (௭௬)

முன்சொன்ன முறைமையிற் பேதப்பிரசங்கம் பேசுகின்றார்.

சிவஞ்சத்திதன்னையீன்றுஞ்சத்திதான்சிவத்தையீன்று
முவந்திருவரும்புணர்ந்திங்குலகுயிரெல்லாமீன்றும
பவனபிரமசாரியாகும்பான்மொழிகன்னியாகுந்
தவந்தருஞானத்தோர்க்கித்தன்மைதான்றெரியுமன்றே.

(இ-ள்) சிவஞ்சத்திதனையீன்றுஞ் சத்திதான்சிவத்தை யீன்றும் - சுத்தசிவசோதி மத்தியசோதி நிட்களநிருத்த சிவநிதியினின்றுந் தோற்றிய வதிக்கிராந்தவிந்துகபரசிவ மதிக்கிராந்த விந்துகபராசத்தியைத்தோற்றுவித்தும், அந்தப்பராசத்தி யனதிக்கிராந்த விந்துகபரசிவனெனும் பரநாதத்தைத் தோற்றுவித்தும், (அந்தப்பரநாதமனதிக்கிராந்த விந்துக பராசத்தியெனும் பரவிந்துவைத் தோற்றுவித்தும், அந்தப்பரவிந்துவாகிய பராசத்தி யாதிசத்திமுதல் நாலுசத்திகளைத் தோற்றுவித்துத் தன்னொடு பஞ்சசத்திகளிற் பஞ்சசாதாக்கியங்களையும் பஞ்சமூர்த்திகளையுந் தோற்றுவித்தும், பஞ்சசாதாக்கிய பஞ்சமூர்த்திகளப்பிற் பஞ்சப்பிரமங்களையும் வியட்டிசமட்டிச் சதாசிவமாகத் தோற்றுவித்தும், சதாசிவன் மனோன்மணியைத் தோற்றுவித்தும், மனோன்மணி மகேசுரனைத் தோற்றுவித்தும், மகேசுரன் மகேசுவரியைத் தோற்றுவித்தும், மகேசுவரி யுருத்திரனைத் தோற்றுவித்தும், உருத்திர னுமையைத் தோற்றுவித்தும், உமை மாலைத் தோற்றுவித்தும், மால மகாலட்சுமியைத் தோற்றுவித்தும், மகாலட்சுமி பிரமனைத் தோற்றுவித்தும், பிரமன்சரசுவதியைத் தோற்றுவித்தும்)—இப்படி சிவநவபேத சத்திநவபேதமாகுஞ் சிவன்சத்தியிருவரும் மகாமாயோபாதி புவனோபாதிமணந்து பரவாகீசுவரி, பரவாகீசுவரர்களாயும், அனந்தேசுரத் துவாரத்தினாலே மாயோபாதி புவனோபாதி மணந்து அபரவாகீசுவரி யபரவாகீசுவரர்களாயும், கேவலமாயா தேகோபாதி மணந்து மாதா பிதாக்களாயும்—உவந்து புணர்ந்து-மருவிமணந்து(அங்கு - சுத்தமார்க்கத்தில்)—இங்கும் - அசுத்த மார்க்கத்தில்—உலகுயிரெல்லா மீன்றும்- தனு கரண புவன போகங்கள் அனுநவசிவபேத வனுநவசத்திபேதமா முத்தாத்மசிவ முத்தாத்மசத்தி சிவமூர்த்தி சத்திமூர்த்தி யீசான விசா

னிமுதற் கிரம சதாசிவ மனோன்மணிமுதல் நிரஞ்சனப் பிரமா சாசுவதி யீறாகவுஞ் சாஞ்சனப் பிரமாதி தம்பபரியந்தமாகவு மெண்ணிறந்த வாந்மவர்க்க மனைத்துந் தோற்றுவித்தும்—பவன்பிரமசாரியாகும்பான்மொழி கன்னியாகும் - (சம்புபக்ஷ நவசிவபேத சத்திபக்ஷ நவசத்திபேதத் தோற மொடுக்கங் கிரியாசத்திப் பிரவிருத்தி நிவிர்த்தி வைசித்திரிய மாத்திர மாதலானும், உவந்து புணர்ந்தென்பதுத்தியோகித்துச்சங்கற்பித்தென் றுபொருள் போதித்தலானும்) சிவன் நித்தியப் பிரமசாரி சத்தி நித்திய கன்னிகையாம்—இத்தன்மை - இந்த விரகசியந்தான்—தவந்தரு ஞானத் தோர்க்கு-சமாதிகொடுக்குஞ் சாக்ஷாற்கார வான்களுக்கு—தெரியுமன் றே - காணப்படுந்தானே எ-று. (எஎ)

"தவந்தரு ஞானத்தோர்க் கித்தன்மைதான் றெரியும்" என்றதனுல் ஞானவா னிலக்கணங் கூறுகின்றார்.

தனுகரணபுவனபோகந்தற்பரம்பந்தம்வீடென்
றனுவினோடெல்லாமாகியடைந்திடுந்தத்துவங்க
ளினிதறிந்திவைநிவிர்த்திமுதற்கலையிடத்தேநீக்கி
நனிபரமுணர்ந்தோனந்தத்தத்துவஞானியாவன்.

(இ-ள்) தனு - தூலதேகம்—காரணம் - சூக்குமதேகம்—புவனம் - லோகம்—போகம் - சந்தன மாலை மகளிர் முதலிய போக்கியப் பொருள (இவைக ளசுத்தமாயாகாரியம்)—தற்பரம் - அதற்குமேற்றனு கரண புவன போகமா யிருக்கின்ற சுத்தமாயாகாரியம்—(நிரனிறையே) பந்தம்வீடு- பந்தம் - அசுத்த மாயகாரியம்—வீடு-(அபரமுத்தித்தானமாதலால்) சுத்த மாயாகாரியம்—என்றிவைகள் எல்லாம்—அணுவினோ டடைந்திடுந்தத்து வங்கள்-ஆத்மாவினோடுபொருந்துந் தத்துவதாத்துவிகங்கள்—இவைகளை— இனிதறிந்து - உத்தேச லட்சண பரீக்ஷைகளினாலே நன்குணர்ந்து (இது பரோக்ஷ ஞானமாதலால் அபரோக்ஷ ஞானம் வரும்பொருட்டுஆறத்துவா வாய்ப் பகுத்தமுறைமையில்)—நிவிர்த்திமுதற்கலையிடத்தே - நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியதீதை யென்கின்ற கலைகளிடத்து—நீக்கி - தள்ளி—நனிபரமுணர்ந்தோன் - (தான் சின்மாத்திரமாய்ச் சேஷித்து நின்று சிவனையுஞ் சின்மாத்திரமாகச் சிந்தித்து) தற்பர சிவமாரங்களையயிக்கம் பண்ணித் தியானம்பண்ணினவன்—தத்துவஞானியாவன் - (முறைமையில) சமாதிஞானவானாய்ப் பின்னபரோக்ஷ சாக்ஷாற்கார சிவசிவ தற்சிவ ஞானவானாவன் எ-று. (எஅ)

தனுகரணாதிகள் உயிரோபகாரக் காரணமேதென்னக்காரணங்கா ண்பிக்கின்றார்.

எல்லாமாய்த்தத்துவங்களிசைந்ததெனானுவுந்தென்னிற்
றொல்லாயகன்மமெல்லாந்துய்ப்பித்துத் துடைத்தற்கும்பின்
னில்லாமைமுற்றுவித்துநீக்கவுங்கூடிநின்ற
பொல்லாதவாணவத்தைப்போக்கவும்புகுந்ததன்றே.

(இ-ள்) எல்லாமாய்த்தத்துவங்க ளிசைந்த தெனானுவுந்தென்னில - தத்துவங்களெலலா மாயையினுண்டாய் உயிரை வந்துபொருந்தியதேதுக் தென்னில்—தொல்லாய கன்மமெல்லாந்துய்ப்பித்துத்துடைத்தற்கும்-(மல பரிபக்குவத்தைப் பண்ணிச் சத்திபதிவித்துத் தீக்ஷைசெய்வித்து) சஞ் சிதகன்மமெல்லாம் புசிப்பித்துந் தள்ளுதற்கும்—பின்னில்லாமை முற்று வித்து நீக்கவும் - பிராரத்தம் புசிக்குமிடத்துத் தியானபூசைமுத லனுட்டா னங்களால் ஆகாமியஞ்சேடித்து இல்லாமற் கெடுத்துப் போக்கவும்—கூடி நின்றபொல்லாதவாணவத்தைப்போக்கவும்புகுந்த தன்றே - சிவத்துவ வி ரோதியாகிய மூலமலத்தை முடிக்கவு மடுத்ததன்றே. எ-று. தனுகரணாதி கள் மலபரிபாகத்துக்குக் காரணமாகில் விஞ்ஞானகலர்க்குத் தனுகரணாதி யில்லாமையால் மலபரிபாகம் வரக்காரணமிலலை. சததியம் நீசாற்றியது; சகலராய் முன்னிருந்தபோது தனுகரணாதிகளால்மலத்தில்வைத்த வாசனை யால் மலபரிபாகம் வரும். (எக)

மலத்தின திலக்கணம் வாசிக்கின்றார்.

ஒன்றதாயனேகசத்தியுடையதாயுடனாயாதி
யன்றதாயான்மாவின்றனறிவொடுதொழிலையார்த்து [ய்ந்
நின்றுபோத்திருத்துவத்தைநிகழ்த்திச்செம்பினிற் களிம்பே
தென்றுமஞ்ஞானங்காட்டுமாணவமிசைந்துநின்றே.

(இ-ள்) ஒன்றதாய் - ஏகமாய் (அனேகமாய் அசேதனமுமாகி லநி த்தியமாய் மகாப்பிரளயத்தில் சகலான்மாக்களு முத்தராகவேண்டும்)— அனேகசத்தியுடையதாய - (மலமேகமாதலால் மலந்தானே மறைத்து நீங் குமென்னில், ஒருவன் முத்தனுங்காலத் தெல்லாரு முத்தராகவேண்டும் .ஆ தலால் அவரவரைமறைத்து முறைமையிற் பரிபக்குவம்வர நீங்கும்)அனந் த சாமாத்தியமுள்ளதாய்—உடனாயாதியன்றதாய் - சகச நிததியமாய்— ஆன்மாவின்றனறிவொடு தொழிலையார்த்துநின்று - (ஆவாரகசத்தியினால்)

ஆத்மாவினது சருவஞ்ஞத்துவ சருவகர்த்திருத்துவரூப சிவத்துவத்தை மறைத்திருந்து—போத்திருத்துவத்தைநிகழ்த்தி - (அதோநியாமிகாசத்தியினாலே) போக்கியாசத்தியைப்பண்ணி—செம்பினிற்களிம்பேய்ந்தென்று மஞ்ஞானங்காட்டு மாணவமிசைந்து நின்றே - செம்பினிற்களிம்பேய்ந்து-தாமிரத்திற் களிம்பைபோல—ஆணவமிசைந்துநின்றே - மூலமலம் பொருந்திநின்றே—என்னும் - எக்காலமும்—அஞ்ஞானங்காட்டும் - அறியாமையைப் பண்ணும். எ-று. (அ0)

மாயாகாரிய விசேஷமே மலம் வேறில்லையென்னும் பாசுபதிமுதலோரையும் பிரகிருதிகாரிய விசேஷமேமலம் வேறில்லையென்னுஞ் சாங்கியன் முதலோரையு மறுத்துணர்த்துகினறார்.

மலமெனவேறொன்றில்லைமாயாகாரியமதென்னி
லிலகுயிர்க்கிச்சாஞானக்கிரியைகளெழுப்புமாயை
விலகிடுமலமிவற்றைவேறுமன்றதுவேறாகி
யுலகுடலகரணமாகியுதித்திடுமுணர்ந்துகொள்ளே.

(இ-ள்) மலமெனவேறொன்றில்லை மாயாகாரியமதென்னில்—இலகுயிர்க்கிச்சாஞானக் கிரியைகளெழுப்புமாயை - சித்துருபப் பிரகாசனாகிய வாத்மாவின் இச்சாஞானக்கிரியைகளை மாயை (காரியந்துவாரத்தினாலே) விளக்கும்—விலகிடுமலமிவற்றை - (மாயாகாரிய கலாதி யில்லாதபோது பிரளயாகலாவத்தையில்) இச்சாஞானக்கிரியைகளை (சிற்றறிவுமில்லாதபடி) மறைக்கும்—வேறுமன்று - அந்தமல மறிவோடு வேற்றுமையின்றி முத்திபரியந்தம் பிரிவின்றிநிற்கும்—அதுவேறாகி - அந்த மாயாகாரியம் பிரிந்துகூடும் பந்தமாகி—உலகுடல்கரணமாகியுதித்திடும் - புவனதூலதேக சூக்குமதேகமுதலிய பொருளா யுற்பவிக்கும்—உணர்ந்துகொளளே. எ-று.()

பின் திருட்டாந்த பூருவமாகச் சொல்லித் திரஸ்கரிக்கின்றார்.

மாயையேயான்மஞானக்கிரியையைமறைக்குமிற்குந்
தூயவைபரிதிக்கண்ணைசுடர்முகிலமறைத்தாறபோலப்
போய்முகிலகலச்சோதிபுரிந்திடுமதுவேபோலக
காயமுமகலஞானக்தொழிலபிரகாசமாமே.

(இ-ள்) [illegible] கிரியை மறைக்குமெனிப்பொருள். இது பூருவ

சித்தாந்தம் வருமாறு.

பரிதியைமுகின்மறைப்பப்பாயொளிபதுங்கிற்போ
லுருவுயிர்மறைக்கின்ஞானக்கிரியைகளொளிக்குமாகுங்
கருதிடுமிச்சாஞானக்காரியங்காயம்பெற்றான்
மருவிடுமுயிர்க்குக்காயம்வந்திடாவிடின்மறைப்பே.

இ-ள். வெளிப்பொருள். (அரு)

மலம் அனுமானத்தா லறியப்படுமென்ப தறைகின்றார்.

போதகாரியமறைத்துநின்றதுபுகன்மலங்கா
ணோதலாங்குணமுமாகவுயிரினுள்விரவலாலே
காதலாலவித்தைசிந்தத்தருங்கலையாதிமாயை
யாதலாலிரண்டுஞ்சோதியிருளெனவேறுமன்றே.

இ-ள். போதகாரியம் - அறிதற்றொழில். இச்சை கிரியையி லடங்குமாபோலக் கிரியை ஞானத்திலடங்கும். மலந் திரவியமானாலும் பிரிப்பின்றி நிற்றலால் குணமுமாக வுபசரிக்கப்படுமாதலா லஞ்ஞானந்தானே மலமென்னும் வேதாந்தியுஞ் சைவரிலொருவனுந் தள்ளப்பட்டார்கள் மலந் திரவியம், இதுபிரதிஞ்ஞை; அனேக சத்திமத்தாதலால் இதுவேது. மலமுண்டென்பதற்குப் பிரமாணமுண்டோ? பிரத்தியக்ஷ மல்லவாதலாலுண்டில்லையென்னுஞ் சந்தேக மிருத்தலா லாகமசித்தமானாலு மனுமானமே பிரமாணம். ஆத்மா மலவசீகிருத சத்திமான், இது பிரதிஞ்ஞை, சிவன்போற் சருவஞ்ஞ யிருந்தாலுங் கிஞ்சிஞ்ஞனய்க் காணபபடுதலால், இதுவேது. யாதொருவன் மலவசிகிருத சத்திமானல்ல அவன்கிஞ்சிஞ்ஞனன்று,சிவன்போல இதுதிருட்டாந்தம், இதுகேவலவெதிரேகி யனுமானம். காதலாலவித்தைசிந்தத்தருங்கலையாதிமாயை-மாயையானது மலமொருபிரதேசத்திற் சிதறக் கலைமுதலிய தத்துவங்களைத் தோற்றுவிக்கும். மற்றது வெளிபபொருள். (அசு)

சடமாகியமலஞ் சித்தாகியபுருடனுக்குக் குணமென்று
சொல்லிற் புருடன் சடமாவனென்று செப்புகின்
றார்.

புருடன்றன்குணமவித்தையெனிற்சடமபுருடனுகுங்
குருடன்றன்கண்ணிற்குற்றங்கண்ணின்றன்குணமேகூறாய்
மருடன்றன்குணமதாகிமலமசித்தாகிற்றூஞ்
தெருடன்றன்குணமதாகிச்சித்தெனிற்குஞ்சிவன்.

இ-ள். அவித்தையென்பதஞ்ஞானம். கண்ணின்குற்றங் காணாமை (படலகுணம்) மருள் - அஞ்ஞானம். தெருள் - ஞானம். மற்றதுவெளிப் பொருள். (அரு)

கன்மமாயைமலங்கள் நிரனிறையினிற்கு முறைமையை யுமப்படியே செய்யும் பிரதான கிருத்தியங்களையு ஞ்சேஷபாசங்களையுஞ் செப்பிச் செப்புகின்றோ மென்று செப்புகின்றார்.

மும்மலநெல்லினுக்குமுளையொடுதவிடுமிப்போன்
மம்மர்செய்தணுவினுண்மைவடிவினைமறைத்துநின்று
பொய்மைசெய்போகம்பந்தம்போத்திருத்துவங்கள்பண்ணு
மிம்மலமூன்றினோடுமிருமலமிசைப்பனின்னும்

இ-ள். மம்மர் - மயக்கம். உண்மைவடிவு - சருவஞ்ஞத்துவ சருவகர் த்திருத்துவரூப சிவத்துவம். மாயையுங் கன்மமுங் கிஞ்சித்ஞத்துவ கிஞ் சிற்கர்த்திருத்துவ பிரதமாஞலு நிரதிசய சருவஞ்ஞத்துவ சருவகர்த்திரு த்துவ விரோதியென்பது சாற்றப்பட்டது. (கன்மகாரியம்) போகம்-போ கவேதனவிடய சுகதுக்கமோகம். (மாயாகாரியம்) பந்தம் - கலாதி. (மல காரியம்) போத்திருத்துவம் - போகக்கிரியா கர்த்திருத்துவம். போகா சத்தி கர்த்திருத்துவமுமாம். மற்றதுவெளிப்பொருள். (அசு)

இருமல முண்டென்ப திசைக்கின்றார்.

மாயையின்காரியத்தைமாயேயமலமதென்று
மேயுமும்மலங்கடத்தந்தொழிலினையியற்றவேவுந்
தூயவன்றனதோர்சத்திதிரோதானகரியதென்று
மாய்வரிம்மலங்களைந்துமணுக்களையணைந்துநிற்கும்.

இ-ள். மாயையின்காரியத்தை—மாயாகாரியக்கூட்டத்தை - மாயே யமலமதென்றும் - மாயேயமென்று பேர்பெற்ற மலமொன்றென்றும்— ஏயுமும்மலங்கடத்தந்தொழிலினையியற்றவேவுந்தூயவன்றனதோர் சத்திதி ரோதான கரியதென்றும்-பாசங்களைத் தத்தங் கிருத்தியங்களிற் செலுத் தும் திரோதானசத்தியென்று பேர்பெற்ற சிவனதுசத்தியாகிய மலமொ ன்றென்றும்—ஆய்வர்-விசாரிப்பார்கள் (மாயாகாரியக்கூட்டத்தை மாயை யினடக்கி மகாமாயையைக்கூட்டிப் பஞ்சமலமென்னும் வெகுவசனமு ண்டதறிக)—இம்மலங்களைந்தும்—அணுக்களை-ஆத்மாக்களை — அணைந்து நிற்கும்-பொருந்தியிருக்கும். எ-று. (அஎ)

இப்படியாற்மாப் பஞ்சமலத்தோடும் பொருந்திச் சங்கார சக்கிரத்திற் பிரமிப்பனென்று பேசுகின்றார்.

மலமாயைகன்மமாயேயந்திரோதாயிமன்னிச்
சலமாரும்பிறப்பிறப்பிற்றங்கியித்தனைகீழ்மேலு
நிலமாருங்கொள்ளிவட்டங்கறங்கெனகிமிடத்தின்க
ணலமாருமிறைவனுணையாலுயிர்கடக்குமன்றே.

இ-ள். வெளிப்பொருள். (அஅ)

சூக்குமதேகத்திற் றூலதேக முண்டாமென்று சொல்லுஞ் சைவ பவுராணிக மதானுசாரியாசாரியர்மதம் பூருவபக்ஷமாக மறுத்துச் சாதாரண புவனவிகாரத்திற் சூக்குமதேக நிமித்தமாக வுண்டாந் தூலதேகமெனுஞ் சுத்தசைவ சித்தாந்தியாசாரியர்மத முத்தரபக்ஷமாக வுதாகரிக்கின்றார்.

அண்டசஞ்சுவேதசங்களுற்பிச்சஞ்சராயுசத்தோ
டெண்டருநாலெண்பத்துநான்குநூறாயிரத்தா
லுண்டுபல்யோனியெலலாமொழித்துமானிடத்துதித்தல்
கண்டிடிற்கடலைக்கையானீந்தினன்காரியங்காண

இ-ள். அண்டசம் - முட்டையிலுண்டாகும் பக்ஷிமுதலியன. சுவேதசம்—வேர்வையிலுண்டாகு மின்மினிமுதலியன. உற்பிச்சம் - விரைகளை மேற்பிளந்துண்டாகும் மரமுதலியன. சராயுசம் - கருப்பையிலுண்டாகும் மனுடர்முதலியன. நீந்தினன்காரியங்காண்-கடந்தவன் செய்திபோல. மற்றதுவெளிப்பொருள். (அக)

மனுடர் சன்மிக்கும் பூமியில் வந்துபிறந்தாலும் வேதாகமமார்க்கமில்லாத தேசத்துப் பிறவா துள்ளதேசத்துற்பவிப்பது மிகுந்தவறம் அதிலுந் தாழ்ந்தசாதியைவிட்டு வேதாதி மார்க்கிகளாய்ப் பிறந்து பாஷண்ட மதங்களிற் பரிசயம்பண்ணாத புண்ணியம் பண்ணுதலரிதென்று பாஷிக்கின்றார்.

நரர்பயிறேசந்தன்னினுன்மறைபயிலாநாட்டில்
விரவுதலொழிந்துதோன்றன்மிக்கபுண்ணியந்தானுருந்
தரையினிற்கீழைவிட்டுத்தவஞ்செய்சாதியினில்வந்து
பரசமயங்கட்செல்லாப்பாக்கியம்பண்ணொணுதே.

இ-ள். வெளிப்பொருள். (கூ0)

வேதவிரோத மதங்கள் தப்பி வேதாதிக் கருகமாய் வந்து பிறந்தாலும் வேதசார சைவசமயஞ் சாருதலரி தென்று சாற்றிச் சார்ந்தவர்கட்குட் சிவசமாதி ஞானபூசையினாலே சிவனைப்பூசிப்போர் சதுர்த்த சிவதீக்ஷாவான்களென்று சாற்றுகின்றார்.

வாழ்வெனுமையல்விட்டுவறுமையாஞ்சிறுமைதப்பித்
தாழ்வெனுந்தன்மையோடுஞ்சைவமாஞ்சமயஞ்சாரு
மூழ்பெறலரிதுசாலவுயர்சிவஞானத்தாலே
போழிளமதியினானைப்போற்றுவாரருள்பெற்றாரே.

இ-ள். வெளிப்பொருள். (கூக)

மனுடசன்மமெடுத்துஞ் சிவபூசை பண்ணாதிருந்தால்நிக்ஷ பலமென்பது நிகழ்த்துகின்றார்

மானிடப்பிறவிதானும்வகுத்ததுமனவாக்காயத்
தானிடத்தைந்துமாடுமரன்பணிக்காகவன்றோ
வானிடத்தவருமண்மேல்வந்தரன்றனையர்ச்சிப்ப
ரூனெடுத்துழலுமூமரொன்றையுமுணராரந்தோ.

இ-ள். வெளிப்பொருள். (கூ௨)

சரீர நிலையல்லவென்பது சாற்றுகின்றார்.

கருவினிலழிவதாயுங்கழிந்திடாதழிவதாயும
பரிணமித்தழிவதாயும்பாலனாயழிவதாயுந
தருணனாயழிவதாயுந்தானரைத்தழிவதாயு
முருவவேயழிவேயானாலுள்ளபோதேபாருய்ய.

இ-ள். கழிந்திடாதழிவதாயும்-சன்மிக்கு மவதரத்திற் செத்துப் பிறக்கின்றதாயும். உருவவேயழிவேயானால்-சரீரமப்படிச் சாவதானால்—உள்ளபோதேபாருய்ய-உள்ளபோதே - சரீரமிருக்குங் காலத்திலேதானே—உய்யப்பார்-பிழைக்கும் வகைதேடு. மற்றது வெளிப்பொருள். (கூ௩)

மேலிதுவுமது.

ஒருபுலனுகரும்போதங்கொன்றிலையொன்றின்பாலும்
வருபயன்மாறிமாறிவந்திடுமெல்லாமாயு
மொருபொழுதுணரிலுண்டாயில்லதிவ்வல்லல்வாழ்க்கை
மருள்கனவதுவும்போலமாயும்பின்மாயமன்றே.

இ-ள். ஒருபுலனுகரும்போதங்கோன்றிலே - (சத்தப் பரிச ரூப ரச கந்தங்களுக்குள்) ஓரிந்திரியத்தினு லொரு விஷயத்தைப் புசிக்குங் காலத்து வேறொருவிஷயம் வேறொரு விந்திரியத்தினுற் புசிக்கப்படாது— ஒன்றின்பாலும்வருபயன்-ஓரிந்திரியத்தி னிடமாகச் சத்தாதி விஷயங்களி லொன்றைப் பொருந்து மிடத்து விருப்பு வெறுப்புக்களினுல் வருஞ் சுக துக்க மோகங்கள்—மாறிமாறிவந்திடும்—(கேவலத்தில்) எல்லாமாயும்— இவ்வல்லல்வாழ்க்கை - இந்தச்சங்சாரம்—உணரில் - விசாரிக்கில்— ஒருபொழுதுண்டாம் ஒருபொழுதில்லது — மருள்கனவதுவும்போல - உருவெளி சொப்பனங்கள் போல - மாயும்—கெடும்—மாயமன்றே - அசத்தியம்போலத் தோற்றி யநித்தியமாம். எ-று. (கசு)

இராசபோக மஞ்ஞான காரணமென் றறைகின்றார்.

அரிசனம்பூசிமாலையணிந்துபொன்னுடைசாத்திப்
பரிசனம்பின்புசெல்லப்பாரகர்பரிக்கக்கொட்ட
வருசின்னமூதத்தொங்கல்வந்திடவுணர்வுமாண்டு
பெரியவர்பேச்சுமின்றிக்கிடத்தலாற்பிணத்தையொப்பர்.

இ-ள். வெளிப பொருள். (கரு)

இராசசேவகர்போகமு மிம்மரியாதியென் றிசைக்கின்றார்.

பிணத்தினையொத்துவாழ்வோர்பின்னடைப்பிணங்கள்போல
வுணக்கியேயுழல்வீருங்களுடலுயிருணர்வுமெல்லாங்
கணத்திடைத்தோற்றிமாயுங்காயமென்றறிந்தொருக்கால்
வணக்குறீரரனையென்றும்வானவர்வணங்கவைப்பன்.

இ-ள். பிணத்தினையொத்துவாழ்வோர்பின் - முன்சொன்ன பிணத்துக்கொத்த பிரபுக்கள்பிறகே—நடைப்பிணங்கள்போல - செல்லும் பிரேதங்களொப்ப—உடல்-தூலசரீரம்— உயிருணர்வு-உயிர்க்கருவிக் கிருப்பாகிய கண்செவி நாக்கு மூக்கு முதலிய ஞானம்—எல்லாம்-இவைகளெல்லாம்—உணக்கியேயுழல்வீர்-வாட்டியேதிரிவீர் (இதுகொண் டொருபயனு மில்லை)—கணத்திடைத்தோற்றிமாயுங காயமென்றறிந்தொருக்கால்- நிமிடத்தி லுண்டாய் மடியுஞ் சரீரமென்று சிந்தித் தொருபோதாகிலும்— வணக்குறீரரனை - சிவனை வந்திக்கக் கடவீர்—(சிவலோகங் கொடுத்து) என்றும் வானவர்வணங்கவைப்பன் - எக்காலத்துந் தேவர்கள் வந்திக்கத் தாபிப்பன். எ-று. (கசு)

இரண்டாஞ்சூத்திரம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅஅ.

# மூன்றாஞ்சூத்திரம்.

பதிபதார்த்தத்தை யிரண்டு சூத்திரத்தாற் பரீக்ஷித்துப் பசுபதார்த்தத்தைப் பரீக்ஷிக்கின்றார்.

உயிரெனப்படுவதிந்தவுடலின்வேறுளதாயுற்றுச்
செயிருறுமிச்சாஞானச்செய்திகளுடையதாகிப்
பயில்வுறுமின்பதுன்பப்பலன்களுநுகரும்பார்க்கிற்
றுயிலொடுமைந்தவத்தைப்படுமுண்மைதுரியாதீதம்.

இ-ள். (உண்டெனும்பொருளே யில்லதென்பது மா மாதலா லுட லின்வேறுயிர் நீ யில்லையென்று சொல்லுதலால்) உயிரெனப்படுவதிந்தவு டலின்வேறுளதாய் - ஆன்மாவென்னும் பொருள் இந்தச்சரீரத்துக் கன் னியமா யுண்டாய்—(அதெப்படி சொன்னீர்? முக்காலத்து மில்லாத முயற்கொம் பில்லையென்று தள்ளப்பட்ட தில்லையோ? சத்திய நீசாற்றி யது.முயலினது கொம்பு முயற் கொம்பென்று ஆறும் வேற்றுமைத் தொ கைபண்ணி யில்லையென்று தள்ளியதல்ல. முயலிற் கோமுதலானவற் றிற் காணப்பட்ட கொம்பில்லை யென்று தள்ளியது. ஆதலா லில்லையெ ன்று சொல்லுதலால் அப்படி யாத்மா வுண்டாய்) உற்று - (உடலோடு சையோக சமவாய சம்பந்தங்கள் சாற்றப்படா தாகையால் போக்கிய போத்திருத்துவ சம்பந்தியாய்) பொருந்தி — செயிருறுமிச்சாஞானச்செ ய்திகளுடையதாகி - மலத்தினுன் மலினமாகப் பண்ணப்பட்ட விச்சா ஞானக் கிரியை யென்கின்ற முத்தொழிலுடையதாகி—பயில்வுறுமின்ப துன்பப்பலன்களுநுகரும்-பழகிய சுகதுக்கங்களையு மனுபவிக்கும்—பார்க் கில் - விசாரிக்கில்—துயிலொடுமைந்தவத்தைப்படும் - நித்திரை பண்ணு மிடத்து (இனிமேல் வித்தரித்துச் சொல்லப்படும்) ஐந்தவத்தைகளைப் பொருந்தும்—உண்மைதுரியாதீதம். எ-று. உயிரினதிலக்கணம் பசுத்து வமுற்றறியாமை, சிவத்துவமுற்றறிகை. (க)

பரமதசங்கையு முத்தரமுமாகப் படிக்கின்றார்.

உடலின்வேறுயிரோனிந்தவுடலன்றோவுணர்வதென்னி
னுடல்சவமானபோதுவுடலினுக்குணர்வுண்டாகு
முடலினுள்வாயுப்போனாலுணர்ச்சியின்றுடலுக்கென்னி*
லுடலினுள்வாயுப்போகாதுறக்கத்துமுணர்வதின்றே.

இ-ள். வெளிப்பொருள். (உ)

திருசியமா யிருக்கின்ற சரீர மாற்மாவென்பதடாது திருக்குரூபமா யிருக்கின்ற விந்திரியங்களே யான் மாவென்று லோகாயத விசேடனுயிருக்கின்றவொருவன் சொல்ல மறுத்துணர்த்துகினுர்.

அறிவதைம்பொறியேயென்னிலுறக்கத்தினறியாவாகு
மறிவதுமொன்றொன்றாகவொன்றொன்றுவறியுமென்னி
லறிவுகளொன்றையொன்றங்கறிந்திடாவைந்தையுங்கொண்
டறிவதொன்றுண்டதான்மாவைம்பொறியறிந்திடாவே.

இ-ள். அறிவதைம்பொறியேயென்னில் - ஆன்மாவென்று நீர்சொல்லிய பொருளினறிதற்றொழிலை யிந்திரியங்கள்தானே பண்ணுவதுபோலெங்களுக்குத் தோற்றுதலா லிந்திரியங்கள்தானே யான்மாவென்று நீ சொல்லில்—உறக்கத்தினறியாவாகும் - நித்திரையி லிந்திரியங்க ளறியாதிருக்கும் (அதனு லிந்திரியங்க ளான்மாவன்று. இந்திரியத்துக்குவேறாய் நீர்சொல்லு மானமா நித்திரையி லறியாதிருப்பானேன்? மலதோஷத்தாலென்பீராகில், எங்கள் இந்திரியவான்மாவுந் தாமதகுண தோஷத்தாலென்று சமானமென்று நீசொல்லில்)—அறிவதுமொன்றொன்றாக - (பஞ்சேந்திரியங்களான்மாவென்றாலும்)அவைக ளறிவதோரிந்திரியஞ் சத்தாதிவிஷயத்தி லொருவிஷயமாக (அந்தச்சமயத்தி லந்தவிஷயத்தினுலு மான்மாவல்லாதேபோம்) — ஒன்றொன்று வறியுமென்னில் - (வரகோட்டிநியாயத்தால்) ஓரிந்திரிய மொருவிஷயமாக வறியுமதனு லைந்துங்கூடியான்மாவென்னில், (ஒரூரி லைந்தூரவர்கள்போல வொருகாலத்து மாறுபடுமதனுலும்)—ஒன்றையொன்றங்கறிந்திடாவாதலானும்—ஐந்தையுங் கருவியாகக்கொண் டறிவதோ ரறிவுண்டு, அந்தவறிவான்மா—ஐம்பொறியறிந்திடாவே - பஞ்சேந்திரியங்கள் கருவியாதலாற் கர்த்தாவாகத்தானே யறியா. எ—று. (௩)

கடசடகநியாயத்தாற் சரீரத்துக்குட் பிராணவாயுவே யான்மாவென்னுங் கவுளகன்மயோகியை மறுத்துணர்த்துகின்றார்.

அறிந்திடும்பிராணவாயுவடங்குதல்விடுதல்செய்தா
லறிந்திடாதுடலுறக்கத்தறிவினமைகாணமின்மை
யறிந்திடமுதலியாகிலதுநிற்கக்கரணமபோகா
வறிந்திடும்பிராணன்றன்னையடக்கியும்விட்டுமான்மா.

இ-ள். பிராணவாயு—அடங்குதல் விடுதல்செய்தால்—(ஆல் அசை) உச்சுவாச நிச்சுவாசங்களைப்பண்ணி—யறிந்திடும் (அதனாலதுவேயான்மா) அறிந்திடாதுடலுறக்கத்து - சரீரத்துபாதியுற்ற நித்திரையில் (சுருங்கிவிரிந்து தோற்றும் பிராணவாயு) உணராது—அறிவின்மைகரணமின்மை - இந்திரியவொழிவினு லறியாதென்று நீசொல்லில்—அறிந்திடுமுதலியாகி லதுநிற்கக்கரணம்போகா - பிராணவாயு வறிதற்கர்த்தாவாகி லதுவியத்தமாய்நிற்கக் கருவிபோகாது—அதற்கன்னியமாகுமான்மா—பிராணன்றன்னை - பிராணவாயுவை—அடக்கியும்விட்டும்-சுருக்கியும் விரித்தும்(தோற்றுவித்து)—அறிந்திடும் - புலப்படுத்தும் (அதனாற் புலமாயறியப்படும்பொரு ளறியும்பொருளாகாது.) எ-று. (௪)

## மூன்றாஞ்சூத்திரம்.

### முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசுஉ.

---

# நான்காஞ்சூத்திரம்.

---

சித்தாங்க மனசுதானே யான்மாவென்னு முலோகாயதர்க்குள்ளொருவனையும், அகங்காராத்மவாதியாகும் வைசேடிகனையும், புத்தியாத்மவாதியாகுநையாயிகனையும், புத்திவிருத்தியாத்மவாதியாகுமபவுத்தனையு மறுத்துணர்த்துகின்றார்.

உணர்வனகரணமென்னிலொன்றையொன்றுணராவெவ்வே
றிணைதருஞ்செயல்களுன்குமறிந்தவையடக்கியாக்கிப்
புணருமுட்கரணமாக்கிப்புறக்கருவியினும்போக்கி
யிணைதருமிவற்றின்வேறாயானெனதென்பதான்மா.

(இ-ள்) உணர்வனகரணமென்னில்-அறிதற்றொழிலைப் பண்ணுவது அந்தக்கரண மென்கின்றாயானால்—ஒன்றையொன்றுணரா - ஓரந்தக்கரணத்தை யோரந்தக்கரண மறிந்தொன்றோடொன்று கூடியோரந்தக்கரணத்தின்றொழிலை யோரந்தக்கரணம் பண்ணாது—வெவ்வேறிணைதருஞ் செயல்களுன்கும் - சிந்தித்தல்விகற்பித்தல் சங்கற்பித்தல் அபிமானித்தல் நிச்சயித்தலென்கின்ற நான்குவியாபாரங்களையும் (கர்த்தாவாகிய வான்மாவேவச்சிற்சத்தியாகிய கரணத்தோடும் பொருந்தித் தனித்தனி கரணமாய்ச் சம்பந்திக்குங் கரணங் கர்த்தாவாகாது)—அறிந்தவையடக்கியாக்கிப்

புணருமுட்கரணமூக்கிப்புறக்கருவியினும்போக்கியிவைதருமிவற்றின் வேறுயாதெனனதென்பதாண்மா-யாதொன்று அந்தவந்தக்கரணங்களை யறிந்து சுருக்கி விரித்துப் பொருந்து முட்கருவியாகப் பண்ணிச் சுகதுக்கங்களை யுள்ளனுபவித்துச் சுகதுக்கங்கள் மேன்மேல்வரும்படி வெகிரிந்திரியங்களில்விட்டு மாலை சந்தனம் வனிதைகளோடு பொருந்தப்பண்ணு மிந்தவந்தக்கரணங்களுக் கன்னியமாய்த் தற்பொருளறிவினால் நானென்றும், பிறபொருளறிவினால் எனதுசித்த மெனதுமனம் எனது அகங்கார மெனதுபுத்தியென்பது; அதுவேயுயிர். எ-று. (க)

பாசஞானத்தை நீங்கிநின்றவிடம் பசுஞானமென்றும் பசுஞானத்தை நீங்கிநின்றவிடம் பதிஞானமென்றும் பகர்கின்றார்.

கருவியாமனமும்புத்தியாங்காரஞ்சித்தநான்கு
மருவியான்மாவேயென்னவருந்தீபமெனத்தெரிந்தங்
கொருவியான்மாவினுண்மையுணர்ந்தவர்தமையுணர்ந்தோர்
தருமிதுபசுஞானம்பின்சிவஞானந்தனக்குமேலாம.

இ-ள். கருவியாமனமும்புத்தியாங்காரஞ்சித்தநான்கும்—(அவற்றிற்குமந்தக்கரணங்களாய் நிற்குங்கலாதிகளும்) மருவி - (ஆன்மாவினோடு) பொருந்தி—(பிரிக்கப்படாது) ஆன்மாவேயென்னவரும் - ஆத்மாப்போலத் தோற்றும் (அவைகளை)—தீபமெனத்தெரிந்து - சுத்தவித்தையினால் விவேகித்து வியஞ்சகமாகக்கண்டு—ஒருவி-நீங்கினதுபோலப்பாவித்து—ஆன்மாவினுண்மையுணர்ந்தவர் தமையுணர்ந்தோர் - உயிரினது சின்மாத்திர லக்கணத்தை யறிந்தவர்கள் சொச்சொரூபத்தை யறிந்தவர்கள்—தருமிது பசுஞானம்பின்சிவஞானந்தனக்குமேலாம்-ஆத்மரூபத்தையறியுமிஞ்ஞானம் பசுஞானம். (அஃதெப்படிசொன்னீர்? இருதயத்திருக்குநாதத்திற் பிரகாசித்த சுத்தவித்தையோடு தொட்டுநின்று, மணியானது பிரபையினாற்போல, வியாபாரத் துவாரத்தால், மேலெழுந்து சுத்தவிஷயமாய்ப்போய்ப் பதிஞானங்கொடுத்து நீங்குதலாற் பாசஞானமென்கின்ற மனசுமுதலிய பாசஞானமும் அதனால் விளங்கப்பட்ட பசுஞானமு மொருபிரகாரத்தாற் பதிஞானமென்று சொல்லப்படு மாதலானு மனசுகூடிய சமனைநீங்கிய விடத்துயிர் ஆத்மாவென்று சொல்லப்படுஞ் சுத்தவித்தைக்குக் கீழ் மலநீங்கலாற் பசுவென்று சொல்லப்படாதாகையாற் பாசஞானம் விளக்குதலாற், பசுவை விஷயீகரித்தலாற், பசுஞானமென் றிருவிதத்தினாலுஞ் சமனதீதாத்மஞானம் பசுஞானமென்று சொல்லப்படாது. சத்தியஙீசாற்றியது மாயைக்குமேற் சுத்தவித்தைக்குக்கீழ் மலமற்றாலு மலவாசனை தாக்கிநிற்குஞ் சிற்சத்தியினால் அவ்வாசனைதாக்கிய வான்மா

வை யறியுமறிவு கேவலமாத்மஞானமானாலு மொருபிரகாரம் பசுஞான மென்றுஞ் சொல்லப்படும்.)—சிவஞானந்தனக்குமேலாம் . சிவசத்தியால் விளக்கப்பட்டுச் சிவசத்திரூபமா யிருக்கின்ற வாத்மசிற்சத்தியி லாவிர்ப்ப வித்தலானுஞ் சிவத்துவத்தோடு கூடிச் சின்மாத்திராத்மாவைச் சிவனாகப் பண்ணி யவனைச் சிவனோடுகூடச் சிவனாகவறியு மறிவாதலானும் பதிஞா னமென்னும், சிவஞான முன்சொல்லிய வாத்மஞானமூலத்து முனைத் துபரிவிரியும். எ-று. (௨)

சுத்ததத்துவங்க ளந்தக்கரணங்களையும் புருடனையும்
பிரேரிக்குமுறைமை யறைகின்றார்.

அவ்வுடனுவ்வுமவ்வுமனம்புத்தியாங்காரங்கள்
செவ்வியவிந்துநாதஞ்சித்தமோடுள்ளமாகு
மொவ்வெனுமெழுத்தாமைந்துமுணர்வுதித்தொடுங்குமாறு
பவ்வமுந்திரையும்போலும்பார்க்கிலிம்பண்புந்தோன்றும.

இ-ள். அவ்வுடனுவ்வுமவ்வு மனம்புத்தியாங் காரங்கள்-பஞ்சப்பிரண வகலைக்குள் வைகரிவாக்குக்கு மூலமாகும் அகாரமாகிய சுத்தவித்தை மன தைச்செலுத்தும்;மத்திமைவாக்குக்குமூலமாகு முகாரமாகியவீசுரம் புத்தி யைச் செலுத்தும்; பசந்திவாக்குக்கு மூலமாகு மகாரமாகிய சாதாக்கிய மகங்காரத்தைச் செலுத்தும்—செவ்வியவிந்துநாதஞ் சித்தமோடுள்ளமாகு ம் - சூக்குமைவாக்குக்கு மூலமாகும் விந்துவாகிய சத்தி சித்தத்தைச் செ லுத்தும்;அதிசூக்குமைவாக்குக்கு மூலமாகு நாதமாகியசிவம். புருடனைச் செலுத்தும்—ஒவ்வெனுமெழுத்தாமைந்தும்-(பிரித்துப்பார்க்குமிடத்து)ஐ ந்தாகும் பிரணவகலைகள் கூட்டியுச்சரித்தால் ஓங்காரமாம்—உணர்வுதித் தொடுங்குமாறுபவ்வமுந்திரையும்போலும்-பிரணவத்தி லகாரமுள்வைத் திரேசகமா யிடையிலெழுந்த வுச்சுவாசரூப மகாசகல மத்தியத்த நித்த சகலமுண்டாய்ப் பிரணவத்தி லுகாரமுள்வைத்துப் பூரகமாய்ப் பிங்கலை யிற் புகுந்துநிச்சுவாசரூப மகாசகலமத்தியத்த நித்தியகேவலமாமுறைமை சமுத்திரமுந் தரங்கமு மொப்பாகும்—பார்க்கில் - (யோகமார்க்கத்தினா லந்தச்சகல கேவல மிரண்டையுந் தடுத்துச் சுழுமுனைதிறந்து கும்பித்து) நோக்கில் — இம்பண்புந்தோன்றும் - மகாரவொற்றுமயமாஞ் சுத்தமுண் டாம்.எ-று.

சுத்ததத்துவங்கள் மனமுதலியவற்றைக் கலாதிதுவாரத்தினாலே செலுத்துமென்பது காண்பிப்பாம்:—இச்சாசத்திகாரியம் ஈசுரதத்துவம், ஞானசத்திகாரியஞ் சுத்தவித்தியாதத்துவம், கிரியாசத்திகாரியஞ் சத்தித த்துவம். ஈசுரதத்துவ மிராகதத்துவத்தைச் செலுத்தும்; சுத்தவித்தியா தத்துவம் வித்தியாதத்துவத்தைச் செலுத்தும்; சத்திதத்துவங் கலாதத்து

வத்தைச் செலுத்தும், இராகதத்துவம் மனத்தத்துவத்தைச் செலுத்தும்; வித்தியாதத்துவம் புத்திதத்துவத்தைச் செலுத்தும்; கலாதத்துவம் மக ங்காரதத்துவத்தைச் செலுத்தும்; மனம் புத்தி யகங்காரங்களாற் புருஷத த்துவ வியாபார முண்டாம்.

காலத்தையு நியதியையுஞ் சத்திதத்துவஞ் செலுத்தும். வித்தையை ச் சுத்தவித்தை செலுத்தும்; ராகத்தை ஈசுரதத்துவஞ் செலுத்தும்; கு ணதத்துவத்தைச் சிவதத்துவஞ் செலுத்தும்; புருஷதத்துவத்தைச் சாதா க்கியதத்துவஞ் செலுத்துமென்றுஞ் சிலவிடத்தில் வசனம். (ரு)

சுத்ததத்துவமைந்துஞ் சடமாதலாற் சுவதந்திரமாய்ச்
சேட்டியாதாகையாற் றேவதாதிட்டானத்தினாலே
சேட்டிக்குமென்பது தரிசிப்பிக்கின்றார்.

அயனரியரனுமீசர்சதாசிவமதிதெய்வங்க
ளுயவருமவ்வோடுவ்வுமவ்விந்து நாதங்கட்குப்
பயனுறுமஞ்சிலான்மாப்பரவிடிலசித்தாமபார்க்கிற
சயமுறுவளியிரண்டுந்தவிர்த்துநிற்றானுந்தோன்றும்.

இ-ள். உயவருமவ்வோடுவ்வு மவ்விந்துநாதங்கட்கு—அதிதெய்வங்க ளயனரியரனுமீசர்சதாசிவம்— பயனுறுமஞ்சிலான்மாப் பரவிடிலசித்தாம் பார்க்கில் - இச்சா ஞானக் கிரியாபலங்களை மறைத்துவாரத்தினாலே வி ளக்கும் அகாரமுதலிய வைந்தி லாத்மாப்பொருந்திக் காணுமிடத்துச் சட மாம்—சயமுறுவளியிரண்டுந் தவிர்த்துநிற்றானுந் தோன்றும் - இடைபி ங்கலையி லெழுந்தொடுங்கு மகாரசரீர ரேசக மூகாரசரீர பூரக மிவையி ரண்டினையு நிறுத்தில், வாயுவைவெல்லுங் கும்பகசரீர வசபாமந்திர மத் தியபீசவிந்து விழுங்கிய மகாரந்தோற்றும்; அப்போது சருவபாசமுங் கழ ன்று சிவத்தோடுசேர்ந்து சிவத்துவத்துக் கருகமாகிய சின்மாத்திராத்மா வாய்ச் சேடித்து, ஆத்மாச் சுவசங்வேதனப் பிரத்தியக்ஷத்திற் பிரதிபாசி ப்பன். எ-று. (சா)

மேற் பஞ்சகந்தக் கொத்துக்கூட்டமே யாத்மா வெ
ன்னும் புவுத்தன்மதம பராகரிக்கின்றார்.

ஆற்மாவின்வடிவுதானுமனேகார்த்தகூட்டமென்னிற்
பார்ப்பார்கட்கான்மாவின்றாய்ப்பலபொருளுண்மையாகுஞ
சோப்பாயபலவேயுண்மையென்றிடிற்சென்றிவற்றை [தாமே
போர்ப்பான்வேறுணர்வோர்க்கெலலா முணாபொருள்வேற

இ-ள். ஆற்மாவின்வடிவுதானுமனேகார்த்தகூட்டமென்னில் - ஞானசந்ததியாகிய விஞ்ஞானகந்தம், வாசனுசமூகமாகிய சம்ஸ்காரகந்தம், சுகபுத்தி துக்கபுத்தி யுபேக்ஷாபுத்திகளாகிய வேதனுகந்தம், சத்தசமூகமாகிய சஞ்ஞாகந்தம், மூர்த்தபூதசமூகமாகிய ரூபகந்தம், இவ்வைந்து கொத்தினுலு மக்கொத்துக் கபின்னமாய்வரும் ஞானசமுதாய புத்தியே யாத்மாவென்னில்—பார்ப்பார்கட்கான்மாவின்றாய்ப் பலபொருளுண்மையாகும்- பஞ்சகந்த விவேகம்பண்ணி யாத்மதரிசனம் பண்ணும்பேர்க்கு உயிரென்ப தொன்றின்றிப் பஞ்சகந்த பதார்த்தமாத்திரமே யுள்ளபொருளாகும்(சமுதாயமென்பதொருவத்துச் சமுதாயியைவிட் டொன்றில்லாத படியினுலே)—சேர்ப்பாயபலவேயுண்மையென்றிடில் - (கூட்டமென் றென்றில்லாத படியினுலே) கூடிய பலபொருளே யாத்மாவென்னில்—சென்றிவற்றையோர்ப்பான்வேறுணர்வோர்க் கெல்லாமுணர்பொருள்வேறதாமே- அனுத்ம வாத்ம விவேகதரிசனம்பண்ணும் பேராகிய சகலர்க்கும் பஞ்சகந்தத்தைப் பொருந்திப் பார்ப்பவனுன்மா பின்னப்பொருள், பார்க்கப்படும் பஞ்சகந்தமும் பின்னப்பொருளேயாம். எ—று. (ரு)

சிவாத்துவைதமதந் தரிசிப்பித்துத் திரஸ்கரிக்கின்றார்.

அறிவிச்சைசெயல்களெல்லாமடைந்தனல்வெம்மையும்போற்
குறியுற்றங்கனேகானேககுணகுணிபாவமாகி
நெறியுற்றுநிற்குமென்னினிகழ்புலன்கரணமெல்லாஞ்
செறிவுற்றங்கறிவுகொள்ளவேண்டுமோசிவனுர்க்கே.

இ-ள். அறிவிச்சைசெயல்களெல்லாமடைந்தனல்வெம்மையும்போல் - அக்கினி யேகமாயிருந் தனேகமா யங்கங் குட்டனகுணத்தைப் பொருந்தி நின்றாற்போலச் சிவமொன்றே யனேகமாய் ஞானேச்சாக்கிரியைகளை அங்கங்குப்பொருந்தி—குறியுற்று-அடையாளமுடைத்தாய்—அனேகானேககுணகுணிபாவமாகி-அனந்தகுணத்தன்மையனந்த குணித்தன்மையாகி—நெறியுற்றுநிற்குமென்னில்-விடயமார்க்கத்தைப் பொருந்தியிருக்குமென்னில்—சிவனுர்க்கே - பேரறிவாகுஞ் சிவமாகு முயிர்க்குத்தானே—நிகழ்புலன்கரணமெல்லாஞ் செறிவுற்றங்கறிவுகொள்ளவேண்டுமோ-விளங்காநிற்கும் விடயேந்திரியங்கள் முதலியவற்றைப் பொருந்திச் சிற்றறிவைச் செறியவேண்டுமோ. எ—று. (சு)

சாங்கியன்மதந் தழுவித் தள்ளுகின்றார்.

குணங்களையின்றியொன்றாங்குறியுடைத்தான்மாவென்னி
லிணங்கிடாவிச்சாஞானக்கிரியைகளின்வயுடற்கட்

பிணங்கிடுஞ்சன்னிதிக்கணெனிற்பிணத்துறக்கத்தின்று
முணங்கிடுங்கரணமென்னிற்சன்னிதியொழிந்ததன்றே.

இ-ள். குணங்களையின்றியொன்றுங்குறியுடைத்தான்மாவென்னில்—ஞானசத்தி யிச்சாசத்தி கிரியாசத்திகளாகிய குணங்களைத் தவிர ஏகசின் மாத்திர முயிரொன்று நீசொல்லில் — இணங்கிடாவிச்சாஞானக்கிரியைகள்-சுவசங்வேதனப் பிரத்தியக்ஷசித்தமாகிய விச்சாஞானக்கிரியாகாரியங்கள் சத்திகாரணமன்றிப் பொருந்தா—இவையுடற்கட்பிணங்கிடுஞ்சன்னிதிக்கணெனில் - இந்த ஞானேச்சாப் பிரயத்தினங்கள் ஆத்மாவினது சன்னிதானமாத்திரத்திலே— உடற்கண் - சூக்குமதேகமாயிருக்கும் புத்தி மனோகங்காரங்கள் பொருந்திய தூலதேகத்தி லுண்டாமெனில்—பிணத்துறக்கத்தின்றும் - சவமானகாலத்தும், நித்திரைபண்ணுங் காலத்துஞ் சரீரமிருந்தபடியிருக்கவும் ஞானமுதலியகாரியங் காணாது—உணங்கிடுங்கரணமென்னில்-மனோபுத்தியகங்காரங்கள் வாடிமெதனாற்காணாதென்னில்—சன்னிதியொழிந்ததன்றே-ஆத்மாவின்து சன்னிதானம் (விபுவாகையால்) அற்றதில்லையே (அதனாற் பிரதிஞ்ஞாபங்கமென்னு நிக்கிரகத்தானம்) எ—று. (எ)

மேலிதுவுமது.

சன்னிதிகுணமதாகுந்தானென்போலென்னிற்காந்த
முன்னிரும்பென்றுயிர்க்குமுறைமையுண்டகற்றலின்று
முன்னுதலொடுங்கலோடலிருத்தலேகிடத்தனிற்ற
லென்னுமித்தொழில்கண்மற்றுமியற்றுவதான்மாவென்னே.

இ-ள். சன்னிதிகுண்மதாகும்—(சன்னிதான முண்டாயிருக்கவுங் காரியங்காணேமென்று நீர்சொல்லிய துண்மைதானே, ஒருவத்துவுக்கு ஒருவத்து விருக்குமிடத் துள்ளமைமாத்திர மிவ்விடத்துச் சன்னிதியன்று, சற்பாவத்தோடு காரியசாமர்த்திய சத்திசம்பந்தியாயிருத்தல்) அதுதானென்போலென்னில்—காந்தமுன்னிரும்பென்றாய் - காந்தசத்தி யிரும்புச்சம்பந்தம்போலென்று சொன்னாய்—ஈர்க்குமுறைமையுண்டு அதற்கு-அந்தக்காந்தத்துக் கிரும்பையிழுக்குஞ் சத்தியுண்டு—அகற்றலின்றும் - விடுஞ்சத்தி யில்லை. (ஆகிலு மதனாற் கர்த்திருத்துவங் காந்தத்துக் காணப்பட்டது; காந்தத்துக்கு நீர்சொல்லிய கர்த்திருத்துவமில்லை; இருவர்க்குஞ் சம்மதமான சத்திமாத்திரமே; இரும்புக்கே யசைதற்கிரியாவேசமாகிய கர்த்திருத்துவம், அப்படி யாத்மாவுக்குச் சத்திமாத்திரமே; அப்படி சரீரத்துக்கே கர்த்திருத்துவம்; சரீரமே ஞானேச்சாகாரியங்களைத் தனதுதொழில்களாகத்தானே பண்ணும். அது நன்றன்று, சிற்பதார்த்தங்களுக் க

சிற்பதார்த்தங்களினது அசைதற்கிரியாகன்மகாரியத்தைப்பண்ணு மிச்சா ஞானக்கிரியாத்தொழில்களைத் தனதாகச் சுவசங்வேதனமாகப் பண்ணுஞ் சிற்சத்தியே கர்த்திருத்துவ மாகையாற், சித்துக்கே கர்த்திருத்துவம்; சடத்துக்குக் கன்மத்துவமன்றிக் கர்த்திருத்துவ மில்லை. ஆகிற், காந்தத்துக்குக் கர்த்திருத்துவ மெப்படிசொன்னீர்? உள்ளது, சித்தாகிய கர்த்தாவினுடையவுஞ், சிற்சத்தியாகிய கரணத்தினுடையவும், சம்பந்தத்தினாலே சடத்துக்குக் கர்த்திருத்துவமுங் கரணத்துவமுஞ் செயற்கையா யுபசரிக்கப்படும்; கன்மத்துவமாத்திரமியற்கையாய் வாஸ்தவமாயிருக்கும்; ஆதலால்)—உன்னுதலொடுங்கலோடலிருத்தலேகிடத்தனிற்றல் என்னும்—இத்தொழில்கண்மற்றும்-இவைமுதலாகுஞ்சரீரத்தினசைதற்கிரியைகளை—இயற்றுவதான்மாவென்னே- (தனது சிற்சத்தியினது ஞானேச்சாக்கிரியாசங்கற்பேச்சைகளினாலே) பண்ணுவதுயிரோ. எ—று. (அ)

உயி ருருவாயிருக்குமென்னும் பவுராணிகமதம்படித்துப் பராகரிக்கின்றார்.

உருவுயிரொன்னினிந்தவுடலினிற்காணவேண்டும்
வருவதுபரிணமத்தாயனித்தமாமபூதமாகும்
கருவினினுழைபுமாறுங்காட்டிடவேணடுங்கண்ணின்
மருவிடாதென்னினுன்றன்வாயினாலுருவன்றென்னே.

இ-ள். வெளிப்பொருள். (கூ)

பரமாணுமுதற் பதார்த்தம் போலச் சூக்குமவுருவாய் நேத்திரத்திற் றோற்றாதிருக்குமென்ன மறுத்துணர்த்துகின்றார்.

சூக்குமவுருவதென்னிற்றூலகாரணமதாகு
மாக்கியமனாதிதன்மாத்திரைவடிவசேதனம்பின்
னீக்கமில்சூக்குமத்தேகிற்பதோருருவுண்டென்னி
லாக்கிடுமுருவமெல்லாமசித்துமாயநித்தமாமே.

இ-ள். சூக்குமவுருவதென்னில் - சூக்குமசரீரந்தானே யாத்மாவென்னில் (முன்சொல்லிய சிலவாசாரியர்கள் மதத்தினால்)—தூலகாரணமதாகும் - தூலசரீரத்துக்கு முதற்காரணமாகும்—ஆக்கியமனாதிதன்மாத்திரைவடிவசேதனம்-சூக்குமதேகமாய்ப் பண்ணப்பட்ட கலைமுதற் பிருதிவிமுடிவாகிய தத்துவங்களைத் தங்களுள் வைத்த வந்தக்கரணங்கள் தன்மாத்திரைகள் சடம் (ஆத்மாவாகாது)—பின்னீக்கமில்சூக்குமத்தேகிற்பதோருருவுண்டென்னில்-அதேத்தாற்போ லாத்மாவல்ல வென்று தள்ளிய

சூக்கும சரீரத்துக்குள்ளிருக்குமொருவடிவுண் டஃதாத்மாவென்று நீசொல்வில் (அது விசாரிக்குமிடத்தில்)—ஆக்கிமுருவம்- சிவதத்துவ பஞ்சகரூப பரதேகமாம்—(அது) எல்லாமசித்துமாயநித்தமாமே - சிவதத்துவமுற்றுஞ்சடமாய் நாசமாமே. எ-று. ஆத்மசத்தத்துக்கு விபுநித்தியசித்தென்றுபொருளாதலால், பரதேக மெப்படி யாத்மாவாம் ஆகாதுதானே. (௧0)

உயி ரருவுருவமென்று கவுளகன் சொல்ல மறுத்துணர்த்துகின்ருர்.

அருவுருவென்னிலான்மாவருவுருவாவதின்ரு
முருவருவாகாதாகுமொருபொருட்கிரண்டுதன்மை
வருவதுமில்லைக்காட்டவன்னிபோன்மருவுமென்னி
லுருவமுங்காணவேண்டுமுண்மையுமழிந்துபோமே.

இ-ள். அருவுருவென்னிலான்மா - உயி ரருவமாயு முருவமாயு மிருக்குமென்றுநீசொல்லில்—அருவுருவாவதின்ரும்-நிஷ்களமாயிருக்கிறபொருள்தானே தற்காலத்துச் சொரூபத்திருலே சகளமாகாது (அப்படி)—உருவருவாகாதாகும் - சகளம் நிஷ்களமாகாது (விருத்ததன்மமாகையால்)—ஒருபொருட்கிரண்டுதன்மைவருவதுமில்லை - எக்காலத்து மொருபொருட்கு விருத்ததன்மங்களிரண்டுண்டாகா(அப்படியாகிற்சிவனுக்குச் சகளநிஷ்களத்துவமெப்படிசொல்லப்படும். உள்ளது; நிஷ்களத்தைக்குறித்துச் சகளமென்றுஞ் சகளத்தைக் குறித்து நிஷ்களமென்றும் உத்தியுத்தசிவத்தி லுரைக்கப்பட்டது; உதாசீன சுத்தசிவத்திலிருக்கு நிஷ்களத்துவமும் பிரவிருத்த சிவத்திலிருக்குஞ் சகளத்துவமுந் தற்காலத்திலிருக்குமென்று பொருளன்று; பிரவிருத்தசிவத்திலு மட்டத்திறிஞ்சற்சத்திகலாசாகித்திய மாத்திரத்தைக் குறித்துச் சகளத்துவம்; மாயாகலா ராகித்திய மாத்திரத்தைக்குறித்துப் பரமார்த்தமாயிருக்கு நிஷ்களத்துவம்)—காட்டவன்னிபோன் மருவுமென்னில் - காட்டமும் வன்னியு மேகபதார்த்தமன்று; அப்படி யங்கீகரித்தாலும்—உருவமுங்காணவேண்டு முண்மையுமழிந்துபோமே - (காட்டப்பகுப்புக் கண்ணிருற் காணப்படும், அதுபோல) உயிரின துருவப்பகுப்புத் திருட்டிக்குத் தரிசனப்பட வேண்டும்; அநித்தியமாயுந்தானே யாய்விடும். எ-று. (௧௧)

வேறுதாகரண மெடுத்துரைக்க மறுத் துணர்த்துகின்ருர்.

சந்திரன்வடிவுபோலத்தானருவுருவமென்னில்
வந்துநங்கண்ணிற்றேன் றும்வடிவுளதாமுயிர்க்கு

மிந்தவூனுருவந்தானுயெழுவதுமுயிரோயென்னிற்
பந்தமாயசித்தாயான்மாப்பவுதிகமாகுமன்றே.

இ-ள். சந்திரன்வடிவுபோலத் தானருவுருவமென்னில் - (அமாவாசை பூரணைகளிலே) சந்திரன்வடிவுபோ லுயிரருவுருவமென்று நீசொல்லில் (பூரணையிலே சந்திரனுக்குப்போல) — வந்துநங்கண்ணிற்றோன்றும் வடிவுளதாமுயிர்க்கும்—இந்த வூனுருவந்தானுயெழுவதுமுயிரோயென்னில் - இப்போது காணப்படுஞ் சடசரீரமாய்ப் பரிணமிப்பது மருவாகிய வாத்மாவாதலால், உயிரருவுருவென்று நீசொல்லில் — பந்தமாயசித்தாயான்மாப் பவுதிகமாகுமன்றே - கட்டப்படுமுயிர் கட்டாய்ச சடமாய்ப் பூதோற்பத்திமத்தாமே. எ-று. (கஉ)

சேசுரசாங்கியமதம் பாஷித்துப் பராகரிக்கின்றார்.

அருவவிகாரியான்மாவாகாயம்போலவென்னி
லுருவிணைக்கட்டியாட்டியோட்டிமீட்டலாவப்பண்ணி
மருவிநிற்பித்திருத்திக்கிடத்திமண்புரட்டிமற்றும்
பெருவிகாரங்களெல்லாந்தருவதென்பேசிடாயே.

இ-ள். அருவவிகாரி யான்மா வாகாயம்போலவென்னில் - ஆகாயம்போ லுயி ருருவிலி திரிவிலி யென்று நீசொல்லில். சரீரத்தின்கண் பெருவிகாரமென்று கூட்டுக. மற்றது வெளிப்பொருள். [இதனது தாற்பரியஞ் சிற்சத்தியினது சங்கற்பரூபமாய்த் திரிவற்ற வசைவற்ற விகாரத்தினாலே திரிவுற்ற வசைவுற்ற கட்டுத லாடுத லோடுதல் முதலிய விகாரங்களைச் சரீரத்திற் பண்ணுமென்பதே.] (கங)

ஆத்மா வசித்தாய்ச் சித்தாசிரயமாயிருப்பனென்னும் நையாயிக மீமாங்சமத நிதர்சித்து நிராகரிக்கின்றார்.

அசித்தெனிலுணராதான்மாவசித்துச்சித்தாகுமென்னி
லசித்துச்சித்தாகாதாகுஞ்சித்தசித்தாவதில்லை
யசித்தொருபுறமாயொன்றிச்சித்தொருபுறமாய்நில்லா
தசித்துருசித்தேயென்னிலசித்தடைந்தறிவதின்றாம்.

இ-ள். சித்தெனில் - (சிவனைப்போல நிருமல) சித்தெனில். அசித்தடைந்தறிவதின்றாம்-புறக்கரண முட்கரணங்களைப் பொருந்தின் றுணர்வதின்றாம். மற்றது வெளிப்பொருள். (கச)

உயிரணுரூபமென்னும் பாஞ்சராத்திரிமதம் பாஷித்துத் தூஷிக்கின்றார்.

உயிரினையணுவதென்னிலுடல்பலதுவாரமோடும்
பயில்வுறக்கட்டுணாதுபாரமுந்தரித்துச்செல்லா
தயர்வுறுமசித்தாய்ப்பூதவணுக்களினொன்றதாகு
மியல்புறுமவயவத்தாலணுவுருவிறக்குமன்றே.

இ-ள். உயிரினையணுவதென்னிலுடல்பலதுவாரமோடும்-ஆத்மா வணுரூபியென்று நீசொல்லில், சரீரத்தில் நவத்துவாரங்கட்குள் ளொன்றினின்றும் புறம்பே புறப்பட்டுப்போம் — பயில்வுறக்கட்டுணாது - இலேச சஞ்சாரம்பண்ணத் தங்கிநில்லாது—பாரமுந்தரித்துச்செல்லாது - (சரீரத்திற் சருவாங்கமுங் கலந்துநிற்றல் கூடாதாகையால்) சுமைதரித்துச்சரியாது—அயர்வுறுமசித்தாய் - அஞ்ஞானம் பொருந்திய சடமாய் — பூதவணுக்களினொன்றதாகும்—பிருதிவிப்பரமாணு அப்புப்பரமாணு அக்கினிப்பரமாணு வாயுப்பரமாணுக்களி லியாதாமொன்றாம்—அணுவுருவு - அந்த அணுரூபிவஸ்து—இயல்புறு மவயவத்தால்- மூர்த்தத்தன்மையாலெனுமேதுவாற் சித்தித் தியற்கையைப் பொருந்திய சாங்கிசத் தன்மையாற் காணபிக்கப்பட்ட காரியதன்மையால்—இறக்குமன்றே- கெட்டுப்போந்தானே. எ-று. (௧௫)

பின்னு மவன்கருத் துரைத்து நிராகரிக்கின்றார்.

உடலினிலேகதேசியுயிரெனிலுருவாயமாயும்
படர்வுறுமறிவின்றெங்குஞ்சுடரொளிப்பண்பதென்னிற்
சுடர்தொடிற்சுடுவதெங்குந்தொட்டிடமறிவுண்டாகு
மடர்புலனிடத்துமொக்கவறிவெழவேண்டுமன்றே.

இ-ள். வெளிப்பொருள். (௧௬)

சங்கோச விகாச தன்மி யாத்மாவென்னு மருகன்மத மிசைத் தசைக்கின்றார்.

உருவினினிறைந்துநின்றங்குணர்ந்திடுமுயிரதென்னின்
மருவிடாதுறக்கம்வாயிலறிவொக்கவழுங்கவேண்டும்
பெருகிடுஞ்சுருங்கும்போதம்பேருடற்சிற்றுடற்கண்
வருமுடற்குறைக்கவொக்கக்குறைந்துபின்மாயுமன்றே.

இ-ள். உருவினினிறைந்துநின்றங்குணர்ந்திடுமுயிரதென்னில் - சரீரத்துள் ளுயிரிருந்து சரீரமெங்கும் பூரித்தறியுமென்று நீசொல்லில்—மருவிடாதுறக்கம்-(அறிவற் றதீதமாயிருக்கும்) நித்திரையைப் பொருந்தாது

(அதுவனறியும்)—வாயிலறிவொக்க வழங்கவேண்டும் - பஞ்சேந்திரியங்க ளும் கிரமத்திலுண்டாஞ் சத்தஞானம், பரிசஞானம், ரூபஞானம், இரச ஞானம், கந்தஞானமைந்தையு மொருமிக்க வுண்டாக்கவேண்டும். (முறு க்குப்பணிகாரம் புசிக்குமிடத்து வேறிடத்துப் பிய்ந்து பிய்ந்து வரு மைந் தறிவுகளும் புஞ்சமாய் வருவது கண்டோமென்னில், அங்கு முறைமையி லறிதல் தானே, நூறுதாமரையித ழூசியாற் குத்தினேனென்பதுபோற் பகுத்தறித லரிதாதலா லொருமிக்கப்போலத் தோற்றியது. அதுவன்றி யும்)—பேருடற்சிற்றுடற்கண்பெருகிடுஞ்சுருங்கும்போதம்-பேருடற்கண்- பெருங்காயத்திலே—போதம் - அறிவு—பெருகிடும் - மலரும் — சிற்று டற்கண் - சிறுகாயத்திலே—போதம் - அறிவு—சுருங்கும் - குவியும்(அப் படி யாகட்டுமென்னிற் சிலவிடத்துப் பேருடலுடையானுக்குச் சிற்றறி வுஞ் சிற்றுடலுடையானுக்குப் பேரறிவுங் காணப்படுதலாற் சங்கோசவி காசஞ் சொல்லுஞ் சமணமதஞ் சாரமற்றதாதலால் அப்படி சாற்றப்படா து. அதுவன்றியும்) — வருமுடற்குறைக்கவொக்கக் குறைந்துபின்மாயும ன்றே-தான் வந்துபொருந்துஞ் சரீரத்தைச் சிறிதுசேதிக்க அந்தச்சரீர த்தோடு தானுஞ் சிறிதுகுறைந்து முற்றுஞ்சேதிக்கத் தானு முற்றுங் கு றைந்து நாசமாமே. எ-று. (கஎ)

பாட்டபாஸ்கரன் மதம் பராகரிக்கின்றார்.

எங்குந்தான்வியாபியாய்நின்றுணருமிவ்வான்மாவென்னிற்
றங்கிடுமவத்தைபோக்குவரவுகள்சாற்றவேண்டும்
பங்கமார்புலனொன்றொன்றாய்ப்பார்த்திடல்பகரவேண்டு
மிங்கெலாமொழிந்தானிற்பதெங்ஙனமியம்பவேண்டும்.

இ-ள். இவ்வான்மா - இந்தவுயிர்— எங்குந்தான் வியாபியாய் நின்று ணருமென்னில் - எவ்விடத்தும் விபுவாய் மறைப்பற்று விரிந்து விளங்கி ய வறிவுடையவனாகி யறிவனென்னில்—தங்கிடுமவத்தைபோக்கு வரவுக ள்சாற்றவேண்டும்-அறிவு குன்றிக் குன்றிப்போயுறையுஞ் சாக்கிரமுதலிய பஞ்சாவத்தைப்படுவானேன் சொல்லவேண்டும். ஓரிடத்தே யிருந்தறியுந் தனமை ய்ண்ணுந்தன்மை யிருக்கப் போதல்வருதல்கள் புரிவானேன் சொல்லவேண்டும்—பங்கமார்புலனொன்றொன்றாய்ப் பார்த்திடல்பகரவே ண்டும்-கேடுநிறைந்த சததப்பரிசரூபரசகந்தங்களை யொருமிக்க வறியாம லொவ்வொன்றாய்க் காண்பது கழறவேண்டும்—இங்கெலாமொழிந்தா னி ற்பதெங்ஙனமியம்பவேண்டும் - இவ்வுலகத்துச் சரீரமுதலிய சம்சாரமும் றுநீங்கினால் நிற்குமிடம் நிகழ்த்தவேண்டும் [சருவசங்காரகாலத்துப் பிர ளயகேவலியா யிருபபதின்றித் தீக்ஷாதிசாதனங்களைச் சாராது முத்தனுய விடுவனெனறு தாற்பரியம] எ-று. (கஅ)

நீர்சொல்லு மலமறைப்பில்லா திருந்தாலு மறைபபுண்டு அதனாலவத்தை முதலியன வருமென்றுரைக்க மறுத்துரைக்கின்றார்.

சுத்தமாமான்மசித்தைத்துகளுடன்மறைத்ததென்னில
வைத்துறுதுடற்கண்வாயில்கரணங்கள்வழியான்ஞான
மொத்துறுமலமற்றாலுமுறுமலம்வீடுமின்றாம
பெத்தமுமடையான்முத்தனுய்ப்பிரகாசனுமே.

இ-ள். சுத்தமாமான்மசித்தைத துகளுடன்மறைத்த தென்னில் - நின்மலமாகிய வுயிரினதுசிற்சத்தியை யழுக்குறுமாக்கை மூடிற்றென்று நீ சொல்லில்—வைத்துறுதுடற்கண்வாயில்கரணங்கள் வழியான்ஞானம்-புறக்கரண வுட்கரணமார்க்கத்தினாற் சரீரத்திற் பிரகாசிக்கக் கண்டிருக்கின்றஞானம பிரகாசியாதேபோம்—ஒத்துறுமலமற்றாலுமுறுமலம்வீடுமின்றாம்-ஆத்மாவுடனநாதிசித்தமல்லாத வுடன்மல முத்தியின்பொருட்டுப் போனாலுந் திரும்பவந்து பொருந்தும். (முன் நின்மலனிடத்து நிருகேதுகமாய் வந்தபடியினாலே யானைகுளித்தல்போலத் திரும்பத்திருப்ப வழுக்கு வரு மாதலால்) முத்தியில்லையாம். (உடன்மலந் திரும்பவுறாதென்று சொல்லில்)—பெத்தமுமடையான்முத்தனுய்ப்பிரகாசனுமே - அப்போதனாதி நின்மலனாகிய வாத்மா வொருக்காலும் பந்தமுடையனல்லனாம். முத்திவியத்தியானுவன்றானே. எ-று. (கஎ)

ஆணவமுடைய வுயிரிலக்கணக்கொள்கை யெப்படி யென்னக் கூறுகின்றார்.

அசித்தருவியாபகம்போலவியாபகமருவமன்றாய்
வசித்திடவரும்வியாபியெனும்வழக்குடையனாகி
நசித்திடாஞானச்செய்தியனாதியேமறைத்துநிற்கும
பசுத்துவமுடையனாகிப்பசுவெனநிற்குமான்மா.

இ-ள். அசித்தருவியாபகம்போல்வியாபகமருவமன்றாய்- சடமாமுருவில் விபுப்பொருளொப்ப விபுவுருவிலியன்றி — வசித்திடவரும்வியாபியெனும்வழக்குடையனாகி - முத்தியிலசித்தரு வியாபகவததுவை யுள்ளடக்கி யதற்குள்ளுமாய் வசீகரணம்பண்ணிப்பிரேரிக்கவிரியும் விபுவென்னு நீதிமானாய், பெத்தத்தில் மலமூடாமற் றன்வசமாகமாத்திரம் பண்ணப்பட்டு முத்தியில்விரியும் விபுவென்னும் நீதிமானாய்—நசித்திடாஞானச்செய்தியனாதியேமறைத்துநிற்கும்பசுத்துவமுடையனாகிப் பசுவெனநிற்குமான்மா-கெடாதனாதிசித்தமா யிருக்கின்ற சருவஞதது சருவகர்த்திருத்துவ

ரூப சிவத்துவத்தை யறியாமை பண்ணுமை யென்னும் பசுத்துவமாக்கும் பசுத்துவமென்னு நாமத்தையுடைய மலசம்பந்தியாகிச் சிவனுயிருப்பவனுனுலும் பசுவென்னும் பேர்பெற்று நிற்பன். எ-று. (உ0)

விஞ்ஞானப்பிரளய கேவலங்களில் அசருவஞ்ஞத்துவம் அசருவகர்த்திருத்துவ மிரண்டிற்குமுபாதியுளைததுச் சகலத்திற் கிஞ்சிஞ்ஞத்துவங் கிஞ்சிற கர்த்திருத்துவ மிரண்டிற்கு முபாதியுளைக்கின்றூர்.

மாயையின்வயிறறுணமன்னிவருஞ்செயன்ஞானமிச்சை
யேயுமக்கலாதிமூன்றுலேகதேசத்தினேய்ந்திங்
காயுமுக்குணங்களந்தக்கரணங்களாதியெல்லாங
காயபந்தங்களாகக்கலந்துடனிற்குமான்மா.

இ-ள்- மாயையின்வயிற்றுணமன்னி - (சருவவியாபியாயிருந்தாலு மலமறைத்த வறிவுதொழி லுடையவனுய்ச் சூக்குமதேகத்தினுற் சிற்றறிவுதொழில் விளங்கலாற் சூக்குமதேகோபாதியினுலே) மாயோதரத்தில் வசித்து—வருஞ்செயன்ஞானமிச்சையேயுமக்கலாதிமூன்றுலேகதேசத்தினேய்ந்து-தன்ஞேடுபொருந்திய கலை வித்தை யிராகங் களினுல் முறைமையிற் றெழிலறிவு விருப்பங்களை யந்தகாரத்திற் றீபத்தினுற் கண்ணெளியைப்போல வொருபிரதேசத்திற் பொருந்தி. ஆயுமுக்குணங்களென்பது முதலியன வெளிப்பொருள். (உக)

இப்படி தூலசூக்கும சரீரங்களோடுகூடிப் போகம்புசிக்குமுறைமை புகல்கின்றூர்.

சூக்குமதேகியாகித்தூலதேகத்தின்மன்னிச்
சாக்கிரமுதலாயுள்ளவவத்தையுட்டங்கியெங்கும்
போக்கொடுவரவுமெல்லாமபுரிந்துபுண்ணியங்கள்பாவ
மாக்கியும்பலங்களெல்லாமருந்தியுநிற்குமான்மா.

இ-ள். வெளிப்பொருள். (உஉ)

பஞ்சகோசங்களி லொவ்வொரு கோச மாத்மாவென் பவர்களைமறுத்துணர்த்துகின்றூர்.

மருவானந்தம்விஞ்ஞானமனுேபிராணனன்னமய [மாய்
முருவாநதன்னையுணடாயபின்னென்றுகோனுசூக்கும

வருமாமன்னமயமபற்றிமாயைமுதற்காரணமாகு
மருவாமான்மாவைங்கோசத்தார்ப்புண்டவற்றினகம்புறமாம்

இ-ள். வேதாந்திகள் காரணசரீரமென்னு மவித்தையாகிய வானந்தமயகோசமய னாத்மாவென்பர்கள். புத்தர் விஞ்ஞானமயகோசமய னாத்மாவென்பர்கள். அகங்காரவாதிகள் மனோமயகோசமய னாத்மாவென்பர்கள். அருகர்பிராணமயகோசமய னாத்மாவென்பர்கள். உலோகாயதர்கள் அன்னமயகோசமய னாத்மாவென்பர்கள். நமக்குப் பஞ்சகோசமு மாயோபாதானமா யிருக்குந் தூலசரீரத்துஞ் சூக்குமசரீரத்து மடங்கும். மற்றது வெளிப்பொருள். (உங)

பஞ்சகோசத்துக் காத்மா வன்னியனாய்ப் பஞ்சகோச
த்தைப் பிரேரிப்பனென்பது படிக்கின்றார்.

தோற்பாவைக்கூத்துந்தொல்லைமரப்பாவையியக்கமுஞ்சேர்த்
தேர்ப்பாவிற்செலவும்வேறாய்ச்செலுத்துவோர்செய்திதானும்
பார்ப்பாயவேடங்கட்டியாடுவோர்பரிசுமபோலு
மார்ப்பாயகாயந்தன்னையான்மாநின்றாட்டுமாறே.

இ-ள். வெளிப்பொருள். (உச)

பின்னும் பஞ்சகோசங்க ளாத்மாவுக் குடைமைப்பொ
ருளாகப் படுத்தப்படுமாதலாற் பின்னப்பொருள்க
ளென்று பேசுகின்றார்.

என்னுடல்பொறிபிராணன்கரணமென்னுணர்வென்றக்கா
றன்னின்வேறாகுநீயென்றன்மனையென்றவெல்லா
நின்னின்வேறாகுமென்னினீங்கிடாதிவையிங்கென்னி
னுன்னினவாகிநீயாமுகிர்மயிருகவுங்காண்டி.

இ-ள். இவை.சரீராதிகள். உன்னினவாகிநீயாம் - உன்னுடையதாகி நீ.நானென் றபிமானித்ததாகும். உகவும் - நீங்கவும். மற்றதுவெளிப்பொருள். (உரு)

இதுவுமது.

பொன்னணியாடைமாலைபோதுமேலானபோதிங்
கென்னணியானென்றுன்னியிருந்தனைபிரிந்தபோது
நின்னணிநீயுமல்லவாயினைகாயநின்னி
லன்னியமாகுமுன்னையறிந்துநீபிரிந்துபாரே.

இ-ள். சுவசங்வேதனப் பிரத்தியக்ஷத்தினா லுன்னைச் சித்துரூபனாயறிந்து சரீரத்தைச் சடரூபமாகப்பார். மற்றதுவெளிப்பொருள். (உசு)

மேலதையே வற்புறுத்தி யுணர்த்துகின்றார்.

உடலியானல்லெனிந்தவுணர்வியானல்லவான
கடனியாதென்னில்வேறுகண்டுணர்வென்னதென்கை
யிடரிலாவென்றனான்மாவென்றபோதான்மாவேறோ
திடனதாயுயிராவேறுகண்டிடார்செப்பலேகாண்.

இ-ள். உடலியானல்லேன் - நீர்சொல்லிய முறைமையிற் சரீரேந்திரியங்கள் நானல்ல—உணர்வுயானல்லவானகடனியாதென்னில்- (அறிவிருவிதம் நிருவிகற்பமென்றுஞ் சவிகற்பமென்றும். அவற்றுள்நிருவிகற்பமாத்மசிற்சத்தியின தறிதற்றொழில் பின்னமன்றியிருப்பதீதொன்று; நிருவிகற்பமுன்வைத்த புத்திவிருத்தி பின்னமாயிருப்பதீதொன்று; புத்திவிருத்திஞானஞ் சிற்சத்திவிருத்தியிற் பிரித்து நானல்லாதிருந்தாலும்) சிற்சத்தி விருத்திஞானம் நானல்லவாகியமுறைமையேதென்றுசொல்லில்—வேறுகண்டு - உடைமை யுடைமையுடைய னெனும்பிரிவு கருதி—உணர்வென்னதென்கை-அறிவென்னதென்பது (ஆதலால் அறிவு நானென்பது கூடாது சத்தி சத்திமத்தொழிற் பேதம் பிரிப்பின்றி யுள்ளுண்டென்று சான்றோர் சாற்றுதலால். இப்படிநீர்சொல்லில்)—இடரிலாவென்றனான்மாவென்றபோதான்மாவேறோ—(வேறன்று அதுபோலறிவும் வேறன்று. சத்திய நீசாற்றியது. வேறல்லவென்பது)—திடனதாயுயிராவேறுகண்டிடார்செப்பலேகாண் - நிச்சிதமாய்த் தற்பொருளறிவாய்த் தன்மியாகிய வான்மாவைப் பிறபொருளறிவாய்த் தன்மமாகிய சிற்சத்தியினின்றும் பிரிவின்றிப் பிரித்தறியாதா ரபேதமாகப் பேசுவதேகாண். எ-று.

"என்றன்"என்பதற்குப் பொருள் பிறபொருளறிவாகியசிற்சத்திரூப தன்மமாகில் "ஆன்மா" என்பதற்குப் பொருள் தற்பொருளறிவாகிய சத்திமத்துரூபதன்மி."என்றன்" என்பதற்குப் பொருள் தன்மிலக்கியமாகில் "ஆன்மா" என்பதற்குப் பொருள் தன்மலக்கணம். தற்பொருளறிவாகிய தன்மியும் பிறபொருளறிவாகிய தன்மமு மொன்றுக்கொன் றதுதானே யிதுதானு யிதுதானே யதுதானு யிருத்தலாற் புறம்பிற் பிரிக்கும் பேதமில்லாம லிருந்தாலுமுள்ளே பிரியாமற்பிரிக்கும் பேதமுண்டென்று பெரியோர் பேசுவார்கள். (உஎ)

அதுவன்றியும் மஃவிடத்தான்மாவென்றது இலக்கணயிஞலே பின்னப் பொருளுமாமென்று பேசுகின்றார்.

புந்தியைமனமதென்றுமனமதுபுந்தியென்றுஞ்
சிந்தையைச்சீவனென்றுஞ்சீவனைச்சிந்தையென்று

மூந்தனையான்மாவென்றுமான்மாவைமூந்தனென்றும்
வந்திடுமென்றனுன்மாவென்றதுமற்றொன்றைக்காண்

இ-ள். புந்தியைமனமதென்றும் - (காரியவிலக்கணையினாலே) புத்தியை மனமென்றும்—மனமதுபுந்தியென்றும் - (காரணவிலக்கணையினாலே) மனதைப் புத்தியென்றும்—சிந்தையைச்சீவனெனறும் - (உபகார விலக்கணையினாலே) சித்தத்தை ஆன்மா வென்றும்—சீவனைச்சிந்தையென்றும் - (சமீபவிலக்கணையினாலே) யான்மாவைச் சித்தமென்றும்—மூந்தனையான்மாவென்றும் - (உபகார விலக்கணையினாலே) சிவனைச் சீவனென்றும்—ஆன்மாவைமூந்தனென்றும் - (தன்மானுகிருதி லக்கணையினாலே) சீவனைச் சிவனென்றும்—வந்திடும் - இலக்கணைகளினாலே பொருளுரைக்கப்படு மாதலால்—என்றனுன்மாவென்றது—மற்றொன்றைக்காண்-ஆத்மோபகாரகரா யிருக்கின்ற சிவனைக்காண். எ-று. (உஅ)

திரும்ப உபகாரியோபகாரகாதேயாதார விலக்கணைகளினாலே அறிவுமுதலாயின ஆத்மாவென்று சொல்லப்படுமென்று சொல்லுகின்றார்.

அறிவுடல்சிந்தையான்மாவணைதலாலான்மாவென்ப
ரெறிசுடர்விளக்கிருக்குமிடத்தையும்விளக்கென்றாற்போற்
பொறிபுலன்கரணமெல்லாம்புலப்படும்பேதமாகிப்
பிறிதராதறிவதான்மாவறிபொருள்பின்னமாமே.

இ-ள். அறிவு - இந்திரியம். புத்திவிருத்திப் பிரகாசமுமாம்—உடல்-தூலசரீரம்—சிந்தை - சித்தம் - அதனாற் காண்பிக்கப்படும் அகங்காராதிகளுமாம்—(இவைகளை) ஆன்மா—அணைதலால்-பொருந்துதலால்—(அவைகளை யாதார விலக்கணையினாலே) ஆன்மாவென்பர்—(அஃதென்போலென்னில்) எறிசுடர்விளக்கிருக்குமிடத்தையும்—தகளியையும்-விளக்கென்றாற்போல—பொறிபுலன்கரணமெல்லாம் -புறக்கரணமாகியவிந்திரியங்கள்கன்மமாகிய சத்தாதி விடயங்கள் அந்தக்கரணமாகிய மனம் புத்தி யகங்காரங்கள் முதலமுற்றும்—புலப்படும்பேதமாகி-ஆன்மாவுக் கன்னியமாயு மொன்றுக்கொன்று வேறாயு மறியப்படும்—பிறிதராதறிவதான்மா - வியாபித் தந்த வறியப்படும்பொருளைக் காண்பதுயிர்—அறிபொருள்பின்னமாமே-அறியப்படும் பொறிமுதலியன கன்மமாதலால் வித்தைகாரணமாக வறியுங்கர்த்தாவுக்கு வேறுதானே. எ-று. (உசு)

பெத்தாத்மா முத்தாத்மாவாகமுந்திக் கருவிகளைக்கொண்டு சிவன்காண்பிக்கக் காண்பனென்று காண்பிக்கின்றார்.

கண்டுணர்புருடன்வேறுகனவுகண்டொடுங்கிக்காய
முண்டியும்வினையுமின்றிக்கிடந்துயிர்த்திடவுணர்ந்து

கண்டிடுங்கனவுஞ்சொல்லிபொடுக்கமுங்கருதிவேறு
யுண்டியும்வினையுமுற்றிங்குணர்த்திடவுணராநிற்கும்.

இ-ள். கண்டுணர்புருடன் - சாக்கிராவத்தையிற் சத்தாதிபுலன்களை யுள்ளபடி யறிந்தவான்மா—வேறுகனவுகண்டு - சுவப்பனவத்தையில் நித்திராவசத்தினாலே அதுவென்றறியும்பொருளிதுவென்றுதோற்ற அப்படி மயங்கியறிந்து—ஒடுங்கி - சுழுத்தியவத்தையிற் புறப்பொருளறிவின்றிஆந்தரதேகமாத்திர வறிவாய்—காயமுண்டியும் வினையுமின்றிக் கிடந்துயிர்த்திட - துரியாவத்தையிற் பிராணவாயுமாத்திர மியங்கிடச் சரீரம் புசிப்புத்தொழில்களின்றித் துயின்று சூக்குமவறிவாய்—உணர்ந்து- (திரும்பச்சாக்கிரத்திற் சுகமாய் நானித்திரை பண்ணினேனென்று துரியாதீதத்திற்சுகானுபவரூப வதிசூக்குமவறிவைச் சூசிப்பித்து) அறிந்து—கண்டிடுங்கனவுஞ்சொல்லி-சுவப்பனத்திற் றோற்றிய நடப்பைப்பிறர்க்குப் போதித்து—ஒடுக்கமுங்கருதி-பிற நினைவொன்று மின்றிச் சுகமாய் நித்திரை பண்ணினேனென்று சுழுத்தி துரியந் துரியாதீதங்களைத் தூல சூக்கும சூக்குமதமப் பிரகாரத்தினாலே சூசிப்பித்து—வேறுயுண்டியும் வினையுமுற்று - சுவப்பனத்திற்றோற்றிய புசிப்புத்தொழிலுக் கன்னியமாய்ப் புசிப்புத் தொழில்களைப்பெற்று—இங்குணர்த்திடவுணராநிற்கும் - சாக்கிரத்திற் சிவன் தத்துவாதிதேவதாத் துவாரத்தினாலே தத்துவங்களைச் சேட்டித்தறிவிக்க வறியாநிற்பன். எ-று. (௩௰)

புருடன்றானேயறிவ னறிவிக்கவேண்டுவதில்லையென்றவிகாரவாதிபேச நிராகரிக்கின்றார்.

புருடனேயறிவனாகிற்பொறிபுலனாதிபோதந்
தருவதெனறிவுமாயாதனுகரணாதிபற்றி
வருவதிங்கணாதியாகமலத்தினின்மறைந்துநிற்ப
னருவனாயிவற்றோடாணுமமைச்சருமரசும்போல்வன்.

இ-ள். புருடனேயறிவனாகில் - ஆன்மாவே சுவதந்திரனாகி யறியப்படும்பொருளை யறிவனென்று நீசொல்லில்—பொறிபுலனாதிபோதந்தருவதென்—இந்திரியங்கள் சத்தப்பரிசரூபரசகந்தமுதற் பொருள்களினதுஞானத்தை யுண்டாக்குவதேது (அதற்கொருகாரணம் வேண்டும், சொல்லுவோங் கேட்பாயாக அந்தப்புருடன்)—அனாதியாகமலத்தினின்மறைந்து நிற்பனருவனாய்-உருவிலியாய்த் தொன்றுதொட்டு ஆணவத்தினாலறியாதிருப்பன் (அதனாலவனுக்கு)—அறிவு-ஞானம்—இங்கு - பெத்தனாயிருக்குமிடத்து—மாயாதனுகரணாதிபற்றிவருவது - மாயையினின்றுஞ் சிவனுண்டாக்கிக் கூட்டிய தூலசரீர சூக்குமசரீரங்களோடு பொருந்தி விளங்

கும். (முத்தனுயிருக்குமிடத்து முத்தனுமவதரமாத்திரத்திற் சிவசத்திமாத்திரத்தோடு பொருந்தி விளங்கி யெங்கும்விரிந்து வியஞ்சகத்தைத்திரும்ப விரும்பாம விருக்கும் அப்போது)—(இப்போது)இவற்ருேடாளு மமைச்சருமரசும்போல்வன்-இந்தப் பொறிமுதலியவற்ருேடு, மந்திரியு மிராசாவு மொப்பப் பொருந்தி வாழ்வன். (கக)

அப்படியிருந்தாலும் புருடனுக்கே முதன்மையென்பது போதிக்கின்ருர்.

படைகொடுபவனிபோதும்பார்மன்னன்புகும்போதில்விற்
கடைதொறும்விட்டுவிட்டுக்காவலுமிட்டுப்பின்னை
யடைதருந்தனியேயந்தப்புரத்தினிலதுபோலான்மா
வுடலினிலவத்தையைந்துமுறுமுயிர்காவலாக.

இ-ள். உயிர்காவலாக - பிராணவாயுச் சரீரக்காப்பாக. மற்றது வெளிப்பொருள். (கஉ)

இராசாத் தனது பரிசார சனங்களைப்போல, வான்மா தத்துவதாத்துவிகங்களை நிறுத்துந்தான முணர்த்துகின்ருர்.

சாக்கிரமுப்பத்தைந்துநுதலினிற்கனவுதன்னி
லாக்கியவிருபத்தைந்துகளத்தினிற்சுழுனைமூன்று
நீக்கியவிதயந்தன்னிற்றுரியத்திலிரண்டுநாபி
நோக்கியதுரியாதீதநுவலின்மூலத்திஞென்றே.

இ-ள். இதற்குவகை சூத்திரமுடிவி லவத்தைவிசுதாரத்தி லறியப்பண்ணுகிறோம். (கங)

கீழாலவத்தையைச் சொல்லி மத்தியாலவத்தையைச சொல்லாநின்று சுத்தாவத்தைத் தோற்றரவு முணர்க்கின்ருர்.

அறிதருமுதலவத்தையடைதருமிடத்தேயைந்துஞ்
செறிதருங்கரணந்தன்னிற்செயருறுங்கண்டுகொண்ணி
பிறிவிலாஞானத்தோரும்பிறப்பறவருளாலங்கே
குறியொடுமைந்தவத்தைக்கூடுவர்கீடுகூட.

இ-ள். அறிதருமுதலவத்தை - சகலாவத்தை யதனிடத்தில் மத்தியாலவத்தை தோற்றுமென்று பொருள். விசுதரிக்குமிடத்தில் விசுதரிக்கிருேம். (கச)

சுத்தாவத்தைச் சொரூபஞ் சொல்லுகிறார்.

ஐந்துசாக்கிரத்திறன்குகனவினிற்சுழுனைமூன்று
வந்திடுந்துரியந்தன்னிலிரண்டொன்றுதுரியாதீதந்
தந்திடுஞ்சாக்கிராதியவத்தைகடானந்தோறு
முந்திடுங்கரணந்தன்னிற்செயன்றுமுணர்ந்துகொண்ணீ.

இ-ள். அந்தக்கரணாதிப் பிரேரக பிரணவ பஞ்சகலாரூபிகளா யிருத யத்திருக்கின்ற சுத்ததத்துவமைந்தையும் பற்றி யிருதயமுதற்பிரமரந்திர முடிவாகவருஞ் சாக்கிராதிகளைந்தும், அகாராதியைந்துதொடங்கி மேற் கீழ்முறைமையி லொவ்வொன்று குறைந்துவரும் அகாராதி ரூபசுத்தவித் தையாதி சிவதத்துவமைந்தையு முறைமையிலுடைத்தாம்; வித்தரிக்குமி டத்து வித்தரிக்கின்றோம். எ-று. (ருடு)

சொல்லிய கீழாலவத்தை மேலாலவத்தை யிரண்டி னது செய்தி யிசைக்கின்றார்.

இருவகைச்சாக்கிராதியவத்தைகளியல்புதானு
மொருவுகைகீழ்நோக்கியுற்பவங்காட்டுமொன்று
பெருகமேனோக்கித்தியபிறப்பறுத்திடுமியோகிற்
றருவதோர்சமாதிதானுந்தாழ்ந்துபின்சனனஞ்சாரும்.

இ-ள். யோகிற்றருவதோர்சமாதி - சாலம்ப சிவயோகசமாதி. சன னம் - அபிமதபுவனேசுர சாரூபம். மற்றதுவெளிப்பொருள். (ருசு)

முன்சொல்லிய கீழாலவத்தை மத்தியாலவத்தை மே லாலவத்தைகட்குக் காரணவத்தைகளைத் தொகு த்து வகுத்துரைக்கின்றார்.

கேவலசகலசுத்தமென்றுமூன்றவத்தையான்மா
மேவுவன்கேவலந்தன்னுண்மைமெய்ப்பொறிகளெல்லாங்
காவலன்கொடுத்தபோதுசகலனுமலங்களெல்லா
மோவினபோதுசுத்தமுடையனுற்பவந்துடைத்தே.

இ-ள். உண்மை - பசுத்தன்மை. மற்றதுவெளிப்பொருள். (ருஎ)

கேவலாவத்தையி லாத்மாவினது சொரூபலக்கணந் தோய்ந்த தடத்தலக்கணஞ் சாற்றுகின்றார்.

அறிவிலனமூர்த்தனித்தனராகாதிகுணங்களோடுஞ்
செறிவிலன்கலாதியோடுஞ்சேர்விலன்செயல்களில்லான்

குறியிலன்கர்த்தாவல்லன்போகத்துக்கொள்கையில்லான்
பிறிவிலன்மலத்திஞேடும்வியாபிகேவலத்திலான்மா.

இ-ள். வெளிப்பொருள். (௩௮)

சகலாவத்தையி லான்மாவின திலக்கணஞ் சாற்று கின்றார்.

உருவினைக்கொண்டுபோகபோக்கியத்துன்னல்செட்பல்
வருசெயன்மருவிச்சத்தமாதியாம்விடயந்தன்னிற்
புரிவதுஞ்செய்தங்கெல்லாயோனியும்புக்குழன்று
திரிதருஞ்சகலமானவவத்தையிற்சீவன்சென்றே.

இ-ள். புரிவதுஞ்செய்து - விரும்புவதுஞ்செய்து. மற்றதுவெளிப் பொருள். (௩௯)

சுத்தாவத்தையி லான்மாவினதிலக்கணஞ் சொல்லு கின்றார்.

இருவினைச்செயல்களொப்பிலீசன்றன்சத்திதோயக்
குருவருள்பெற்றுஞானயோகத்தைக்குறுகிமுன்னைத்
திரிமலமறுத்துப்பண்டைச்சிற்றறிவொழிந்துஞானம்
பெருகிநாயகன்றன்பாதம்பெறுவதுசுத்தமாமே.

இ-ள். இருவினைச்செயல்களொப்பில்-மலபரிபாகாதிக்கத்தினுலேபு ண்ணியபாபப் பலோபகாராபகாரங்களிலே சமபுத்தி வந்துள்ளளவில்— ஈசன்றன்சத்திதோய - சிவனது சத்திநிபாதம்வர—குருவருள்பெற்று- தேசிகனது தீக்ஷானுக்கிரகத்தையடைந்து—ஞானயோகத்தைக்குறுகி - (சுப்பிரபேதத்திற் சொல்லியபடிக்கு) சமாதிதியானங்களை முன்பின்ஞ கப் பொருந்தி (சிவதன்மோத்தரத்திற் சொல்லியபடிக்குச் சாத்திரமுக மாய்ச் சிவனைப் பரோக்ஷஞானமாய்ப் பார்த்தல் தியானித்தல்களைப் பண் ணியென்றுமாம்)—முன்னைத்திரிமலமறுத்து- அனுதிமல்மாயாகன்மங்களை விட்டு—பண்டைச்சிற்றறிவொழிந்து - மல்மாயாகன்மங்களாற் பண்ணப் பட்டுத்தொன்றுதொட்டுவருங் கிஞ்சிஞ்ஞத்துவங் கிஞ்சிற்கர்த்திருத்துவத். தை நீங்கி—ஞானம்பெருகி-சருவஞ்ஞத்துவ சருவகர்த்திருத்துவரூப சிவ த்துவம் விரிந்து—நாயகன்றன்பாதம்பெறுவது - சிவசத்திசமான தனது சிற்சத்தியைப் பொருந்துதல்—சுத்தமாமே - சுத்தாவத்தைதானேயாகும் எ-று.

அவத்தைகளினது முறைமை யறைகின்றும்.

கிரமத்திற் கேவலாவத்தை யென்றுஞ் சகலாவத்தை யென்றுஞ் சுத் தாவத்தை யென்றுங் காரணவத்தை மூன்று பிரகாரமாம்; அந்த மூன்றி

னுள்:—சகலாவத்தையிற் றத்துவ தாத்துவிகங்களை மேல்விடுதன் முறைமையிற் கேவலாவத்தையைக் கீழ்த்தீண்டி முறைமையிற் செல்வது கீழாலவத்தை;கேவலாவத்தையைக் கீழ்விடுதன் முறைமையிற் சகலாவத்தையைமேற்றீண்டி முறைமையிற்செல்வது மேலாலவத்தை;கேவலாவத்தை சகலாவத்தை யிரண்டையுந்தீண்டி மத்தியா யிருப்பதுமத்தியாலவத்தை; கேவலாவத்தையைத் தீண்டாது சகலாவத்தை மாத்திரத்தைத் தீண்டி நிற்பது பிரோரகாவத்தை; கேவலாவத்தை சகலாவத்தைக ளிரண்டையுங் கீழ்முறைமையில் விட்டுச் சுத்தாவத்தையை மேன்முறைமையிற் றீண்டி முச்சிவத்துவாபி வியத்தி முறைமையி லுண்டாம் பொருட்டு, இருதயத்தினின்றும் புருவமத்திய நுனிமட்டிற் கண்டத்தினின்றும் பிரமரந்திர நுனிமட்டிற் புருவமத்தியத்தி னின்றுந் துவாதசாந்த நுனிமட்டிலோரொட்டாக விருதயத்தினின்றுந் துவாதசாந்த நுனிமட்டிற்றான் இவைகளிற் போய்த் தங்குவது நின்மலாவத்தையென்று பேர்பெற்றமேலாலவத்தை.

இப்படி காரணவத்தை மூன்றுங்காரியாவத்தை யைந்துங் கூட்டியெட்டுப் பிரகாரமாம். எட்டினுள் முறைமையிற் கேவலாவத்தா லக்கணங் காண்பிப்பாம்:—விஞ்ஞான கைவல்லியத்திறறான், பிரளய கைவல்லியத்திற்றான், நித்திய நித்திரா கைவல்லியத்திற்றான்,சிவதத்துவத் தானமாயிருக்கும் பிரணவ பஞ்சகலாவிர்ப்பூத வதிசூக்குமை முதலிய வைந்து வாக்கொடு கலைமுதற் பிருதிவி முடிவாகிய முப்பது கலைகள் மாயை மகாமாயையி னொடுங்கத்தான், தொழிலற் றிருக்கத்தான், மலகலுஷிதனுய்த்தான்,மல கன்ம கலுஷிதனுய்த்தான்,நித்திரா முத்திரிததத்துவதாத்துவிக மலகன்ம மோக கலுஷிதனுய்த்தான், சும்மாவிருத்தல்.

சகலாவத்தா லக்கணங் காண்பிப்பாம்:—திரும்பச் சுத்தாசுத்தகலைகள் கூடச் சுத்தபெத்தமுத்தனுயு மசுத்தபெத்தனுயும் சுத்த மாயாபுவனங்களிலேயு மசுத்தமாயாபுவனங்களிலேயும் போகத்தைப் புசித்திருத்தல். நித்திய பெத்தமத்தியநித்திரா கேவல நீங்க வப்போதப்போது போகத்தைப் புசித்திருத்தலுமாம்.

சுத்தாவத்தா லக்கணங் காண்பிப்பாம்:—சுத்த சகலத்துவ மென்று முன்சொல்லிய வபரமுத்தியும் பரமுத்தியும் அந்த விருமுத்தியின் பொருட்டுபாசனையுமாம்.

கீழாலவத்தா லக்கணங் காண்பிப்பாம்;—நித்திய நித்திரா கேவலப்படு முறைமையிற் பூதமைந்தும், தன்மாத்திரை யைந்தும், சீவியாதிருப்பத் தூலசரீர சம்பந்த தாத்துவிகமா யிருக்கும் வாயுக்கள் பத்தும், சூக்குமசரீர சம்பந்ததத்துவமாயிருக்கும் வாக்காதிகன்மேந்திரியங்களைந்தும்கிரி,

டாசத்தியோடு கூடிய கன்மேந்திரிய தாத்துவிகக் கிரியையென்கின்றவச னாதி யைந்தும், சூக்குமசரீர சம்பந்த தத்துவமென்கின்ற ஞானேந்திரிய மைந்தும், ஞானசத்தியோடு கூடிய ஞானேந்திரிய தாத்துவிக ஞானத் துக்கு விஷயமாகிய தாத்துவிக சத்தாதி யைந்தும், தத்துவமென்கின்ற வந்தக்கரணங்களுன்கும், புருடதத்துவ மொன்றும்,ஆக முப்பத்தைந்துங் கேளாமற் கேட்டுத் தொடாது தொட்டுப் பாராது பார்த்து ரசியாது ரசி த்து மணவாது மணந்து இலாடத்திற் சீவித்து நிற்றல் கீழாலவத்தையிற் சாக்கிரம்.

இந்திரியம் பத்துஞ் சீவியாதிருப்ப வாயுப்பத்தும், வசனாதியைந்தும், சத்தாதியைந்தும், மனமுதலந்தக்கரண நான்கும்,புருடதத்துவமொன்றும் ஆகவிருபத்தைந்தும் நித்திரா மயக்கத்தினலே யதுவென்பதை யிதுவென் றுபாசமாயறிந்து கண்டத்திற் சீவித்து நிற்றல் கீழாலவத்தையிற்சொப் பனம்.

வாயுவொன்பதும், வசனாதியைந்தும, சத்தாதியைந்தும், மனமுதலந் தக்கரண மூன்றும்,சீவியாதிருப்பப் பிராணவாயுவும் மனோவத்தாவிசேஷ சித்தமும் புருஷதத்துவமு மாக மூன்று மினிமேல் வருஞ் சாக்கிரத்தில் வசனிக்கப்படாத வத்[illegible]சிந்தனத்தைப் பண்ணி யிருதயத்திற் சீவித்துநிற் றல் கீழாலவத்தையிற் சுழுத்தி.

சித்தஞ் சீவியாதிருப்பப் பிராணவாயுப் புருஷதத்துவ மாகவிரண் டுஞ் சரீரக் காப்புச் சூக்கும சிந்தனங் காண்பித்து நாபியிற் சீவித்து நிற் றல் கீழாலவத்தையிற் றுரியம்.

பிராணவாயுச் சீவியாதிருப்பப் புருஷதத்துவ மொன்று மினிமேல் வருஞ் சாக்கிரத்திற் சுகமாய் நாணித்திரை பண்ணினே னென்பதனாற் சூசிக்கப்பட் டாந்தர சரீர தமோமாத்திரத்தை விஷயீகரித்து மவுட்டிய த்துண் மூழ்கி வேதனத்தை யொழிந் தொழியாம விருக்குஞ் சிவதத்துவ கர்ப்பநாத மணந்த கலாதி கலுஷிதமாய்ப் பண்ணி யிலிங்கத்திற்சீவித்து நிற்றல் கீழாலவத்தையிற் றுரியாதீதம்.

மேலாலவத்தா லக்கணங் காண்பிப்பாம்:-கலாதி பஞ்சகஞ்சுக புரு ஷன் பிரணவ கலைகளைந்தினுட் போதமூலாவதி சூக்குமைக்குக் காரண மாகிய சிவதத்து வமென்கிற நாதத்தோடு கூடி லிங்கத்தில் மலத்தோடு மணந்து சீவியாநிற்றல் மேலாலவத்தையிற் றுரியாதீதம்; நிருவிகற்ப ஞா னமூல சூக்குமைக்குக் காரணமாகிய சத்திதத்துவ மென்கின்ற விந்து வோடு கூடி நாபியில் மாயையோடு மணந்து சீவியாநிற்றல் மேலாலவத் தையிற் றுரியம்; சவிகற்ப ஞானமாதலுக் கியத்தன மாகாநிற்கும் நிரு விகற்ப ஞானமூல பைசந்திக்குக் காரணமாகிய சதாசிவ தத்துவமென்

னின்ற மகாரத்தோடுகூடி யிருதயத்திற் சித்தமூலப்பிரகிருதியோடு மணந்து சிவியாநிற்றல் மேலாலவத்தையிற் சுழுத்தி; சவிகற்ப ஞானமூல மத்திமைக்குக் காரணமாகிய வீசுரதத்துவ மென்கின்ற உகாரத்தோடு கூடிக் கண்டத்தி லந்தக்கரணத்தோடு மணந்து சிவியாநிற்றல் மேலாலவத்தையிற் சொப்பனம்; பிறனுடைய செவிக்குட்போய்ச் சொல்லிய முறைமையில் சவிகற்ப ஞானத்தை யுண்டாக்கும் வைகரிக்குக் காரணமாகிய சுத்த வித்தியா தத்துவ மென்கின்ற அகாரத்தோடு கூடி யிலாடத்திற் புறக்கரணத்தோடு மணந்து சிவியாநிற்றல் மேலாலவத்தையிற் சாக்கிரம்.

மத்தியாலவத்தா லக்கணங் காண்பிப்பாம்:-முன்கண்ட புருஷனைத் தூரத்திற் கண்டு நாமசாதிகளினது மறதி மத்தியாலவத்தையிற் சாக்கிராதீதம்; பெருமூச்சறைந்து விசாரித் தறிவோ மென்பது மத்தியாலவத்தையிற்சாக்கிர துரியம; முன்கண்ட விடமாத்திரந் தோற்றுதல் மத்தியாலவத்தையிற் சாக்கிரசுழுத்தி; முன்னவ்விடத்திற் கண்டபுருஷனிவனென்பது மத்தியாலவத்தையிற் சாக்கிரசொப்பனம்; சந்தோஷத்தோடு பார்த்துக் கட்டிக்கொள்ளுதல் மத்தியாலவத்தையிற் சாக்கிரசாக்கிரம்.

பிரேரகாவத்தா லக்கணங் காண்பிப்பாம்:பிரணவ பஞ்சகலாரூபமா யிருதயத்திருக்கின்ற சிவதத்துவ மைந்தும் கலைமுதல் வித்தியாதத்துவமேழும், மாத்மதத்துவத்துக்குள ளந்தக்கரணநான்கும், புறக்கரண மைந்தினு ளுருபாதிக் குசிதமா யிருக்கின்ற வொன்றும், தன்மாத்திரைகளோடொற்றுமையா யிருக்கும் பூதங்க ளைந்தினுள் நேத்திராதிக் குசிதமாயிருக்கின்ற வொன்றும், ஆகப் பதினெட்டுத் தத்துவமுஞ் சிவியாநிற்பதுபிரேரகாவத்தை; அந்தப் பிரேரகாவத்தையிற் றத்துவங்களினது தொழின்முறைமை மானதப் பிரத்தியக்ஷப் பிரசங்கத்திலே காண்பித்தோங் கண்டுகொள்க. அந்தப் பிரேரகாவத்தையி லொருபொருளைக் கண்டது சாக்கிரம்; நிச்சயித்தது சொப்பனம்; கலந்தது சுழுத்தி; அதிலாவேசந் துரியம்; அதி லவசந் துரியாதீதம்.

நின்மலாவத்தை யென்கின்ற மேலாலவத்தாலக்கணங் காண்பிப்பாம்:—அது வெகுபிரகாரமா யிருக்கும். அதி லொருபிரகாரங் காண்பிப்பாம்:—புறக்கரண முட்கரணங்களோடு கூடத் தன்னைக்காண்பது சாக்கிரம்; புறக்கரண நீங்கி யுட்கரண விருத்தி மாத்திரத்தோடு தன்னைக் காண்பது சொப்பனம்; உட்கரண நீங்கிச் சொல்லுதற் கரிதாயு மறிதற்கரிதாயுந் தன்னைக்காண்பது சுழுத்தி; சின்மாத்திரமாய்த் தன்னைக்காண்பது துரியம்; சிவனுக்கொப்பச் சிவத்துவாபிவியத்திமானாகத் தன்னைக் காண்பது துரியாதீதம்.

திரும்ப வதிலொரு பிரகாரங் காண்பிப்பாம்:— (பிண்டத்து மண்டத்து முள்ளும் புறம்பும் அபரநாதம் அபரவிந்து பரநாதம் பரவிந்து ரூபமாய்ச் சத்தார்த்தமா யிருக்கின்ற சிவதத்துவமுதற் சுத்தவித்தை ஈறுகுஞ் சிவதத்துவ பஞ்சகரூபியாகும் பிராசாத சோடச கலைகளைப் பற்றி வருவதோரவத்தை ஞானசித்தியிற் சொல்லப்பட்டது.) மூலாதாரத்தைத் தொட்டு இருதயத்திற் பிராசாத மந்திரத்தினுற்பத்தி சாக்கிரம்.; கண்டமுதற் றானம்பற்றிச் சமனாந்தமாகச் சின்மாத்திராத்மா மணப்பமந்திரநடப்பது சொப்பனம்; உன்மனரூபமாய் மந்திரமகாமாயையி லயித்தல் சுழுத்தி; உன்மன சூனியந் துரியம்; உன்மனமூலசுழுத்தித் தானத்துச் சின்மாத்திராத்மாவாகிய வாத்ம தத்துவமா யிருந்துன்மன்னியந்த துரியத்தானத்துப் பரமென்கின்ற பரமாத்மாவாகியவித்தியாதத்துவமா யிருந்து சிவத்துவாபிவியத்தி பொருந்திச் சிவமென்கின்ற சிவாத்மாவாகிய சிவதத்துவமாய் மாந்திரிகன திருத்தல் துரியாதீதம்.

திரும்பவதிலொரு பிரகாரங்காண்பிப்பாம்:—பிராசாத கலைகள்போலமுன்சொன்ன பிரகாரஞ் சிவதத்துவ பஞ்சகரூபியாய்ப் பிராசாத கலாகர்ப்பங்களா யிருக்கின்ற அகாராதி நாதாந்த பிரணவ பஞ்சகலைகளைத் தொட் டிருதயமுதற் றுவாதசாந்த வியாபகப் பிரமரந்திர முடிவாகும் பஞ்சாதாரத்துச் செல்லுந் தன்னையுஞ் சிவனையுஞ் சாக்கிராதி துரியாதீதாந்த சாக்ஷிரூப பிரமாதி சதாசிவாந்த தேவதாகாரமாய்க் கண்டு அந்த அவத்தையைந்தும் விட்டுக் கடந்து போமிடத்துச் சமனாந்தத்தில் தற்காண்டல் சாக்கிரம்; தற்பரம்பார்த்தல் சொப்பனம்;தற்பரசமாவேசஞ் சுழுத்தி; தற்பரகோடியிற் றாக்குதல் துரியம்; தானதுவானது துரியாதீதம்.

திரும்ப வொருபிரகாரங் காண்பிப்பாம்:—(ஞானசித்தியிற் சொல்லியமூலாவத்தைக்குட் காண்பிக்கப்படும். அவாந்தராவத்தா பேதம் இரவுரவாதிகளிற் காண்பிக்கப்பட்டது.) அது வருமாறு:—சாக்கிரசாக்கிரம் சாக்கிரசொப்பனம் சாக்கிரசுழுத்தி சாக்கிரதுரியம் காலபரம் அதீதம் பரதரிசனம் விச்சுவக்கிராசம் உபசாந்தம் சிவதரிசனம் சாயுச்சிய மென்னும் பேதத்தினு லிந்த மேலாலவத்தை பதினொரு பேதம். சாக்கிரசாக்கிரமுதற் காலபராந்த மாத்மசாக்கிரமுத லாத்மதுரியாதீதாந்த மாகிய வாத்மாவின தைந்தவத்தை; சாக்கிரதுரியமுதல் விசுவக்கிராசாந்தம் பரசாக்கிரமுதற் பரதுரியாதீதாந்த மாகிய பரனதைந்தவத்தை;பரதரிசனமுதற் சாயுச்சியாந்தஞ் சிவசாக்கிரமுதற் சிவதுரியாதீதாந்தமாகிய சிவனதைந்தவத்தை; சாயுச்சிய கோடிக்குட் டசதுரியமுதற் றுரியகற்பனைகள் விழுந்திருக்கு மேற்போகாது. அதற்குள்:— ஆத்மசாக்கிரங் காரியவிசுவவியாத்தியென்கின்ற காரியவிசுவரூபம்; ஆத்மசொப்பனங் காரிய விசுவக்கிராசம்; ஆத்மசுழுத்தி காரிய விச்சுவோபசாந்தி; ஆத்மதுரிய மாத்மதரிசனம்; ஆத்

மதுரியாதீத மாத்மசாயுச்சியம்; பரசாக்கிரங் காரணவிச்சுவ வியாத்தியெ ன்கின்ற காரண விச்சுவரூபம்; பரசொப்பனங் காரண விச்சுவக் கிரா சம்; பரசுழுத்தி காரண விச்சுவோபசாந்தி; பரதுரியம் பரதரிசனம்; பர துரியாதீதம் பரசாயுச்சியம்; சிவசாக்கிரம் வாசனு விச்சுவ வியாத்தி யெ ன்கின்ற வாசனு விசுவரூபம்; சிவசொப்பனம் வாசனு விச்சுவக்கிராசம்; சிவசுழுத்தி வாசனுவிச்சுவோபசாந்தி, சிவதுரியஞ் சிவதரிசனம்; சிவதுரி யாதீதஞ் சிவசாயுச்சியம்; சிவசாயுச்சியஞ் சித்திக்கும்பொருட்டு ஆத்மசு ழுத்தி முதற் காலபராந்தந் தியானத்தானம்; அதீதமுதல் விச்சுவக்கிரா சாந்தஞ் சமாதித்தானம்; உபசாந்திமுதற் சாயுச்சியாந்தஞ் சாக்ஷாற்காரத் தானம், திரும்பவதிற் பிரமாதி பராதாந்தமாகிய வத்துக்களிலே பாாத தல் கிரகித்தல் தழுவுத லாவேசித்தல் அவசமாத லைந்து மொவ்வொன் றுக் கைந்தவத்தையா யறியப்படும்.

திரும்ப முன்சொல்லிய விந்தப்பதினேரவத்தைகளைத தனக்குள் வைத்த ஞானசித்தியில் மூலாவத்தை யைந்தினுட் டூல சிவத்துவாபிவிய த்தி சூக்கும சிவத்துவாபிவியத்தி பரசிவத்துவாபிவியத்திகள் கிரமத்தில வரும்பொருட்டு மூவைந்து பதினைந்தவத்தைகாண்பிப்பாம்:—இருதயத திற் சிவபாவனை பண்ணுமிடத்துக் குவிந்து இருதயமூலமுத லிருதயாக் கிராந்தம் துவர்தசாந்தத்திற் சிவபாவனை பண்ணுமிடதது விரிந்து இருதய முதற் றுவாதசாந்தாந்தந்தான் வியாபித்திருக்கும் பூதாத்ம அந்தராத்ம தத துவாத்ம சீவாத்ம மந்திராத்ம சாலம்ப சிவயோகங்களிலொன்றினுற்பூதா த்மாதி மந்திராத்மாந்தமாத்மாக்களைந்தில் மற்றநாலுமுள்வைத்தவொன றைச் சயம்பண்ணிநிராலம்ப சிவயோகம் பண்ணுமிடத்து, இருதயமுதற் புருவமத்தியாந்த மட்டாகத் தூலசாக்கிராதி தூலதுரியாதீதாந்த மாகிய வைந்தவத்தை தூலாத்ம தூலபர தூலசிவத் தோற்றமூன்ருகத் தூல சிவத்துவாபிவியத்தி தோற்றும் பொருட்டுக் காணப்படும்; கண்டமுதற் பிரமரந்திராந்த மட்டாகச் சூக்கும சாக்கிராதி சூக்கும துரியாதீதாந்தமா கிய வைந்தவத்தை,சூக்குமாத்ம சூக்குமபர சூக்குமசிவத்தோற்ற மூன்ரு கச் சூக்கும சிவத்துவாபிவியத்தி தோற்றும் பொருட்டுக் காணபபடுமே; புருவமத்தியமுதற் றுவாதசாந்தாந்த மட்டாகப் பரசாக்கிராதி பரதுரியா தீதாந்தமாகிய வைந்தவத்தை, பராத்ம பரபர பரசிவத் தோறறமூன்ரு கப் பரசிவத்துவாபிவியத்தி தோற்றும்பொருட்டுக் காணபபடும்; திருமப விதுதானே யோரொட்டாக முன்சொலலிய மூலாவதலைதயின தக்கிர மமாம்.

பின்னெரு பிரகாரங் காண்பிப்பாம்:— இருதயமுதற் றுவாதசாந்தா ந்தமாகமுன்சொல்லிய விந்தப் பதினைந் தவத்தைகளைத் தனக்குள் வை த்த மூலாவத்தை யிருதயமுதற் றுவாதசாந்தாந்தந் தொட்ட பிரமரந்திரா

ந்தமாகப் பூதாத்மா வென்கின்ற பஞ்ச பூதங்களிலே காண்க; பஞ்ச பூதங்களோடுகோத்த பஞ்ச கலைகளிலேதான் காண்க; பஞ்ச கலைகளோடு கோத்து ஐந்துபகுப்பாய்த் தத்துவாத்மா வென்கின்றதத்துவங்களிலே தான்காண்க; பஞ்சகலைகளோடு கோத்தஅந்தராத்மாவென்கின்ற அதிசூக்குமாதி வைகரியந்தமாகிய பஞ்சவாக்குகளிலேதான் காண்க ; பஞ்சகலைகளோடு கோத்த தூலதர தூலசூக்கும சூக்குமதர சூக்குமதம சிவாத்மாவென்கின்றவகங்காரங்களிலேதான் காண்க; (பஞ்சகலைகளோடு கோத்த மந்திராத்மா வென்கின்ற மந்திர கலைகளிலே மூலாவத்தை ஞானசித்தி வசனப்படி முன்புதானே காண்பித்தோம்.) இப்படிகாண்பித்த சுத்தாவத்தா பேதங்களெல்லாஞ் சாக்கிராதி துரியாதீதாந்தமாய் முன்சொல்லிய அசுத்தமாகிய கீழாலவத்தை யைந்தையு முறைமையிற் சயம்பண்ணும் பிரத்தியாகாரந் தாரணை தியானஞ் சமாதி சாக்ஷாற்கார மென்கின்ற வங்காங்கியோக ரூபமாகுஞ் சாக்கிரஞ் சுவப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமென்கின்ற அவத்தை யைந்தா யொன்றாயிருக்கின்ற சுத்தாவத்தை யொன்றிலேசுருக்கப்படும். (சo)

நான்காஞ் சூத்திரம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உகூ.

---

# ஐந்தாஞ் சூத்திரம்.

---

இவ் வான்மாக்களிடத்துத் தமதுமுதல் உபகார முணர்த்துகின்றார்.

பொறிபுலன்கரணமெல்லாம்புருடனாலறிந்தான்மாவை
யறிதராவவையேபோலவான்மாக்களனைத்துமெங்குஞ்
செறிதருஞ்சிவன்றனாலேயறிந்திடுஞ்சிவனைக்காணு
வறிதருஞ்சிவனேயெலலாமறிந்தறிவித்துநிற்பன்.

இ-ள். பொறிபுலன்கரணமெல்லாம்புருடனாலறிந்து - பொறி - பஞ்சேந்திரியங்க ளாகிய புறக்கரணங்கள்—கரணம் - மனாதிநான்காகிய வுட்கரணங்கள்—புலன் - விடயங்கள்—புருடனால் - ஆன்மாவால்—அறிந்து (சிற்சத்தியோடு புணர்ந்துணர்தலா லறிந்தென் றுபசரிக்கப்பட்டது)—ஆன்மாவை - பிரேரகனாகியபுருடனை — அறிதரா - காணா — அவையே போல - அந்த விருவகைக் கரணங்கள்போல—ஆன்மாக்கள்—அனைத்து

ம் - எல்லா விஷயங்களையும்—எங்குஞ்செறிதருஞ்சிவன்றனாலே - எவ்வி டத்தும் பரிபூரணனா யிருக்கு மீசரனாலே—அறிந்திடும் - (தூல சூக்கும பர சரீரங்களைப் புணர்த்திப் போதிப்ப) உணரும்—சிவனைக்காண - பி ரேரகனுமகிற்கு மீசரனைப் பாரா—அறிதருஞ்சிவனே - சுவதந்திர வறிவ னாகிய வீசுரனே — எல்லாமறிந்தறிவித்தாகிற்பன் - முன்சொல்லிய மு றைமையிற் சகலமு முணர்ந்துணர்த்தி யிருப்பன். எ—று. (உ)

அருகன் ஈசுரனறிவிப்பனாகில் அறிவனைவர்க்கு மொ ருபடித்தாக வேண்டுமென்ன மறுததுரைக்கின் றார்.

இறைவனேயறிவிப்பானேலீண்டறிவெவர்க்குமொக்குங்
குறைவதிகங்கடத்தங்கன்மமேற்கோமானும்வேண்டா
முறைதருசெயற்குப்பாருமுளரிகட்கிரவியும்போ
லறைதருநதத்தங்கன்மத்தளவினுக்களிப்பனாதி.

இ-ள். இறைவனேயறிவிப்பானேல் - சிவனே போதிப்பனாகில — ஈண்டறிவெவர்க்குமொக்கும்—இவ்விடத் துணர்வெல்லார்க்கு மேறுத குறையா தொத்திருக்க வேண்டும்—குறைவதிகங்கடத்தங்கன்மமேல் - அறிவின துயர்ச்சி தாழ்ச்சி புண்ணிய பாவ பாகத் தாரதம்மியத்தா லெ ன்று நீர்சொல்லில் — கோமான்வேண்டா (ஒருகாரியத்துக் கிருகாரணங் கற்பிப்பது கற்பனா கவுரவமெனுந் தோஷம் வருமாதலால்) ஈசுவரன் அறி விப்பனென்பது சொல்லவேண்டுவதில்லை—(சத்தியம் நீசொல்லியது. அ னைகாந்திகனாயிற்று அதெப்படி ?)—முறைதருசெயற்குப்பாரும் - மந்ததீ விராதி தொழிற்கு மந்ததீவிராதி பலம்பலிக்கும் பொருட்டு வேறு கார ணமாகிய பூமியும்—முளரிகட்கு - (பக்குவமுறைமை தப்பாதலருந்) தா மரைப் பூவுக்கு—இரவியும்போல் - சூரியனுமொப்ப—ஆதி - ஈசுவரன்— அறைதருந்தத்தங்கன்மத்தளவினுக்களிப்பன் - சொல்லப்பட்ட பலவித பக்குவ சககாரி கன்மங்களைப் பின்சென் றுயிர்களைப் போதிப்பன்.எ.று.

கர்த்தா வறிவிக்க வேண்டுவதில்லைக் கன்மத்துக் கீடா க வான்மாத்தானே யறிவனென்ன மறுத்துணர்த் துகினறார்.

அறிந்திடுமான்மாவொன்றைமற்றொன்றாலறிதலானு
மறிந்தவைமறத்தலானுமறிவிக்கவறிதலானு
மறிந்திடுந்தன்னையுந்தானறியாலமயானுந்தானே
யறிந்திடுமறிவனன்றுமறிவிக்கவறிவனன்றே.

இ-ள். அறிந்திமோன்மா - அறியுந்தன்மையை யுடைய வுயிர்—ஒன்றை - (சத்தமுதலிய விடயங்களி) லொருவிடயத்தை—மற்றொன்றால்- (சோத்திர முதலிய விந்திரியங்களில்) ஓரிந்திரியத்தால் — அறிதலானும் - உணர்தலானும்—அறிந்ததைமறத்தலானும் - உணர்ந்த சத்தமுதலிய விடயங்களை மலத்தோடு தமோகுணம் மருவ நினைவறுதலானும்—அறிவிக்கவறிதலானும் - அறிந்தவன் போதிக்க வுணர்தலானும்—அறிந்திடுந்தன்னையுந்தானறியாமையானும் - தன்னை நானென்று சுவசங்வேதனப்பிரத்தியட்சத்தினாற் கிஞ்சிஞ்ஞ கர்த்தாவாகி யறிந்தாலுஞ் சருவஞ்ஞனையுஞ் சருவ கர்த்தாவாயுஞ் சிவனைப்போலிருக்குந் தன்னை யுள்ளபடியுணரா திருத்தலானும்—தானேயறிந்திடுமறிவனன்றாம்- மலஞ் சிற்சத்தியை மறைத்தலால் மறைப்பில்லாத முத்தியிற் சுவதந்திர வறிவனானாலும் பெத்தத்திற் சுவதந்திர வறிவ னல்லவாம்—அறிவிக்கவறிவனன்றே - சிவன் பரதேக சூக்குமதேக தூலதேகமாகுந் திரிதேகங்களைக் கூட்டிப் போதிப்பக் கிஞ்சிஞ்ஞனா யிருப்பன்றானே. எ—று. (௪)

சிவன் போதிக்கு முறைமையைப் போதிக்கின்றார்.

கருவியாற்பொருளாற்காட்டாற்காலத்தாற்கருமந்தன்னா
லுருவினாலளவானூலாலொருவனாலுணர்த்தலானு
மருவனையுண்மைதன்னிலறியாமைசிற்றலானு
மொருவனேயெல்லாத்தானுமுணர்த்துவனருளினாலே.

இ-ள். கருவியால் - பிரகிருதி குணதத்துவ நீங்கலாகக் கலாதத்துவமுத லிந்திரிய மீறாகுங் கரணங்களால்—பொருளால் - பூததன்மாத்திரைமுதலிய தத்துவத்திற்சித்த தாத்துவிக மாலை சந்தன மகளிர் முதலிய போக்கிய வத்துவினால்—காட்டால் - சூரியப் பிரகாசமுதலிய வொளியால்—காலத்தால் - நியதிதுணையாகுஞ் சூக்கும காலதத்துவப் பிரேரண சகாய தூலகாலதத்துவ காரியமாகிய செல்காலம் நிகழ்காலம் வருங்கால மென்கின்ற காலத்தால்—கருமந்தன்னால் - புண்ணிய பாவமென்கின்ற வதிருட்டத்தால்—உருவினால் - (கருவியாலென்பது சூக்குமதேகத்தாலென்று பொருளாகையால், உருவினாலென்றது) தூலசரீரத்தால் —அளவால்- (கருவியாலென்றது கொண்டு பொருள் மறைப்புப் பொருந்தாத கருவிகலக்குஞ் சிற்சத்திப் பிரத்தியக்ஷஞ் சித்தித்தலால் இவ்விடத்தளவினாலென்பது) பொருள்மறைப்புப் பொருந்திய சருவிகலக்கு மிலிங்கஞ் சேர்ந்த) சிற்சத்தி யனுமானத்தால்—நூலால் - பொருள் மறைப்புப் பொருந்துங் கருவிகலக்குஞ் சத்தஞ் சார்ந்த சிற்சத்தியாகு மாகமத்தால்—ஒருவனால் - ஆகமத்தடங்கு முலோக வாதத்தால்—உணர்த்தலானும் - போதித்தலானும்—உண்மைதன்னிலருவனையறியாமைசிற்றலானும் - கேவல

த்துத் தூல சூக்கும பர தேகங்க ளில்லாதிருக்கவுஞ் சுவதந்திர வறிவனு ய்த் தோற்று திருத்தலானும் (சிவன் முத்தி வியத்தி பண்ணுமிடத்துக்க ருவியின் மறையாது பண்ணி யுணர்த்தி நிற்றலானு மென்று பொருள்)—ஒருவனே - ஒப்பற்ற சிவனே —எல்லாத்தானும் - சொல்லிய கருவி மு தலியவற்றால் —அருளினாலே - அவற்றின் மறைந் தவற்றைச் செலுத்து ஞ் சிவசத்தியால்—உணர்த்துவன் - போதிப்பன். எ—று. (ரு)

சிவன் கலாதத்துவாதி கருவிமுதலிய விளக்குக் கல ப்பின்றி நின்மல சிற்சத்தி மாத்திரத்தாற் சுவதந் திர வறிவனு யிருப்பனென்பது தோற்றுவிக்கின் றார்.

கருவியும்பொருளுங்காட்டுங்காலமுங்கன்மந்தானு
முருவமுமளவுநூலு மொருவனுமுணர்த்தலின்றி
யருவனாயகிலமெல்லாமறிந்தவைபாக்கிவேறா
யொருவனேயுயிர்கட்கெல்லாமுயிருமாயுணர்த்திநிற்பன்.

இ-ள். வெளிப்பொருள். (சு)

சிவன் சித்தசித்துக்களைச் சேட்டித்தாலும் மாயைமு தலிய சடபதார்த்தத்தோடு விகாரதோஷமு ம சேதனதோஷமும் வருமாதலாற் சங்யோக சம்பந் தியா யிரான்; மாயைமுதலிய வத்துவு மவனி டத்தசேதனதோஷம் வருமாதலாற் சமவாய சம் பந்தியா யிராது; விகாரதோஷமு மேகாற்மப் பிர சங்கமு முறைமையில் வருமாதலா லாற்மாக்களி டத்து மவ்விருவகைச் சம்பந்தியா யிரான்; காந்த ஞ் சன்னிதி மாத்திரத்தா லிரும்பிற்போற் சித்த சித்துக்களைத் தொடாது சங்கற்ப சத்திரூப விஷ யீகரித்தலாகிய தனது சன்னிதி மாத்திரத்தாற் சித்தசித்துக்களிற் காரியங் காணுமென்று செப்பு கின்றார்.

இறைவன்றன்சன்னிதிக்கணுலகின்றன்சேட்டையென்னு
மறைகளுமறந்தாய்மாயைமருவிடான்சிவனவன்கண்
ணுறைதராதசேதனத்தா லுருவுடையுயிர்கட்கெல்லா
நிறைபரன்சன்னிதிக்கணீடுணர்வுதிக்குமன்றே.

இ-ள், வெளிப்பொருள். (எ)

சரீரிகட்கே கர்த்திருத்துவங் காணப்படுதலாற் சரீரமி ல்லாத பரசிவனுற் பிரபஞ்சங் காரியப்படுமுறை மை யெப்படியென்ன, ஆன்மாவினது சங்கற்ப மாத்திர சன்னிதானத்தாற் றனதுசரீரத்தில்நடத் தலிருத்தல் முதலிய காரியங் காணப்படும். அது போலச் சிவனது சங்கற்ப மாத்திர சன்னிதான த்தாற் றனது சரீரமாக வுபசரிக்கப்பட்ட பிரபஞ் சத்திற் சிருட்டிமுதலிய காரியங்கள் காணப்படு மென்றும், பின் னந்தச் சிருட்டி முதலிய கிருத்தி யஞ் சிவனிடத் தசைதலில்லாமற் பிரபஞ்சத்தி லசைதலாய்த் தோற்றுமதேநடனமென்றுஞ்சொ ல்லுகின்றார்.

உலகமேயுருவமாகயோனிகளுறுப்பதாக
விலகுபேரிச்சாஞானக்கிரியையுட்கரணமாக
வலகிலாவுயிர்கட்கெல்லாமிருபயனுகவைந்து
நலமிகுதொழில்களோடுநாடகநடிப்பனுதன்.

இ-ள். உலகமேயுருவமாக - தாத்துவிக சூக்குமதேக தத்துவ புவன பௌனதேகச் சிறப்புப் பொதுச்சிறப்புப் பிரபஞ்சமே யுபசார கற்பனை காட்டிய தூலசரீரமாக, அல்ல தந்தப் பிரபஞ்சத்துப் பரந் தப்பிரதேசத் திருக்கு மிந்திகை தீபிகை ரோசிகை மோசிகை ஊர்த்துவகை யாகித் தி வ்வியலிங்கத் திருக்கு நாதாந்த சூக்குமாதி சத்திகலாகர்ப்ப வபரநாத பஞ் சகலா புஞ்சமேதான் உபசார கற்பனைகாட்டிய தூலசரீரமாக, அல்ல த ந்த விருசரீரோபாதியுற்ற வீசானி பூரணி யார்த்தி வாமை மூர்த்தி யெ ன்கின்ற வட்டத்திரிங்சற் கலாபேத பஞ்சசத்தி கலையேதான் உபசார கற்பனைகாட்டிய தூலசரீரமாக—யோனிகளுறுப்பதாக - தேவ நர மிரு க பசு பட்சி முதலியவற்றிற்றூலசரீரங்க ளுபசார கற்பனை காட்டிய புற வுறுப் பவயவங்களாக, அல்ல தவ்வுறுப்புபாதியுற்ற அனந்த சத்திகளேதா ன் உபசார கற்பனைகாட்டிய புறவுறுப் பவயவங்களாக, வியாபினி வி யோமரூபை யனந்தை யனுதை யனுசிருதை யாகியதிவ்வியலிங்கத்துச்ச த்திருக்கு மபரநாத பஞ்சகலா புஞ்ச மூபசார கற்பனை காட்டிய புறக் கரணங்களாக, அல்ல தந்த விந்திரியோபாதியுற்ற ஆரணி செனனி ரோ தயித்திரி யென்கின்ற திரிசத்தி கலைகளேதான உபசார கற்பனை காட்டி ய புறக் கரணங்களாக—இலகுபேரிச்சாஞானக்கிரியையுட்கரணமாக - தி வ்விய லிங்கத்துச்சந் தாக்கி யிருக்குஞ் சமனுகலை யுபசார கற்பனைகாட்டி

ய அந்தக்கரணமாக, அல்ல தந்தச் சமனுகலை யுபாதியுற்ற வாதிசத்தி முன்பின்னுகப் பிரகாசித்துப் பெரிதாகு மிச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி திரிகலா புஞ்சந்தான் உபசார கற்பனை காட்டிய அந்தக்கரணமாகப் புறக்கரண முட்கரண மிரண்டுஞ் சூக்குமதேகமாதலால் உன்மனை யுபசார கற்பனைகாட்டிய பரதேகமாக, அல்ல தந்த வுன்மனை யுபாதியுற்ற பராசத்திதான் உபசார கற்பனை காட்டிய பரதேகமாக, இப்படி விசுவசரீர வயிந்தவசரீர சாத்தசரீரத்தினுல்—அலகிலாவுயிர்கட்கெல்லாமிருபயனுக - எண்ணிறந்த வான்மாக்களுக் கெல்லாம் பக்குவாபக்குவம் பார்த்துப் புத்திமுத்திக ளுண்டாகும் பொருட்டு — ஐந்தாகலமிகு தொழில்களோடோடாடகாடிப்பனுதன் - சிவன் பஞ்ச கிருத்திய நிருத்தம பண்ணுவன். எ-று. (௭)

சிவன் அவ்வாற்மவர்க்கத்துக்கு மலத்தின தபக்குவம் பக்குவம் பார்த்து முறைமையிற் சிற்றறிவு பேரறிவு சிற்சத்தியில் விளங்கப்பண்ணி முறைமையிற் போகமோக்ஷங்களைப் புணர்த்துவனென் றுணர்த்துகின்றார்.

தெரிந்துகொண்டோரோவொன்றுகச்சென்றைந்துபுலனும [பற்றிப
புரிந்திடுமுணர்வினேடுபோகமுங்கொடுத்தியோனி
திரிந்திடுமெதுவுஞ்செய்துசெய்திகண்டுயிர்கட்கெல்லாம
விரிந்திடுமறிவுங்காட்டிவீட்டையுமளிப்பன்மேலோன்.

இ-ள். ஒரோவொன்றுக - ஒவ்வொன்றுக— தெரிந்துகொண்டு - விசாரித் தையந்திரிவற்ற வறிவுக்குக் கிரகிக்கும்படி பண்ணி—சென்றைந்துபுலனும்பற்றி - பஞ்சேந்திரியவழி யறிவுவிளங்கச் சத்தப் பரிச ரூப ரச கந்தங்க ளோடு சம்பந்தித்து—புரிந்திடுமுணர்வினேடு - மாலையிது சந்தனமிது வனிதையிவள் பாம்பிது தேளிது முள்ளிது விடமிது உதிரமிது என் றென்றென்றிற் பண்ணிடும் புறத் தத்தியவசாயத்தி னசிதங்கிச புத்திவிருத்தி சிதங்கிச சிற்சத்தி விருத்தி மிச்சிர சிற்றறிவோடு—போகமுங்கொடுத்து - (திரும்ப வதனுற் புத்தியில், மாலைமுதலானவற்றி லொவ்வொரு வத்துப் பிரதிவிம்பத்தாற் பரிணமித்த சுக துக்க மோகங்களிற் சுகமிது துக்கமிது மோகமிது வென் றுட்சுகதுக்கமோகமயமாய் வருமுள் ளத்தியவசாயத்தினது சிதங்கிச சிற்சத்தி விருத்தி யசிதங்கிச புத்தி விருத்தியி லழுந்தி வித்தியாதத்துவ மாத்திரத்தோடு கிளம்பி யதின்மேல் விழுந்து பிரிக்கரிதாய் விளங்குஞ் சிற்சத்தி விருத்தி விளங்குதலாகிய) போகத்தையுங் கொடுத்து—விரிந்திடுமறிவுங்காட்டி - (சருவஞ்ஞத்துவ சருவகர்த்திருத்து வலக்கண சிவத்துவரூப சிற்சத்திவிருத்தி யென்கின்ற)

பேரறிவு பெருந்தொழில்களை விளக்கி—வீட்டையுமளிப்பன் - தனக்கொப்பாகிய மோக்ஷத்தையுங் கொடுப்பன். மற்றதுவெளிப்பொருள். (அ)

கடகாரியம் பண்ணுமிடத்துக் குலாலனுக்குத் தண்டசக்கிராதிபோலச் சிவனுக்குப் போகமோக்ஷகாரியம் பண்ணுமிடத்துப் பின்னகரண மில்லைச் சகச சத்தியே கரணமென்று சாற்றுகின்றார்.

அருளதுசத்தியாகுமரன்றனக்கருளையின்றித்
தெருள்சிவமில்லையந்தச்சிவமின்றிச்சத்தியில்லை
மருளினையருளால்வாட்டிமன்னுயிர்க்களிப்பன்கண்கட்
கிருளினையொளியாலோட்டுமிரவியைப்போலவீசன்.

இ-ள். அரன்றனக்கு - சிவனுக்கு—அருளது - மலமுத்தி சிவத்துவவியத்திரூப வனுக்கிரக கிருத்தியமாவது—சத்தியாகும் - சிவனதுசாமர்த்தியமாம் (சத்தியின தருளாகிய தொழில் சத்தியாகாதாதலால், ஆகுபெயராக்கி) அருளை - அனுக்கிரக கிருத்தியத்தை (பண்ணுமது சத்தியெனறு தொகைப்பொருள் விரித்துப் பொருள்கொள்க)—அருளையின்றித் தெருள்சிவமில்லை - பிறபொருட் பிரகாசமாகிய தீபசத்தியே தற்பொருட் பிரகாசமாகிய தீபமாயுமிருத்தல்போற் றாதாற்மிய சமவாய சம்பந்தினியாய்ப் பிறபொருளறிவாகிய சத்தியே தற்பொருளறிவாகிய சிவமுமாயிருத்தலா லவ் வனுக்கிரகத்தைப் பண்ணுஞ் சத்தியினின்றும் பிரித்துப் பக்குவாற்ம சிற்சத்தியின தறிவுதொழில்களைத் தனது சத்தியாகிய கரணததா லலர்த்துஞ் சிவமெனு மொருபொருள் தரிசிப்பதின்று—அந்தச்சிவமின்றிச்சத்தியில்லை - (தற்பொருட் பிரகாசமாகிய தீபமே பிறபொருட் பிரகாசமாகிய தீபசத்தியுமா யிருத்தல்போற் றாதாற்மிய சமவாய சம்பந்தியாய்த் தற்பொருளறிவாகிய சிவமே பிறபொருளறிவாகிய சத்தியாயுமிருத்தலால்) அந்தச் சிவத்தினின்றும் பிரித்துச் சத்தியெனு மொருபொருள் சாதிப்பதின்று (இப்படியிருக்குஞ் சத்தியே கரணமென்று சாதித்திருத்தலால்)— கண்கட்கிருளினையொளியாலோட்டு மிரவியைப்போல—ஈசன் - சிவன்—மன்னுயிர்க்கு - நிலைபெற்ற பக்குவாற்மாவினது சிற்சத்தியாகிய திருட்டிக்கு—அருளால் - அனுக்கிரகசத்தியால்—மருளினைவாட்டி - மறைக்கு முறைமையுடைய மலசத்தியைத் திரும்பு முறைமையுடையதாகச் செய்து (இருணீக்கத்தாற் கண்ணொளி காண்பதுபோ லெனப தேகதேசவுவமை, வியத்திகிருத்தியமின்றி யொளிகாணப்படுதலால், என்றதில் விருப்பமின்றிப் படலமுத்தி கிருத்திய மாத்திரத்தாற் காணுதிருந்து பின்பு வாசனுமுத்தி தேசோபவியத்திகளை முறைமையி லுண்டாக்கும் அஞ்சன சேவோத்தேசன கிருத்தியத்தாற் கண்ணொளி விளங்கிக்

காணப்படு மதுபோல வென்பதே முற்றுவமை யென்றெண்ணி மலமுத்தி மாத்திரத்தாற்காணுதிருந்து மலவாசனாமுத்தி சிவத்துவாபிவியத்திகளைச் சர்ப்பகஞ்சுக முத்தி சர்ப்பசரீரவியத்திபோற்சடிதிமுறைமையிலுண்டாக் கும்யோசனாகுதியோடு தத்தவியத்தி யாகுதி கிருத்தியத்தாற் சிவத்துவம் விளங்கிக் காணுமென்று கழறுகின்றார்)—அளிப்பன (என்று) - விரிந்திடு முணர்வுங்காட்டிவீட்டையுமளிப்பன் என்றுமுன்சொல்லியபடி மலமுத்தி கிருத்தியத்திற்பின் வாசனாமுத்தி சிவத்துவவியத்திகளைத் தூல சூக்கும பர தாரதம்மியக் கிரம கிருத்தியத்தாற் பெருந்தொழில் பிரியாதபேரறிவு பெருக்கிச் சிவத்துவ விளக்கஞ் செய்வன். எ-று. (௯)

## ஐந்தாஞ் சூத்திரம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உசக.

---

# ஆறாஞ் சூத்திரம்.

---

இப்படி யுபகரிக்குஞ்சிவம் அறியப்படும் பொருளோ வன்றோவென விரண்டுபக்ஷமு மிசையாதெனவி சைக்கின்றார்.

அறிவுறும்பொருளோவீசனறிவுறாதவனோவென்னி
லறிபொருளசித்தசத்தாமறியாததின்றாமெங்குஞ்
செறிசிவமிரண்டுமின்றிச்சித்தொடுசத்தாய்நிற்கு
நெறிதருஞ்சத்தின்முன்னரசத்தெலாகின்றிடாவே.

இ-ள். ஈசன் - சிவன்—அறிவுறும்பொருளோ - (சாத்திய சிவயோகி யாகுஞ் சிவாகமிக்கப்பிரத்தியக்ஷக்குறிப்பரோக்ஷலக்கண ஞானத்தால், சித்தசிவயோகிக்குப் பிரத்தியக்ஷக்குறி யபரோக்ஷ லக்கண சாக்ஷாற்கார ஞானத்தால்) அறியப்படும் பதார்த்தமோ—அறிவுறாதவனோ - அறியப் படும் பொருளல்லவோ—என்னில் - என்று வினவில் (இவ்விரண்டு பக்ஷ த்துள்)—அறிபொருள் - அறியப்படும் பொருள்—அசித்தசத்தாம் - அசித் தாம் - சடமாம்—அசத்தாம் - (சுத்தமாயை சுத்தமாயையினது காரியமெ ன்கின்ற காரண காரியப் பொருள் சுத்தமென்று சொல்லப்படு மாகிலுஞ் சித்தைக்குறித்து அதுவுமசுத்தமாதலால்) அசுத்தமாம். (அசத்தென்பதற் கு இவ்விடத்து அசுத்தமென்று பொருளுரையாது, அசத்தியமென்று பொருளுரைக்கில் வேதாந்தமாய்விடும். அநித்தியமென்று பொருளுரைக்

இல் அறியப்படும் பொருளாகிய மாயை மலம் மகாமாயையெனும் பரமகாரணப்பொருளறியப்படுதலாலநித்தியமாய்விடும்.)—அறியாதவின்றும்-அறியப்படாதபொருள் முக்காலத்தில்லா முயற்கோடுபோல வசத்தியமாம்—எங்குஞ்செறிசிவம் - எல்லாப்பொருளுள்ளும்புறம்பும் வியாபித்திருக்கு நிருபாதிகாற்ம வர்க்கமாகுஞ் சிவம் சிவமாஞ்சிவம் வியத்தியத்துவைதத்தா லிருசிவம் ஒப்பாகுஞ் சாத்தியத்துவைதத்தா லொருசிவம்—இரண்டுமின்றி - அறியப்படும்பொருளறியப்படாத பொருளன்றி—சித்தொடுசத்தாய்நிற்கும் (நிற்குமென்ப தறியப்படுமென்று பொருள். சிவயோகியல்லா வுலகத்தாரிடத்தில் மலகன்மமாயாகாரிய கலாபுத்தியாதிகலோபாதி மகாமாயா காரிய வாக்குக்கலோபாதிபற்றி யதுகங்கையிதுகாவேரி யறிபவ னது விது வல்லாநான் தேவதத்த னென்பது முதலாயுதிக்குஞ் சவிகற்ப ஞானமெனுஞ் செயற்கைச் சிற்றுச்சுட்டறிவிற் சற்றுந்தோன்றாதிருந்தாலுஞ் சித்தசிவயோகிபோற் சித்தசிவயோகியாய்ச்சருவபதார்த்தமுஞ் சாக்ஷாற்கரித்துப் பார்க்க விச்சிக்குஞ் சாத்திய சிவயோகியிடத்திற் கண்ணொளிமுதலிய கரணமுதற் புறக்கருவிப் பிரத்தியக்ஷமிசையாது. சிவாகமவெழுத்துக் கண்ணிசைவுபமுறி மலவிருள்மறைப்[illegible] சிறிது சிந்துங் கலைவிளக்குமுதலிய வுட்கருவிபொரு[illegible] சிவ[illegible]தழற் சிவாகமவாக்கியப் பொருள்வழி செல்லுஞ் சிவசத்திவிளக்கிய [illegible] பிரமாண சிற்சத்தியினது செயலாயுந் தனதுசெயற்கைச் சிற்றுச்சுட்டறிவினு ளற்றற்றுச் சுட்டுவிட்டுச் சுருங்கி விரிந்துநிற்பதாயும், பிரத்தியக்ஷமல்லாப் பரோக்ஷமென்று வடமொழிபடிக்கும் படர்க்கைச் செயற்கைப் பேரறிவாயும், நாதப்பிரகுதிச் சுத்தவித்தை சுத்தகலைகளை யுள்ளுறைசோதியாய் வைத்த புத்தியகங்காரங்களினது போதகருவப பிரவாகந்தோய்ந்துசவிகற்பமாயிருக்கு மறிவிற் பசிதாகமணமுதலிய பொருள்போல அதுவிது நானென்றுதிக்குஞ் சிற்றுச்சுட்டறிவினுஞ் சுட்டி யறியப்படாதாகிலும், அந்தப் பசிதாகமணமுதலிய பொருளிதுபசி யிதுதாக மிதுமணமென்றொருபிரகாரம் புரித்தறியாம லறியப்படுமதுபோல, அதுசிவம் நான்சிவமென்றொரு பிரகாரம் புரித்தறியப்படும் பொருளை யறிபொருளாய்ப்பரோக்ஷமாய்க் குருப்போதிக்கக் கேட்டுச் சிந்தித் தறியாமலறியப்படும். சித்தசிவயோகிக்குச் சிவசத்திமனத்துணைச் சிற்சத்தி சாதநியத் தியானமுற்றிய சமாதிமுகிழ்க்குஞ் சாக்ஷாற்காரத்தில், அப்படி நிருசியமின்றிச் சித்திருக்கிருத்து ரூபமா யறியப்படும். நீர்சொல்லிய தெல்லாம்பொருள்தானே, சூக்குமவிசாரத்தா லூகிக்கப்பட்டது; அதில் முத்தாத்மாக்களுக்குஞ் சிவசமசாமர்த்தியஞ் சித்தித்திருத்தலாற் பஞ்சகிருத்திய கர்த்திருத்துவங் காணப்பட்டது; இப்படி சகத்துக்கீசுர ரனேகரா யனேகேசுரவாதியானீர் நீர். சத்தியமே நீசாற்றியது, சிவனியைபோ[illegible]திகாரசத்திசாமர்த்தியங்களைக் கிரமத்திற் பிரத்தியக்ஷமும் [illegible] யு மடைபுயி

டத்து முத்தாற்மாக்களாலு மடையாதிருக்கப்படாது. சிவனடைந்துபஞ் சகிருத்தியம் பண்ணுமிடத்து முத்தான்மாக்களுக்குச் சங்கோசமில்லாச் சிவசமசாமர்த்திய சங்கற்பங்க ளிருத்தலாற் றங்கள் சத்திசாமர்த்திய சங் கற்பங்களைச் சுருக்கி யொதுக்கி வர்ச்சிக்கப்படா தாகையால் பண்ணுவார் கள்; அதில் விசேஷமேதென்னில், முத்தாத்மாக்களுக்குச் சித்திக்குங்கிரு த்திய கர்த்திருத்துவம் அவர்ச்சனீய சங்சித்த பஞ்சகிருத்திய கர்த்திருத் துவம்; சிவனுக்குக் கிருபாசங்சித்த பஞ்சகிருத்திய கர்த்திருத்துவம்; அவ்விருகர்த்திருத்துவங்களு மொததுப் பொருந்தாதுபொருந்திப் பிரதக் குப்பிரததான பின்னவிஷம சங்கற்பாதி காரியத்துவங்களின்றியிது இப் படியாகக்கடவதென்று அபிரதக்குத் துல்லிய சங்கற்பாதி காரியத்துவங் களா யேகீபாவமாகா தேகீபாவங்களா யிருக்கும்; அதனால் நவமிதுவாகக் கடவது புராணமிதுவாகக்கடவதென்று பின்னசங்கற்ப மில்லாமையால், அனேகேசுர வாதத்துக் காஸ்பதமேயில்லை; சகற்கர்த்தாச் சிவனொரு வனே முத்தாத்மாக்கள் சகற்கர்த்தாக்களா யிருந்தாலும் பின்னசங்கற் பப் பிரவிருத்தி யில்லாமையாற் சகற்கர்த்தாக்க ளன்றென்றுசிந்திக்கப் படும். அப்படியே,

> "ஆரணவுருவாந்தில்லையம்பலங்காணப்பெற்றோ
> ரோருணாவாவொன்றுமொன்றலரொன்றூரல்லா
> காரணராகாரொத்தகருத்தினர்கிருத்தவின்பப்
> பூரணரவர்கள்வாழும்புவனமும்பொதுவாமன்றே."

என்று கோயிற்புராணத்துஞ் சொல்லப்பட்டது. "எம்மையொத்திடுஞ் சிவானுபூதிமுத்தியம்பலத்தேயுண்டாம்" என்றுவாதவூரர் புராணத்துஞ் சொல்லப்பட்டது. "தம்மைபபோலத தம்மடியார்க்கு மின்பளிப்பன்" என்று பிள்ளையார் தேவாரத்தும் பாவனுபலஞ் சொல்லப்பட்டது. சித் தொடுசத்தாய்நிற்குமென்பதற்கே செப்பிய உரைவிரி வமையும் மேலுரை ப்பாம்—நெறிதருஞ்சத்தின்முன்னர்-முத்திவழிகாட்டுஞ்சிவசன்னிதானத் திலே—அசத்தெலலாம் - அசித்தசுத்தப் பிரபஞ்ச மனைத்தும்—நின்றிடா வே - சிவனைக்குறித்துச் சொரூபமாத்திரமாயு முபாதியுற்ற வுயிர்களைக் குறித்துப் போக்கியமாயும் போசகமாயும், சிவனாலே பிரபஞ்சத்திற்சிருட் டிமுதலிய பஞ்சகிருத்தியம் பண்ணும்பொருட்டு, அறியப்படாதது பண் ணப்படாதாகையா லறியபபட்டிருந்தாலுஞ் சிவனைக்குறித்துப் போக்கிய மாயும் போசகமாயுஞ் சிருட்டிமுதலிய பஞ்சகிருத்திய பாத்திரமாயும், அறியப்படாதுதானே. எ-று.

இப்படி பொருளுரைப்பதின்றிச் சிவசன்னிதானத்திலே நில்லாது, ஒருபிரகாரத்திலுலேயுஞ் சிவனாலறியவும படாதென்று பொருளுரைத்

தாற் சிவனுக்குப் பஞ்சகிருத்திய கர்த்திருத்துவமாகிய சகற்கர்த்திருத்துவ மதனாற்கிருபாதிகச் சுவரூபமாய்ச் சித்திக்குஞ் சருவஞ்ஞ கர்த்திருத்துவ மிரண்டுமின்றிச் சடபதார்த்தத்துக் கொத்துச் சிவமெனும் பதார்த்தஞ் சூனியமாய்ச் சருவசாத்திர விவகாரங்களுஞ் சுழித்துப்போம். (க)

அறிபொருள் சித்தாதலால் அறியப்படும் பொருள் அசித்தென் றிசைக்கின்றார்.

ஆவதாயழிவதாகிவருதலாலறிவுதானு
தாவலாலுலகுபோகந்தனுகாரணுதிபாவ
மேவலான்மலங்களாகிவிரவலாலிவறுமாகி
யோவலாலசித்தாஞ்சுட்டியுணர்பொருளெல்லாம்.

இ-ள். அறிவுதானுந்தாவலால் - உணர்வுபெறப்போதலால் (விஷயீகரித்தலாலென்றுமாம்) உலகு—புவனம். போகம் - போக்கிய பதார்த்தம். தனு - தூலதேகம். காரணம் - சூக்குமதேகம். மலங்களாகி - மாயாமலங்களாகி. மற்றதுவெளிப்பொருள். (உ)

இதுவுமது.

மண்டனில்வாழ்வும்வானத்தரசயன்மாலார்வாழ்வு
மெண்டருபூதபேதயோனிகள்யாவுமெல்லாங்
கண்டவிந்திரசாலங்கள்கனக்கழுதிரதங்காட்டி
யுண்டுபோலின்றும்பண்பினுலகினையசத்துமென்பர்.

இ-ள். கழுதிரதம் - கானல், இந்திரசாலமுதலியவினைகள் (தங்கள்தங்கள் சுவரூபங்களை) உண்டுபோற்காட்டி—இன்றும்பண்பின் - பொய்யாந்தன்மைபோல— மண்டனில்வாழ்வுமுதலியவெல்லாம்— உண்டுபோலின்றும்பண்பின் - உற்பவித் தெப்போது நிலைபெற்றிருப்பதுபோ லிருந்து சடிதிநாசமாதலாற் (பொய்போற் புரிப்பதுமாத்திரம், மெய்யென்று விவேகித்தறியா வேதாந்திகள்) — உலகினையசத்துமென்பர் - (சைவசித்தாந்திக ளியற்கையாற் சத்துச்சத்தியமெனனும்) பிரபஞ்சத்தை யசத்தசத்திய மென்பார்கள். எ-று. (௩)

சிவ மொருபிரகாரத்தினாலு மறியப்படாத பொருளென் றுரைப்ப மறுத்துணர்த்துகின்றார்.

உணராதபொருள்சத்தென்னிலொருபயனில்லைத்தானும்
புணராதுநாமுஞ்சென்றுபொருந்துவதின்றுமென்றுர்

தணவாதகருமமொன்றுந்தருவதுமில்லைவானத்
திணராப்பூந்தொடையுமாமைக்கெழுமயிர்க்கயிறும்போலும்

இ-ள். உணராதபொருள்சத்தென்னில் - சிவமறியப்படும் பொருளன்றென்று சொல்லில்—ஒருபயனில்லை - போகமோக்ஷங்கள் வந்து பொருந்துவதின்று — ஒன்று புணராதுராமுஞ்சென்று பொருந்துவதினாலும்- சிவந் தானுர் ருசிகொத்த சிவசாதியாகக்கடவர்களென்று சங்கற்பிப்பது மின்று மாடிமொருதொரு சிவசாதியாவ தின்று—தணவாத கருமமொன் றுந்தருவதுமில்லை - கிரியை கன்மானுட்டானங்களைக் கற்பிப்பதுமின்றி யிடைவிடாது பஞ்சகிருத்தியம் பண்ணுவதுமின்று—ஆகாசப்பூமாலை ஆமைமயிரிற்கயிறுபோற் சூனியப்பொருளாம். எ-று. (௪)

வேதாந்திவிசேஷிகள் பிரமம் அநிர்வசனீயமென்று சொல்ல மறுத்துரைக்கின்றார்.

தத்துவஞ்சத்தசத்துச்சதசத்துமன்றென்றலென் [றில்
னுய்த்துணர்ந்துண்டோவின்றேவென்றவர்க்குண்டென்றே
வைத்திடுஞ்சத்தேயாகமனத்தொடுவாக்கிறந்த
சித்துருவதுவசித்தாமனத்திறற்றோர்வதெல்லாம்.

இ-ள். தத்துவம் - பிரமம்—சத்தசத்துச்சதசத்துமன்றென்றலென்னீர் சத்தென்று சொல்லுஞ் சிவமுமன்று அசத்தென்று சொலலும்பிரபஞ்சமுமன்று சதசத்தென்று சொல்லு மாற்மாவுமன்றென்று அநிர்வசனீயமாய்ச் சொல்லிற் குற்றமேது—(அப்படி அநிர்வசனீயமாயப்பிரயோசனமா யொருபொருளிராது) உய்த்துணர்ந்து - விசாரித்துப்பாாத்து—உணடோவின்றோவென்றவர்க்கு - அந்த அனிர்வசனீயமாகும் பிரமம் உள்ளபொருளோ வில்லாதபொருளோ வென்று கேட்டவர்க்கு—உண்டென்றேதில் - (இல்லையென்றால் முயற்கொம்பொக்குமென்று) உள்ள பொருளென் றுரைக்கில்—வைத்திடுஞ்சத்தேயாக-சத்தாகிய சிவ மதுவேயென்று சாற்றப்படும்—(அச்சிவ மிந்திரியப்பிரத்தியக்ஷ மில்லாதிருந்தானுமானதப் பிரத்தியக்ஷ மாகாதோவென்ன ஆகாதென் றறைகின்றார்) சித்துருவது - (முன்சொல்லிய பிரகாரத்தாற் சிவசத்திவிளக்குவிளக்குஞ் சிற்சத்திச் சிற்பிரத்தியட்சமாம்) அந்தச் சிவமுதலிய சிற்பொருள் சிற்சொரூபம்—மனத்திறற்றோர்வதெல்லாம் - சமூலப் பிரபஞ்ச காரணங்களுடனே கூட்டமெல்லாம்—அசித்தாம் - சடரூபமாம். எ-று. (௫)

முன்பு செப்பியதுதன்னைத்தானே சிறிதுசிறப்பித்துச் செப்புகின்றார்.

அறிபொருளசத்தாய்வேறுமறிவுருப்பொருள்சத்தென்னி
லறிபவனறியானாகிலதுவின்றுபயனுமில்லை
யறிபவனருளினாலேயனனியமாகக்காண்ப
னறிபொருளறிவாய்வேறாயறிவருளுருவாய்நிற்கும்

இ-ள். அறிபொருளசத்தாய்வேறும் - அறியப்படும்பொருள் அசுத்த மாயசித்தாம்—அறிவுருப்பொருள் - அறியப்படாத பொருள்—சதசென்னில் - சுத்தசித்துச் சிவமென்னில்—அறிபவனறியானாகில் - சாத்தியசிவ யோகி சித்தசிவயோகியா யறியுந்தன்மையுடைய வான்மா, சிவத்தை யறியாதிருந்ததானால்—அதுவின்று-அச்சிவ மாகாயப் பூப்போற்போம்— பயனுமில்லை - அச் சிவங்கொண்டு பெறும் போகமோக்ஷங்களு முயற் கோடுகொண்டுழுத பூமியிற் பயிர்ப்பலம்போற் போம் — அறிபவன் - காரணகலாப மிதுவென்றறிந்து கைக்கொண்டு போகமோக்ஷங்களைச் சாதிக்கும் புருஷன்—அருளினாலே - (இலக்கணையினாலிசைத்தாலாம் ஆகமாதியி லவியத்தமாயு மந்திரகலாமார்க்க மனோபுத்தியகங்கார விருத்தியி ல்வியத்தமாயும் புல்லிற்பற்றிய தீப்போல மேல் நிராலம்பமாயுஞ்)சிவசத் திவிளக்கு விளக்குந் தனது சிற்சத்தியினால்—அனனியமாகக்காண்பன்- சாதிரிசியமென்கின்ற சைவசாதிசம்பந்தியாக முன் முதல்விருத்தத்துச் சொல்லியஞானத்தியான சமாதிசாக்ஷாற்காரக் கிரமத்திலறிந்து தியானி த்துச் சமாதித்துச் சாக்ஷாற்கரிப்பன்—அறிவு - அப்படி காணுமான்மா— அறிபொருளறிவாய்வேறாய - அறியப்படும் பொருளையறி சிவப்பொருளை யறியும் வேற்றுச் சித்தாய்—அருளுருவாய் - தத்துவாதீதமாகிய சிவனைச் சாக்ஷாற்கரிக்கு மிட்டத்துப் பாசவாசனை தாக்காதபடிக்குச் சொல்லிய முறைமையிற் சிவசத்தி வியஞ்சக வியங்கியத்தன்மைச் சம்பந்தியாய்— நிற்கும் - நின்று சாக்ஷாற்கரிக்கும். எ-று. (ரு)

விதேகபரமுத்தி சாக்ஷாற்காரகாரண சதேகசீவன்மு
த்தி சாக்ஷாற்கார சித்தியுபாயத்தியான சமாதிச்
சுவரூபஞ் சாற்றுகின்றார்.

பாவிப்பதென்னிற்பாவம்பாவகங்கடக்கிற்பாவம்
பாவிக்குமதுதானென்னிற்பாவகமபாவங்கெட்டுப்
பாவிப்பதென்னிற்பாவம்பாவனையிறந்துநின்று
பாவிக்கப்படுவதாகும்பரம்பரனருளினாலே

இ-ள். பரம் - சிவச்சுவரூபம்—பாவிப்பதென்னில் - பாசஞானவிள க்கு விளக்கிக் கலக்கும் பசுஞானத்தாற் றியானிப்பதென்று செப்புகில்— பாவம் - தடத்தலக்கணச் சிவப்பொருளாய்ச் சுட்டுப்புத்திபோத விஷய

மாய்ப்போம்—பாவகங்கடக்கில்-பாவனாதீதமென்று பார்க்கில்—பாவம்-தியானமாத்திர மதுவென்னும் ஞானத்துக்கு இலக்காகிலு மதுவிதுவதுநானென்னுந் தியானத்துக் கிலக்காகாது—பாவிக்குமதுநானென்னில்-பாவிக்கப்படாத்தூரத்தது பாவிக்கப்படுஞ் சமீபத்திது நானென்று தியானிக்கில் (சூக்கும புத்திமான்கட்கு வாச்சியார்த்தத் தியாச்சியத்தா லிலக்கியார்த்தமாய் வாய்க்குமாகிலும், மந்த மதிமான்கட்கு)—பாவகம் - பாவிக்கும் பாசாங்கு மாத்திரம் (அப்பிரத்தியக்ஷபோதம் பிரத்தியக்ஷபோதமிரண்டு மண்டாதாகையால்)—பாவகங்கெட்டுப்பாவிப்பதென்னில்-மனச்சங்கற்ப முன்னாக உதிக்கும் புத்திபோதம் போக்கித் தியானம்பண்ணப்படு மென்னில்—பாவம் - பாவிப்பதென்று சொல்லுதலாற் கெட்டது போகப் பின்னு மிதொரு புத்திபோதந்தானே (பின்னையெப்படி தியானிப்பது)—பரனருளினாலே - இலக்கணையா லிசைத்தலாற் சிவசத்திவிளக்கு விளக்குஞ் சிற்சத்திச் சித்துமனச் சங்கற்பத்தால்—பாவனையிறந்து நின்று - மனோபுத்தியகங்கார சங்கற்ப போதகருவப் பிரவாகங்களைக்கீழ்ப் படுத்திக்கிடத்திக் கடந்து சிவசத்தி தாரகமாய்த் தரித்த சிற்சத்திச் சித்துமனச் சங்கற்பமுன்னாகச் சிவசத்திக்குறிப் பதிஞானவிளக்கு விளக்குஞ் சிற்சத்திக்குறிப் பதிஞானச் சித்துப்புத்திச் சித்தகங்கார வியாபார போதகருவக்குறிப் பதிஞான நிரந்தரப் பிரவாகங்களினால்—பாவிக்கப்படுவதாகும்—சிவமிதுநானென்றுந் தியானம் பண்ணப் படுவதாம். எ-று. (எ)

பாசஞானம் விளக்கிக்கலக்கும் பசுஞானத்தா லறிந்து பாவித்துப் பார்க்கப் படான் பரனென்று பாஷிக்கின்றார்.

அன்னியமிலாமையானுமறிவினுணிற்றலானு
முன்னியவெல்லாமுண்ணின்றுணர்த்துவனாதலானு
மென்னதியானென்றோதுமிருஞ்செருக்கறுத்தலானுந்
தன்னறிவதனாற்காணுந்தகைமையனல்லனீசன்

இ-ள். அன்னியமிலாமையானும் - பிரியாதுபிரித் தூகித்துப் பார்க்குமிடத்து ஆன்மாவுக்குச் சிற்றறிவு சிற்றுத்தொழில் முதலிய வேற்றுப் பசுக்குறி மித்தையாய்ப் பேரறிவு பெருந்தொழின்முதலிய வொப்புச்சிவக்குறி யுள்ளதா யொருசிவசாதி யாதலானும்—அறிவினுணிற்றலானும்-காண்புவனுக்கு முன்கண்டித்திரா தகண்டமா யவனது சுட்டுச்சிற்றறிவுக்குமட்டுப்படா தினுள்ளும் புறம்பு முருவியிருத்தலானும்—உன்னியவெல்லாம் - குறித்ததெல்லாம்—உண்ணின்றுணர்த்துவனாதலானும் - சாக்ஷாத்தனது சத்தியால் விளக்கினாற் பெத்தாவத்தை பேதித்துக்காண்பவனது சிற்சத்தி பேரறிவாய்ப்பெருகி மோக்ஷ சிவசாக்ஷாற்கார முத்தியவத்தையாய்ப்போம்;அதற் கருகமல்லாமையாற் கலை வித்தை புத்தி முதற்கரண

ங்களில், மறையாது மறைந் துள்ளுறை கலைமுதற் கரணகஞ்சுக கலுஷித மா யிருக்குங் காண்பவன்கட் சிற்சத்தி யறிதற்குறி விருத்தியைச் சிறிது சிற்றறிவாய் விளக்கிப் போதித்தலானும்—என்னதியானென்றேனுமிரு ஞ்செருக்குறுத்தலானும்-புத்தியகங்காரவிருத்திச் சிற்றுச்சுட்டறிவுச்சுட்டு விட்டுச் சிட்டமாய்ச் சிவசத்திமாத்திர சகாயமாய்த் தனித்த சிற்சத்தியிற் சிவந்தாக்கு நோக்கந் தூக்கி யிருத்தலானும்—தன்னறிவதனாற் காணுந் தகைமையனல்லனீசன் - கலைபுத்திமுதற் கரணக்குறிப் பாசஞானவிள க்கு விளக்க விருத்திக்குறிப் பாசஞானம் விளக்கும் பரிமித சிற்சத்தி கர ணக்குறிப் பசுஞானக்கட் பார்வை விருத்திக்குறிப் பசுஞானததா லீசன் பார்க்கப்படுங் குறியுடையனன்று. எ-று.

கலைபுத்திமுதற்பாசஞானங்களைமேற்கிளம்பாமற்கிளம்பிக்கீழ்படுத்து ஞ்சிவனது சத்திகரணக்குறிப்பதிஞானவிளக்குவிளக்கவிருத்திக் குறிப்பதி ஞானம்விளக்கும்பார்ப்பவனது சிற்சத்திகரணக்குறிப்பதிஞானக்கட்பார் வைவிருத்திக்குறிப் பதிஞானத்தாலீசன்பார்க்கப்படுங்குறியுடைய னென் றுபரமசித்தாந்தம்.

போகத்தின்பொருட்டா மாலை சந்தன மகளிர்முதற் போக்கியக்கு றிப் பொருளையும், மோக்ஷத்தின் பொருட்டுப் போக்கியக்குறி பொருந் தாச் சிவப்பொருளையும் பார்ப்பவனுக் கவனது கரணக்குறிச்சிற்சத்தியை விளக்குங் கலைமுதற்றத்துவங்களுந் தாத்துவிக விளக்கவிருத்திகளுஞ் சிவ னைக்குறித் தியற்கைக் கரணபலங்களாயிருக்குஞ் சிவசத்திவிளக்க விருத் தியும் பார்ப்பவனது சிற்சத்தி கரணத்தை விளக்குதலாற் செயற்கைக் கரணங்களென்றுசெப்பப்பட்டிருந்தாலு மியற்கைக்கரணங்கள்இயற்கை செயற்கைப் பலங்களாகா.

அப்படிதான் சிவனைப் பார்ப்பவனைக் குறித்துச்சிவசத்தி யியற்கைக் கரணமென்றிசைக்கிற் றற்பொருளறிவு சிவம் பிறபொருளறிவு சிவசத்தி யாதலாற் றற்பொருளறிவாகிய சிவக்குறிச் சிற்சத்தியா லீரறிவு நீடுப்பொ துவறிவுப் பிரமாதிரு ரூபியாயிருந்து, சிவன் பிறபொருளறிவாகிய சிவசத் திரூபச்சுவரூப தற்பொருளைப்பார்ப்பன்; சிவசத்தியாற் சிவன் பார்க்கப் படான்;பார்க்கப்படுவேனுகிற் பிறபொருளறிவாதலாற் சிவசத்திக்குச்சிவன் பிறபொருளாய்ப்போவன்; பிரமிதிபலமும் பார்ப்பவனுக்கின்றிச் சிவன தாம்; அதனு லாதித்தனது கிரணத்தால்விளக்கப்பட்ட கண்போலச் சிவ சத்தியால் விளக்கப்பட்ட பார்ப்பவன் சிற்சத்தியாற் சிவன்றன்சத்திமுத லியபொருள்களோடு கூடப்பார்ப்பவனுற் பார்க்கப்படுவனென்பது பரம சித்தாந்தம். பிரமாணப் பிரத்தாபத்திலேயும் பிரதரிசிப்பித்தோ மொத்து க்காண்க.

(அ)

வேதாந்தி விவேகித்தறியாது சித்தேகமென்று செப் பினானென்று செப்புகின்றார்.

ஒன்றெனுமதனாலொன்றென்றுரைப்பதுண்டாதலாலே
நின்றனன்வேறாய்த்தன்னினீங்கிடாநிலைமையாலே
பின்றியவுணர்வுக்கெட்டாப்பெருமையனா,யிவினுள்ளே
யென்றுநின்றிடுதலாலேயிவனவனென்னலாமே.

இ-ள்.' (நீ யொன்றென்றோதும் பிரம மறிந்துசொல்லப்படும் பொருளோ? அப்படியாகிற் சொல்லியபின் வேறொருவனாற் கேட்டு மறியவும் படுமோ? அப்படியெல்லா மல்லவோ? அல்லவென்னில், முயற்கொம்பொத்து நிட்பிரமாணமாம். சுயம்பிரகாசமாய்த் தன்மாத்திரத்துக்குச் சத்தாமாத்திரமா யிருக்குமென்னிற் பிரமஞானஞ் சாதகனுக்கு முத்தி சாதனமென்பதுங் கெட்டு நிட்பிரயோசனமாம். அந்தப்பிரம மடக்கமாய்ப்பண்ணி யுனக்குத்தானே யுபயோகமாயிருக்கப் பண்ணிக்கொள்; இங்கு வேண்டுவதில்லை. அப்படியேன்சொன்னீர்? அந்தப்பிரமம் அறியாம லறியப்படுஞ் சொல்லாமற் சொல்லப்படுங் கேளாமற்கேட்கப்படும். அப்படிநீ) ஒன்றெனுமதனால் - அந்தப்பிரமத்தை யொரு பொருளென்றறிந்து பிறர்க்கறியச் சொல்லுதலால்—ஒன்றென்றுரைப்பதுண்டு - பிரம மொன்றென்றோது நீமுதலிய பொருளோதப்படும்பிரமத்துக்கு வேறாயுள்ளதாம்—ஆதலாலே—நின்றனன்வேறாய் - (அறிபவனாகிய பிரமாதா, வறிந்து சொல்பவனாகிய வத்தா, சொல்லக்கேட்பவனாகிய சுரோதா, அறிதல் சொல்லுதல் கேட்டற்கிரியைக் கருவியாகும் பிரமாணம், வாக்கு, சுரோத்திரம், அறிதல் சொல்லுதல் கேட்டற்கிரியையாகும் பிரமிதி, வசனம், சிரவணம், அறியப்படுமது சொல்லப்படுமதுகேட்கப்படுமதாகிய பிரமேயம், அபிதேயம், சுரோதவ்வியம், என்று நான் மூன்று பன்னிரண்டு பேதமாய்ப் பொருள்கள் பார்க்கப்படுதலாற்சொல்லப்படும் பிரமமெனுஞ் சிவன் சொல்பவனுக்கு) அன்னியமாய் நின்றான்; ஆதலால் நீயொன்றென்று சொல்லியது, யன்மாதா மலடியென்பதற் கொக்கும். சத்தியம் நீர்சொல்லியது; ஒன்றுதானே யிரண்டாம். அதில்லாதது பிரமமென்ற சுருதிசொல் சொல்லுக்கு முந்தியமுத்திமானதலால், முத்தான்மாக்கள் சிவனுக் கொப்பாவர்களென் றோதப்படுவார்கள், சிவன் முத்தான்மாக்களுக் கொப்பாவனென் றோதப்படான்; ஆதலா லொப்பற்றதென்று பொருள். நன்று நீசொல்லியது; முந்திமுத்தி பிந்திமுத்தியென்பதும் விசாரிக்குமிடத்துச் சிவனுக்குப் பந்தமில்லாமையால், முத்தியேயில்லையென்பதும், மலத்தைகுறித்துவந்த செயற்கைவார்த்தை, மலத்தைக்குறியாம லவனுக்கொப்பிவர்க ளிவர்கட்கொப்பவனென்ப தியற்கைவார்த்தை, இயற்கையா லிருசிவமா யொத் தொருசிவசாதியா யொருசிவமா

யிருக்குஞ் சிவப்பிரமம் வேற்றுச்சாதிப் பொருளோ டொப்பதன்றென்று பொருள்)—பின்றியவுணர்வுக்கெட்டாப்பெருமையன்—பாசஞானம்விள க்கிக்கலக்குந் தூலசவிகற்பச் சிற்றுச்சுட்டறிவுச் சிற்சத்திவிருத்திப் பசு ஞானத்துக்கு மட்டுப்படாத மகிமையை யுடையன் சிவன்—தன்னின்-சிவசத்திரூபக் கருவிப்பதிஞான விருத்திப்பதிஞானம் விளக்கித்தெளிக் குஞ் சூக்குமசவிகற்பச் சுட்டாதுசுட்டுப் பேரறிவுத்தன்சிற்சத்திரூபக்கரு விப்பதி ஞானப்பதி விஷயவிருத்திப்பதி ஞானத்தில்—நீங்கிடாநிலைமை யாலே-வியாபித்து மேல்விஞ்சிப் போகாதபடியினுலேயும்—அறிவினுள் ளேயென்று நின்றிடுதலாலே-அந்தத் தன்பதிஞானக்கோடிக்குட்குறையா தொத்து வியாபித்துக் கலவாதுகலந் தொருசிவசாதியாய்நிற்றலானும்—இவனவனென்னலாமே-அவ னிவனென்று மாறிக்குருசங்கமாதியிலவனி வனென்றும் அஃதன்றி யிவனென்ப திலக்கணையென்றெண்ணி யவனு னென்றும் அத்தியச்சிமி யந்தத்திசைத்துச் சோயஞ்சோக மிவைகாட் டுஞ் சிவோயஞ் சிவோகமென் ருென்றையொன்ருகரிஷிக்கு மிரணபொ வனை யியற்றலாமே. எ-று.

இவ்விருசிவத்தியானத்திற் சிவசாதிரூறியாது சிவப்பொருள்மாத்தி ரங் குறித்த சிவத்தியானம் பொய்யாகிலுங் கருடமாந்திரிக தாதாற்மிய பாவனைபோற் சத்தியபலங் கொடாதுவிடாது. அரதத்தாசாரியர் சதுர் வேதார்த்த தாற்பரியத்தில்

"அளிகம்சிவதாதாத்மியபாவநம்ததாபிவிஷம்ப்ரமார்ஷ்டி:"

என்று

இப்பாவனையைத்தானே படித்தார். சுவரூப சிவதாதாற்மிய சிவத்தியா னமதனுண் முகிழ்க்குஞ் சிவசாதி விசிட்ட சிவத்தியானமிரண்டுஞ் சத்தி யம், பலமு மப்படி பலிக்கும். சிறீமத் சுந்தரமூர்த்தி சிறீமன் மாணிக்க வாசகர் சிறீமதருணகிரிநாதர் இவர்கள் தேவாரத்தும்,திருவாசகத்தும்அல ங்காரத்தும்,"வழித்தலைப்படுவான் முயல்கின்றேனுன்னைப்போலென்னை பபாவிக்கமாட்டேன்" என்றும், "ஆனந்தவார்கழலேயொப்பாகவொப் பித்தவுள்ளத்தாருள்ளிருக்கும்" என்றும், "என்னையுன் ளிலொன்ருய்விதி த்து" என்றும் இப்பாவனையைத்தானே படித்தார்கள். (க)

## ஆறாஞ் சூத்திரம்

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் உ௫0.

---

# ஏழாஞ் சூத்திரம்.

மூற்சூத்திரத்தின்முடிவிற் கூறிய பொருளைத்தானே
வற்புறுத்துகின்றார்.

அனைத்துஞ்சத்தென்னிலொன்றையறிந்திடாவசத்தாலென்னி
முனைத்திடாவசத்துச்சத்தின்முன்னிருளிரவிமுன்போ [ன்
னினைப்பதிங்கசத்தேயென்னிற்சத்தின்முன்னிலாமையானுந்
தனைக்கொடொன்றுணர்தலானுந்தானசத்துணராதன்றே.

இ-ள். அனைத்துஞ்சத்தென்னிறொன்றையறிந்திடா - சித்தசித்துக்
களெல்லாஞ் சிவமென்று நீசொல்லில், அச்சிவம் சித்தசித்துப்பிரபஞ்
சத் தொருபொருளையாகுலுஞ் சிருட்டிக்கத் திதிக்கச் சங்கரிக்கத் திரோ
பவிக்க வனுக்கிரகிக்க வேணுமென்றறியாது (தன்னைத்தவிர வேறொன்
றில்லாமையாற் றன்னைத்தானே சிருட்டிக்குந் திதிக்குமென்பது முதல்
மாறுபடும்வார்த்தை வருமாதலால், விபரீதமாய்ச் சுகதுக்கவேதனை போக
முஞ் சிவாத்துவைதியும் வேதாந்தியுஞ் சிவனுக்கும்பிரமத்துக்குஞ் செப்ப
வேண்டும்.

"பிரமவியதிரித்தஞ்சருவமித்தை"

என்று

சொல்லுதலா லவ்வேதனையு மித்தையாமே; அப்போது மித்தையென்று
நீசொல்லியது மித்தையாமே; அப்போது சித்துப்பிரபஞ்சமுஞ் சிவனும்
ஒன்றுதலா லவ்வேதனை சிவனுக்கு)—அசத்தாலென்னில் - அசத்துப்
பிரபஞ்ச சங்கத்தாலென்னில்—இரவிமுன்னிருள்போல்—சத்தின்முன்
ணசித்துமுனைத்திடா - சிவத்தின்முன் அசித்துப்பிரபஞ்சம் பிறர்பிர
யோசனம் பிறர்போக்கியம் பிறர்போசகம் சுவதிருச்சியமிவைமுதலியவா
ய்த் தோற்றினுலுஞ், சுவப்பிரயோசனமா யப்படிதோற்றாது. [சிவனுக்
குச் சொரூபமாத்திரமாய்த் தோற்றுமென்று கருத்து]—இங்கசத்தே-
அசிற்பிரபஞ்சத்திற் சிறி தந்தக்கரண முதலியவே (சற்சன்னிதானத்தி
லே)—நினைப்பதென்னில் - புறப்பொருளையறிந்து அதற்கருகமாகு முட்
சுகதுக்கமோகங்களை யனுபவிப்பதென்று நீசொல்லில்—அசத்து-அந்தக்
கரணமுதலியன — சத்தின்முன்னிலாமையானும் - சிவசத்தின்முன்
னின்றதானுலும் அது கோடுமுதலானவற்றிற்கும்போ லோரறிவிலாமை
யானும்—தனைக்கொடான்றுணர்தலானும்-விளக்கை விளக்குக்கொண்டு
கண்காண்பதுபோலத் தன்னைக்காட்டாகக்கூடிச் சிற்சிவசித்துக்கன்னிய
மாய்: ஒருசதசத்தாத்மசித்துப் போக்கியப்பொருளைப் புசித்தலானும் (தா
னசை)—உணராதன்றே - புசியாதுதானே. எ-று. (க)

சத்தசத்துக்களைத் தற்பிரயோசனமாய் விரும்பியறி வது சதசத்தென்று சாற்றுகின்றார்.

சத்தசத்தறிவதான்மாத்தான்சத்துமசத்துமன்று
நித்தமாய்ச்சதசத்தாகிநின்றிடுமிரண்டின்பாலு
மொத்துடனுதித்துநில்லாதுதியாதுநின்றிடாது
வைத்திடுந்தோற்றநாற்றமலரினில்வருதல்போலும்

இ-ள். சத்தசத்தறிவதான்மா - (மோக்ஷபோகக்குறிச் சுவப்பிரயோசன காரணமாக முறைமையில்) சிவப்பிரபஞ்சங்களை வாஞ்சித்தறிவ துயிர்—தான் - அந்தவான்மா—சத்துமசத்துமன்று - சிவமு மசித்துப்பிரபஞ்சமு மல்ல—நித்தமாய் - நித்தியப்பொருளாய்—சதசத்தாகிநின்றிடுமிரண்டின்பாலும் - சருவஞ்ஞத்துவ சருவகர்த்திருத்துவரூப சிவத்துவத்தையும், அசருவஞ்ஞத்துவ வசருவகர்த்திருத்துவரூப பசுத்துவத்தையுமுடையனாகி யந்தச்சிவத்துவ பசுத்துவ வியற்கை செயற்கையிரு தன்மங்களிலே யியற்கைசெயற்கைத் தன்மியாயிருக்கும்—ஒத்துடனுதித்து நில்லாது - இருளோடொளிபோற் பசுத்துவத்தோடு சிவத்துவ மொத்தொரு காலத் துதயமாகாது (அப்போதப்பொருளாகாயப்பூவாம். அப்படி சொல்லவேண்டா)—உதியாதுநின்றிடாது-பசுத்துவஞ் சிவசத்திசின்ன தீக்ஷாங்கி யங்கங்களால் மறையச் சிவத்துவம் பரந்துவிரியும். (அப்போ தாத்மாவின் முன்காணாத சிவத்துவங் காணப்படுமாகிற்சற்காரியவாதத்தைத் தாக்கித்தள்ளியசற்காரியவாத மாவிர்ப்பவிக்கும். அப்படி சொல்லவேண்டா)--வைத்திடுந்தோற்றநாற்றமலரினில்வருதல்போலும்-அரும்பிற்சூக்குமித்திருந்துபூவின்மண மாவிர்ப்பவித்தற்கொக்கும். எ று.

மலநீங்குமுன் மலமடக்கியிருக்குஞ் சிவததுவத்தினதுதயம் "சீவனுக்குள்ளேசிவமணம்பூத்தது" எனறு திருமந்திரத்திருப்பது முணர்க. அப்படியாகிற் சிவத்துவங் காரணாகார சத்திரூப பிராகபாவமாயிருந்துகாரியாகார வியததிரூப சத்தியோசாதமாய்த்திரிந்து பரிணமித்தலால்அதில் விகாரித்துவ மநித்தியத்துவஞ் சடத்துவம் முறைமையில் வந்துவிழும். அப்படி நீசொல்லியதூஷண மிங்கிசையாது, ஆத்மாவிற் சிவத்துவ மப்போதப்பிரவிருத்திரூப வனபிவியத்தியெனுஞ் சத்திரூபமாயிருந் திப்போதுபிரவிருத்திரூப வியத்திரூபமானதன்று. பின்னெப்படியாவது? அப்படி யப்போ திப்போ தெப்போதும் வியத்திரூபமாயே யிருக்கும். அப்போதில்லையெனும்பொருட்பிராக பாவப்பெயர்ச் சூக்குமபாவரூப சத்திபூதமாயு மிப்போதுள்ளதெனும் பொரு ளதாகாபாவப்பெயர்த் தூலபாவரூப வியத்திபூதமாயுமிருந்து வந்ததென்பது மலோபாதிவருவிதத்து. அப்பம திருமந்திரத்துஞ் சொல்லபபடடது.

"அணுதிசிவரூபமாகியவான்மாத்
தனுதிமலத்தாற்றடைபபட்டுநின்றது
தனுதிமலமுந்தடையற்றபோதே
யனுதிசிவரூபமாகியவாறே."

என்றும்.

ஆதலால்,மலமாவிருதி நிவிர்த்திச்சொற் சொல்லும் மறைத்தல் திரு ம்புதலெனு மீரேக சுபாவ சத்திமத்தாதலால், மலசத்தியின தாவிருதி ரூபத்தைத் தீக்ஷாகன்மத்துச் செய் முத்தியாகுதியாற்பகுப்பற்றுப் பிரித் தற்கரிதாகிய வந்தரங்க நிவிர்த்திரூபச் சுவரூபச் சத்துவபரிணமத்தால் மலமுத்திபண்ணிப், பின் செவ்வரத்தப் பூச் சிவப்புபாதியைப் போக்கிப் படிகவெண்மைத் துலக்கவிளக்கத்தை யிருந்தபடி யிருத்துவதுபோலத் தீக்ஷாகன்மத்துச் செய் வியத்தியாகுதியால் மலத்திறன் மாமாயையில் வைத்த மாமாயாகாரிய மலவாசனமுத்தியை மாமாயாலீனமாய் வாசனை யிருப்பதாய் முறைமையிற் பண்ணிச், சத்திசாமர்த்தியப் பெயர்பெறுஞ் சிவத்துவத்தினது சருவார்த்தக் கிரியாவிருபூத சருவார்த்த ஞானவிருத் தியின இயற்கையபிவியத்தியை யிருந்தபடி யிருத்துவதே யிப்போது புதி தாய்ச் சிவத்துவாபிவியத்தியைப் பண்ணுவதென்பது.

' ஆகையாற் கரணீயமெல்லா மலவாசனை யவதிமாத்திரத்தின் மாறுத லாற் றிரிவின்றி யியற்கையால் விகிர்திவிட் டிருந்தபடியிருத்துஞ் சிவத் துவாபிவியத்தி லெங்கே நீசொல்லு மநித்தியத்துவம் வந்தெய்தும், இல்லைத்தானே. ஆகையாற் சருவார்த்தக் கிரியாவிருபூத சருவார்த்தஞா னமிருந்தபடியிருத்தலா லந்தச் சருவார்த்தக் கிரியாவிருபூத சருவார்த்த ஞானுபாவமெனு மஞ்ஞானமலத்திடத் தியற்கைஞானத்தியந்தாபாவரூப மோகவத்துவாயிருந் தாத்மாவில் ஞானப்பிராகபாவம்போ லாபாசித்த லா லாத்மாவில் ஞானப்பிராகபாவஞ் செயற்கையாதலா லுபசரிதமென் றாகித்தலால் ஞானம் வியத்திமத்தா யிருந்தபடி யிருத்தலா லந்தஞானு பாவ மியற்கையா வில்லையென் றஞ்ஞான மாத்மாவில்வத்துவன்று;மலத் தில் மெய்வத்து ஆத்மாவிற் பொய்யே அப்பொய்யைப் போக்க வேறு சாதனம் வேண்டுவதில்லை; அப்பொய்யை மெய்யென்று பண்ணு மலசத் திமுத்தி மலசத்திவாசனமுத்தி பண்ணி யிருந்தபடி. யிருக்கும் ஞான விய த்தி காண்பிக்கு முத்திவியத்திசாதனமே சாதனம்; அவ்வியத்தியே யஞ் ஞானநிவிர்த்தி வேறொன்றில்லை; மணிமந்திரமருந்து பொருந்தும் விரும் புமொரு சத்தியா லுரோகசத்தி மூத்தியானது தனது மாரணவிருத்தியி னது நிவிர்த்திரூபச் சுவரூப சத்துவ பரிணமத்தாற்பண்ணப்படு மதுபோ லத், தீக்ஷாலக்கண சிவமந்திர சத்தியால் மலசத்திமுத்தியுந் தனதாவிரு தி விருத்தியினது நிவிர்த்திரூபச் சுவரூப சத்துவ பரிணமத்தாற் பண்ண

ப்படி மாதலா லாவிருதி கிவிர்த்திச் சுவவிருத்தியோடு நித்திய மலதன்மி தன்ம சத்திக்கநித்தியத்துவமே யில்லை.

ஆன்மாக்களுக்கு மல மேகமானாலு மலசத்திக ளவரவர்க்கு வேறு வேறாதலா லசேதன மனேகமாதலால் மலசத்திக ளநித்தியங்களாமென் னிலநித்தியங்களன்று; நித்தியமல தன்மிதன்மங்களாதலால். அப்படியா கிற் றன்மதன்மிகளுக் கவிபாகபேத மாதலாற் றன்மிக்கு மநித்தியத்து வப் பிரசங்கம்வரும்; ஆதலா லசேதன மனேகம் அநித்தியமென்றது தன் மியைக்குறித்துச் சொல்லியது, தன்மத்தைக் குறித்துச் சொல்லியதன் று. அப்படியாகில், நமது பார்வையாற் பின்னசாதியாதலா லேகமேகமா யிருந்தாலும் பரனது பார்வையாற் சத்திசமூகமாத்திரமா யசேதனமா யனேகமா யிருக்கு மாயை மகாமாயைக ளநித்தியங்களாய்விடும். மாயா சத்திகள்மலசத்திபோற் சுவரூபசத்துவமின்றித் திரிந்துபரிணமித்தலான் மாயை மகாமாயைக ளநித்தியங்களாமே. அநித்தியங்களன்று; பால் தயி ரானதுபோற் சத்திகள்முற்றும் பரிணமியாமற் கிருதகீடம்போ லேகதே சத்திற் பரிணமித்தலால். அப்போ தேகதேசத்தில் நாசமாகட்டும். அது வுமில்லை; ஏகதேசத்திற் பரிணமித்த சத்திகள் வியத்திரூபங்களா யிருத்த லால் வியத்திரூப காரியங்களு முன் சத்திரூபமாயிருத்தலாற் காரணகா ரியமிரண்டும் நித்தியமே.

அப்போது மலசத்திக ளநித்தியங்கள்; மாயாசத்திக ளேகதேசத்தி ல்நித்தியங்களென்பதென்னை? சுவரூப சத்துவ சுவரூபத் திரிவு பரிணும பேதத்தாற் படித்துச் சொன்னது மாத்திரம். பரமார்த்தத் தெல்லாம் நித்தியங்களே. "வைத்திடுந்தோற்றநாற்றமலரினில்வருதல்போலும்" என்பதனும் சிவனேடுகூடிச் சிவனுயும் பாசத்தோடுகூடிப் பசுவாயு மிரு ப்பனென்ப திசையாதென்ப தறிக. (உ)

மலசத்திபண்ணு மஞ்ஞானதோஷ மாத்மாவுக்கே சிவ னுக்கில்லையென்று செப்புகின்றார்.

சுத்தமெய்ஞ்ஞானமேனிச்சோதிபாலசத்தஞ்ஞான
மொத்துறுகுற்றமெல்லாமுற்றிடுமுயிரின்கண்ணே
சத்துளபோதேவேறுஞ்சதசத்துமசத்துமெல்லாம்
வைத்திடுமனுதியாகவாரிநீரிலவணம்போல்

இ-ள். சுத்தமெய்ஞ்ஞானமேனிச்சோதிபால் - சத்துச்சித்துரூபசிவ ன்கண்—அசத்தஞ்ஞானமொத்துறு - அசுத்த மலமாரோபிக்கும் ஞானு பாவ மூர்ச்சாமோகம் பொருந்தா—உயிரின்கண்ணே-பசுக்களிடத்தில்—

குற்றமெல்லாமுற்றிடும் - மூர்ச்சாமோகம் பிரஞ்ஞாமோகமுதலியதோஷ மெல்லாம் பொருந்திடும்—சத்துளபோதேவேரும் - சிவசங்கற்ப சாந்நித் தியமுண்டாக நீங்கும்—சதசத்துமசத்துமெல்லாம்-பசுவர்க்கம் பாசவர்க் கம் பதிவர்க்க மிம்மூன்றும்—வாரிநீரிலவணம்போல் - வாரி - நீருக் கிட ங்கொடுக்குமாகாயம்—நீர் - இவ்விடத்தில்நிறையுஞ் சலம்—இலவணம்- ஆகாயத்திற்றோயாதுசலத்திற்றோயு முப்பு—இவைகள்போல (வாரிக்கொ ப்புப் பதி நீருக்கொப்புப் பசு இலவணத்துக்கொப்புப் பாசம்)—அனாதி யாகவைத்திடும் - நித்தியமாய் நிச்சயிக்கப்படும். எ-று. (௬)

ஆத்மாச் சிவன்போற் சச்சிதானந்தரூபியென்பது சாற்றுகின்றார்.

அறிவிக்கவறிதலானுமழிவின்றிநிற்றலானுங்
குறிபெற்றசித்துஞ்சத்துங்கூறுவருயிருக்கீச
னெறிநித்தமுத்தசுத்தசித்தெனநிற்பனன்றே
பிறிவிப்பன்மலங்களெல்லாம்பின்னுயிர்க்கருளினாலே.

இ-ள். அறிவிக்கவறிதலானும் - (சிவன் சகலாவத்தையிலே கலாதி தத்துவங்களிற் றத்துவதேவதாபாரம்பரியமாய் வந்து மறைந்துநின் றவை களைச் செலுத்தி யவரவர் பருவமருகமாக) போதிப்ப வுணர்தலானும் (உ ம்மையினாற் சுத்தாவத்தையிலே சாக்ஷாத் தீக்ஷாலக்கணத்தினாது சத்தி யாற் சிவன் முன்சொல்முறைமையின் முற்றும் மலமுத்தி மலவாசனாமு த்தி சிவத்துவவியத்திபண்ணி யறிவிக்கத் திரும்பத்திரும்பச் சிவவிளக்கு விரும்பாதுவிட்டுச் சுவயம்பிரகாசமாய்ப் பதிமுதலிய சருவபதார்த்தங்க ளைப் போக்கிய போத்திருத்துவத்தன்மைவிட் டிடைவிடா தெப்போது முள்ளமைமாத்திரமாய்ப் பார்த்திருத்தலானும்)—அழிவின்றி நிற்றலானு ம்-நித்தியசத்திய மாதலானும்—குறிபெற்ற சித்துஞ்சத்துங்கூறுவருயிருக் கு- "ஒருமொழிமொழிதறன் னினங்கொளற்குரித்து" என்பதனால் தனதி லக்கணமாக வடைந்த சச்சிதானந்தரூப முயிருக்குப் பெரியோர் பேசுவர் —"அறிவின்றிநிற்றலானும்" எனும் பாடங்கொண்டாற் "குறிபெற்றவ சத்துஞ்சத்தும்" என்று பாடங்கொண்டு சதசத்தாற்மாவென்பதற்குக் கா ரணமாய்க் கேவலாவத்தையிலே பிரஞ்ஞாமோகமுமின்றி மூர்ச்சாமோகி யாயிருத்தலானும்) குறிபெற்றவசத்துஞ்சத்துங் கூறுவர் - தனது செயற் கையிலக்கணமு மியற்கையிலக்கணமுமாக வடைந்த பசுத்துவமுஞ் சிவ த்துவமு மாத்மாவுக்குப் பெரியோர் படிப்பார்கள்.

ஈசனெறிநித்தமுத்தசுத்தசித்தெனநிற்பனன்றே(சித்தென்பதனை நா லிடத்துங் கூட்டுக)—பிறிவிப்பன்மலங்களெல்லாம் பின்னுயிர்க்கருளினா லே—(முன்சொல்லிய பிரகாரம் மலமுத்தி சிவத்துவவியத்தி பண்ணுவ னென்று பொருள்) எ—று. (௭)

## ஏழாஞ்சூத்திரம்.

### மூற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - ௨௫௪.

# எட்டாஞ் சூத்திரம்.

அவ்வளவிவ்வளவா யாகமங்களில் ஞானபாதப்பொருள்போதித்துச் சிறிது கலப்புப் பகுப்பாய்ப்பொருச்சிறப்பாகயோகபாதமுதல் முப்பாதப்பொருள் போதிப்பதற்கு முயலுகின்றார்.

மன்னவன்றன்மகன்வேடரிடத்தேதங்கி
வளர்ந்தவனையறியாதுமயங்கிநிற்பப்
பின்னவனுமென்மகனீயென்றவரிற்பிரித்துப்
பெருமையொடுந்தானாகப்பேணுமாபோற்
றுன்னியவைம்புலவேடர்சுழலிற்பட்டுத்
துணைவனையுமறியாதுதுயருறுந்தொல்லுயிரை
மன்னுமருட்குருவாகிவந்தவரினீக்கி
மலமகற்றித்தானாக்கிமலரடிக்கீழ்வைப்பன்.

இ-ள். இராசா நீ என்று இராசா இராசபுத்திரனுக்கு இராசகுலம் போதித்ததுபோற், சிவன் குருக்குறிகொண்டு தீக்ஷைபண்ணித் தீக்ஷாங்கமாகுஞ் சித்தாந்தமகாவாக்கியஞ் செப்பிச் சிவகுலம்போதித்துத் தியானிப்பித்துப் பசுத்துவம்பறித்துச் சிவத்துவங்கொடுத்து—தானாக்கி - (இவ்விடத்துச் சொல்லிருந்தபடி பொருளுரைத்தாற் சிவாத்துவைதி யொருபிரகாரத்தாற் சிவாவேசவாதி யிருவருஞ் சயிப்பார்கள். ஆதலால் "கருதரன்போனிற்பன்" என்று மேற்காண்பிக்கும் படிக்குத்) தன்னைப் போலாக்கி—மலரடிக்கீழ்வைப்பன் - (இங்கும் இருந்தபடி பொருளுரைக்கிற் றடத்தலக்கணந்தாக்கும். இலக்கணையினு லடி சிவசத்தி யென்றுரைக்கி லான்மாவிற் சடத்தன்மைவிடாத வியாப்பியத்துவம், சங்கிராந்தவாதந்தான் சாரும்; ஆதலால், மலரடியென்பது மலருமடி, மலராநின்றவடி, மலர்ந்தவடி என்று விரியும் வினைத் தொகையாதலால்) தனது சத்தி போற பிறபொருள் மாத்திரத்தி லறிதற்றொழில்பண்ணி, மலர்ந்த தற்பொருளெதிர்முகசிற்சத்தி மாத்திரத்தி லறிதற்றொழில்பண்ணி மலர்ந்த திரும்பியமுக சிற்சத்திரூபியாகச் செய்வன். எ-று. [மலரடி வியத்தசிற்சத்தியென்று தாற்பரியம்] சத்தப்பரிசமுத லைம்புலத்தை விஷயீகரிக்குமைம்பொறியை யைம்புலமென் றாகுபெயராற் சொல்லியது. சுழலென்றது தன்வழிக்கிழுக்குமொப்பால். துணைவன் - சிவன். சிவனது வியாபகத்துள்ளடங்க வியாப்பியமாய வைப்பனென்று சிலபேர் பொருளுரைத்தார்கள். அவர்கள், வியாப்பியனுறலான்மாச் சடமாவனென்று மேன்

செப்பாதிருந்தார்கள். திரும்ப வியாப்பியத்திறைற் சிவனோடனன்னியத் துவஞ் சொல்லுமவர்கள், வியாப்பிய வியாபக லக்கணத்தால்,வேற்றுமை வரு மயிக்கியமேயில்லை யென்பதேனறியாதிருந்தார்கள். ஆதலால், ஒப் பொருசாதி யயிக்கியமே யனன்னியத்துவம். (க)

சகலனுக்குமாத்திர மனுக்கிரகமென் றெண்ணவேண் டா மூவர்க்கு முண்டென்று முறைமை யுரைக்கி ன்றார்.

உரைதருமிப்பசுவர்க்கமுணரின்மூன்று
முயருமிஞ்ஞானகலர்பிரளயாகலர்சகலர்
நிரையின்மலமலங்கன்மமலங்கன்மமாயை
நிற்குமுதலிருவர்க்குநிராதாரமாகிக்
கரையிலருட்பரன்றுவிதாசத்திநிபாதத்தாற்
கழிப்பன்மலஞ்சகலர்க்குக்கன்மவொப்பிற்
றரையிலாசான்மூர்த்தியாதாரமாகித்
தரித்தொழிப்பன்மலஞ்சதுர்த்தாசத்திநிபாதத்தால்.

இ-ள். நிராதாரமாகி - நிரதிகரணனாய் நின்று—துவிதாசத்திநிபாத த்தால் - தீவிரதீவிரதரசத்தி விழுதலால் (தீவிரதரத்தாற் பரமுத்தி தீவி ரத்தாலபரமுத்தி, தீவிரத்துள்ளு மந்த மந்ததர சத்திநி பாதமுண்டு அபர முத்தி யனந்தவிதமாதலால். நிரதிகரணனுக்கிரகஞ் சகலர்க்கு மேகதேச த்திற் சாற்றியதுண்டு.) ஆசான்மூர்த்தி யாதாரமாகித்தரித்து - சாதிகர ணனாயிருந்து—சதுர்த்தா சத்திநிபாதத்தால் - மந்ததராதியால்—மலங் கழிப்பன் - ஒழிப்பனென்பதற்குப்பின் சிவத்துவாபிவியத்தியுஞ் செய்வ னென்பது செப்புக. விஞ்ஞானகலவென்பது தலைக்குறைத்தலாதலால், விஞ்ஞானகலவொன்று நின்றது.

விஞ்ஞானத்தான் மாயரபுருஷவிவேக ஞானத்தால், கலைமுதல் முப் பது தத்துவத்தால் மூடப்பட்ட சூக்கும தேகமில்லை, யார்சிலபேர்க்கு, அவர்கள் விஞ்ஞானகலர்கள், பிரளயத்தக்கலை நீங்கினபேர் பிரளயாக லர்; ஆதலா லிருவர்க்கத்துக்கும் நிரதிகரணனுக்கிரகம். சிலபேர் அனந் தாதி யணுசதாசிவாதிய ரிவர்களை விஞ்ஞானகலர்களென்றும், அபரமந்தி ரேசுரர்களாகிய சிறீகண்டாதிகளைப் பிரளயாகலரென்றும் பேசுவார்கள். அவர்கள், மலமலகன்மமுத்தராய்ப் பதிபதார்த்தத்து ளந்தர்ப்பவித்து மல மாத்திரகலுஷித விஞ்ஞானகலக்குறி, மலகன்மமாத்திரகலுஷிதப் பிரள யாகலக்குறி பிரியாது தரியாமையா லப்படி பேசுத லறியாமையாலென உறிக.

பெரியோர் சிலவிடத்து அப்படிபடித்துப் பேசியதேது? முன்னிருப்பைக்குறித்துக் கூறியதெனக் குறித்தறிக. பிரளயாகலர்க்குத் தேவகுருவாய் அனுக்கிரகம் பண்ணுவனென்று சிலபேர் பேசியதேது? தேகிகளில்லாப் பிரளயகாலத்துத் தேகிகளல்லாப் பிரளயாகலர்க்குத் 'தேவகுருவாய்வந்து' அனுக்கிரகம் பண்ணுவனென்பது செய்தி தெரியாது செப்பியது. "இருவர்க்குநிராதாரமாகி"1 எனுமாசாரியர் வசனத்துக்குஞ் சிவாகமத்துக்கும் விரோதச்சொல்லுமாம். ஆன்மதத்துவ மிருபத்துநாலுக்குமேற் பிரகிருதிமுத்தரா யிராகாதிகலாந்தமாகிய தத்துவங்களில் நிரஞ்சனர்தவிரச் சாஞ்சனராயிருப்போர்கள் பிரளயாகலர்களென்று சிலபேர் பேசியதேது? ஸ்ரீமத்காமிகாகமத்தி லேகதேசத்தி லப்படியிருத்தலா விசைந்தார்கள். அச்சகலவிசேஷப் பிரளயாகலரைக் குறித்து உருத்திரதேவர்களிற் றேவகுருவென்பது கூடும். தேகமில்லாப் பிரளயாகலர்க்குத் தேவகுருவென்பது கூடாது. மற்றது பிரசித்தப்பொருள்.

விஞ்ஞானகலர்கள் பரிபக்குவமலர்கள் அபரிபக்குவமலர்களென விருவகை. அந்தவிருவகைக்குட் பரிபக்குவமலர்கள் சிவானுக்கிரகம்பெற்றுப் பதிபதார்த்தங்களா யாதிமுத்தசிவன்களாயு மணுசதாசிவானந்தாதிகள் மந்திரங்கள் புவனவாசிகளெனு மபரமுத்த சிவன்களாயும் போயிருப்பார்கள். அபக்குவமலர்கள் மாயைக்குமேற் சுத்தவித்தைக்குக்கீழ் மலமாத்திரகலுஷிதர்களாய்ப் பசுபதார்த்தங்களா யிருப்பார்கள். பிரளயாகலர் பரிபக்குவமலர் அபரிபக்குவமலரென விருவகை. அந்த விருவகைக்குட் பரிபக்குவமலர்கள் சிவானுக்கிரகம் பெற்றுப் பதிபதார்த்தங்களா யாதிமுத்த சிவன்களாயுஞ் ஸ்ரீகண்டர் வீரபத்திரர்முதலிய வபரமந்திரேசுரர்கள் புவனவாசிகள் எனுமபரமுத்தசிவன்களாயும் போயிருப்பார்கள். அபரிபக்குவமலர்கள் சிருட்டிகாலத்திலே சகலராவார்கள்.

சகலர்கள் திரிபந்திகளென்றும் விஞ்ஞானாதிகளினாலே கன்மநாசம் வந்து விஞ்ஞான கைவல்லியம் வருமளவுந் துவிபந்திகளென்று மிருவிதமா யிருப்பாகள். அந்த விருவிதமாயிருக்குஞ் சகலர்கள் தூலதேகிகளென்றும், அப்பிராரத்தவாகிய சரீரியென்றும் பிரநட்டவாகிய சரீரியென்றுஞ் சொல்லப்படுந் தூலதேக விதேகிகளாயு மிருப்பார்கள். திரும்ப வந்த நால்வகைச் சகலருந் தனித்தனிபரிபக்குவ மலர்களென்றும் அபரிபக்குவ மலர்களென்று மெட்டுவகை. அந்த வெண்வகைக்குட் பரிபக்குவ மலர்களெனும் நால்வகைப்பேருஞ் சிவானுக்கிரகம்பெற்றுப் பதிபதார்த்தங்களா யாதிமுத்த சிவன்களாயும் நானாபதமுத்தராயிருக்கும் அபரமுத்த சிவன்களாயும் போயிருப்பார்கள். அபரிபக்குவ மலர்களெனும் நால்வகைப்பேருஞ் சஞ்சாரிகளா யிருப்பார்கள். ஆகமூவகையும் பன்னிருவகையென்பது பார்த்தறிக. (உ)

சகலர்க்கனுக்கிரகங் குருத்திருமேனி குறித்திருக்குஞ் சிவன் பண்ணுவது பல பிரகாரமென்பது படிக் கின்றார்.

பலவிதமாசான்பாசமோசனந்தான்பண்ணும்
படிநயனத்தருள்பரிசவாசகமானதமு
மலகில்சாத்திரம்யோகமவுத்திரியாதி
யனேகமுளவவற்றினவுத்திரியிரண்டுதிறமா
மிலகுஞானங்கிரியையெனஞானமனத்தா
லியற்றுவதுகிரியையெழிற்குண்டமண்டலாதி
நிலவுவித்துச்செய்தலகிரியாவதிதானின்று
நிர்ப்பீசஞ்சபீசமெனநின்றிரண்டாய் நிகழும்

இ-ள். ஆசான் - குருக்குறி குறித்துக்கொள்ளுஞ் சிவன்—பாசமோசனம் பண்ணும்படிதான்-அனுக்கிரகஞ் செய்யும்பிரகாரம்—பலவிதம்-வெகுபிரகாரம் — நயனத்தருள் - (அத்துவாமார்க்கங்குறியாது குறித்துச் சுருக்கிப் பாசங்கழலப் பார்த்தல்) சக்ஷுவென்னுந் தீக்ஷை—பரிசம் - (அப்படிகுறித்துச் சிவ அத்தபரிசனம்பண்ணுதல்)பரிசதீக்ஷை—வாசகம்-(அப்படிகுறித்துப் பதினொருமந்திரத்தோடு பஞ்சாக்ஷரமுபதேசித்தல்) வாசகதீக்ஷை—மானதம்-(அப்படிகுறித்து யோகமார்க்கத்தாற் சீஷனது தேகம் பிரவேசித்துச் சிந்தித்தல்) மானத தீக்ஷை—அலகில் சாத்திரம்-(அப்படிகுறித் தாகமப்பொருளைச் சுருக்கியுபதேசித்தல்)சாத்திரதீக்ஷை—யோகம் - (அப்படிகுறித்து யோகமார்க்கத்தாற் சீஷனிருதயகமலத்திற் பிரவேசித்து நக்ஷத்திரம்போலிருக்கின்ற சீவனைப் பாசம்பறியத் துவாதசாந்தத்துச் சிவனிடத்தில் யோசித்தல்) யோகதீக்ஷை—(இவ்வறுவகைத் தீக்ஷையு மவுத்திரி தீக்ஷைக் கருகமல்லாத பேர்க்குப் பண்ணுவ தெனவு மவுத்திரிக் கங்கமெனவுமறிக)—அவுத்திரியாதி - அவுத்திரிப் பிரதானமா யிப்படி தீக்ஷைகள்—அனேகமுள - வெகுபேதமுண்டு—அவற்றினவுத்திரி—இலகுஞானம் - விளங்கும் ஞானவதியென்றும்—கிரியை - கிரியாவதியென்றும்—இரண்டுதிறமாம்-இருவகையாம். (அவற்றுள்)—ஞானம் - ஞானதீக்ஷை (அது சத்தி சாம்பவியென்றிருவகை. அவற்றிற் சத்தியோகதீக்ஷை.சாம்பவிஞானதீக்ஷை.அதிற்சத்தி)—மனத்தாலியற்றுவது-புறம்பேபோற் குண்டமண்டலாதி மனச்சிறப்புச்சங்கற்பத்தாற் குறித்துப் பண்ணுவது. (சாம்பவிமனோதீதசிற்சத்தி மனச்சங்கற்பபூருவசிற்சத்திக்கட்சிறப்புப்பார்வையாற் பாசமுறைமையிற் பறியப்பார்த்துப் பண்ணுவது)—கிரியை - கிரியாதீக்ஷை—எழிற்குண்டமண்டலாதி நிலவுவித்துச் செய்தல்—கிரியாவதிதானின்று நிர்ப்பீசஞ்சபீசமென நின்றிரண்டாய்—நிகழும் - விளங்கும். எ-று. (ரு)

இருவகைத்தீக்ஷைக்கு மருகரை முறைமையி லிசைக்கின்றாராய் நிர்ப்பீசத்தருகரை நிகழ்த்துகின்றார்.

பாலரொடுவாலீசர்விருத்தர்பணிமொழியார்
பலபோகத்தவர்வியாதிப்பட்டவர்க்குப்பண்ணுஞ்
சீலமதுநிர்ப்பீசஞ்சமயாசாரந்
திகழ்சுத்திசமயிபுத்திரர்க்குநித்தத்
தேலுமதிகாரத்தையியற்றித்தானு
மெழினிரதிகாரையெனநின்றிரண்டாய் விளங்குஞ்
சாலநிகழ்தேகபாதத்திறேடு
சத்தியநிருவாணமெனச்சாற்றுங்காலே.

இ-ள். பாலர் - சத்திபாதலக்கணங் காண்பிக்குஞ் சாமர்த்தியமுடையராய்ச் சமயாசார மனுட்டிக்குஞ் சாமர்த்தியமிலராய் நிரம்ப வோதியுணராார்களாய்ப் பதினாறுவயதுக்குள் வயதுடையர்—அவர்களோடு—வாலீசர் - (வாலிசரென்பது வாலீசரென நீட்டியவாறு) சத்திபாதசின்னர்களாயு மோதியுணராதார்—விருத்தர் - சத்திபாதசின்னர்களா யோதியுணர்ந்தாலு மனுட்டானத்தில் அசத்தரா யெழுபதுவயதுக்கு மேற்பட்டார்—பணிமொழியார் - உள்ளபடி யோதியுணர்ந்து சமயச்செய்தி சாங்கமாய னுட்டிக்குஞ் சாமர்த்திய மில்லாதாராய்ச் சத்திபாதசின்னிகளாய்ச் சஞ்சரிக்குமகளிர்—பலபோகத்தவர் - சாத்திரபாத்திரராய்ச் சத்திபாதச்சின்னந் தாக்கித்தூக்கவும் போகவாஞ்சைபோக்கு மூக்கமில்லாதார்—வியாதிப்பட்டவர் - உரைத்தவையெல்லா முடையராயினு முரோகத்தரிவர்கட்கு—பண்ணுஞ்சீலமது - செய்யுஞ் செயற்கையையுடைய தீக்ஷை—சமயாசாரந்திகழ்சுத்தி - பீசச்சொற்சொல்லுஞ் சைவசங்கேதானுட்டானப்பொருளில் விளங்கும், நிர்ச்சொற்சொல்லுஞ் சோதனைப்பொருள்—நிர்ப்பீசம்-நிர்ப்பீசதீக்ஷை(சாதகராசாரியர் இருவர்க்குந் தகாதாதலால்)—சமயிபுத்திரர்க்கு - புத்திரரென்று நிருவாணதீக்ஷிதர்க்கும் பேர்பேசுதலாற் சமயிவிசேஷிசாதகாபிஷேக நைமித்திகாதிகாரமில்லா நிருவாணிகளில் நித்தியகிருத்தியமாத்திரத்திற் சாமர்த்தியவான்க ளொருபிரகாரஞ் சாதிகாரிகளானாலும், அவருள், நித்தியமுற்றும்பண்ணுஞ் சாமர்த்தியமில்லாப்பாலர்முதற் சமயிவிசேஷி சாதகாபிஷேக நைமித்தியாதிகாரமில்லா நிருவாணிகட்கு—நித்தத்தேலுமதிகாரத்தையியற்றி - முழுகுதல் தர்ப்பித்தல் செபித்தல் குருக்குறிப்பேவல் பூசித்தல் ஓமித்தல் கேட்டுச்சிந்தித்துத் தெளிந்துதியானித்தல் சமாதித்தல் சாக்ஷாத்கரித்தல் முதலிய நித்தியகன்மத்திற் குருக்குறிப்பவேலால் நைமித்தியகன்மத்துஞ் சிலவற்றிற்காமியத்

துஞ் சிலவற்றிற் சமர்த்த சமயிமுதலோர் பண்ணுங்கிருத்தியத்தி லியன் றகிருத்தியத்தைப் பண்ண, அதுவுங்கூடாதிருந்தாற் குருக்குறிப்பேவல் மாத்திரத்தைப்பண்ண, அதுவுங் கூடாதிருந்தாற் புத்திராதிகளாற் பொருள்கொடுத்து வேண்டிக்கொண்டாதல் பிறராற்முன்பேணக் குருவைக் கொண்டு கற்பிக்கப்பண்ணி—தானும் - அந்த நிர்ப்பீசதீக்ஷயும்—எழி னிரதிகாரையெனநின்று- வடிவுறு நிர்ப்பீசதீக்ஷையென்றிருந்து—இரண் டாய்விளங்கும் - (ஏலுங்கிருத்திய மேலாக்கிருத்தியங்குறித்துச் சாதிகா ரையாயு நிரதிகாரையாயுமிருத்தலால்) சபீசையாயு நிர்ப்பீசையாயு மிரு விதமா யொருவகை சாற்றத் தோற்றும்—சால நிகழ் தேகபாதத்தினோடு (பண்ணுமென்பது தொக்குதலாற் பண்ணுங்காலேயெனப் பண்ணுக, சபீசதீக்ஷாயோக்கியர்க்குள் ளியற்கையாற் சரீரவைராக்கிய முடையோர்க்கும், நிர்ப்பீசதீக்ஷா யோக்கியர்க்குள்ளும், வியாதிமுதிர்ச்சி விருத்தத் தன்மைமிகுதி முதலியவற்றாற் சரீரவைராக்கிய முடையோர்க்குஞ் சஞ்சரிக்குங் காயமுடன் முற்றுங்கழியப்பண்ணு நிர்ப்பீசதீக்ஷைதானே)—சத்தியோநிருவாணமெனச்சாற்றும்-(முத்திவிரும்பினர்க்கு நயிட்டிகதீக்ஷை யென்று காட்டப்படுந்தீக்ஷை சத்தியோமுத்திப்பிரதமானால்) சத்தியோ நிருவாணதீக்ஷையென்றும் பேர்ப்பூசப்படும். எ—று.

சிலவிடத்திற் சித்திவிரும்பினர்க்குப் பவுதிகதீக்ஷையென்று பார்க்கப்படுந்தீக்ஷை சத்தியோபூதிப்பிரதமானாற் சத்தியோபோக தீக்ஷையென்று பேர்சாற்றப்படும். விதேகவிஞ்ஞானகலர்க்கும் விதேகப்பிரளயாகலர்க்குங் குருதேகதேகியல்லாச்சிவனால் நிர்ப்பீசதீக்ஷையாய்ப் பண்ணு முன்சொல்லிய நிராதாரதீக்ஷையென்னு நிரதிகரணதீக்ஷையு மிவ்விருவகைப்பேர் பெறுமென்பதறிக.தேகபாதமில்லாமற்செய்யு நிர்ப்பீசதீக்ஷையுஞ் சபீசதீக்ஷையும் அசத்தியோநிருவாண தீக்ஷையென்பதறிக. (௬)

சபீசத்தருகளைச்சாற்றுகின்றார்.

ஓதியுணர்ந்தொழுக்கநெறியிழுக்காநல்ல
வுத்தமர்க்குச்செய்வதுயர்பீசமிவர்தம்மை
நீதியினனித்தியநைமித்தியகாமியத்தி
னிறுத்திகிரம்பதிகாரநிகழ்த்துவதுஞ்செய்து
சாதகராசாரியருமாக்கிவிடு
தருவிக்குமுலோகசிவதன்மிணியென்றிரண்டா
மாதலினலதிகாரையாஞ்சமயவிசேட
நிருவாணமபிடேகமிவற்றடங்குமன்றே.

இ-ள். ஓதி யுணர்ந்தொழுக்க நெறியிழுக்கா நல்லவுத்தமர்க்கு - சபீ சதீக்ஷை படிப்பிக்கப்பண்ணும் விசேஷவித்தையாகிய சிவாகமங்களைப் படித்துப்பார்த்துப் பதார்த்தங்களைப் பகுத்தறிந் தச்சமயாசாரமார்க்க நடக்கை தப்பாதனுட்டிக்குஞ் சாமர்த்தியங்காண்பிக்குஞ் சாமானிய வித்தையாகிய தர்க்க சத்த வேத வேதாந்த மீமாம்சை புராண முதலிய முற்றுமற் றருகமாமிவைகளி லொவ்வொன்றைத்தான் படித்துப்பார்த்துப் பதார்த்தங்களைப் பகுத்தறிந் தச்சமயாசார மார்க்கநடக்கை தப்பாதனுஷ்டியாநின்று காண்பித்த சாமர்த்தியமுடையராய்ச் சற்றுத்தமாதிகாரிகளாகுஞ் சமயி விசேஷி நிருவாணி சாதகாசாரியர்களா மருகாக்கு—செய்வது - பண்ணுவது—உயர்பீசம் - (தலைக்கடைக்குறைத்தலால்) முக்கிய சபீசதீக்ஷை—இவா தம்மை-இவ்வைவரையும்—நீதியினால் - அவரவர்க்கருகமாக—நித்தியநைமித்திய காமியத்தினிறுத்தி - சமயிவிசேஷி நிருவாணி மூவரையும், நீர்முழுகுதல் தர்ப்பித்தல் செபித்தல் பூசிதல் ஓமித்தல் கேட்டுச்சிந்தித்துத தெளிந்து தியானித்தல சமாதித்தல் சாக்ஷாத்கரிதல் முதலிய வவரவர்க் கருகமான கனமங்களை விதிப்படி விழாது செய் நித்தியாதிகாரத்திற் பிரதானமாய் நிற்பித்துக் குருக்குறிப்பேவலாற் சிறிதியன்ற நைமித்திகாதிகாரத்திலுஞ் சிகாச்சேதவானாகிய நிருவாணிக்கு விசேஷித்து நைமித்திகத்தி லதிகாரமுண்டென்று காமிகமுதலிய சிவாகமஞ் செப்புதலாற் குருகற்பனையாற் சகல நைமித்திகாதிகாரத்திலுஞ் சிறிதுவிரும்பிற் குருகற்பனையாற் சிறிதுகாமியாதிகாரத்திலும், நிற்பித்துச் சாதகாபிஷேகம்பண்ணிச் சாதகனாகக்குறித்தவனைச் சாதகாபிஷேகம்பண்ணிச் சாத்தியமந்திரசெபபூசையோமமுதலிய காமியாதிகாரத்திற் பிரதானமாய் நிற்பித்து நித்தியாதிகாரத்திலுங் குருவாஞ்ஞையினாற் சகல நைமித்திகாதிகாரத்திலும் நிற்பித்து ஆசாரியாபிஷேகம்பண்ணி யாசாரியனாகக்குறித் தவனை யாசாரியாபிஷேகம்பண்ணித் தீக்ஷை பிரதிட்டை சிவாகமபோதன முதலிய நைமித்திகாதிகாரத்திற் பிரதானமாய் நிற்பித்து நித்தியாதிகாரத்திலும் பரார்த்தஞ்சிறிது சுவார்த்தமாகவுஞ்சிறிது காமியாதிகாரத்திலு நிற்பித்து—நிரம்பவதிகார நிகழ்த்துவதுஞ்செய்து-நிர்ப்பீசதீக்ஷைபோ லேலுமதிகாரமாத்திரமா யேலாவதிகாரக்குறையா யியற்று விபபதின்றி யிப்போதுசொல்லிய நித்தியாதிகாரி காமியாதிகாரி நைமித்திகாதிகாரி மூவர்க்கும்,அவரவர்க்குஅருகமாய் நிறையவதிகாரம்பண்ணுவது பண்ணுவித்து (அவாக்குள்ளிருவரை)—சாதகராசாரியருமாக்கி-(சாதகராசாரியர்களாலுஞ் சிகாச்சேதமாத்திரஞ்செய்த நிருவாணியாலு மோரிருவர்முறையிற் சுதந்திரமாயுங் குருவாஞ்ஞையினாலும்பண்ணப்பட்டதன்றோல்)—வீடுதருவிக்கும்-மோக்ஷங்கொடுப்பிக்கும். (மூவருளாசாரியன் சுவதந்திரமாய்ச்சருவாதிகாரியாதலாற் சருவசம்பூரண சபீசசாதிகாரதீக்ஷாவானாதலா லவனுக்கே சாதிகாரதீக்ஷையென்ப தியல்பினாற்செல்லும். திரும்ப

வந்தச்சபீசதீக்ஷை) உலோகசிவதன்மிணியென்றிரண்டாம்-உலோகதன்மிணிதீக்ஷை சிவதன்மிணிதீக்ஷையென்றிருவிதமாம்—ஆதலினால்-சொல்லியநீதியினாற்(சபீசதீக்ஷாபேதமெல்லாம் நிர்ப்பீசதீக்ஷையில் நிரதிகாரையாய் முன்சொல்லிய சமய விசேஷ நிருவாண தீக்ஷைகளைநீக்கி)—அதிகாரையென்பது தலைக்கடைக்குறைத்தலாற் சாதிகாரதீக்ஷையாம்—சமயவிசேட நிருவாணமபிடேக மிவற்றடங்குமன்றே (அன்றே யென்ப தசை) எ-று.

உலோகசிவதன்மிணியென்றவிடத்துச் சிறிதிசையாதது விசேஷித்திசைப்பாம். முறைமையிற் சபீசதீக்ஷாபேதமாகுஞ் சிவதன்மிணிதீக்ஷையுலோகதன்மிணிதீக்ஷை யிரண்டிற்குள் சிவதன்மிணிதீக்ஷை பரையென்றுரைக்கு நயிட்டிகீ தீக்ஷையென்றும் அபரை யென்றுரைக்கும் பவுதிகீ தீக்ஷையென்று மிருவிதமாம். அதற்குட் பரம்பரையாயுஞ் சாக்ஷாத்தாயு நிரதிசயசருவஞ்ஞதாதி சிவகுணமணப்புற்று முத்திமாத்திர காமிகராயுஞ் சாதககாரிய காமிய சிவதன்மவுலோகதன்ம கன்மானுட்டான பலப்பற்றற்றவர்களாயு மவரவர்க்கருகமாஞ் சாமானியவிசேஷசரியை கிரியை செபசாலம்பசிவயோக நிராலம்பசிவயோக ஞானத் திரிபதார்த்தஞான சிவத்துவ பசுத்துவ விவேகஞானவான்களாயும், அந்தந்தச் சிவதன்மானுட்டான சிலர்களாயுஞ் ஸ்ரீகண்டாதி சதாசிவாந்த சாலோக சாமீப சாரூப சமபலத்தியானசாத்திய சமபலமூர்த்தி சாயுச்சியங்களையுஞ் சதாசிவதத்துவத்துக்குமேற் சத்திசிவதத்துவ கலாபுவன சாதார நிராதாரங்களிற் பரசிவசாலோக சாமீப சாரூபச் சற்றுச்சிற்றுச் சமபல தடத்தமூர்த்தி சாயுச்சிய முற்றுப்பெற்று மூர்த்திமுத்தச்சுவரூப சாயுச்சியங்களையு மவரவர்க் கருகமாய்ச் சாருதற்கருகர்களாயு மிருக்குஞ் சமயிகள் புத்திரர்கள் புத்திரவிசேஷ நிரபிஷேக நிரதிகார நிருவாணிகள் சாபிஷேக சாதிகாராசாரியர்க ளிவர்கட்கு யோக்கியமறிந்து சருவசிவபுண்ணிய பசுபுண்ணியபாவ சஞ்சிதகன்ம சுத்திமதியாகவு மதில்லாததாகவு மட்டாங்குல மட்டுவிட்டறுக்குஞ் சிகாச்சேதவதியாகவு மதில்லாததாகவும் பண்ணுமது நயிட்டிகீசிவதன்மிணிதீக்ஷை.

கூடவுதிக்கு மாயேய மகாமாயேய புத்திகுண வணிமாதிகுணஞ் சிற்றுப்பலமாகத் தானதிகபலமாக வுதிக்குஞ்சரீரநிரவதிகசாதிசய சருவஞ்ஞதாதி சிவகுணமணப்புற்ற போகபோகாந்தமோக்ஷ காமிகளாயு மகாப்பிரளயபரியந்த மிந்தச் சரீரத்தைத்தானே மரணமடாதபடி யதிமார்க்கமாந்திர சாத்திரப்பிரசித்த விசேஷ சிவதீர்த்த மருந்து மந்திர யோகமுதலிய சிவதன்ம விசேஷானுட்டானத்தாற் சித்திபண்ணிக்கொண்டு தாமிருக்கும் புவனமதுவிட்டு முட்டின்றிவிரும்பிப்போம் புவனங்கட்கிணங்க வேடந்திரித்து வடிவுவிரித்து மாயாவதிசரிக்குஞ் சாமர்த்திய வாஞ்சாவான்களாயுஞ் சரீரம்விட்டு விரும்பும்வேறுசரீரம்பரித்து மகாமாயாவதிசரி

ப்ப விருப்பந்தரிப்பவராயுங் காமிய சிவஞானத்தியானசெபபூசாசேவாதி சகாமாராதனை; அல்ல தணுபக்ஷபிரமாதி நாற்சிவமூர்த்தி யாத்மாரூட சம்புபக்ஷ பிரமாதிநாற்சிவமூர்த்தி சம்புபக்ஷமாத்திரசதாசிவமூர்த்தியாகப் பஞ்சபஞ்சகலேசுவர மூர்த்திகளுள் அவரவர்க்கிட்டபலாருக கலாருக கலேசுரமூர்த்தி ஞானத்தியானசெப பூசாசேவாதி சகாமாராதனை;அல்ல தப்படி சிந்திக்கப்படுங் காலாக்கினியாதியநுசிருதாந்த புவனேசுரர்களுள் ளவரவர்க்கிட்டபலாருக புவனாருக புவனேசுர ஞானத்தியான செபபூசா சேவாதி சகாமாராதனையென்கின்ற வதிமார்க்கமாந்திரசாத்திரப்பிரசித்த சிவதன்மானுட்டான வாஞ்சாவான்களாயு மிருக்குஞ் சாதகர்க்குத் தீக்ஷா னந்தர மனுட்டிக்குஞ் சிவபுண்ணியத்துக்கொத்து மாறின்றிச்சேருமுன் செய்த சிவபுண்ணியமாத்திரமந்தந்தச் சாதகரடையும்பலாருக கலாருகங் களா யந்தந்தக் கலாமரியாதியிற் சேஷித்துநிற்கச் சருவபசுபுண்ணியபாப சஞ்சிதகன்ம சுத்திமதியாகவுந் துவதாசாங்குலமட்டு விட்டறுக்குஞ் சிகா ச்சேதவதியாகவும் பண்ணுமது பவுதிகீசிவதன்மிணிதீக்ஷை.

மாயாவதி மட்டுமுட்டும் பிரஞ்ஞாப்பெருக்குத் தனதுதனது வசதிய வதிசுருக்கும் பின்கூட வுதிக்குந் தான்சிற்றுப்பலமாக வதிகபலமாகவுதிக் குஞ் சாதிசய சருவஞ்ஞதாதி சிவகுணமணப்புற்று மாயாமண்டலத்திருந் தாலுஞ் சிலபேரிடத் தப்பிரஞ்ஞாப்பெருக்கு மாயோபரியபரிமிதமாக விரிக்கு மாயேயபுத்தி யணிமாதிகுண மணப்புற்று மதுவன்றி வைதிகாத் தியாத்ம சாத்திரப் பிரசித்த யாகாதிபசுதன்மந் தன்கோடிக்குள்ளடக்கும் லௌகிகசாத்திரப் பிரசித்த தண்ணீர்ப்பந்தல் தடாகமுதலிய வுலோக தன்மந்தழுவி யொழுகியு முலோகதன்மசிவதன்மத் துலாகோடிகளுக்குட் சிறிதொருதலைபற்றி முன்சொல்லிய வதிமார்க்க மாந்திர சாத்திரப் பிர சித்த சிவதன்மத் துலாகோடிகொழுவி யச்சிவதன்மானுட்டானத்தால், மகாமாயாபூதி விரும்பிற் றன்னோடுகூடவுதிக்கு மகாமாயேயபுத்திகுண வணிமாமுதலிய குணபலஞ் சிறறுப்பலமாகத தானதிகபலமா யுதிக்குஞ் சாதிசய சருவஞ்ஞதாதி சிவகுணமணப்புற்றுமுதிக்கும் போகபோகாந்த மோக்ஷகாமிகளாயு மகாப்பிரளய பரியந்தஞ் சிவதன்மிணி பவுதிகீதீக்ஷை யிற் சொல்லிய விருவகைமுறைமையிற் சரீரந்தரித்துச் சரிப்ப விருப்பந் தரிப்பவராயுஞ் சிவதன்மமணப்புற்ற வுலோகதன்மம் உலோகதன்மமணப் புற்ற சிவதன்ம மிருதனமானுட்டான சீலர்களாயு மிருக்குஞ்சாதகர்க்கு, அந்தந்தச் சாதகர் பொருந்த விரும்பு மந்தந்தப் பலாருக கலாருகங்களா யந்தந்தக் கலாமரியாதியிற் பசுபுண்ணியங்கள் சிவபுண்ணியங்கள்பரிசே ஷித்துநிற்கப பாவகன்மங்க ளந்தந்தக் கலாமரியாதியிற் பரிசேஷியாது பரிசுத்தியாகவப்பரிசுத்தி மதியாகவு மந்தந்தச்சாதகருக்குட் சதாசிவதத் துவோபரிசத்தி சிவதத்துவ போககாமிகட்குத் துவாதசாங்குலமட்டு

விட்டாருக்குஞ் சிகாச்சேதவதியாகவும் பிருதிவிதத்துவாதி சதாசிவதத்துவாந்த போககாமிகட்குச் சிகாச்சேதவதியன்றியும் பனையாகவு மபனையாகவும் பண்ணுமது லோகதன்மிணிபவுதிகதீக்ஷை.

ஸ்ரீமத் அகோரசிவாசாரியர் பத்ததிமுதற் சிலபத்ததிகளிற் பவுதிகசிவதன்மிணிதீக்ஷை பவுதிகலோகதன்மிணிதீக்ஷையிரண்டிற்கு மிருதீக்ஷாபலாருக கலாருகங்களாய்ப் பசுபுண்ணிய சிவபுண்ணிய தன்மகன்மங்கள் பரிசேஷித்துநிற்கப் பாவகன்மங்கள் மாத்திரம் பரிசேஷியாது பரிசுத்தியாகப் பஞ்சகலாசுத்தி யொருமிக்கப்பண்ணி விரும்பியவிரும்பிய புவனபோகம் போகாந்தத்துப் புநர்த்தீக்ஷாபேக்ஷை யுபேக்ஷித்துச் சாக்ஷான் மோக்ஷஞ் சாரும்படிக்குச் சிவனிடத்து யோசனை செய்பி யிருப்பது சிந்தித்தறிக.

நிர்தீக்ஷாபரீக்ஷை பண்ணியது நுண்ணியதுதானே; கிரகத்தாசாரியர் விரத்தாசாரியரொன்று விசேஷியாமல்ஆசாரியர்கட்கு நயிட்டிகதீக்ஷையென்றுமுன்சமுதாயத்திற் சாற்றினீர்; அது காலோத்தராதியில் நயிட்டிகாசாரியர் நயிட்டிகர்க்குங் கிரகத்தர்க்குந் தீக்ஷைபண்ண; பவுதிகாசாரியர் பவுதிகர்க்குமாத்திரந் தீக்ஷைபண்ண என்னும்பாடத்தாற் கிரகத்தாசாரியர்கட்கு நயிட்டிகதீக்ஷை நாட்டப்படாதென்று காட்டப்பட்டது. நீசொல்லியதுள்ளது; ஆசாரியர்கட்கு நயிட்டிகதீக்ஷையென்றும், சருவஞ்ஞானோத்தர சாமான்னிய வசனத்தினாலும் நயிட்டிகாசாரியர் நயிட்டிகர்க்கு மாத்திரங் கிரகத்தாசாரியர் நயிட்டிகர்க்கும் பவுதிகர்க்கும் பண்ணஎன்னுமாகமாந்தர விசேஷவசனத்தினாலும், நயிட்டிகதீக்ஷையினாலே தீக்ஷிதனாயிருக்குங் கிரகத்தனும்.விரத்தனும் வர்ச்சிக்கப்படாது வாஞ்சிக்கும் பிராரத்தகன்மபல போகவாஞ்சைமாத்திரத்தினாலேதான் மணிமந்திர மருந்து முதலிய சாதனமாத்திர சாத்தியகாயிகபோக போகவாஞ்சை மாத்திரத்தினாலேயுந்தான், மலபரிபாக தாரதம்மியத்தான் நயிட்டிகதீக்ஷாவைசித்திரியமாத்திரத்தா லிங்கிருந்து வாஞ்சியாதிருக்கவுஞ் சரீராந்தத்திற்றானே வரும் பராபரபுத்தி யபரமுத்திபோகவாஞ்சை மாத்திரத்தினாலேயுந்தான் சாதக சாத்திய பவுதிகதீக்ஷாபல புவனபதிபூதி வாஞ்சையில்லாமையாற் பவுதிகனன்று, நயிட்டிகன்றானேயென்றுஞ் சோமசம்புவிருத்தி வசனத்தாலுங் கிரகத்தாசாரியர்கட்கு நயிட்டிகதீக்ஷை நன்றாகநாட்டப்பட்டது.

நீரப்படிசொல்விற்பவுதிகாசாரியர் பவுதிகர்க்குத்தீக்ஷைபண்ணக்கடவர்கள் என்னும் வசன நிட்பலமாய் அப்பிராமாணியத்தானமாய்ப் போகாதோ? நீயப்படி போமென்று சொல்லியதேது ? அப்படிபோகாது; சகலாகமத்தின சோமசம்புபத்ததி வியாக்கியானத்திற் சுருக்கியுரைத்தி

ருப்பது விரித்துரைப்பாம்:—முறைமையில் நிட்டையென்று மோக்ஷத்துக்குஞ் சமாதிக்கும் விரதமுதலியவற்றிற்கும் பெயராதலால், வாலியவயதுதொடுத்துமரணாந்தம் விரதநியமித்துத் துறவிகளாயிருக்கும் நயிட்டிகப்பிரமசாரிகளென்றும் கன்னியாகலியாண காலாவதி விரதநியமித்துத் துறவிகளாயிருக்கும் பவுதிகப்பிரமசாரிகளென்று மிருவகையாயிருக்கும்; விரத்தாசாரியர்களுங் கிரகத்தாசாரியர்களுந் தனித்தனி சரீராந்தத்தில் வரு மோக்ஷவிருப்பத்தினாலு மவரவர்க் கிட்டபுவனபதிபூதி விருப்பத்தினாலு மவ்விருப்பத்துக்கருகமாய் நயிட்டிகீதீக்ஷை பவுதிகீதீக்ஷை பண்ணுவித்துக்கொண்டு மூன்றுபகுப்பார்களுக்குந் தனித்தனி யட்டாங்குல சிகாச்சேதமுடைய நயிட்டிகாசாரியர்களென்றுந் துவாதசாங்குல சிகாச்சேதமுடைய பவுதிகாசாரியர்களென்று மிருவிதமாயிருப்பார்கள்; ஆதலாற் கிரகத்தாசாரியர்கள் நயிட்டிகாசாரியர்களாயும் பவுதிகாசாரியர்களாயும் குருத்துவம் பரிப்பார்களென்பது பசுமரத்தாணிபோற் பதித்து நாட்டுதலாலும் வசனங்கள் சபலங்கள்தானே. அஃதப்படியாகட்டும்; ஸ்ரீகாமிகாகமத்தில் நாலாம் வருணத்தில் நயிட்டிகர்கட்கே நைமித்திய கன்ம கர்த்திருத்துவ குருத்துவம், கிரகத்தர்க்கு நித்தியகாமியகன்ம கர்த்திருத்துவ சமயி புத்திர சாதகத்துவ மாத்திரம் குருத்துவமில்லையென்று கூறியதேதது? அதுவுள்ளது; ஆமர்த்தகமடமுதலமட குருமனக்குறிப்புப் பிரிப்பினான் மடப்பகுப்பாகமங்களிற் சிலவாகமங்களிற் கூறியது. காலோத்தராதியில்,

"கிரகத்தச்சர்வவருணேஷு— பிம்பபூச்சியோகுருருதாகிருத:
நயிட்டிகத்துவதமோஜ்ஞேயோ பவுதிகந்துவிசேஷத:
சதுர்ணாமபிவர்ணா மிலிங்கினாங்கிரகிணாமபி
ஆசாரியத்துவஞ்சிவேனுச்சி மின்சித்தாந்தேபிறதிபாதிதம"

என்றுகூறுதலானுங் கிரணாகமத்திற் பிராமணாசாரியர்முத லாசாரியர் நால்வர்க்கு முறைமையில் நாலுமூன றிரண்டொரு வருணங்களிலே கலியாணம் விதித்திருத்தலானுஞ் சருவாகமங்களு மப்படிசாற்றுவாம்;ஓராகமத்திற் றள்ளியதுகொண்டு தள்ளினாற் பிராமணனேகுரு மற்றவருணத்தார் சாதகர் புத்திரர் சமயிகள் மாத்திரமா யிருப்பார்களென்றும்,பிராமணன் பிராமணன் முதல் நால்வர்க்குங்குருவென்றும், அரசன் அரசன்முதல் மூவர்க்குங் குருவென்றும், வணிகன் வணிகன்முத லிருவர்க்குங் குருவென்றும், சூத்திரன் சூத்திரர்க்குக் குருவென்றும், மேருதந்திரத்திலுங் காமிகம் பராக்கியை முதலாகமங்களிலு முறைமையில் நிஷேதித்தும் விதித்துமிருத்தலால் ஒரு வசனத்தைப்பிடித்துப் பிராமணன்றனே குரு மற்றவரல்லவென்று பேசவேண்டும்; அப்படியாகட்டுமென்று நீசொல்லில் மற்றவர்களுங் குருவென்னு மனேகாகமவசனங்களுக்கு மப்பிராமாணியப் பிரசங்கம் வரும்

பிராமணரில் பிரஞ்ஞாவான்க ளில்லாதிருந்தால் அரசர் முதலோர்க் கரசன் குரு. அரசர்களில் பிரஞ்ஞாவான்களில்லாதிருந்தால் வணிகர்முத லோர்க்கு வணிகன்குரு வணிகரிற் பிரஞ்ஞாவான்க ளில்லாதிருந்தாற் சூத்திரர்க்குச் சூத்திரன் குருவென்னும் வசனங்களுக்குப் பிரமாணியஞ் சொல்லலாமென்று நீசொல்லில், நாலாம்வருணத்தில் நயிட்டிகரிற் பிர ஞ்ஞாவான்க ளில்லாதிருந்தால் கிரகத்தன் குருவென்னும் வசனத்துக் குப் பிராமாணிய நாம்பேசுவோம்; அப்படிதான் சொல்லுமென்று நீசொ ல்லில் அதுவுங்கூடாது; கிரகத்தன் சருவவருணங்களிலும் பூச்சியனாகிய குருவென்று கூறுதலால் நாலாம்வருணத்தில் நயிட்டிகர் பிரஞ்ஞாவான் களா யிருந்தாலுங் கிரகத்தரும் பிரஞ்ஞாவான்களாயிருந்தா லிருவகையா ருங் குருவென்று கூறுவோம்; அப்படிதானாகட்டுமென்று நீசொல்லில் அதுவுங்கூடாது; மந்தப்பிரஞ்ஞாவானாயிருந்தாலும் பிரவாகசந்ததிப் பிர சித்தப் பிரசூதிமானாயிருக்கின்ற குருபுத்திரனைத் தியாச்சியம் பண்ண லாகாதென்று சிவாகமஞ் செப்புதலாலொன்றுங் குறியாமற் பிரஞ்ஞாவா ன்களா யிருக்கிற சிஷர்களுதவியாக அவனேகுருவென்று கூறுவோம்; இப்போது சொல்லிவந்த வசனங்களினால் விரதிகளிற் பிரமசாரியருங் கிரகத்தருங் குரு, வானப்பிரத்தருஞ் சன்னியாசிகளுங் குருவல்லவென்று கூறப்பட்டது.

ஸ்ரீகாமிகாகமத்திற் சன்னியாசிக்குங் குருத்துவமுண்டென்று கூறி யதேது? உள்ளது; சாத்திரதீக்ஷை மாத்திரத்திலென்று சமாதானம்; சாக்ஷாத்கிருத சிவாதிபதார்த்த சித்த சிவயோகியாகிற் சாம்பவிதீக்ஷை மாத்திரத்திலென்றுஞ் சமாதானமாம். நாலாம்வருணத்தாருக்குப் பிரணவ மாகாதென்று பிராமணர்முதலோர் பேசுவதேது? உள்ளது, குருத்துவம் விதித்திருத்தலாற் பிரணவபூருவப் பிராசாத மறியாதவன் குருவல்லவெ ன்று கூறுதலானும் மகுடாகமத்தில்,

"நிருவாணதீக்ஷிதேசூத்திரோ பிரணவந்துங்யோசயேது"

என்று

இருத்தலானுங் காமிகத்து மப்படியே யிருத்தலானும் பிரணவமாமென்று பேசுவோம்; சோமசம்பு பத்ததிமுதற் பத்ததிகர்த்தாக்கள் நிஷேதியாதப டியினாலே விசிட்ட சமயிமுதலானோர்க்கும் பிராமாணிக்கங் கொடுத்திரு த்தலானு மாமென்பது சூசிக்கப்பட்டது; பிரஞ்ஞையில்லாப் பிராமணர் சிலபேர் நாலாம்வருணத்திற் சன்னியாசி யில்லையென்று சாற்றுவார்கள்; அது நயிட்டிகப் பிரமசாரிக்குள்ளடக்கிப் பிராயச்சித்தாதி விதித்தலாலே யும் அசிந்தியவிசுவசாதாக்கியத்திற் பிராமணர்முதற் பத்துச்சாதிக்கும் பிர மசரியம் கிரகத்தம் வானப்பிரத்தம் சன்னியாசம் நாலாச்சிரம முண்டெ ன்று விதித்தலாற் சைவத்திற் பிரசித்தம்.

வைதிகத்து பிராமாயணத்திற் கிருதாதி யுகக்கிரமத்திற் பிராமணர் முதல் நால்வர்க்குந் தபோமுக்கியஞ் சாற்றுவதுபோல் பிரமாண்டபுராண த்திற கிருதயுகத்துக்குப் பிராமணசன்னியாசி முக்கியன், திரேதாயுகத்து க்கு க்ஷத்திரிய சன்னியாசி முக்கியன், துவாபரயுகத்துக்கு வைசியசன் னியாசி முக்கியன், கலியுகத்துக்குச் சூத்திரசன்னியாசி முக்கியன் என் னும் வசனமுதல் வசனங்களாற் பிரசித்தந்தானே;சொச்சேத மில்லார்க் காசாரியாபிஷேக மாகாதாதலாற் கிரகத்தரிலும் விரத்தரிலும் நயிட்டிகதீ க்ஷாவான்களாய் நயிட்டிகாசாரியர்களுண்டென்று நாம்முன்னுட்டுதலால் அவ்விருவகை நால்வருணத்து நயிட்டிகாசாரியர்களே சாற்றியமரியாதி யிற் சைவத்துச் சனனியாசங் கொடுக்கவேண்டும் வைதிகத்துக்குப்போ லக் குருத்துவமில்லாச் சன்னியாசி கொடுப்பதின்று, பஞ்சரிஷி கோத்திர த்திற சிவப்பிராமணா சருவாதிகாரிகளென்று காமிகத்திற் சாற்றுதலா லவர்களிடத்திற் சிவனிடத்திற்போல் நயிட்டிகாசாரியர் பவுதிகாசாரிய னென்னும் பரியாலோசனை சன்னியாசாதிபரிக்கிரகம் பண்ணும்பொருட் டுப் பண்ணுவதின்று; சமபுத்தி பண்ணுவதே சால்பு; அமையு மினிமே லப்பால் நடப்போம். எ-று. (கு)

மேற்கிரியாவதி தீக்ஷையினுலேதான், சாம்பவிதீக்ஷ யோடு சாத்தியென்று சாற்று ஞானவதி தீக்ஷயி னுலேதான், சடத்துவா சுத்திபண்ணி முத்திவிய த்திபண்ணும்பொருட்டு அறியுஞ் சடத்துவாக்கள் கீழ்மேற்சொல்லுங்கிரமத்திலே யொன்றிறென்று வியாத்தியை யுடையதாகி வியாப்பியவியாபகங்க ளாய்ப் போய்த் தங்களை வியாபிக்குஞ் சிவசத்தி யோடுகூடச் சருவவியாபக சிவனுக்கு வியாப்பி யங்களா யிருக்குமென்று விளம்புகின்றார்:—

அழிவிலாக்கிரியையினுலாதல்சத்திமத்தா
லாதலத்துவசுத்திபண்ணிமலமகற்றி
யொழிவிலாச்சிவம்பிரகாசிக்குஞான
முதிப்பித்துற்பவந்துடைப்பனரனெருமூவர்க்கும்
வழுவிலாவழியாறுமந்திரங்கள்பதங்கள்
வன்னங்கள்புவனங்கடத்துவங்கள்கலைகள்
கழிவிலாதுணாத்தமுறையொன்றிறென்றுவியாத்தி
கருதுகலைசத்தியின்கண்சத்திசிவன்கண்ணும்.

இ-ள். "மலமகற்றி" யென்பதனுல் முத்திசெய் தீக்ஷாலக்கணசிவ சத்தியாற் பாசமுத்தி சொல்லப்பட்டது. "சிவம்பிரகாசிக்கு ஞானமுதிப்

பித்து" என்பதனால் வியத்திசெய் தீக்ஷாலக்கண சிவசத்தியாற் சிவசா க்ஷாற்காரோத்திரேக காரணதீக்ஷித சிவத்துவலக்கண சிற்சத்தியினது விருத்திரூப சருவபதார்த்தகர்ப்ப சிவசாக்ஷாற்கார சமுத்திரேகரூப விய த்தி சொல்லப்பட்டது. "உற்பவந்துடைப்பன்" என்பதனால் மீளத்திரு ம்புத லில்லையென்பது விளம்பப்பட்டது. சிவனுக்குச் சிவசத்தி வியாப் பியமென்றது சிவசமவேதையாய்ச் செலுத்தப்பட்டிருத்தலா லுபசாரம். மற்றதுவெளிப்பொருள், (சு)

ஆறத்துவாக்களுக்குள் மந்திரமுதலைந்துங் கலையைந் தின்வியாத்தியை யுடையதாதலினால் வியாபகமா யிருக்குங் கலைகளுக்கு வியாப்பியமென்றுஞ் சூசி ப்பித்துச் சடத்துவாவில் மந்திரத்துட் பஞ்சப்பி ரமங்களுக்குச் சங்காரக்கிரமஞ் சத்தியோசாதாதி யீசானமந்தம், நேத்திரம்விட்டுச்சடங்கங்களுக்குச் சங்காரக்கிரம மிருதயாதி யத்திரமந்தம், பதங்க ளுக் கோமாதி யோமாந்தம், வன்னங்களுக்கு க்ஷ காராதி அகாராந்தம், புவனங்களுக்குக் காலாக்கி னியாதி யனுசிருதையந்தம், தத்துவங்களுக்குப் பிருதிவியாதி சிவதத்துவமந்தம், கலைகளுக்கு நிவிர்த்தியாதி சாந்தியதீதையந்தம் என்று சிந்தித் துக்கொண்டு சங்காரக் கிரமத்தில் மந்திரமுதலைந் தும் கலையைந்தி னிற்குமுறைமை மூன்றுதிருவி ருத்தங்களினால் வகுத்துரைக்கின்றார்.

மந்திரங்கண்முதலைந்துங்கலையைந்தின்வியாத்தி
மருவுமந்திரமிரண்டுபதங்களுலே
மூந்தநிலையெழுத்தொன்றுபுவனநூற்றெட்
டவனிதத்துவமொன்றுநிவிர்த்தியயன்றெய்வம்
வந்திடுமந்திரமிரண்டுபதங்கண்மூவேழ்
வன்னங்களுலாறுபுரமைம்பத்தாறு
தந்திடுந்தத்துவங்களிருபத்துமூன்று
தரும்பிரதிட்டாகலைமாலதிதெய்வந்தானும். (எ)
வித்தையின்மந்திரமிரண்டுபதநாலைந்து
விரவுமெழுத்தேழுபுரமிருபத்தேழு
தத்துவமுமோரேழுதங்குமதிதெய்வந்
தாவிலுருத்திரனாகுஞ்சாந்திதன்னில்

வைத்தனமந்திரமிரண்டுபதங்கள்பதினொன்று
வன்னமொருமூன்றுபுரம்பதினெட்டாகு
முத்தமமாந்தத்துவமுமொருமூன்றாகு
முணரிலதிதேவதையுமுயரீசனாமே. (௮)

சாந்தியாதீதகலைதன்னின்மந்திரங்க
டான்மூன்றுபதமொன்றக்கரங்கள்பதினாறு
வாய்ந்தபுரமூவைந்துதத்துவங்களிரண்டு
மருவுமதிதேவதையுமன்னுசதாசிவமா
மேய்ந்தமுறைமந்திரங்கள்பதினொன்றுபதங்க
ளெண்பத்தொன்றக்கரங்களைம்பத்தொன்றாகு
மாய்ந்தபுரமிருநூற்றோடிருபத்துநாலா
மறிதருதத்துவமுப்பத்தாறுகலையைந்தே.
(பொருள்) பத்ததிகளிற் பிரசித்தம். எ-று. (௯)

குருவதிகரணமா யிருக்குஞ்சிவ னத்துவசோதனை பண்ணு முறைமை யறைகின்றார்:-

மூன்றுதிறத்தணுக்கள்செயுங்கன்மங்கட்கு
முன்னிலையாமூவிரண்டாமத்துவாவி
னான்றமுறையவையருத்தியறுத்துமலமுதிர்வித்
தரும்பருவமடைதலுமேயாசானாகித்
தோன்றிநுகராதவகைமுற்செய்கன்மத்
துகளறுத்தங்கத்துவாத்துடக்கறவேசோதித்
தேன்றவுடற்கன்மமனுபவத்தினாலறுத்திங்
கினிச்செய்கன்மமூலமலஞானத்தாலிடிப்பன்.

இ-ள். மூன்றுதிறத்தணுக்கள் செய்யுங் கன்மங்கட்கு - ஆன்மாக்கள்மனோவாக்குக்காயங்களினது வியாபாரப் பிரகாரத்தாற் புத்தியில் வாசனையாய்ப் புகுத்திப் பண்ணுங் கன்மங்களுக்கு—முன்னிலையா மூவிரண்டாமத்துவாவின்-சஞ்சிதமாய்க் குறித்துப் பகுத்தமைக்குந்தானமா மூவிரண்டாமத்துவாவின்—ஆன்றமுறையவையருத்தியறுத்து-அந்தச் சஞ்சிதகன்மங்களை யபக்குவங்களைவிட்டுப் பக்குவங்களைப் பிராரத்தகன்மமாக்கிப் புசிப்பித்துத் தொலைத்து—மலமுதிர்வித்து-(அந்தக் கன்மபோகதேகசம்பந்தத்தினாலே)மலசத்தியைவளர்த்து (அந்தமுதிர்ச்சியினாலேயந்தமலசத்தி)—அரும்பருவமடைதலுமே - பழுத்துப் பக்குவமாயுள்ளளவில் — ஆசானாகி - சிவன் குருவதிகரணனாகி—தோன்றி - பிரசன்னனாய்— (தோன்றி

யென்பதாநடுநிலைத்தீபகமாதலால்) தோன்றிநுகராதவகை - திரும்பச்சன் மித்துப்புசியாதபடி—முற்செய்கன்மத்துகளறுத்து - மலபரிபாகத்தினது தீவிரதரத்தன்மையாற் பக்குவங்களாயு மாந்தியத்தினு லபக்குவங்களாயி ருந்தாலுந் தீக்ஷாமந்திர சம்ஸ்காரத்தாற் பக்குவங்களாயு மிருக்கின்ற சஞ் சிதகன்மமலத்தைக் கலைகளிற்பகுத்துத் தீக்ஷாபலாருக கலாருகங்களாய்ச் சேஷித்துநிற்கவுநில்லாமலுஞ்சுத்திபண்ணி—அத்துவாத்துடக்கறவேசோ தித்து - சடத்துவக்கட்டுவிடச் சுத்திபண்ணிச்[சடத்துவாவிற் பகுத்துப் பதித்துச் சஞ்சிதகன்ம போசனமாகுஞ் சுத்தியே அத்துவசுத்தியென்று தாற்பரியம்]—என்றவுடற்கன்மம் - பிராரத்தகன்மமலத்தை—அனுபவ த்தினலறுத்து - புசிப்பினுற்போக்கி—இங்கினிச்செய்கன்மம் - தீக்ஷை க்குப்பின் பிராரத்தம் புசிக்குமிடத்து அபிமானத்தினலேறும் வைதிகாதி சாத்திரமாத்திரப் பிரசித்தகாமியகன்மமலஞ் (சிவதன்மிணிதீக்ஷாசுத்தனி டத்தில், உவர்த்தரையில் விரைத்த விரைபோலுக்கிப்போம்; ஆதலாற் சிவசாத்திரமாத்திரத்தில் விதித்தகன்மம் பண்ணுதல் விடுதல் நிஷித்தக ன்மம் விடுதல்பண்ணுதலென்னுஞ் சுத்தாசுத்த மனோவாக்குக்காயவியா பாரத்தாற் சுத்தாசுத்தபுத்தியிற்புகுத்தும் புண்ணியாபுண்ணியகாமியக ன்மமலத்தையும்)— மூலமலம்-(தீக்ஷையிற்சேஷித்த) ஆணவமலத்தையும் (தீக்ஷாபலாருக கலாருகங்களாய்ப் பரிசேஷித்தும் பரிசேஷியாதுமிருப் ப)—ஞானத்தாலிடிப்பன் - தான்கற்பித்த சாலம்ப நிராலம்ப புவனபதி விஷய திரிபதார்த்தகர்ப்ப சிவவிஷய ஞானத்தியானகாரிய சாக்ஷாற்கார காரணமாகுஞ் சாலம்ப நிராலம்ப புவனபதிவிஷயசமாதி சிவவிஷயசமா தியிருவிதசமாதியினுலிலயிப்பிப்பன். எ-று. (௧௦)

சிவசமாதி சிவசித்தாந்தத்தன்றிச் சேரப்படாதென்று
செப்புகின்றார்.

புறச்சமயநெறிநின்றுமகச்சமயம்புக்கும்
புகன்மிருதிவழியுழன்றும்புகலுமாச்சிரம
வறத்துறைகளவையடைந்துமருந்தவங்கள்புரிந்து
மருங்கலைகள்பலதெரிந்துமாரணங்கள்படித்துஞ்
சிறப்புடையபுராணங்களுணர்ந்தும்வேதச்
சிரப்பொருளைமிகத்தெளிந்துஞ்சென்றாற்சைவத்
திறத்தடைவரிதிற்சரியைகிரியாயோகஞ்
செலுத்தியபின்ஞானத்தாற்சிவனடியைச்சேர்வர்.

இ-ள். புறச்சமயநெறி நின்றும் - உலோகாயதம் பவுத்தம் அருகம் மீமாஞ்சம் மாயாவாதம் பாஞ்சராத்திரமென்னும் புறச்சமயங்களினி ன்றும்—புகன்மிருதிவழியுழன்றுமெனப் பொருள்வழிபொருத்திப்போய் வேதச்சிரப்பொருளைமிகத் தெளிந்துஞ்சென்றால்—அகச்சமயம் - பாசு

பதம் வாமம் வயிரவம் மகாவிரதம் காளாமுகமென்னும் மூள்ளாறுசம யம்—புக்கும் (பின்)—சைவத்திறத்தடைவர் - சைவசித்தாந்தத்திற் பிர வேசிப்பர்(இதிலெனப் பொருள்பொருத்திப்பொருளுரைக்க,பதக்கிரமத் திற் பொருளுரைத்தாற் சமயக்கிரமமாறுபடும்)—ஞானத்தால்-சிவதீக்ஷா ங்க நிராலம்ப சிவசமாதியினுல்—சிவனடியைச்சேர்வர் - சிவசத்திசமா னமாய்த தமதுசிற்சத்திவிரிவுதிருத்தி யிருப்பார்கள். எ-று.

போகமாத்திரததை நிமித்தீகரித்துவரு மலபரிபாகத்துக்கும் மலபரி பாகமாத்திரத்தை நோக்கிவருஞ் சிவசத்திநிபாதத்துக்குஞ் சிவதீக்ஷானுக் கிரகத்துக்கும் ஞானத்தியான சமாதிசீவன்முத்தி சாக்ஷாற்காரக்குறித்தீ க்ஷாங்கத்துக்கும் மோட்சத்துக்குஞ் சாதிக்கிரம மாச்சிரமக்கிரமஞ் சமய கிரமங் காலதேசக்கிரமங்கருதிவருதலில்லாமையாற் சமயக்கிரமத்தினின் று சைவத்திறததடைவரென்பது தந்திரமன்று; சகலசமயிகளுக்கு மிலிங் கோத்தாரஞ்சைவத்திற்சொல்லுதலாற் சைவத்து வந்தல்லது பரமுத்தி சித்தியில்லை, பதமுத்தியென்று தாற்பரியம். மற்றதுவெள்ளிப்பொருள்.()

ஆதலால் உலோகாயதன் முதலோர்முத்தி முத்திப்
போலியென்பதுந் தெரிவிததுச் சித்தாந்தமுத்தித்
திறனுஞ்செப்புகின்றார்.

இம்மையேயீரொட்டாண்டெய்தியெழிலாரு
மேந்திழையாமுத்தியென்றுமிருஞ்சுவாக்கமுததி
யமமையேயென்றுமுத்தியைந்துகந்த
மறக்கெடுகையென்றுமட்டகுணமுத்தியென்றும
மெய்மமையேபாடாணம்போல்கைமுத்தியென்றும்
விவேகமுத்தியென்றுந்தன்மெய்வடிவாஞ்சிவத்தைச்
செம்மையேபெறுகைமுத்திபென்றுஞ்செபபுவாகள்
சிவனடியைச்சேருமுத்திசெப்புவதிங்கியாமே.

இ-ள. இம்மையேயீரெட்டாண்டெய்தி யெழிலாருமேந்திழையார் முததியென்றும் - (முழுகுதல் புசிததல் பூசுதல் முடித்தல் முதற்சுகமே சுவர்க்கம், அந்தச்சுகமில்லாமை நரகம்) மகளிரைமணத்தலிம்மையேமுக் தியெனறு (லோகாயதன் சொல்லுவன்)—இருஞ்சுவர்க்கமம்மையேமுத் தியென்றும்(பூருவமீமாங்கிசன்சொல்லுவன்)—(உருவம்வேதனை குறிப்பு ப்பாவனை விஞ்ஞானமென்கின்ற) கந்தமைந்துமறக்கெடுகைமுத்தியென் றும் (புததரிற் பிரதீபநிருவாணவாதிபேசுவன்)—(அனந்தஞானம் அனந் ததரிசனம் அனந்தவீரியம் அனநதசுகம் நின்னுமம நிர்க்கோத்திரம் கிரா யுஷ்யம் சகலசம்மியக்குப்பாவமெனும்) அட்டகுணமுத்தியென்றும்(அரு

கனிலைசப்பன்)—(ஞானமுதலிய செயற்கைக்குணங்கள்கெட்டு இயற்கை யஞ்ஞானமே குணமாய்ப்) பாடாணம்போல்கை முத்தியென்றும்(தார்க்கி கன்சாற்றுவன்)—(பிரகிருதிபுருடவியோகமாகிய) விவேகமுத்தியென்றும் (சாங்கியனுரைப்பன்)—தன்மெய்வடிவாஞ்சிவத்தை-தனதிந்தவடிவுபோ ற் சாகாரசிவமூர்த்தி சாரூபசிவாகாரத்தை—செம்மையேபெறுகை - பர முத்தியாகப்பரிப்பது முத்தியென்றும் (சிவசமவாதிசெப்புவன்)—(இப்ப டிவாதிகள்)செப்புவார்கள்—சிவனடியைச்சேருமுத்தி - சிவசத்திக்கொத் துவிரிக்குஞ் சாட்குண்ணியசிற்சத்திகாம சிவத்துவாபிவியத்தியாமுத்தி— யாமிங்குசெப்புவதே. எ-று.

சிலவாதுங்க சைவாசாரியர், யாஞ்சொல்லு மிந்தமுத்தியைச் சாரூ பமுத்திசாற்றுஞ் சிவசமவாதிமுத்தியாய்த் திருப்பி நமதுசிவசித்தாந்த சித் தசிவசாதுர்சிய சிவசாத்தி யயிக்கியசிவசுத்தாத்துவைதமுத்தித்துவேஷிக ளாய் வேதாந்தவிசேஷசித்த விசிட்டாத்துவைதக கோடிகொளுவிச் சிவ வியத்தி யத்துவைத விசிட்டாத்துவைதப் போலிமுததிவிளம்பி விப்பிர லம்பராய்விட்டார்கள்.

வாதிகளடையும் பதமுத்திக்கிரமப்பகுப்பு வகுப்பாம்:—பூதாத்மஞா னோபாய முபதேசிக்குமுலோகாயதனுக்கும், பூதவிசேஷபிராணாத்மஞா னோபாய முபதேசிக்குங் கவுளகனுக்கும், விஞ்ஞானகந்த விச்சித்திஞ்ஞா னோபாய முபதேசிக்கும் பிரதீபநிருவாணவாதிக்கும், கன்மேசுர ஞானோ பாய முபதேசிக்கு மீமாங்கிசனுக்கும், சோதிராத்ம ஞானோபாய முபதே சிக்குஞ் சோதிசாத்திரவித்துக்களுக்குஞ் சூரியாக்கினிசமாத்ம ஞானோ பாய முபதேசிக்குஞ் சூரியாக்கினிசாமிய வாதிகட்கும், அவரவர்க்கருக மான பஞ்சபூதபுவனப் பிராத்திதானே மோக்ஷம்; பூதாண்டகாரண பிர மஞானோபாய முபதேசிக்குஞ் சுமார்த்தர்க்குத்தன்மாத்திரா புவனப் பிரா த்திதானே மோக்ஷம்; இந்திரியாத்ம ஞானோபாய முபதேசிக்கு முலோ காயதருக்குளொருவனுக்கு இந்திரியபுவனப்பிராத்திதானே மோக்ஷம்; மனாத்மஞானோபாய முபதேசிக்குமுலோகாயதர்க்குளொருவனுக்கு மனோ புவனப்பிராத்திதானே மோக்ஷம்; அகங்காராத்மஞானோபாய முபதேசி க்கும் வைசேடியனுக்கு அகங்காரபுவனப்பிராத்திதானே மோக்ஷம்; புத்தியாத்மஞானோபாய முபதேசிக்கு நையாயிகனுக்கும், புத்திவிருத்தி யாத்மஞானோபாய முபதேசிக்கும் புத்தனுக்கும் புத்திபுவனப் பிராத்தி தானே மோக்ஷம்; சலஞ்சலசதசற்குணாத்மஞானோபாய முபதேசிக்கும் அருகனுக்குக் குணபுவனப் பிராத்திதானேமோக்ஷம்; பிரமகாரியாத்ம ஞானோபாய முபதேசிக்கும் பரிணதவேதாந்திக்கும்,நாராயணப்பிரகிருதி காரியாத்ம ஞானோபாய முபதேசிக்கும் பாஞ்சராத்திரிக்கும், பிரகிருதி புவனப்பிராத்திதானே மோக்ஷம்; சத்தப்பிரம கிரீடாப்பிரம சித்திரப்

பிரம வாதிப்பிரமுகர்க்கும் பிரகிருதி புவனப் பிராத்திதானே மோக்ஷம்; யோகோபாய முபதேசிக்கும் பாதஞ்சலனுக்கும், பிரகிருதிபுருஷவிவேக ஞானோபாய முபதேசிக்குஞ்சாங்கியனுக்கும் சன்னியாசோபாய முபதேசிக்கும் விவர்த்தவேதாந்திக்கும், ஆத்மவாதிகளாதலால் புருஷபுவனப் பிராத்திதானே மோக்ஷம்; சிவதீக்ஷாங்கியங்க சிவஞானோபகிருத சாகார சிவாத்ம பாவனோபாய முபதேசிக்குஞ் சிவவாதிகளாகுஞ் சைவரிற் சைவபவுராணிகர்க்கு இராகபுவனப் பிராத்திதானே மோக்ஷம் ; சாகார நிராகார சிவபாவனு பரசோமசித்தாந்திகட்குக் கலாராககர்ப்ப வித்தியா புவனப் பிராத்திதானே மோக்ஷம்; சிவாவேசவாதியாகுங்காபாலர்க்குக் கலாபுவனப் பிராத்திதானே மோக்ஷம்; காலேசுரவாதிகட்குக் காலதத்துவப் பிராத்திதானே மோக்ஷம் ; சங்கிராந்த வாதியாகியசைவபாசுபதர் வைதிகபாசுபதர்க்குஞ் சமுற்பத்திவாதி மாவிரதவிசேஷாக்கும் மாயாபுவனப் பிராத்திதானே மோக்ஷம் ; கலாதத்துவாந்த சோதினியாகிய தீக்ஷாவான்கட்கு விஞ்ஞானகைவல்லியந்தனே மோக்ஷம். சருவஞ்ஞத்துவ மாத்திரவாதி மகாவிரதர்க்குச்சுத்தவித்தியா புவனப்பிராத்திதானே மோக்ஷம்; பிரயோச்சிய கர்த்திருத்துவ வாதிகட்கும் பிரவாகேசுர வாதிகட்கும் அனேகேசுரவாதிகட்கு மீசுரபுவனப்பிராத்திதானே மோக்ஷம்; சதாசிவசாமிய வாதியாகிய சிவசமவாதிகட்குச் சதாசிவபுவனப் பிராத்திதானே மோக்ஷம்; சுத்தசாத்தர்க்குச்சத்திபுவனப் பிராத்திதானே மோக்ஷம்; வாமதக்ஷணாரூடபூத தாந்திரிகர்க்குச் சத்திகலாபுவனப் பிராத்திதானே மோக்ஷம்; சிவதீக்ஷாசாகல்லிய சுத்தராயிருந்துஞ் சிவவியத்தியைக் கியனுசெப்பு மிப்போதுள்ள சைவர்க்கு

" சதுட்கலந்துசானியாற்புருஷம்லோகபாவனம் "

என்னும் வசனத்தினாற் சத்திபுவனப் பிராத்திதானே தீக்ஷாகைவல்லியவான்களாகில், முற்சொல்லிய புருஷபுவனப் பிராத்திதானேசிவலோகப்பிராத்திதானே மோக்ஷமென்று சிந்திக்கப்படும்; சிவனுக்குவயிந்தவசரீரம் வாத்தவமென்னுஞ் சாமானிய சைவர்க்குச் சிவதத்துவபுவனப்பிராத்திதானே மோக்ஷம். உலோகாயதாதி வேதாந்தியந்தாத்ம வாதிகளுக்கு மாத்மவிவேகப் பிரவிருத்திமான்களாகையாற் சிவவாதிகள் பண்ணுஞ் சிவவிவேகத்துக்கு மாத்மவிவேக மடிப்படையாதலா லவ்வாத்மவிவேகிகட்கு மலபரிபாக நோக்குஞ் சிவசமான பரமுத்திபார்க்கும் பாத்திரமாங்கால மெண்ணிக் கைக்கிசையுமாதலால் அவரவர் முத்திசாதனங்கள் சபலங்கள்தானே, நிட்பலங்களன்று. (கஉ)

மேற்சாமானிய வேதவிசிட்ட விசேஷவேத சிவசித்தா ந்தமே சிறப்புடைத்தென்று செப்புகின்றார்.

ஓதுசமயங்கள்பொருளுணருநூல்க
ளொன்றோடொன்றொவ்வாமலுளபலவுமிவற்றுள்
யாதுசமயம்பொருணூலியாதிங்கென்னி
லிதுவாகுமதுவல்லவெனும்பிணக்கதின்றி
நீதியினாலிவையெல்லாமோரிடத்தேகாண
நிற்பதுயாதொருசமயமதுசமயம்பொருணூ
லாதலினாலிவையெலலாமருமறையாகமத்தே
யடங்கியிடுமவையிரண்டுமரனடிக்கீழடங்கும்.

இ-ள். பொருள்-அந்தந்தச் சமயத்துக்குச் சொல்லும் பதார்த்தங்கள். நூல்-அப்பொருளைச் சொல்லுஞ் சாத்திரம். பிணக்கதின்றி-சந்தேகமற்று. ஓரிடத்தே-ஒருசமயத்திலே. காண-அடங்க. வேதத்திற் சாவதியடங்கும். சிவாகமத்திலே நிரவதியடங்கும். அரனடிக்கீழடங்கும்-அபரஞானமாதலால் வேதஞ் சிவாகமத்தடங்கும். சிவாகமம் வேதத்தைக்குறித்துப் பரஞானமானாலுஞ் சிவசத்தி சின்ன சிவாகமத்தைக் குறித்தபரஞான மாதலாற் சிவசத்தியாகுஞ் சேதனபரஞான சிவாகமத்தடங்கும். மற்றது வெளிப்பொருள். எ-று. (கரு)

முதனூல், வழிநூல், சார்புநூல், இவையென்று சாற்றுகின்றார்.

அருமறையாகமமுதனூலனைத்துமுரைக்கையினா
லளப்பரிதாமப்பொருளையரனருளாலணுக்க
ளருவர்கள்பின்றனித்தனியேதாமறிந்தவளவிற்
றர்க்கமொடுத்தரங்களினாற்சமயஞ்சாதித்து
மிருதிபுராணங்கலைகண்மற்றுமெல்லா
மெய்ந்நூலின்வழிபுடையாறங்கம்வேதாங்கஞ்
சுருதிசிவாகமமொழியச்சொல்லுவதொன்றில்லைச்
சொல்லுவார்தமக்கறையோசொல்லொணாதே.

இ-ள். அணுக்கள்-ஆத்மவர்க்கங்களாகிய மனுமுதலிய மிருதிகர்த்தாக்கள், வியாதர்முதலிய புராணகலைக் கர்த்தாக்கள். (அவர்கள்பண்ணின) மிருதிமுதலியன, வேதமாகிய முதனூலுக்கு வழிநூல். ஆறங்கம்— புடை-சார்புநூல். முதனூலாகிய சிவாகமத்துக்கு உபாகமங்கள் வழிநூல்,

பிரகரணமுதலியன சார்புநூல். சுருதிசிவாகம மொழியச்சொல்லுவதொன்றில்லை-வேதத்துஞ் சிவாகமத்தும் புறச்சமய முட்சமய மடங்குதலால், அதற்குவியாபகமாய்க் கொண்டு புறம்பாயொரு சாத்திரமில்லை. அறை-உத்தரம். மற்றது வெளிப்பொருள். "ஒன்றில்லை" என்பதற்குப் புறச்சமய வுட்சமய சாத்திரங்களும் பிரமாணங்களாய்க்கொண் டில்லையென்று பேசவேண்டாம்; தமதவதிப் பிரமாணங்களென்று பவுட்கராதிகளும், ஶ்ரீ ராமகண்டகுரு பண்ணிய சருவாகமப் பிராமாணியத்துஞ் சாதித்திருத்தலால். (௧௪)

அப்படி சமயசாஸ்திரங்களெல்லாம்வேதாகமங்களிற் சுருக்கிச் சூசிப்பித்திருக்கும்; அவைகளை யுருத்திரர் தேவரிஷிகள் தனித்தனிவிரித்து உட்சமய புறச்சமய சாத்திரங்களாகப் பண்ணினார்களென்றும், அப்படியாகில் வேதமென்று மாகமமென்றுஞ் சாத்திர மிரண்டுவருவானேனென்ன பிரகார விரோதங்களிருந்தாலும், வியாகரணநியிற் சாமானிய விசேஷசூத்திரங்கள்போற் பொதுச் சிறப்புச் சாத்திரங்களாயிருக்குமென்றும் அப்படி வைதிகசம்மதமாய் விருத்தாசல புராணநியிலு மாகமத்திலு மிருப்பதறிந்து குறித்துரைக்கின்றார்.

வேத நூல்சைவநூலென் றிரண்டே நூல்கள்
வேறுரைத்தநூலிவற்றின் விரிந்தநூல்க
ளாதிநூலநாதியமலன் றருநூலிரண்டு
மாரணநூல்பொதுச்சைவமருஞ்சிறப்புநூலா
நீதியினாலுலகர்க்குஞ்சத்திநிபாதர்க்கு
நிகழ்த்தியதுநீண்மறையினொழிபொருள்வேதாந்தத்
தீதில்பொருள்கொண்டுரைக்குநூல்சைவம்பிறநூ
றிகழ்பூர்வஞ்சிவாகமங்கள்சித்தாந்தமாகும்.

இ-ள். "வேதமுலகர்க்கு" என்றதில், லௌகிகம் வைதிகம் அத்தியாத்மிக மென்கின்ற முச்சாத்திரப் பிரசித்த வுலோகதன்ம வருணாச்சிரம வழிவழுவாமைமுத வியாகாதி வைதிககன்மப் பிரமவிசாராதிகளிற் பரபுத்திபண்ணி யொழுகு மலபரிபாகமில்லா மாந்தர்க்கென்று பொருள். "சிவாகமஞ் சத்திநிபாதர்க்கு" என்றது அதிகமார்க்கமாந்திர மென்கின்ற விருசாத்திரப் பிரசித்தமா யுலோகதன்மாதிவிடாதும் விட்டுமிருக்குஞ் சிவதீக்ஷாவான்களாய்ச் சிவதன்ம கிரிபதார்த்த ஞானத்தியான சமாதியு

பாயஞ் சம்பாதிக்கு மிச்சாவான்கட்கென்று பொருள். நீண்மறையினொழிபொருள்-வேதத்துக் கெட்டாப்பொருள். வேதாந்தத்தில்பொருள்-சித்தாந்தத்துக்கொத்து விரோதியாத வேதாந்தப்பொருள். கொண்டு-அங்கீகரித்து. பிறநூறிகழ்பூர்வம்-வேத வேதாந்த முதலிய சாத்திரங்கள் பூருவபட்சம். மற்றது வெளிப்பொருள். எ-று. (கடு)

சித்தாந்தத்தின் சிறப்புணர்த்துகின்றார்.

சித்தாந்தத்தேசிவன்றன்றிருக்கடைக்கண்சேர்த்திச்
செனனமொன்றிலேசீவன்முத்தராக
வைத்தாண்டுமலங்கழுவிஞானவாரி
மடுத்தானந்தம்பொழிந்துவரும்பிறப்பையறுத்து
முத்தாந்தப்பாதமலர்க்கீழ்வைப்பனென்று
மொழிந்திடவுமுலகரொலலாமூர்க்கராகிப்
பித்தாந்தப்பெரும்பிதற்றுப்பிதற்றிப்பாவப்
பெருங்குழியில்வீழ்ந்திடுவரிதுவென்னபிராந்தே.

இ-ள். சித்தாந்தத்தே-சிவாகமாசாரவான் களிடத்திலே. திருக்கடைக்கண்சேர்த்தி-தனது தீக்ஷாரூபக் கிரியாசத்திசங்கற்பம் பண்ணி. ஞானவாரிமடுத்தானந்தம் பொழிந்து - சிவத்துவக்குறிச் சிற்சத்திச் சமுத்திரத் தழுத்திச் சிவத்துவாபிவியத்தி லக்கண சிவானந்த மனுபவிப்பித்து. முத்தாந்தப்பாதமலர்க்கீழ்வைப்பன்-நின்மல நிரதிசயத் தன்சத்திசமான சத்திமான்களாக்குவன். இதுவென்னபிராந்தே-இதுவேதுமயக்கம். மற்றது வெளிப்பொருள். (கசு)

சிவன் சருவஞ்ஞன் சருவகர்த்தா சருவானுக்கிராகக னென்று சாற்றுகின்றார்.

இறைவனுவான்ஞானமெல்லாமெல்லா
முதன்மையனுக்கிரகமெல்லாமியல்புடையானியம்பு
மறையாகமங்களினுலறிவெல்லாந்தோற்றும்
வரைவின்வழிவருவோர்க்கும்வாராதோர்க்கு
முறைமையினுலின்பதுன்பங்கொடுத்தலாலே
முதன்மையெலாமறிந்துமுயங்கிரண்டுபோகத்
திறமதனுல்வினையறுக்குஞ்செய்தியாலே
சேருமனுக்கிரகமெல்லாங்காணுதுநாஞ்சிவற்கே.

இ-ள். ஞானமெல்லாம், எல்லாஞானம்-சருவஞ்ஞத்துவம்—எல்லா முதன்மை-சருவகர்த்திருத்துவம்—அனுக்கிரகமெல்லாம்,எல்லாமனுக்கிர

கம்-சருவானுக்கிராக்கத்துவம் (இம்மூன்றும்)—இயல்புடையான்-(வேதாந்திகள் சைவரிற் சிலபேர் சாற்றுந் தடத்தலக்கணமன்றிச் சுத்தசைவ சித்தாந்திகள்சொல்லும்)சொரூபலக்கணமாகவுடையன்—இறைவனுவான்—சருவ சகற்கர்த்தாவானவன்(அவன்)—இயம்புமறையாகமங்களிஞல்—அறிவெல்லாந்தோற்றும் சருவஞ்ஞத்துவ மனுமிதிக்கப்படும்—வளாவின்வழி வருவோர்க்கும்வாராதோர்க்கும்-விதிநிஷேதப்படிபிடித்துநடப்போர்க்கும், நடவாதோர்க்கும் — முறைமையிஞலின்பதுன்பங்கொடுத்தலாலே—முதன்மையெலாமறிந்து-சருவகர்த்திருத்துவ மனுமிதித்து—மூயங்கிரண்டுபோகத்திறமதஞல்-அனுபவிக்கப்படு மிருசுகதுக்க வேதனையிஞலே—வினையறுக்குஞ்செய்தியாலே-புண்ணியபாவம்போக்கும் பரிசிஞல்—சிவற்கே - சிவனுக்குத்தானே—சேருமனுக்கிரகமெல்லாம்-பொருந்துஞ் சருவாநுக்கிரகம்—காணுநாம்-அனுமானித்தறிவோம். எ-று. (௧௭)

"புறச்சமயம்" எனும்விருத்தத்தில் "இதிற்சரியைகிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தால்" என்று செப்பிய நாலுபாயத்தின் செய்தி சிங்கநோக்காற் செப்புகின்றுர்.

சன்மார்க்கஞ்சகமார்க்கஞ்சற்புத்திரமார்க்கந்
தாதமார்க்கமென்றுசங்கரனையடையு
நன்மார்க்கநாலிவைதான்ஞானயோக
நற்கிரியாசரியையென்றுநவிற்றுவதுஞ்செய்வர்
சன்மார்க்கமுத்திகள்சாலோக்கியசாமீப்பிய
சாரூப்பியசாயுச்சியமென்றுசதுர்விதமா
முன்மார்க்கஞானத்தாலெய்துமுத்தி
முடிவென்பர்மூன்றினுக்குமுத்திபதமென்பர்.

இ-ள். ஞானயோகாதிகளுக்குத்தானே சன்மார்க்க சகமார்க்காதிப் பேருஞ் சாற்றப்படுமென்று பொருள். சன்மார்க்கச் சுவரூபஞ் சொல்லுவாம்:-சிவசாத்திர சமுற்பன்ன நிராலம்ப சிவபரோக்ஷ ஞானேபகாரோபகிருதமாயு மதன்றி நிராலம்ப சிவசாக்ஷாற்காரமென்றும், நிராலம்ப சிவாபரோக்ஷ ஞானமென்றுஞ் சாற்றப்படும், நிராலம்பாங்கி சிவயோகத்துக் கங்கசிவயோகமாயு மிருக்குஞ் சாத்தமனச்சங்கற்பக் கிரியை யுண்மணக்கும் அபரோக்ஷம்போ லபிநயக்குறிச் சாத்த பவுத்த சிவஞானச் சிறப்புப் பிரவாகலக்கண நிராலம்ப சிவத்தியான மூலத்தின்முளைத்த தியானத்தி னசைவறுதற்குறி நிராலம்ப சிவசமாதியே சன்மார்க்கம்.

சகமார்க்கச் சுவரூபஞ் சொல்லுவாம்:-சிவசாத்திர சமுற்பன்ன சாலம்ப சிவபரோக்ஷ ஞானோபகாரோபகிருதமாயு மதன்றிச் சாலம்ப சிவசாக்ஷாற் காரமென்றுஞ் சாலம்ப சிவாபரோக்ஷ ஞானமென்றுஞ் சொல்லப் படுஞ் சாலம்பாங்கி சிவயோகத்துக் கங்கசிவயோகமாயு மிருக்கும் பிராகிருத மனச்சங்கற்பக் கிரியை யுண்மணக்கு மபரோக்ஷம்போ லபிநயக்குறிப் பிராகிருத பவுத்த சிவஞானச் சிறப்புப் பிரவாகலக்கண சாலம்ப சிவ சமாதிமூல சாலம்ப சிவத்தியானமே யோகமென்னுஞ்சகமார்க்கம்.

சற்புத்திரமார்க்கம்-சிவபூசாதி. தாதமார்க்கம்-சிவசேவாதி. சன்மார்க்கமுத்திகள்-நல்லநான்மார்க்கமுத்திகள். சதுர்விதம் — நாலுவகை. முன்மார்க்கஞானத்தால்-சன்மார்க்க சமாதியால். முடிவென்பர்-பரமுத்தியென்பர். மற்றதுவெளிப்பொருள்.

சன்மார்க்கமுதலிய நான்கிலும் பொதுச்சிறப்பாகச் சன்மார்க்கத்திற் சன்மார்க்கம் சன்மார்க்கத்திற் சகமார்க்கம் சன்மார்க்கத்திற் புத்திரமார்க்கம் சன்மார்க்கத்திற் றாதமார்க்கம்; சகமார்க்கத்திற் சன்மார்க்கம் சகமார்க்கத்திற் சகமார்க்கம் சகமார்க்கத்திற் புத்திரமார்க்கம் சகமார்க்கத்திற் றாதமார்க்கம்; புத்திரமார்க்கத்திற் சன்மார்க்கம் புத்திரமார்க்கத்திற் சகமார்க்கம் புத்திரமார்க்கத்திற் புத்திரமார்க்கம் புத்திரமார்க்கத்திற் றாதமார்க்கம்; தாதமார்க்கத்திற் சன்மார்க்கம் தாதமார்க்கத்திற் சகமார்க்கம் தாதமார்க்கத்திற் புத்திரமார்க்கம் தாதமார்க்கத்திற் றாதமார்க்கம்; என்றிப்படி சன்மார்க்கமுதலியநான்குந் தனித்தனி நான்காதலால் நான்கின் பலமாகிய சாலோக்கியாதி நான்குந் தனித்தனி ஸ்ரீகண்டநாத வனந்தேசுர சதாசிவ சாலோக்கியாதி அவரவர் சமபல சாயுச்சியாந்த முத்திகளாயுஞ் சதாசிவ தத்துவத்துக்கு மேற் சத்திதத்துவத்தான சிவதத்துவத்தான தத்துவாதீதமாகிய பரசிவத்தான முத்தானங்களிலே பரசிவ் சாலோக்கியாதி சருவத்திர பரசிவ சமபல பரசிவசாயுச்சியாந்த முத்திகளாயிருக்கும்; நயிட்டிகீ தீக்ஷா முத்திகளாயும் காலாக்கினியாதி யனுச்சிருதாந்த புவனபதி சாலோக்கியாதி புவனபதி சமபல புவனபதி சாயுச்சியாந்த முத்திகளாயிருக்கும் பவுதிக தீக்ஷாமுத்திகளாயு மனந்த விதமாயிருக்குமென வறிக. (கஅ)

தாதமார்க்க முதனான்கினது சுவரூப நாலுதிருவிருத்தங்களாற் சொல்லுகின்றார்.

தாதமார்க்கஞ்சாற்றிற்சங்கரன்றன்கோயிற்
றலமலகிட்டிலகுதிருமெழுக்குஞ்சாத்திப்
போதுகளுங்கொய்துபூந்தார்மாலைகண்ணி
புனிதற்குப்பலசமைத்துப்புகழ்ந்துபாடித்

நீதிறிருவிளக்கிட்டுத்திருநந்தவனமுஞ்
செய்துதிருவேடங்கண்டாலடியேன்செய்வ
தேதுபணியீரென்றுபணிந்தவர்தம்பணியு
மியற்றுவதிச்சரிதைசெய்வோரீசனுலகிருப்பர் (கக)
இ-ள். வெளிப்பொருள்.

புத்திரமார்க்கம்புகலிற்புதியவிரைப்போது
புகையொளிமஞ்சனமமுதுமுதலகொண்டைந்து
சுத்திசெய்தாசனமூர்த்திமூர்த்திமானுஞ்
சோதியையும்பாவித்தாவாகித்துச்சுத்த
பத்தியினலர்ச்சித்துப்பரவிப்போற்றிப்
பரிவினொடுமெரியில்வருகாரியமும்பண்ணி
நித்தலுமிக்கிரியையினையியற்றுவோர்க
ளின்மலன்றனருகிருப்பர்நிகழ்த்துங்காலே

இ-ள். விரைப்போது - மணம்பொருந்திய புட்பம். புகையொளி-தூபதீபம். ஐந்துசுத்தி - ஆத்மந் தான திரவிய மந்திர லிங்க சுத்தி. ஆசனம் - சத்தியாதி சத்திபரியந்த பற்மரூபவிந்து. மூர்த்தி-விந்துமத்தியத்தெழுந்து தண்டாகிருதியாய்த் திரும்ப வித்தியாதேகரூப வியாபகமாயிருக்கும் நாதம். மூர்த்திமானுஞ்சோதி - வித்தியாதேகத்துக்குச் சீவனும் பரசிவதேசசு. மற்றது வெளிப்பொருள். (உ0)

சகமார்க்கம்புலனொடுக்கித்தடுத்துவளியிரண்டுஞ்
சலிப்பற்றுமுச்சதுரமூலாதார
மகமார்க்கமறிந்தவற்றினருமபொருள்களுணர்ந்தங்
கணைந்துபோய்மேலேறியலர்மதிமண்டலத்தின்
முகமார்க்கவமுதுடலமுட்டத்தேக்கி
முழுச்சோதிநினைந்திருத்தன்முதலாகவினைக
ளகமார்க்கவட்டாங்கயோகமுற்று
முழத்தலுழந்தவர்சிவனறனுருவத்தைப்பெறுவர்.

இ-ள். புலனொடுக்கி - பிராணயாம பிரத்தியாகாரங்களினு லிந்திரியங்களை நிறுத்தி. தடுத்துவளியிரண்டும் - பிராணனை இடைபிங்கலைகளினியக்கமடக்கி. முச்சதுரமூலாதாரமகமார்க்கம்-சுழுமுனைநாடிவழி பொருந்திய பத்மாதிதேவதை முதலியன. அலர்மதிமண்டலம் - புருவமத்தியம். முழுச்சோதிநினைந்திருத்தல் - அந்தப் புருவமத்திய பதமத்தில் விந்துநாதரூபமாயிருக்குந் தேசோலிங்க சகளநிட்கள சிவத்தை யிருதயத்

திற் சதாசிவமுதலிய சகளசிவத்தைத்தான் றியானித்துச் சமாதித்தல். முதலாக-சங்காரக்கிரமத் தாதியாகச் சிருட்டிக்கிரமத் தந்தமாக. அட்டாங்கயோகம்-இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியென்னு மட்டாங்க முடைய சகள சகளா கள சிவசாக்ஷாற்காரரூப வங்கிசிவயோகத்தை — முற்றும்-அங்கவீன மின்றி—உழத்தலுழந்தவர்- (அந்த வட்டாங்கங்களினால்) சாதித்தலைப் பண்ணினவர். மற்றது வெளிப்பொருள். (உக)

சன்மார்க்கஞ்சகலகலைபுராணவேத
சாத்திரங்கள்சமயங்கடாம்பலவுமுணர்ந்து
பன்மார்க்கப்பொருள்பலவுங்கீழாகமேலாம
பதிபசுபாசந்தெரித்துப்பரசிவனைக்காட்டு
நன்மார்க்கஞானத்தானாடி-ஞான
ஞேயமொடுஞாதிருவுநாடாவண்ணம
பின்மார்க்கச்சிவனுடனாம்பெற்றிஞானப
பெருமையுடையோர்சிவனைப்பெறுவர்காணே

இ-ள். நன்மார்க்கஞானத்தால்-சிவாகமத்திரிவழி சரிக்குஞ் சிவசத்தி விளக்கில் விளங்கிய சிற்சத்திமூலத்தில் முனைதது வாயிற்காட்சி கடந்து யோகக்காட்சி தொடாது நடுநிற்கு மறிவினாற் (சிவனை) — நாடி - (அது விதுவல்லா வதுவென்றறிந்து ரூபதரிசனமுற்றுப் பின் மகாமந்திர திரிவழிபற்றி முற்றும்போய் மேனிராலம்பினியாஞ் சிவசத்திவிளக்கில் விளங்கிப்போய்ச் சமனைகடந் துன்மனைபற்றி விசேஷித் துரூபதரிசனமுற்று மகாவாக்கியப் பொருளுன்னித் தியானமுமிழ்த் துபரியுறுஞ் சிற்சத்தி புத்திவித்தின் முளைத்துக் காட்சிபோற் காட்டிநடிக்கு ஞானச்சிறப்புக்குறித் தியானக்குறியாய்ச் சிற்சத்திமனச் சங்கற்பக் கிரியைமணந்து பின் கோத்த சிற்போதத்தால்) தியானித்து—ஞானஞேயமொடுஞாதிருவுநாடா வண்ணம்-தியானிக்குமாத்மாத் தியானம்பண்ணப்படும்பரந் தியான முபலக்ஷிக்குஞ்சிவம் இம்மூன்றெனுஞ்சித்தாந்த வாக்கியார்த்தங்க ளொரு நெறியானுந் தோற்றாதென்னில், நித்திரைமுத்திரை நிலைபெறு மாதலாற் சிற்சத்தி புத்திவித்துமிழ்க்குஞ் சூக்கும யோசன விகற்பச் சாந்தர சசல சதரங்க போதப்பிரவாகக்குறித் தியானத்தின துறைப்புக்குறி நிருவியோசன நிருவிகற்ப நிரந்தர நிச்சல நித்தரங்க போதப்பிரவாக சமாதியிலும்

"சொரூபசூனியமிவசமாதி"

என்னும் பதஞ்சலி வசனத்தா லொருநெறி யேகமாய் முச்சூனியம்போல முப்பொருள் விள்ளாதவிண்டு தோற்றாதுதோற்ற நோக்காதுநோக்கி—பின்மார்க்கச்சிவனுட

ளும்பெற்றி ஞானப் பெருமையுடையோர்-முன்பின்சொன்ன சன்மார்க்க நிராலம்ப சிவயோக சிவசமாதி யுறைப்புற்ற சத்துக்கள்—சிவனைப் பெறுவர்காணே-சிவனோடு சமமாய் மலத்தால் மறைந்திருந்து மலமுத்தியால் வியத்தியாய் விரிந்து விளங்குஞ் சிவத்துவத்தைச் சுவரூப லக்கணமாகச் சாக்ஷாற்கரித் திருப்பர்தானே. மற்றதுவெளிப்பொருள். (௨௨)

> சிவசித்தாந்த சாத்திரஞானமு மறிந்தே தியான சமாதி பண்ணப்படு மாதலாற் சாக்ஷாற்காரசாதன சாக்ஷாற் சன்மார்க்க ஞானபூசையாகு நிராலம்ப சிவத்தியான சமாதிமுதலியவற்றைச் சாதிப்பிக்கு மாதலால், சன்மார்க்க ஞானபூசையாமென்று சாற்றுகின்றார்.

ஞான நூற்றனையோதலோ துவித்த
னற்பொருளைக்கேட்பித்தறான்கேட்டனன்று
வீனமிலாப்பொருளதனைச் சிந்தித்தலைந்து
மிறைவனடியடைவிக்குமெழின்ஞானபூசை
யூனமிலாக்கன்மங்கடாஞ்செபங்கடியான
மொன்றுக்கொன்றுயருமிவையூட்டுவதும்போக
மானமையான்மேலானஞானத்தாலரனை
யர்ச்சிப்பர்வீடெய்தவறிந்தோரெல்லாம

இ-ள். "சிந்தித்தல்" என்பதற்குப்பின் றெளிதலென்றும், "ஐந்தும்" என்பதனை யாறுமென்றும் பண்ணுக. சாலம்ப சிவசகமார்க்க ஞானசாத்திய சாலம்ப சகமார்க்கத் தியான சமாதி முதலியவற்றைக் குறித்தது நிராலம்ப சிவசன்மார்க்க சாத்திரஞான முயர்ந்தது. நிராலம்ப சிவசன்மார்க்கத் தியான சமாதி முதலியவற்றைக் குறித்துத் தாழ்ந்த தென்பதறிக.

அப்படி சிவாகமஞ் செப்பியது காண்பிப்பாம்:—கிரியாவான்கள் பத்துப்பேர்க் கதிகன் சாந்திராயணமுதற் றபவிரதி; தபவிரதிகள்நூறுபேர்க் கதிகன் செபசீலன்; செபசீலர்க ளாயிரம்பேர்க் கதிகன் சிவஞானி; சிவஞானிக ளிலக்ஷம்பேர்க் கதிகன் சிவத்தியானி; சிவத்தியானிகள் கோடிபேர்க் கதிகன் சிவசமாதிமான்; சிவசமாதிமான்க ளனந்தம்பேர்க் கதிகன் சிவசாக்ஷாற்காரவான்; சிவத்தியானஞ் சிவசமாதி சிவசாக்ஷாற்காரங்களுங் கிரியோத்திரோக விசிட்டச்சிறப்பு ஞானங்கள்தானே. பதப்பொருள் வெளிப்பொருள். (௨௩)

> சருவாதிக்க நிராலம்ப சிவசாக்ஷாற்கார சாதனநிராலம்ப சிவசமாதி முன்சொல்லிய ஞானத்திலு முக்கியமென்ப தாசாரியரு மறிவிக்கின்றார்.

கேட்டலுடன்சிந்தித்தறெளிதனிட்டை
  கிளத்தலெனவீரிரண்டாங்கிளக்கின்ஞான
வீட்டையடைந்திடுவர்நிட்டைமேவினோர்கண்
  மேவாதுதப்பினவாமேலானபதங்கட்
கிட்டியபுண்ணியநாதராகியின்ப
  மினிதுநுகர்ந்தருளினுலிந்தப்பார்மே
ளுட்டியாற்குலத்தினில்வந்தவதரித்துக்குருவான்
  ஞானநிட்டையடைந்தடைவர்நாதன்றாளே.

இ-ள். கிளத்தல்-பண்ணுதல். "இந்தப்பார்மேல்" என்பது நியம மன்று. புவனந்தோறும் புவனந்தோறுங் குருக்களென்று சிவாகமவித்துக் கள் செப்புவார்களாதலாற் போய்ப்பொருந்திய புவனத்திருந்தாற்போலே பூமியிற் றிரும்பாது ஸ்ரீமத் ஸ்ரீகண்டருத்திரகுரு சதாசிவகுரு முதலோ ரால், நிரீக்ஷிதர்களாய்க்கொணடும் பரமுத்திமான்க ளாவார்கள். மற் றது வெளிப்பொருள். (உச)

அப்படியே ஸ்ரீமத் ஸ்ரீகண்ட தேசிகாதிகளால்,நிரீக்ஷி க்கப்படாதிருந்து சிலபேர் மகாப்பிரளய முடி விற் சிவநிரீக்ஷணத்தாற் பரமுத்திமான்க ளாவார் கள். ஸ்ரீமத் ஸ்ரீகண்டாதி நிரீக்ஷணம்போற் சிவ நிரீக்ஷணமு மில்லாதார் மறுமகாசிருட்டியிற் பூமி யிற் புவனங்களிற்றான் சன்மித்துப் புவனகுருகு லங்களாற் றீக்ஷிக்கப்பட்டுச் சிவசமாதிபண்ணிப் பரமுத்திமான்க ளாவார்களென்றுபாஷிக்கின்றார்.

தானமியாகந்தீர்த்தமாச்சிரமந்தவங்கள்
  சாந்திவிரதங்கன்மயோகங்கள்சரித்தோ
ரீனமிலாச்சுவர்க்கம்பெற்றிமைப்பளவின்மீள்வ
  ரீசனியோகக்கிரியாசரியைதனினின்றோ
ரூனமிலாமுத்திபதம்பெற்றுலகமெல்லா
  மொடுங்கும்போதரன்முன்னில்லாதொழியிலுற்பவித்து
ஞானநெறியடைந்தடைவர்சிவனையங்கு
  நாதனேமுன்னிற்கினனுகுவர்நற்றாளே.

இ-ள். இமைப்பளவின்-நித்தியநிலையின்றி. ("ஈசனியோகம்" என் றது சாலம்ப சிவயோகமாதலால்,) ஈசனியோகக்கிரியாசரியைதனினின் றோர் (நிராலம்ப சிவசமாதிநிலை கெட்டு நிலைபெறுதோரு மென்று வரு வித்துக் கூட்டுக.) முத்தி-பதமுத்தி—மற்றது வெளிப்பொருள். (உரு)

நிஷ்பிரபஞ்ச சமாதிநிலை பெற்றோர் பெருமை கிகழ்த்துகின்றார்.

சிவஞானச்செயலுடையோர்கையிற்றானந்
திலமளவேசெய்திடினுநிலமலைபோற்றிகழ்ந்து
பவமாயக்கடலிலழுந்தாதவகையெடுத்துப்
பரபோகந்துய்ப்பித்துப்பாசத்தையறுத்துத்
தவமாரும்பிறப்பொன்றிற்சாரப்பண்ணிச்
சரியைகிரியாயோகந்தன்னிலுஞ்சாராமே
நவமாருந்தத்துவஞானத்தைநல்கி
நாதனடிக்கமலங்கணணுகுவிக்குந்தானே.

இ-ள். சிவஞானச்செயலுடையோர் - நிராலம்பசிவயோகசமாதிமான்கள். தத்துவஞானத்தை-நிராலம்பசிவயோகசமாதியை. நல்கி-கொடுத்து. நாதனடிக்கமலங்கள் - நாதனது ஞானக்கிரியாசத்தி சமான சத்திலக்கண சிவத்துவத்தை. மற்றதுவெளிப்பொருள். (உ௬)

சடகன்மத்தால் முத்தியென்று மீமாங்கிசன் விளம்ப மறுத்துச் சிற்கன்மத்தாலேதானே முத்தியென்று செப்புகின்றார்.

ஞானத்தால்வீடென்றேநான்மறைகள்புராண
நல்லவாகமஞ்சொல்லவல்லவாமென்னு
மூனத்தாரென்கடவாரஞ்ஞானத்தா
லுறுவதுதான்பந்தமுயர்மெஞ்ஞானந்தா
னனத்தாலதுபோவதலர்கதிர்முன்னிருள்போ
லஞ்ஞானமறப்பந்தமறுமுத்தியாகு
மீனத்தார்ஞானங்களல்லாஞான
மிறைவனடிஞானமேஞானமென்பார்.

இ-ள். ஞானத்தால்வீடென்றே - (நிராதாரதீக்ஷையில் திரிபதார்த்தகர்ப்ப தீக்ஷாகலாகலாபமறிந்து பண்ணவேண்டுமாதலால்,சிவனதுஞான சத்திகிருத்தியக்குறித் தீக்ஷாங்க ஞானமுஞானம்; பின் னவனது தீக்ஷாக்குறிக் கிரியாசத்திச் சிறப்பிருப் பிச்சாசத்திகிருத்தியக்குறிச் சங்கற்பசிற்கன்மமு ஞானம்;அதுவன்றிச் சாதாரதீக்ஷையிற் திரிபதார்த்தகர்ப்ப தீக்ஷாகலாகலாபமறிந்து பண்ணவேண்டு மாதலாற் குருவினது ஞானசத்திக்கிருத்தியக்குறிச் சிவாகமசிரவண மனனத்தெழுந் தெளிதற்செயற்கைத் தீக்ஷாங்க யோகாங்க ஞானமுஞானம்; பின் னவனது காயிக வாசிக மா

னசிக தீக்ஷாகன்ம மியற்றுங் காயவாக்குமனத் தசைவுபண்ணுந் தீக்ஷாக் குறிக் கிரியாசத்திச் சிறப்பிருப் பிச்சாசத்தி கிருத்திய சங்கற்பக்குறிச் சிற்கன்மமு ஞானம்; அதுவன்றிச் சாதாரவசத்தியோ நிருவாண தீக்ஷை யிற் சேஷன்கிரியதார்த்த கர்ப்ப யோக கலாகலாப மறிந்து பண்ணவேண் டுதலாற் சேஷனது ஞானசத்திகிருத்தியக்குறிச் சிவாகம சிரவண மனனந் தெழுந் தெளிதற்செயற்கைத் தீக்ஷாங்க யோகாங்கஞானமு ஞானம்; பின் னவனது யோகக்குறிக் கிரியாசத்திச் சிறப்பிருப் பிச்சாசத்தி கிருத்தியக் குறிச் சங்கற்ப சிற்கன்ம மணந்த ஞானசத்தி கிருத்தியக்குறிச் சிறப்புஞா னப் பிரவாக தீக்ஷாங்க யோகாங்கத தியானமு ஞானம்; தியானத் தசை யுறுதற்குறித் தியானசாத்திய தீக்ஷாங்க யோகாங்க சமாதியு ஞானம்; ச மாதி சாத்திய கிருக்கிரியாக்குறி யோகப்பேர் விசேக பரமுத்தி சாக்ஷா த்கார சாதன தீக்ஷாங்க சதேக சிவன்முத்தி சாக்ஷாத்காரமு ஞானம்; இஞ்ஞானங்களிற் சிலவற்றிற் குதான்மியமாயுஞ் சிலவற்றி லாரூடமாயு மனுசரிக்குஞ் சாக்ஷான் மோக்ஷமுகிழ்ப்பிக்குஞ் சங்கற்ப வீக்ஷண நிரீ க்ஷணம்பண்ணுஞ் சிவக்கிரியாசத்தி சிறப்பிருப் பிச்சாசத்தி லக்கண தீ க்ஷையு ஞானம்.

அப்படி சுப்பிரபேத சுவாயம்புவ பவுட்கரமுதற் சிவாகமத்திற் சிற ப்பித்திருத்தலாற் றீக்ஷையும் ஞானமென்பது சிவாகமப்பிரசித்தம். விஞ் ஞானகலர் பிரளயாகலர் சகலரொனு மவரவர்க்கருகமாய் விட்டுக்கூட்டி விதிக்கு மனேகவித) ஞானத்தால் மோக்ஷமென்றே (பொதுச்சிறப்பாய்) — நான்மறைகள்புராணநல்லவாகமஞ்சொல்ல — அல்லவாமென்னு மு னத்தாரொன்கடவார்-பிராகிருத காயிக வாசிக மானசிக சடபந்த கன்மத் தால், முத்தியென்று செப்பு ஞானவீனராகுங் கன்மமீமாங்கிசன் முத லோ ரேதுபிரயோசனத்துக் கருகர் (நிஷ்பிரயோசனர்களே)—அஞ்ஞா னத்தால் அஞ்ஞான மூலவஞ்ஞானப்பேராணவமல மாரோபித்த விபரீத ஞானரூப போகக் கிரியா காத்திருத்துவக்குறி போத்திருத்துவத்தால்— உறுவதுதான்பந்தம் - மாயாகன்மதேகபோகக்கட்டுப்பொருந்தும்—உயர் மெஞ்ஞானந்தானுனத்தால்-சொல்லிய வந்தச் சிவதீக்ஷா சிவஞான சிவ யோக சிவசரியாங்கியங்க ஞானத்தால்—அதுபோவது-அந்தப் பந்தநீங்கு வது— (காரணமிருக்கக் காரியமெப்படிபோம்?) அலர்கதிர்முன்னிருள போல்-சூரியகிரண சந்நிதானத்தி லந்தகாரமொப்ப — அஞ்ஞானமற ப்பந்தமறும்-மலநீங்க மாயாகன்மக்கட்டு விடும்—முத்தியாகும்-பின் சிவத் துவாபிவியத்தி சித்திக்கும் (சொல்லிய வங்காங்கி ஞானங்களுள் ளங்கி ஞானமே முக்கியமென்ப தறைகின்றார்)— ஈனத்தார்ஞானங்களல்லா ஞா னம்-சிவதீக்ஷா சிவஞான சிவயோக ஞானபாத்திரர்க ளல்லாச்சாங்கியன் வேதாந்திமுதலோர் சொல்லும் பிரகிருதிபுருஷ விவேகப் பிரமவிவேக

பௌருஷஞானங்கள் சைவைகதேசிகள் சொல்லுஞ் சிவசிவைக்கிய விஷய சிவசக்திப் பிராமாணிகபௌருஷ பிரமிதிக்குறித் தீக்ஷாங்காங்கி ஞானம்(இவைகள்)—அல்லாஞானம்-சங்கற்ப நிற்கன்ம கிருத்திய ஞானகரண ஞானம்—இறைவனடிஞானமே - சிவக்கிரியாசத்திச் சிறப்பிருப்பிச்சாசத் திலக்கண சிவதீக்ஷையே—ஞானமென்பர் - ஞானச்சிறப்பென்று சிவசித்தாந்திகள் செப்புவார்கள். எ—று. சைவசித்தாந்திப்பேரில், மறைந்து சாங்கிய வேதாந்திமதத்தாபாசர்களாய்ச் சஞ்சரிக்குஞ் சிலபேர் தியான சமாதி நிற்கன்மச் சிறப்புஞானமுஞ் செப்பாது ஞானத்தியான சமாதி சிவன் முத்தி சாக்ஷாத்கார சருவாங்காங்கியாயிருக்குந் தீக்ஷையை ஞானத்துக் கங்கமென்று மாறிக்கொண்டு,சிவ சிவைக்கிய விஷய சிவசத்திகரண நைமித்திக பவுருஷபொதுஞானமாத்திரமே இறைவனடிஞானம் அதுவே சமாதி யதுவேஞானமென்பர்.

அவர்கள் முன்னாசாரியர் தீக்ஷையே மோக்ஷசாதனமென் றனேகந் திருவிருத்தங்களில் விஸ்தரித்த வாக்கியங்களுக்கு முன்பின் னவிரோதமாகப்பொருள்கொள்ளாது தங்கள் மனம்கொள்கைக்கிணங்கப் பொருள் கொண்டு முன்பின் விரோதிக்கப்பண்ணி யாக் குருவாக்கியங்களைப் பிராந்த வாக்கியங்களாகவும், விப்பிரலம்ப வாக்கியங்களாகவும் பண்ணிப் பேசுமபேர்களோடு பேச்சேதிருக்கின்றது. ஏதிப்போது நீர் நீதிதப்பிச்செப்பிற்றென்று நிகழ்த்தியது; மலங் குணம்; அதுஅஞ்ஞானமே; அஞ்ஞானங்குணகுணித் திரவியமன்று, மலமாகு மந்தவஞ்ஞானமுஞ் சிப்பிவெள்ளி ஞானம்போல ஞானமாத்திரத்தால் நீங்கும்.

நன்று நீ சொல்லியது; மலங் குணம் அஞ்ஞானமாகில், அதற்குக் குணியொன்று கூறவேண்டும்;ஆத்மாவென்னில் பாஷாணம்போ லஞ்ஞாநாத்மாவென்னு நையாயிக வைசேடிக மதமாம்; ஆத்மாவுக் கன்னியம் அக்குணியென்னி லதுவேமலம். அஞ்ஞானமென்றது மலகுணமென்றுமக்கு அபிமத ஞாநத்தியந்தாபாவ லக்கண மவுட்டியமாகு மஞ்ஞானமன்று, குற்றிகொல்லோ மகன்கொல்லோ வென்னும் ஐயஞானம்போ லைய ஞானமாகு மஞ்ஞானமே; அல்லது இது வெள்ளியெனுஞ் சிப்பிவெள்ளி விபரிய ஞானம்போற் சவிகற்பவிபரிய ஞானமாகு மஞ்ஞானமேதான்.

நன்றிதுவன்று; குணியொன்று குறிக்குமிடத்துச் சாகங்கார புத்தி தத்துவ மாதலாற், புத்திதத்துவமுதற் றத்துவப் பிரளயத்து முத்திப் பிரசங்கம் வரும். அப்போ திருசந்திரனெனும் விபரிய ஞானம்போற புத்தி பொருந்தாது சரீரநானென்று சற்றே தோற்று நிருவிகற்ப விபரிய ஞானமாகு மஞ்ஞானமே; அதுவு நன்றன்று; ஞானங்கிசத்துக்குச் சித்தும் விபரியாங்கிசத்துக்கு மலகலைமணந்து கலந்த வித்தையுங் குணியாதலா லிய

ற்கைக் குணிமாறி மயங்கிச் செயற்கைக் கலைகலந்த வித்தியாதத்துவமு தற் றத்துவப்பிரளயத்து முத்திப்பிரசங்கம் வரும்.

அதுவன்றி, யிருசந்திரஞானமாகு மஞ்ஞான மொருசந்திரனெனு முண்மைஞானத்தா லுண்ணீக்கமுற்றாலு மொப்புமாத்திரத்துதிக்குஞ் சிப்பிவெள்ளிஞானமாகு மஞ்ஞானஞ் சிப்பியெனு முண்மைஞானத்தா லுண்ணீக்கம் புறநீக்கமுற்று முற்றும்போனாற்போல நேத்திரப்படல திரவியநீக்கமன்றிப் புறநீக்கமுறாததுபோற் சரீர நானெனுஞ் சரீராத்ம ஞானமாகு மஞ்ஞானமுஞ் சரீரத்துக் கன்னியமாத்மா நானெனு முண் மைஞானத்தா லுண்ணீக்கமுற்றாலு மொருமலத்திரவிய நீக்கமன்றிப் புற நீக்கமுறாது மலத்திரவியமும் படலமென் றிஃதொரு திரவியப்பொரு ளெனு முண்மைஞானமாத்திரத்தாற் படலம்போல மலமென் றிஃதொரு திரவியப் பொருளெனு முண்மைஞானமாத்திரத்தால் நீங்காது, நேத்திர படலத் திரவியம் படலநீக்கு முபாய ஞானத்துணையுடைய வயித்திய சத் தி சத்திரகன்மத்தால் நேத்திர விபரீத விருத்தி நிமித்தாந்திய விருத்தி யோடு நீங்குவதுபோல, மலந்திரவியமு மலநீக்குமுபாய ஞானத்துணை யுடைய சிவதீக்ஷாக்குறிக் கிரியாசத்தி சிறப்பிருப்பிச்சாசத்தி கிருத்தியக்கு றிச்சங்கற்ப சிற்கன்மத்தாற் கலைகலந்த வித்தியாதத்துவ விபரீத விருத்தி நிமித்த மவுட்டியவிருத்தியோடு நீங்கும். ௭

ஆதலால், சாங்கியர்போற் சொல்லுஞ் சுவதந்திர ஞானத்தாற், ப ஞ்சலர்போற் சொல்லுஞ் சுவதந்திர யோகத்தால், வேதாந்திகள்போ, சொல்லுஞ் சுவதந்திர சன்னியாசத்தால், மீமாங்கிசர்போற் சொல்லுஞ் சுவதந்திர கன்மத்தால் மோக்ஷமில்லை; சிஷ்யபௌருஷ சிவஞானாதி சிஷ பௌருஷ சிவயோகாதிகள் சாதார வசத்தியோநிருவாண தீக்ஷாங்கி மா த்திராங்கங்கள்; குருசிவஞானாதி குருசிவயோகாதிகளுஞ் சிவசிவஞானாதி சிவசிவயோகாதிகளு முறைமையிற் சாதார நிராதார சத்தியோநிருவாண தீக்ஷாங்கிமாத்திராங்கங்கள்.

சிஷ்யபௌருஷ சிவஞானாதி சிவயோகாதிகள் மோக்ஷகாரிய முற்று மொத்துச் செல்லா தோரிடத்தில் வியபிசாரிக ளாதலான் மோக்ஷகாரிய முற்றுமொத்துச் செல்லுஞ் சொல்லிய சிவசத்திலக்கண தீக்ஷையாற்றா னே மோக்ஷமென்று சுவதந்திர தீக்ஷா சிற்கன்மத்தால் மோக்ஷஞ் சுவதந் திரமல்லா ஞானகோடிகள் தீக்ஷாங்கங்களன்றிச் சுவதந்திரங்களாய்ச் சூழ் ந்தாலு மோக்ஷமில்லையாம்; ஆதலால், சொல்லிய சிவதீக்ஷா சத்திசங்கற்ப சிற்கன்மத்தாற்றானே மோக்ஷமென்று சித்தாந்தம். (உ௭)

அப்படி குருஞானாதி சாங்க சாதார சத்தியோநிருவா
ண தீக்ஷையினால் விதேக பரமுத்தி சாக்ஷாற்கா
ரஞ் சடிதி விளங்குமென்றுஞ், சிஷ்யஞானாதி சாங்க

சாதார வசத்தியோ நிருவாண தீக்ஷையினாற் சதே
கசிவன்முத்தி சாக்ஷாற்கார மெல்ல விளங்குமென்
றுஞ், சமாதி நடுவொரு திருவிருத்தத்தா லுட்டி
யிரு திருவிருத்தங்களா லிசைக்கின்றார்.

சூரியகாந்தக்கல்லினிடத்தேசெய்ய
சுடர்தோன்றியிடச்சோதிதோன்றுமாபோ
லாரியனுமாசான்வந்தருளாற்றோன்ற
வடிஞானமான்மாவிற்றோன்றுந்தோன்றத்
தூரியனுஞ்சிவந்தோன்றுந்தானுந்தோன்றுந்
தொலலுலகமெல்லாந்தன்னுள்ளேதோன்று
நேரியனாய்ப்பரியனுமாயுயிர்க்குயிராயெங்கு
நின்றநிலையெலலாமுநிகழ்ந்துதோன்றும்.

மிக்கதொருபக்குவத்தின்மிகுசத்திபாத
மேவுதலுஞானம்விளைந்தோர் குருவினருளாற்
புக்கனுட்டித்தேநிட்டைபுரிந்துளோர்கள்
பூதலத்தேபுகழ்சீவன்முத்தராகித்
தங்கபிரியாப்பிரியாநின்றியாட்டிற்
றமலியந்திப்பசுபுத்திபணணிச்சங்கரனோ
டொக்கவுறைந்திவனவனேயவனிவனைவிடாதே
யுடனதையாய்ச்சிவன்றானேற்றமொன்றுமெனபர்.

அறியாமையறிவகற்றியறிவினுள்ளே
யறிவுதனையருளினாலறியாதேயறிந்து
குறியாதேகுறித்தந்தக்கரணங்களோடுங்
கூடாதேவாடாதேகுழைந்திருப்பையாகிற்
பிறியாதசிவன்றானேபிரிந்துதோன்றிப்
பிரபஞ்சபேதமெல்லாந்தானாய்த்தோன்றி
நெறியாலேயிவையெல்லாமல்லவாகி
நின்றென்றுந்தோன்றிடுவனிராதாரனாயே.

இ-ள். சூரியகாந்தக்கல்லினிடத்தே—செய்யசுடர் தோன்றியிட-சூரியசன்னிதானமாக—சோதிதோன்றுமாபோல் - நெருப்பிருந் தெழுந்தது போல—ஆரியனுமாசான் வந்துதோன்ற-புச்சியனாகிய குருப் பருவங்கருதி விரும்பி வெளியாக—அருளால்-அக்குருபண்ணிய செயற்கைத் தீக்ஷாக்குறிக் கன்மத தாவிப்பவித் தியற்கைத் தீக்ஷாக்குறியுற்ற சிவக்கிரியாசத்தி

சிறப்பிருப்பிச்சாசத்தி கிருத்தியக்குறிச் சங்கற்ப சிற்கன்மத்தால் — ஆன்மாவிலடி ஞானந்தோன்றும்-உயிரின்கண்ணே யென்று படித் துபசரிக்கப் படுங் கரணக்குறி ஞானக் கிரியாலக்கணாத்ம தன்மசின்ன முன்னுள்ள சிற்சத்தியின தறிதல் பண்ணுதல் கிருத்தியாகிருதி சாக்ஷாற்காரஞ் சடிதி மலமுத்தமாய் வியத்தமாம்—தோன்ற-அப்படி யாவிர்ப்பவிக்க—தூரியனுஞ்சிவந்தோன்றும்-மலசத்தியான் முத்தமாகுமுன் சிற்சத்திக்கண் மறையப் பிரத்தியக்ஷ மின்றி யிருந்த சிவன் பிறபொருளறிவி லுதித்த சாக்ஷாற்காரத்திற் பிரத்தியக்ஷமாவன்—தானுந்தோன்றும்-அப்படி முன்னிருந்த வாத்மாவுந் தற்பொருளறிவிலுதித்த சாக்ஷாற்காரத்திற் சிவனுக் கொத்துறு முருவனாய்ப் பிரத்தியக்ஷ மாவன்—தொல்லுலகமெல்லாந் தன்னுள்ளேதோன்றும் - அநாதிசித்த சடசித்துப் பிரபஞ்சமெல்லா மொத்த வியாபகமாயு மொவ்வாவியாப்பியமாயும் பிரத்தியக்ஷமாம்—நேரியனாய்ப்பரியனுமாயுயிர்க்குயிராயெங்குநின்றநிலையெல்லாமுநிகழ்ந்துதோன்றும்- பிரத்தியக்ஷமாகிய சிவனுஞ்சிறப்பா யணுவுக்கணுவாய் மகத்துக்கு மகத்தாய்ப் பசுவர்க்கப் பிரேரகனாய் முத்தாத்ம மித்திரனா யிருக்குமுறைமை முற்றுஞ் சாக்ஷாற்காரமாம். எ-று. (உஅ)

இ-ள். மிக்கதொருபக்குவத்தில் - தீவிரதரபக்குவமலகாலத்தில்—மிகுசத்திநிபாதமேவுதலும்-பாஷாணபதனம் பயம்பண்ணுதல்போ லனுக்கிரகசத்தியினது சஞ்சார பயம்பண்ணுஞ் சங்கற்பம் பொருந்துதலும்(சஞ்சாரபயஞ் சிறிதொரு பிரகாரம் பரோக்ஷ சிவபுத்தியும் பிறக்கத் தீக்ஷித சிவச்சுவரூபத்தைச் சிவசாத்திரத்தாற் பரோக்ஷரூப தரிசனப்படுத்தித் தியானிப்பித்துச் சமாதிப்பித்துப் பின் சிவனைப் பிரத்தியக்ஷமாய்க் காட்டுங் குருவைத்தேடி யோடித் திகைக்கச் சிவனவனைக் காட்டிக் கூட்டக் கூடிய)—ஓர்குருவினருளால் (கடாக்ஷித் தவன்பண்ணுந் தீக்ஷாகன்மாரூட சாக்ஷாத் தீக்ஷாலக்கண சிவசத்தி சங்கற்ப சிற்கன்மத்தால் சிவாகமக் கேள்விக் கருகர்களாய்)—புக்கனுட்டித்தே-கேட்டுச் சிந்திதுப் பரோக்ஷ சிவநிச்சயம் பண்ணிப் பின் னபரோக்ஷம்போ லபிநயித்து நடிக்குந் தியானஞ் செய்தே—நிட்டைபுரிந்துளோர்கள் - தியானத் துறைப்புரூப சமாதி சாதித்தோர்கள்—பூதலத்தேபுகழ்சீவன்முத்தராகி -சதேக சீவன்முத்தி சாக்ஷாற்காரவான்களாகுகைக்குக் கீர்த்திக்கும் யோக்கியர்களாய்—தக்க பிரியாப்பிரியமின்றி-விருப்பு வெறுப்பு மின்றி—ஓட்டிற்றபணியத்திற் சமபுத்திபண்ணி-ஓடுஞ்செம்பொன்னு மொப்ப நோக்கி—சங்கரனோடொக்க வுறைந்து-சிவசத்திவியாத்திக்கொப்பத் தங்கள் சிற்சத்திவிரிவு சிந்தித்து—அவனிவனே யிவனவனே விடாதேயுடந்தையாய் - நிரந்தரநினைப்புற்று நிரந்தரநினைப்பு நீங்காது—சிவன்மேற்றமொன்றுமே காண்பர்- (சமாதிமுகிழ்க்குஞ் சாக்ஷாற்காரத்திற் சிவன்முதற் சித்தசித்துவத்துமுற்றுங் கைத்தலத்து நெல்லிக்கனி கண்ணோக்கதிற்போலுற்று விளங்கு மாறு

லுஞ் சமாதியி லேகாக்கிர மாத்திரமாதலால்) சிவனிற்கு நிலைமாத்திரஞ் சிந்திப்பார்கள் எ-று.

பிரத்தியக்ஷமாய்ப் பார்ப்பார்களென்றுபேசவேண்டாம், சிவசித்தாந்திகட்குப் பாதஞ்சலர்முதலோர்க்குப்போற் சமாதியோகமன்று;சாக்ஷாற்காரமாகு மங்கியோகத்துக் கங்கயோகமாதலால்.

"சருவார்த்தபாசகஞ்ஞானஞ்சிவயோகந்துசாசுவதம்"

என்றிருத்தலா

னுஞ் சாக்ஷாற்காரமாகும் யோகத்துக்கங்கஞ் சாக்ஷாற்காரமே யோகம்; தியானஞ் சமாதி. யோக மென்ப தங்கமாகையா லுபசாரம். (உக)

இ-ள். தியானம் ஞானத்துதிக்கு முறைமையும், சமாதி தியானத்துதிக்கு முறைமையும், சதேகசிவனுமுததி சாக்ஷாற்காரம் சமாதியின் முகிழ்க்கு முறைமையுஞ் சாற்றுகின்றது.

"அறியாமையறிவகற்றி" என்பதுமுதலியன ஸ்ரீகுருத் திருவாய்மலர்ந் துபதேசிக்கு மொருவார்த்தையென் றுலகுரைக்கும் வசிமாற் றீருறுப்பீற்றிருசுழி யொருமொழியிற், "கோவா மம கிம" என்னும் வடமொழி வினவி லுத்தர மொப்புச் செப்புதலாகு மயமத்தியாதி படர்க்கை முன்னிலைதன்மை முக்குறி மூவாக்கியம் மும்முப்பதம் மும்முப்பதமொட்டுமூவெழுத்து மும்முப்பதத்தில் மூவெழுத்திற் குறிக்கும் வாச்சியலக்கிய விருமுப்பொருள்;அவ்விருமுப்பொருளி லிலக்கியப்பொருளாகு மாத்மபரசிவ முக்குறி மூப்பொருள்களின் முதற்பொருள் முறைமையிற்றூக்குஞ் சுழுத்திதுரியந் துரியாதீத முக்குறி மூவவத்தை சாக்கிரஞ் சொப்பனந்தாக்குஞ் சயனமட்டு முட்டுஞ் சகிதகும்பகோபசாந்திமே லுன்மனைமூலாந்தோபரியுபாந்தங்களி லப்படி யப்பொருள் தாக்கிப் பண்ணப்படுங் கேவல கும்பக சூனியகும்பக சூனியாந்தகும்பக முக்குறி முக்கும்பகஞ் சாம்பவிகேசரி சாக்கிரஞ் சொப்பனந் தாக்கியதாதலா லப்படி யப்பொருள் தாக்குஞ் சின்முத்திரை மவுனமுத்திரை மவுனாந்தமுத்திரை முக்குறி மும்முத்திரை யப்படியப்பொருள் தாக்குந் தியானஞ் சமாதிசாக்ஷாற்கார முக்குறி மூவறிவு முன்சொல்லிய மும்முப்பதங்களினு மும்முப்பதமொட்டு மூவெழுத்துக்களினு நடுப்பத நடுவெழுத்துக்களுக்கு வாச்சியப்பொருளணுபக்ஷசுவரூப சிவயோகங்குறித்தாற்பூதாத்ம ததுவாத்மாந்தராத்மசீவாத்ம மந்திராத்ம பஞ்சாத்மா ; சம்புபக்ஷ சிவரூப சிவயோகங் குறித்தால் குருலிங்கசங்கமாதி ; இலக்கியப் பொருண்முறைமையி னுன்மனையுற்ற சின்மாத்திராதமா;அனதிக்கிராந்த விந்துக சின்மாத்திரபரசிவம் ; முதற்பதமுதலெழுத்துக்களுக்கு வாச்சியப்பொருள் பிரமாதி பரசிவமூர்த்திசானமூர்த்தி பரியந்தவணுபக்ஷ சம்புபக்ஷ வபரசிவம். நாதத்துள் ளெழுந்தொளிருஞ் சுத்தபூதாதி யுபாதியுற்ற பஞ்சாத்மாவுஞ் சூக்குமபரசிவ

ரூபியாயிருந்தாலு மொருபிரகார மீசானமூர்த்திமுத லணுபக்ஷவபரசிவரூபியாதலா லப்பொருளாம். இலக் கியப்பொருள் அதிக்கிராந்தவிந்துக பரசிவமாகும் அணுபக்ஷசம்புபக்ஷவிருபரம்; முடிவிற்பதமுடிவெழுத்துக் களுக்கு வாச்சியப்பொருள், தியானசமாதியுபாதித் தியாச்சியத்தினுற் சுவரூபலக்கண சிவகோடிக்குட் குதிக்குந்தியான சமாதியுபாதியுற்ற வணுபக்ஷசம்புபக்ஷசின்மாத்திராதம பரங்கள். இலக்கியப்பொருள் சுத்தசிவமாகுமணுபக்ஷ சம்புபக்ஷவிருசிவம். ஆத்மாத் தியானத்தானம்; பரஞ் சமாதித்தானம்; சிவஞ் சாக்ஷாற்காரத்தானம்.

பின்னெருபகுப்பு மிதுபோலிருசிவத்தியானங் குறித்துச் செப்பப்படுமதுசெப்புவாம். சிவசத்தியனந்தேசுரசத்தியாதித் துவாரத்தினுலே பசுசாத்திராலோகாதியாரூடமா யசுத்தராக வசுத்தகலையசுத்தவித்தையிவற்றின் மறைந்து விளக்கினதினுற் செயற்கைப் பசுகரணமென்றும் பசுப்பிரமாணமென்றும் படிக்கப்படுந் தற்பொருளறிவு பிறபொருளறிவுச் சிற்சத்திகளைப் பொதுச்சிறப்பாய் மணந்ததினுலு மியற்கையினுலு மசுத்தப்பிராகிருத மனேகங்காரபுத்திகள் பசுகரணங்களென்றும் பசுப்பிரமாணங்களென்றும் படிக்கப்படும் ; சிவசத்திசாக்ஷாற்சிவாகமாரூடமாயுஞ் சிவமந்திராரூடமாயும் நாதத்துளெழுந்தொளிருஞ் சுத்தமனேகங்காரபுத்தி கர்ப்பமாயிருக்குஞ் சுத்தராகஞ், சுத்தகலை சுத்தவித்தை யிவற்றின்மறைந்து விளக்கினதினுலு மியற்கையினுலுஞ் சிவகரணமென்றும் பதிப்பிரமாணமென்றும் படிக்கப்படும்; தற்பொருளறிவு பிறபொருளறிவுச் சிற்சத்திகளைப் பொதுச்சிறப்பாய் மணந்ததினுற் செயற்கையினுற் சிவகரணங்களென்றும் பதிப்பிரமாணங்களென்றும் அந்தமுந்தச்சொன்ன மனேகங்காரபுத்திகள்படிக்கப்படும்.

முறைமையி லதிற்சிவாகமவழிச்செல்லு மனேகங்காரபுத்திகள் படிப்பவனது பசுத்துவ சிவத்துவவிவேகத் திரிபதார்த்த விவேகபரோக்ஷதீக்ஷாயோகாங்க விகற்பசங்கற்ப கருவபோதஞான விசேஷங்களைப் பண்ணும்; சிவமந்திரவழிச்செல்லு மனேகங்காரபுத்திகள் காலாக்கினியாதியுருசிருதார்த்த புவனத்துதிக்கும்; அபரசித்தி பராபரசித்தி பரசித்தி யெனுமுச்சித்திகள் விருப்பமுறைமையிற் சித்திக்கும்பொருட்டும் முடிவின் முத்திசித்திக்கும்பொருட்டும் பிருதிவிமுதற் குணமீருகு மசுத்தகோடி பிராகிருதிமுதற்காலமீருகுஞ் சுத்தாசுத்தகோடி சுத்தவித்தைமுதற் சிவமீருகுஞ் சுத்தகோடியெனுமுக்கோடிகளிற் சாக்ஷாத்தாங்களாயு மணிப்பிரபைபோல உபரிவிரியும் வியாபாரத்துவாரத்தினுலும் பூதாத்மாதி மந்திராத்மாந்த பஞ்சாத்ம சாலம்ப சிவயோக பஞ்சமார்க்கங்களி லொருவழியிற்பிரவேசித்துவிகற்ப சங்கற்ப கருவபோத வியாபாரங்களைப் பலவிதமாய்ப்பண்ணும்.

அந்தவிகற்ப சங்கற்ப கருவபோதங்களால்,"அறியாமையறிவகற்றி" (அறிவகற்றி யறியாமையகற்றியென மாறுக) "அறிவகற்றி" என்பது தத்துவசுத்தித் துவாரத்திஞலே யாத்மசுத்திதானே பண்ணப்பட்டதாகிலுந் தத்துவசுத்தி பிரதானமாகையாற் றத்துவசுத்திபண்ணியென்று சாற்றப்படும்; "அறியாமையகற்றி" என்பது மல மலவாசனை சுத்தித் துவாரத்திஞலே யாத்மசுத்திதானே பண்ணப்பட்டதிஞலும் ஆத்மாப் பசுத்துவமென்னு மலோபாதியாற் பசுதத்துவமென்று படிக்கப்படுமாதலான் மலம் பசுதத்துவத்தோடு பசுதத்துவமென்றுபடிக்கப்படும் மலதத்துவமென்று வேறுதத்துவமாய் மதிக்கப்பட்டதில்லை யாதலானும் ஆத்மசுத்தி பிரதானமாகையா லாத்மசுத்தி பண்ணியென்றே யறையப்படும். இதுதொகைப் பொருள். அறியாமை யசுத்ததத்துவமென்றும் அறிவு சுத்ததத்துவமென்றுஞ்சொல்லுவாருமுளர்.

வகைப்பொருள் விரிவுப்பொருள் ஒருமிக்க வகுத்துரைப்பாம். அறிவகற்றி - நிருவிகற்பம்புணர்ந்ததிலுதிக்குஞ் சவிகற்பமாய்த் தேவர் நரர் முதற்பசுவர்க்க மாயாசகலவர்க்கத்திற் காணப்படுஞ் சிற்றறிதல் சிற்றுச் செயற்ருெழில்களையும் விபரீத வேதன விக்கிரக போகங்களையும் பண்ணும்படி சிறிதுமலஞ்சிந்தும் அசுத்தகலாதிகஞ்சுக கலாவச்சியத்துவ தௌரந்தரியக்குறி யசுத்த சகலத்துவமுற்றுக் கிஞ்சிஞ்ஞுத்துவ கிஞ்சிற்கர்த்திருத்துவலக்கண சித்துவசின்ன வசுத்தபோகக் கிரியாகர்த்திருத்துவமாகிய வசுத்தபோத்திருத்துவ மாத்திரபொதுக்குறித் தூலபுருஷத்துவத்தினது புத்திரப்போலிப் போக்கிய போத்திருத்துவ போகோபபோத்திருத்துவச் சிறப்புக்குறித் தூலசீவத்துவமேகம்.

நிருவிகற்பம்புணர்ந்ததிலுதிக்குஞ் சவிகற்பமாய் மந்திரேசுவர மாயாசுத்த சகலபதிவர்க்கத்திலும் மந்திர மந்திரமகேசுவர மகாமாயாசுத்தசகலபதிவர்க்கத்திலுங் காணப்படுஞ் சாதிசயப்பேரறிதல் பெருஞ்செயற்ருெழில்களையு மற்பவிபரீத வேதன விக்கிரக போகங்களையும் பண்ணும்படி மரியாதியின் மலவாசனைதுடைக்குங் கலாதிகஞ்சுகமுற்றுக் கலாவசியத்துவ வைதுரியக்குறிச் சுத்தசகலத்துவமுற்றுச் சாதிசய சருவஞ்ஞுத்துவசருவகர்த்திருத்துவ லக்கண நூலசிவத்துவசின்ன சுத்தபோகக் கிரியாகர்த்திருத்துவமாகிய சுத்தபோத்திருத்துவ மாத்திரப் பொதுக்குறிச் சூக்குமபுருடத்துவத்தினது புத்திரப்போலி போக்கிய போத்திருத்துவ போகோபபோத்திருத்துவச் சிறப்புக்குறிச்சூக்கும சீவத்துவமேகம்.

இம் மந்திரமகேசுராதி யபரபதிவர்க்கத்துக் கூறிய குறியுட்கூடிய சுத்தசகலத்துவமுதற் பொதுக்குறிச் சிறிதுசின்னமுஞ் சூக்கும சிவத்துவ விளக்கு விக்கிரக விசிட்ட சகலத்துவமுதற் சிறப்புக்குறிச்சிறிதுசின்னமுமுடைய வணுசதாசிவ வணுவங்க பதிவர்க்கத்தின் முன் சொல்லிய பொ

துக்குறிப்பரபுருடத்துவத்தினது புத்திரப்போலி போக்கிய போத்திருத்துவபோகோபபோத்திருத்துவச் சிறப்புக்குறிப் பரசிவத்துவமேகம்.

இம்முப்புருடத்துவப் புத்திரப்போலி முச்சிவத்துவமு முபாதிச்சித்துவமுந் தூலசிவத்துவமுஞ் சூக்குமசிவத்துவமும் நிரதிசயபரசிவத்துவசொரூபலக்கண சிவசம சுத்தசிவனு யிருக்கின்ற நமக்குச் சொரூபலக்கணமன்று; தடத்தலக்கணமேயென்று மகாவாக்கிய நடுமுதலிருபதங்களுக்கு வாச்சியார்த்த தடத்தலக்கணாத்மத்துவ தடத்தலக்கண சிவத்துவ சுத்திக்குறி முப்புருடத்துவப் புத்திரப்போலி முச்சிவத்துவசுத்தி ததுவசுத்தி பண்ணத்தானே வேறியத்தனமின்றிப் பண்ணப்படுமாதலால், முச்சிவத்துவ தடத்தவறிவு விளக்காதலால் அறிவென்றுபசரிக்கப்படுந் தத்துவங்களாதலால் "அறிவகற்றி" என்பதற்கர்த்த மிதுவாகத் தத்துவசுத்தி பண்ணி.—

இஃதிம்முறை பண்ணவென்ப திசைக்கின்றும். சாதக சாமர்த்தியத்துக்குத் தக்கது சிவஞானத்துணைச் சித்தசிவகன்மயோகிபண்ணுந் தத்துவ தடத்தாத்ம தடத்தசிவ முப்பதார்த்தங்களின திலக்ஷண வபரோக்ஷ நிரீக்ஷணக்குறித் திரிரூபம்; ஒன்றுக்கொன்று தத்துவமுதற் றிரிபதார்த்தலக்ஷண விலக்ஷண வபரோக்ஷ பரீக்ஷாரூப நிரீக்ஷணக்குறித் திரிதரிசனம்; மனோவிகற்பசங்கற்பப் பிரவிருத்தமாய்ச் சிவோகஞ் சிவோயஞ் சிவசிவவென்பதுமுதற் பலவித வகங்கார புத்திவிருத்திப்பிரவாகசின்னத் தியானக்குறி; தியானசித்திசின்னசமாதிக்குறித் திரியோகம்; சமாதிசித்தி சின்ன சாக்ஷாற்காரக்குறித் திரிபோகம்.

மூலமந்திரமுச்சரித் துள்ளிருக்குஞ் சுரிகாத்திர மதித்துத் தொடுத்திருதயந்தொட்டுத் துவாதசாந்தங்குறித்துச் சமனுந்தமட்டு முட்ட முறைமையிற்போய்ப் போய்த்தான், தேசகால சத்திக்குத்தக்க திருதயத்திருந்துதான் சூனியப்பிராசாதமுச்சரித்துள்ளிருக்குஞ் சுரிகாத்திர மதித்துத் தொடுத்துத் தத்துவங்களையு மாத்மாவிலுஞ் சிவனிடத்திலுந் தத்துவதடத்தினுல் வைத்த தடத்தத் தன்மைகளையு மறுத்துக் காரணத்தடைவிலொடுக்கி யகண்டிதங்களாகப் பண்ணப்பட்டனபோ லடக்கித் தனதுதத்துவ வச்சியத்துவத் தியாச்சியம்பண்ணித் தத்துவங்கள் தனக்குவச்சியங்களாகத் தான் வசியாதிருத்தலாகுந் திரிசுத்தி யிவைகளைத்தான் பண்ணி; சிவஞான துணைச் சாத்தியசிவகன்மயோகி பண்ணுஞ் சொல்லியகுறிப் பரோக்ஷரூபந் தரிசனம் யோகங் கூடிய மரியாதி மனோவாயுசெய வசமாத்திரத்தினுலே யொருபிரகாரந் தன்வசமாக்குதலாகுந் திரிசுத்தி இவைகளைத்தான் பண்ணி; யோகசாமர்த்திய மில்லாதிருந்தால் நேதிநேதியதிலக்கண சிவகன்ம மாத்திரத்துணைச் சாத்திய சிவஞானயோகி பண்ணுஞ் சொல்லியகுறிப் பரோக்ஷரூபந் தரிசன மனுந்மனி யாத்மாபிமா

னத் தியாகமாகுந் திரிசுத்தி யிவைகளைத்தான் பண்ணி ; அதிமலபரிபக் குவத்தா லாவிர்ப்பவிக்கும் அதிகமோக்ஷ வாஞ்சையின தாவேசத்தாற் ருன் அதுவன்றித தேசகால சத்திசங்கடத்திற்ருன் வித்தார சுத்திவிரு ப்பமில்லையேல், மமகார வகங்கார மாத்திரத் தியாச்சிய மாத்திரமாகுஞ் சுத்திதான்பண்ணி; அல்லதி லருவாய்த் தத்துவதாத்துவிகப் பிரபஞ்சம னைத்து நிராகார நிராலம்ப மாயா மகாமாயாத் தோற்றமாதலா லப்படி யகண்டிதமாய்க் காரணாகார நிராதார நிராலம்ப நிஷ்பிர பஞ்ச சிந்தனை மாத்திரமாகுஞ் சுத்திதான்பண்ணி.

இப்படி சுத்திபண்ணுமிடத்துச் சுத்திமார்க்கபேதமுண்டு அதுசொல்லு வாம். முத்திமாத்திரம்விரும்பின் நிராலம்ப சிவயோகம் பண்ணும்பொரு ட்டுக் குருப்போதிப்பச் சிவாகமஞ் சிவாகமார்த்தமாத்திரஞ் செப்புங் குரு வாக்கிய மாத்திரந் தான் கேட்டுச் சிந்தித்துத் தெளிந் திருதயமுதற் றுவா தசாந்த வியாபியாயிருக்கும் பிரமரந்திர முடிவாகும்பஞ்சாதாரங்களிற் ற ங்கித்தங்கிக் கமலமுடிச்சுக்கதவு திறந்துதிறந்து தத்துவமுதலிய முப்பதா ர்த்தரூப தரிசனமுதலியன பண்ணிப்பண்ணிப்பழகிப்பழகிப் பின்ருனங்க ளிற் றங்காது சடிதி சற்றே தாக்கித்தாக்கி முன்சாற்றிய முறைமையின் முச்சிவயோகிகள் பண்ணு முப்பகுப்புத் தத்துவமுதலிய முப்பதார்த்தமு ச்சுத்திபண்ணிப் பண்ணுமிடத்தும் பிரமாதி பரசிவமூர்த்தீசானமூர்த்திப ரியந்த சிவமூர்த்தி பதங்களில் விரும்பிய சிவமூர்த்தி பதமுத்தியெனு மபர முத்திக்குறிச் சித்திக்குறித்து முச்சிவயோகிகள் பண்ணு முறைமையிற் சு வாவதிசுத்தியோடு விரும்பிய தத்துவ தத்துவாருகாத்மசிவமூர்த்தி சிவசி வமூர்த்தித் திரிரூபதரிசன யோகபோகங்களைப் பண்ணுமிடத்துஞ் சித்தி க்குப்பின் முத்திவிரும்பின் முத்திவழிபழகச் சுத்தியோடு பண்ணுமிடத்து ம்பவுதிகதேகாதிக்குறிப் பூதாதி மந்திராந்த வைம்பொருள்கட்குந்தத்துவ ங்களென்று பேர்சாற்றப்படு மாதலாற் பூதாத்ம தத்துவாத்ம வந்தராத்ம சிவாத்ம மந்திராத்ம சாலம்பசிவயோக மார்க்கங்களிற் பழகிய வொருவழி வைத்து இனவழியடக்கிச் சுத்தபூதாதிதொட்டுச் சமனுந்தமட்டுமுட்டும்பூ தாத்ம சித்துபாதித் தூலதேகக்குறிப் பூதங்களிற்ருன் தத்துவாத்ம சித்து பாதிச் சூக்குமதேகக்குறித் தத்துவங்களிற்ருன் அந்தராத்ம சித்துபாதி பரதேகக்குறி யந்தரத்திற்ருன் சிவாத்ம சித்துபாதி யகங்காரமாத்திரக்கு றிச் சிவனிற்ருன் மந்திராத்ம சித்துபாதிப் பிராசாதமுதலிய மந்திரத்திற் ருன் ரூபதரிசன யோகபோக சுத்திகள் பண்ணப்படும். "அறிவகற்றி" என்பதற்குப் பொருளிவ்வள வமைந்தது.

அறியாமையகற்றி - மாயாசகல பசுவர்க்கத்திற் காணப்படுஞ் சரீரம் நான் இதுசுகம் இதுதுக்கம் இதுமோகம் நான்சுகி நான்றுக்கி நான்மோகி எதுன்பமுதற் பிரஞ்ஞாமோக வஞ்ஞானமூலபசுத்துவ மலத்தின ததோ

ணியாமிகாசத்தி வைத்த போத்திருத்துவக்குறிப் புருடத்துவ ரூபமாய்ப் போதலாற் றத்துவசுத்தி யாத்மசுத்தியா மாதலால் மலத்தினதாவாரக சத்தி வைத்த நித்தியகேவல நித்திராமுத்திரித கிஞ்சிற் ஞானக்கிரியாசூனிய வறியாமைக்குறி மூர்ச்சாமோக மூலசித்துவ சூனியக்குறி யறியாமைப்பே ரசித்துவ தூலதர பசுத்துவத்தைச் சொல்லிய பிருதிவிமுதற் கலாந்த தத்துவசுத்தி நடுநடுவே தத்துவசுத்திப்படி முச்சிவயோகிகள் பண்ணுமுறைமையிற் சிறிது மலசுத்தித் துவாரத்தினாலே சுத்திபண்ணி ; பிரளயாகல விஞ்ஞானாகல மூடபசுவர்க்கத்திற் காணப்படுந் தூலசாதிசய சருவஞ்ஞானக் கிரியா சூனியக்குறி மூர்ச்சாமோகமூல தூல சிவத்துவ சூனியக்குறி யறியாமைப்பே ரசிவத்துவ தூலபசுத்துவத்தை மாயாதத்துவசுத்தியினு மாயாதத்துவசுத்தி சுத்தவித்தியாதத்துவ சுத்திக்குநடுவினுந் தத்துவசுத்திப்படி முச்சிவயோகிகள் பண்ணுமுறைமையின் முற்று மலசுத்தித்துவாரத்தினாலே சுத்திபண்ணி ; பின் மந்திரேசுர மந்திரமந்திரமகேசுர மாயாசகல மகாமாயாசகல பதிவர்க்கத்திற் காணப்படுஞ் சூக்குமசாதிசய சருவஞ்ஞானக் கிரியாசூனியக் குறியாகிச் சுத்த போகோபபோகப் பிரஞ்ஞாமோகத்தி லழுந்தியமூர்ச்சாமோக மூலசூக்கும சிவத்துவ சூனியக்குறி யறியாமைப்பேரசிவத்துவ சூக்கும பசுத்துவத்தைச் சுத்தவித்தியாதத்துவ வீசுரதத்துவ சுத்திக்குட் டத்துவசுத்திப்படி முச்சிவயோகிகள் பண்ணுமுறைமையிற் றூலா திகார மல மூல தூலமலவாசனாசுத்தித் துவாரத்தினாலே சுத்திபண்ணி ; பின் அணுசதாசிவ வணுப்பிரமாங்க மகாமாயா சகலபதிவர்க்கத்திற் காணப்படும் பரநிரதிசய சருவஞானக் கிரியா சூனியக்குறி சுத்த போகோபபோகப் பிரஞ்ஞாமோகத் தமிழ்ந்திய மூர்ச்சாமோகமூல பரசிவத்துவ சூனியக்குறி யறியாமைப்பேரசிவத்துவபர பசுத்துவத்தைச் சதாசிவதத்துவமுதல் முத்தத்துவசுத்திக்குட் டத்துவசுத்திப்படி சிகாரூப திரோதானசத்திசுத்தியோடு முச்சிவயோகிகள் பண்ணுமுறைமையிற் சூக்குமாதிகாரமல மூலசூக்குமமல வாசனாசுத்தித் துவாரத்தினாலே சுத்திபண்ணி; "அறியாமையகற்றி" என்பதற்கு இவ்வளவு பொருளமைந்தது.

அறிவினுள்ளே-தூலசூக்குமபரமுச்சின்மாத்திராத்மதத்துவ மும்மலமுளைத்ததூலசூக்குமபர முப்பர வித்தியாதத்துவ மும் மரம்பழுத்த தூலசூக்குமபர முச்சிவசிவதத்துவ முப்பழங்கள் விரும்பப்படுமாதலாற் சமனைக்குக்கீ ழிருபகுப்பாத்ம பரசிவ தத்துவத் தியாச்சியத்தினாலே சமனாசுத்திக்குமே லுன்மனாந்தாவதி பரசிவத்துவாபிவியத்தி சித்திக்குமளவுந் தாக்கிப்பரமலவாசனை யாபாசிக்கு மாதலா லுன்மனாமூலாந்தஞ் சொச்சந்த சருவஞ்ஞானோத்தர சுருதிப்படி சிவசத்திதுணையாய்ச் சென்று திரோதானசத்தி நிக்கிரக கிருத்திய பராசத்தி யனுக்கிரக கிருத்திய மத்தியத்த சிவ சின்மாத்திராத்மாவினும் கூடச்செல்லுதலாற் சொல்லும் சிவசினமா

த்திராத்மாவினும்—அறிவுதனை-முறைமையி லணுபரசிவங்கள் சிவபரசிவங்களெனுநாலுசித்துக்களையும்—அருளினால்-சமனைமட்டுமுட்டும் பிராகிருத மனோகங்கார புத்திகளில் மறைந்து சாலம்பித் துன்மனையுற் றுபரிநிராலம்பிக்குஞ் சிவசத்திவிளக்கு விளக்கிய சிற்சாத்த மனோகங்கார புத்திவிகற்பசங்கற்ப சிற்றுவிகற்ப சவிகற்ப கருவபோத நிருவிகற்ப ஞானங்களால்—அறியாதேயறிந்து-திருச்சியமாய் நோக்காதே தடத்தலக்கண நிருமுத்த சுவரூபலக்கண சருவதிருக்கிருத்துரூப லக்ஷணபரோக்ஷ நிரீக்ஷண சிவக்குறிச்சிவரூபந்தடத் தலக்கண விலக்கண சுபரூபலக்கண பரோக்ஷ நிரீக்ஷணரூபசாத்திரியபரீக்ஷாவிலக்ஷண சூக்குமபரீக்ஷாக்குறிச்சிவதரிசனமெனுந் தசகாரியத் திருகாரியம் படுத்திப்பார்த்து—குறியாதேகுறித்து முன்சொல்லிய சாத்தமனச்சங்கற்ப முன்னைகச் சாத்தாகங்கார புத்திப் பிரவாகச் சிறப்புக் கருவபோத ஞானங்களா லியற்கையினு லனுபக்ஷ தற்பொருட் சிவக்குறிப்பினுற்றுன்; சம்புபக்ஷப் பிறபொருட் சிவசாதி விசிட்ட தற்பொருட் சிவக்குறிப்பினுற்றுன்; செயற்கையினு லாரோபித சம்புபக்ஷப் பிறபொருட் சிவக்குறிப்பினுற்றுன்; திருசியமன்றிச் சருவதிருக் கிருத்துரூபமாய் அபரோக்ஷம்போ லபிநயித்துச் சிவோகமென்றுதான்; இயற்கையினுற் சம்புபட்ச வேற்றுமைச் சிவக்குறிப் ?னுல் அப்படி சிவோயமென்றுதான்; சிவசிவவென்றுதான்; ஒன்றின் மற்றதுமொக்கப்புரிக்க வத்தியச்சிமி யருகமருவப் பொருத்திப்பண்ணுஞ் சிவத்தியானக்குறித் தசகாரியத் தொருகாரிய சிவயோகம்பண்ணி—அந்தக்கரண ... ளாடுங்கூடாதே-இடுக்குக்கொடுத்து விடுத்துத்தொடுத்துச் சிவத்திய சர்ப்படுத்துஞ் சிவத்தியானத்திற் சிறிதிடங்கண்டுதாக்கிச் சமனை பிற்சுருங்கிச் சூனியப்போலியாய்ப் போன மனதைத் திரும்பவெழுப்பித் திருப்பி விஷயத்தில்வீழ்த்துஞ் சகலத்தன்மை தொட்டுவிட்டுத் தட்டாதே—வாடாதே - திரும்பத்திரும்பி யோகநித்திராமுத்திரித மனத்தைப் பிராகிருத நித்திரையில் மூழ்குவிக்குங் கேவலத்தன்மை தாக்காதே—ருழைந்திருப்பையாகில்-தியானத்தின துற்கருஷாவத்தாரூபமாய்ஞாதிரு ஞானஞேயச் சிறப்புத் தியாதிரு தியானதேய சூனியப்போலியாய் ஞேயந்தழுந்தி அத் தேயமாத்திரத்திலங்கு ஞானச் சிறப்புத்தியானவிசேஷசமாதிபண்ணி யிருப்பையாகில்—பிரியாதசிவன்றனே-கூடுதல்பிரிதல் குறிக்கிற் குற்றமுண் டாதலால் அனுதிதொட்டுப் பிரேரகப் பிரேரியத்தன்மைச் சம்பந்தியாயிருந்த வீசுரன்றனே—பிரிந்துதோன்றி-அந்தச் சம்பந்தம் விட்டுச் சாதிரிசிய மாத்திர மித்திரசம்பந்தியாய்ச் சாக்ஷாற்கரிக்கப் பட்டு- (அதுவன்றி) பிரபஞ்சபேதமெல்லாந்தானுய்த்தோன்றி-சித்தசித்துச் சித்திரப்பொருள்கட் கெல்லாம் வியாபகமாய்த் தாரகமாய்ச்சாக்ஷாற்கரிக்கப்பட்டு—நெறியாலே - திருக்குத் திரிசியக்குறிக் குறிப்பினுலே—இவையெல்லாமல்லவாகி-இந்தத் திருக்குத் திருச்சியப் பொருள்களி னு

ன்றன்றி—நின்றும் - இருந்தும் — தோன்றிவெனிராதாரனுயே - தனக்கொரு தாரகமன்றி நிராதாரனுயிருந்துஞ் சமாதிசாமர்த்தியத்தினுலுதிக்குஞ் சாக்ஷாற்காரத்தினுற் சாக்ஷாற்கரிக்கப்படுவென். எ-று.

பரார்த்தச் சுவார்த்தார்த்த பிரத்தியர்த்த சருவார்த்தசீவன் முத்தி சிவசாக்ஷாற்காரஞ் சமாதிசாமர்த்தியத்தினுற் சித்திக்குமென்று தாற்பரியம். (௬0)

இப்படி யசத்தியோநிருவாண தீக்ஷாவானுய்ப் பின் சிவாகமக்கேள்வி முதலியவற்றுல் முறைமையின் முப்பதார்த்தவிவேக பசுத்துவ சிவத்துவவிவேக சிவஞானவானுய்ப் பின் சிவத்தியானவானுய்ப் பின் சிவசமாதிமானுய்ப் பின் சீவன்முத்திசிவசாக்ஷாற்காரவானுய்ச் சாமர்த்தியவானல்லாதிருந்தால் மரியாதி மதித்துக் கடாக்ஷிக்குஞ் சிவதீக்ஷாரூப சிவசத்தி பதிந்த ஞானுதிமுன்றி னென்றிரண்டுமூன்று மூறைமையி னுடையனுய்த்தா னிருந்தவன் சரீராந்தத்திற் சத்தியோ நிருவாண தீக்ஷாவான்போலப் பரமுத்தி சிவசாக்ஷாற்கார சிவசாநிரிசிய சிவசாயுச்சியவா னுவனென்று சாற்றுகின்றுர்.

புண்ணியமேனுேக்குவிக்கும்பாவங்கீழ்நூக்கும்
புண்ணியனைப்பூசித்தபுண்ணியத்தினுலே
நண்ணியஞானத்தினுலிரண்டினையுமறுத்து
ஞாலமொடுகீழ்மேலுநண்ணுனுகி
யெண்ணுமிகலோகத்தேமுத்திபெறுமிவன்றுன்
னெங்கெழுகோஞாயிறெமக்கென்றுகுறைவின்றிக்
கண்ணுதறனிறைவதனிற்கலந்துகாயங்
கழிந்தக்காலெங்குமாய்க்கருதரன்போனிற்பன்

இ-ள். புண்ணியமேனுேக்குவிக்கும்பாவங்கீழ்நூக்கும் புண்ணியனை—பூசித்த புண்ணியத்தினுலே-கிரியா பூசையினுலேதான் தீக்ஷாமாத்திரத்தினுலேதான்— நண்ணியஞானத்தினுல்-முன்சொல்லிய முறைமையிலடைந்த ஞானத்தியான சமாதி சீவன்முத்தி சாக்ஷாற்காரக் கூட்டப் பிரிவு ஞானபூசையினுல்—இரண்டினையுமறுத்து—புண்ணிய பாவங்களை மலத்தோடு பிரதிதினம் மரியாதியிற்போக்கி—எங்கெழுகோ ஞாயிறெமக்கென்று — எண்ணுமிகலோகத்தேமுத்திபெறுமிவன்றுன் - மதிக்கப்ப

டுஞ் சீவன்முத்தனானவன்—காயங்கழிந்தக்கால்—குறைவின்றிக்கண்ணுத றனிறைவதனிற்கலந்து - சிவசத்தி பரிபூரணத்திலொத்து வியாபித்து—ஞாலமொடுகீழ்மேலுங்கண்ணாகி — எங்குமாய்க்கருதரன்போனிற்பன்- எங்கும் வியாபியாய்த் தான்றியாணித்த சிவனுக்கொத் தெங்கும் வியாபித்துச் சருவஞ்ஞ சருவகர்த்திருரூப சிவனாயிருப்பன். எ-று. அப்படி திருமந்திரத்துஞ் சொல்லப்பட்டது.

முப்பதுமாறும்படிமுத்தியேணியா
யொப்பிலாப்பேரண்டத்துள்ளிஞெளிபுகுந்து
செப்பவரியசிவங்கண்டுநின்றவ
ரப்பரிசாகியமர்ந்துநின்றாரோ=என்றும்

இப்படி பிறபொருட் சிவசாதி விசிட்டாத்துவைத விசிட்டதற்சிவவியத்திச் சுத்தாத்துவைதஞ் சொல்லியிருக்கவும்,பிரமித்துச் சிலவிடத்து மதாந்தரப் போலிவசனந்தூக்கி யெடுத்துக்கொண்டு பிறபொருட் சிவவியத்திச் சுத்தாத்துவைதம் பிறபொருட் சிவவியத்தி விசிட்டாத்துவைதந் தான் விளம்புவோர் வேதாந்தி ராமானுச வேஷங் கொண்டு வேற்றுச் சமயிகளாவார்கள்.

சிவசாயுச்சியச் சொற்செப்புவது நிருபசரிதவைக்கியமன்று; ஏகாற்மப்பிரசங்கம்வரு மாதலால். சிவசங்யோகமு மன்று; விகாரப்பிரசங்கம் வருமாதலால். சிவசமவாயமு மன்று; ஏகாற்மப் பிரசங்கத்துக் கிடங்கொடுக்கு மாதலால். சிவதாதாற்மியமு மன்று; சமவாயத்துக்குச் சொல்லிய தூஷணம் வருமாதலால். (சிவத்துவரூபம்போ லிருப்பது சிவதாதாற்மியமென்னிற் சித்தசாதனமாம்) சிவ்லயமுமன்று; துல்லியப்பொருள் கொள்ளாதிருந்தால் விநாசப்பிரசங்கம் வருமாதலால். சிவாநந்நியமுமன்று; துல்லியப்பொருள் கொள்ளாதிருந்தால் வேதாந்த மதாந்தரமா மாதலால். சிவசாங்கரியமுமன்று;பரிணாத வேதாந்த பாஞ்சராத்திரி மதாந்தரமா மாதலால். சிவச்சுவச் சுவாமித்துவமு மன்று; பரமுத்திபங்கம் வருமாதலால்.சிவப்பிரேரகப் பிரேரியத்துவமு மன்று;சுவச்சுவாமித்துவத்துக்குச் சொன்ன தோஷம் வருமாதலால். சிவகாரண காரியத்துவமுமன்று; காரணகாரியத்துவம் பிரேரகப் பிரேரியத்துவமென்று பொருளாதலால், சுவச்சுவாமித்துவத்துக்குச் சொல்லியதோஷந்தானே வருமாதலால். சிவமேவிடக் கீழ்ப்படுதலுமன்று;விநாசதுல்லியமா மாதலால். அருக்கன் கண்களுக்குப்போற் சிவவியஞ்சக வியங்கியத்துவமன்று; பிரதிபந்தப் பிரசங்கம் வருமாதலால். சிவவியாபக வியாப்பியத்துவமு மன்று; கடத்துவாகியத்துவப் பிரசங்கம் வருமாதலால். சிவப் பிரதிவிம்பமு மன்று; சொல்லியதூஷணம் வருமாதலால். சிவகுண சங்கிராந்தியு மன்று; திருட்டாந்த

மில்லையாதலால். சிவாவேசமு மன்று; சுவாதந்திரிய சூனியம் வருமாதலால். சிவகுண சமுற்பத்தியு மன்று;அநித்தியத்துவப் பிரசங்கம் வருமாதலால். சிவாநுக்கிராகியாநுக்கிராககத்துவமு மன்று;அது வியங்கிய வியஞ்சகத்துவ மாதலாற் பிரதிபங்கப் பிரசங்கம் வருமென்று முன்றள்ளப்பட்டபடியால். சிவபோக்கிய போத்திருத்துவமு மன்று; சடப்பிரசங்கம் வருமாதலால். சிவஞாப்பிய ஞாபகத்துவமு மன்று; அப்படி திரிசியமாகிற் சடத்துவப் பிரசங்கம் வருமாதலால். சுவசங்விற் புராணாநுபாவியாநுபவி திருத்துவமு மன்று; ஏகாத்மப் பிரசங்கம் வருமாதலால். பரசங்விற் புரணோகியோகி திருத்துவமு மன்று; சருவபதார்த்த சாயுச்சியப் பிரசங்கம் வருமாதலால். சிவசாந்நித்தியமு மன்று; ஒன்றுக்கொன்று சாக்ஷாற்காரமே சாந்நித்தியமாதலால். அப்போதுசிவசாக்ஷாற்காரந்தானே யாகட்டும்;

"சர்வார்த்தபாசகஞ்ஞானஞ்சிவயோகந்துசாச்சுவதம்"

எனும் வசனத்தினுல் அதுவுமொரு திக்கினுலாம்.

ஆனுல் முடிந்தபக்ஷமெது ? சிவசாதியென்று செப்பப்படுஞ் சிவசாதிரிசியமே சிவசாயுச்சியம். ஆதிமுத்த அநாதிமுத்தனெனுஞ் சிறிது வைசாதிரிசியமிருத்தலால், முற்றுஞ் சிவசாதிரிசியஞ் சிவசாயுச்சியமென்றுசெப்பப்படாது. அப்படிசொல்லப்படாது, ஆதிமுத்தன் அநாதிமுத்தனெனுஞ் சிறிது வைசாதுரிசிய வார்த்தை மலோபாதி தொட்டுவந்த வெகிரங்க வார்த்தை யென்றும், முத்தனுக்கு அவர்ச்சநீய சங்சித்த கிருத்தியம் சிவனுக்குக் கிருபாசங்சித்த கிருத்திய மென்னும் சிறிது வேற்றுமை வார்த்தையும் வேறுகரணீய மில்லாமையா லென்றும் முற்றுஞ் சிவசாதிரிசிய மென்பதே யந்தரங்க வார்த்தை யென்றும் முடிதலான் முற்றுஞ் சிவசாதிரிசியமே சிவசாயுச்சிய மென்று சித்தாந்தஞ் சித்தித்தது.

ஆகையால் எல்லா நல்லதுதானே, சிவமுற்றுவமை, சிவைக்கிய மென்று சிலபேர்கள் செப்புவதேதுஃசத்தியம்,அது நிருபசரிதைக்கிய மன்று, உபசரிதைக்கியம் அப்படி சுருதி சொல்லியதென்று காந்தபுராணங் கழறுதலால். சிவாநந்நியத்துவமே சிவசாயுச்சியமென்று சில சிவசித்தாந்திகள் செப்பியதேது ? அது பரீக்ஷைபண்ணுது படித்தது, சிவனோடு அனன்னியத்துவமென்னுமிடத்து அன் னென்பது அன்னியப்பொருள் விருந்தப்பொருள் அபாவப்பொருள் ஆக முப்பொருட்சொல்லாதலால்; முப்பொருளுள் சிவனுக்கன்னியமாய் முத்தாத்மா வில்லையாதலாற் சிவாநந்நியனென்று அபாவப் பொருட்டொகை விரித்தர்த்தஞ் சொல்லில் விவர்த்தவேதாந்தமாம். சிவனுக் கன்னிய மலமாயாகன்மங்கட்கு விருத்தனுதலாற் சிவாநந்நியனென்று விருத்தப்பொருட்டொகை விரித்

தர்த்தஞ் சொல்விற் சிவனு மப்படியென்று சிவசதிருசனைச் செப்பப்படு வன். சிவனுக்கு அன்னிய மலமாயாகன்மங்கட் கன்னியன் விசதிருசனு தலாற் சிவாநந்யனென்று அன்னியப்பொருட் டொகைவிரித்தர் த்தஞ்சொல்லில் சிவனு மப்படி யென்று சிவசதிருசனைச் செப்பப்படு வன். இப்படி அவர்கட் கிட்ட விகாதம் பண்ணுஞ் சிவாநந்யச்சொற் சொல்லியேதுபிரயோசனம் விசேடித்துக் கட்டிக்கொண்டது. ஒன்று மில்லை; காகளசதாசிவ சாதிருச்சிய மாத்திரஞ் சிவசமவாதிமதம் அதுசித் தாந்த மன்றென்றறிந்து முற்றுஞ் சிவசாதிரிசியமே சிவசாயுச்சியமென் று சிவசித்தாந்தம் பண்ணிச் சுகியாயிரு. (கக)

தியானமூலத்து முளைத்து மந்தமாயுந் தீவிரமாயுஞ் சீவன்முத்தி சாக்ஷாற்கார பரமுத்தி சாக்ஷாற்கார பழம்பழுக்குஞ் சமாதி விருக்ஷம் வளர்த்தவன் மகிமை யிருதிருவிருத்தத்தால் வகுத்துரைக்கின் றார்.

ஞாலமதின்ஞானநிட்டையுடையோருக்கு
நன்மையொடுதீமையில்லைநாடுவதொன்றில்லை
சீலமில்லைதவமில்லைவிரதமொடாச்சிரமச்
செயலில்லைதியானமில்லைசித்தமலமில்லை
கோலமில்லைபுலனில்லைகரணமில்லை
குணமில்லைகுறியில்லைகுலமுமில்லை
பாலருடனுன்மத்தர்பிசாசர்குணமருவிப்
பாடலினோடாடலிவைபயின்றிடினும்பயில்வர். (கஉ)

தேசமிடங்காலந்திக்காசனங்களின்றிச்
செய்வதொன்றுபோற்செய்யாச்செயலதனைச்செய்தங்
கூசல்படுமனமின்றியுலாவனிற்ற
லுறக்கமுணர்வுண்டிபட்டினியிருத்தல்கிடத்தன்
மாசதனிற்றூய்மையினில்வறுமைவாழ்வில்
வருத்தத்திற்றிருத்தத்தின்மைதுனத்திற்சினத்தி
லாசையினில்வெறுப்பிலிவையல்லாதுமெல்லா
மடைந்தாலுஞானிகடாமரனடியையகலார்.

இ-ள். தேச மிடங் காலந் திக் காசனங்கள் முதலியவை தியானத் திச்சிக்கப் படுவன, சமாதியில் வேண்டுவனவன்றென்றுபொருள். மற்றது வெளிப்பொருள். (கங)

நிராகாரத் தியான சமாதி சாமர்த்திய மில்லாதான் குருக்கற்பித்த சதாசிவாதி சாகாரத் தியான சமாதி பண்ணச் சாலம்ப சிவசமாதி சாக்ஷாற்கார பூர்த்திச் சுகாநுபூதி முன்னாக ஈகமூ நிராலம்ப சிவசமாதிமானது பாசங்விற் சிற்சத்தியின்முறைமையின் முகிழ்க்கு நிராலம்ப சிவசமாதி சிற்றுப் பூர்த்திச் சுகமூ நிராலம்ப சிவஸாக்ஷாற்கார முற்றுப்பூர்த்திச் சுகமுஞ் சுவசங்விற் சிற்சத்தியின் முகிழ்க்குஞ் சுவாநுபூதியினு லனுபவிக்கப்படுமென்றறைகின்றார்.

இங்கிலைதானில்லையேலெல்லாமீச
னிடத்தினினுமீசனெல்லாவிடத்தினினுநின்ற
வங்கிலையையறிந்தந்தக்கரணங்களடக்கி
யறிவதொருகுறிகுருவினருளினலறிந்து
மன்னுசிவன்றனையடைந்துநின்றவன்றனலே
மருவுபசுகரணங்கள்சிவகரணமாகித்
துன்னியசாக்கிரமதனிற்றுரியாதீதந்
தோன்றமுயல்சிவானுபவஞ்சுவானுபூதிகமாம்

இ-ள். இங்கிலைதானில்லையேல்-நிராலம்ப சிவயோக நிலைநிற்கச் சத்திபோதாதிருந்தால்—எல்லாமீசனிடத்தினினுமீசனெல்லாவிடத்தினினுநின்றவங்கிலையையறிந்து-ஒரு பிரகார மகண்டித சகல வியாபக சிவரூபங் குருச்சொல்ல வறிந்து (தத்துவாதீத சிற்சத்திவிஷயம் புத்திகோசரமல்லவென்பதறிந்து)—அறிவதொருகுறிகுருவினருளினலறிந்து- புத்தியினுற் றியானிக்கப்படுமொருசிவவிக்கிரகங் குரு கிருபையினுற் கற்பிக்க வறிந்து—அந்தக்கரணங்கள்—அடக்கி-விஷயத்தில் விழாதுமேலெழுப்பியச்சகள சிவமுகமாக்கி—மன்னுசிவன்றனையடைந்துநின்று—மருவுபசுகரணங்கள் - அந்தவந்தக்கரணங்கள்— அவன்றனலே — (முற்சொல்லிய முறைமையிற் சுத்தவித்தை முதலியவற்றோடு கூடி) சிவகரணமாகி—(தியானித்துச் சாமாதித்துச் சாக்ஷாற்கரித்திருப்பச் சாக்கிர சாக்கிராதிக்கிரமத்தில்) துன்னியசாக்கிரமதனிற்றுரியாதீதந்தோன்ற முயல்சிவானுபவம்-நிஷ்களசிவசாக்ஷாற்கார முற்றுப்பூர்த்தி புரிக்கப்பண்ணுந் துரியசமாதிச் சிற்றுப்பூர்த்தி—சுவானுபூதிகமாம்-சுவானுபவானுபாவியமாம்.எ-று.

சீவன்முத்தி சாக்ஷாற்கார சித்திமான்முத்தித்தடைதடுப்பனென்று சாற்றுகின்றார்:—

சாக்கிரத்தேயதீதத்தைப்புரிந்தவர்களுலகிற்
சருவசங்கநிவிர்த்திவந்தபோதனர்களவர்கள்
பாக்கியத்தைப்பகர்வதுவென்னிம்மையிலேயுயிரின்
பற்றறுத்துப்பரத்தையடைபராவுசிவரன்றே
வாக்குமுடிகவித்தரசாண்டவர்களிவையரோ
டனுபவித்திங்கிருந்திடினுமகப்பற்றற்றிருப்பர்
நோக்கியிதுபுரியாதோர்புறப்பற்றற்றாலு
நுழைவர்பிறப்பினில்வினைகளுங்கிடாவே.

இ-ள். வெளிப்பொருள். (௬௫)

பசுகரணங் கழன்றவிடத்துஞ் சிவசத்திவிளக்கு விள
க்கிய சிற்சத்திக்குறிச் சிவகரணத்தினாற் சிவனை
யுந் தன்னையுஞ் சிவகரணத்திலுதிக்குஞ்சிவசாக்ஷா
த்கார பூர்த்திரசத்தையு மறிந்தனுபவிப்பன், புத்
திபோதத்தா லல்லவென்று போதிக்கின்றார்.

கருவிகழிந்தாற்காணுமொன்றுமெனிற்காணார்
காணுதார்கன்னிகைதான்காமரதங்காணுண்
மருவியிருவருமபுணரவந்தவின்பம்
வாயினாற்பேசரிதுமணந்தவுர்தாமுணர்வ
ருருவினுயிரவடிவதுவுமுணர்ந்திலைகாணசிவனை
யுணராதாருணர்வினாலுணர்வதுகற்பனைகா
ணருள்பெறிலவ்விருவரையுமறிவிறந்தங்கறிவ
ரறியாரோற்பிறப்புமறுதாணவமுமறாதே.

இ-ள். காணுதார் - (சிவகரணத்தால்) நோக்காதார்—காணார் - (பசு
கரணத்தாற் சிவரூபசிவசமாதி சிவசாக்ஷாற்கார சிற்றுப்பூர்த்தி முற்றுப்
பூர்த்திச் சுகமுதலியவற்றையுணர்ந்து) அனுபவியார்— உணர்வினாலுணர்
வது-(சுத்தவித்தை பொருந்திய சுத்ததத்துவ) புத்திபோதத்தாலறிவது—
கற்பனைகாண் - இலுத்தசரீர சதாசிவாதி மூர்த்திதானன்றே—அறிவிறந்
தங்கறிவர் - (சாலம்பசிவயோக மார்க்கத்துப்போய்) புத்திபோதங்கடந்து
(சிவனைச்சாக்ஷாற் சிவசத்தி வியத்தி சிற்சத்தி யுணர்வினால்)உணர்வர்:—
(சிவாகமானுமானாரூட சிவசத்திவியத்தி பூமிபூத சிவகரணபுத்திபோதா
னுவித்த சிற்சத்தி யுணர்வினாற் பரோக்ஷமாப் பரம்பரையாப் பார்ப்பர்)
மற்றது வெளிப்பொருள். (௬௬)

சிவ்ஞானத்தூணைச் சிவகன்ம யோகிகளல்லாச் சில சி
வங்கியதி கன்மத்துணைச் சிவஞான சிவயோகிகள்
பண்ணும் பசுத்துவ சிவத்துவ விவேகத்தை யிருந்
து மனமடக்கிப் பலப்படப் பண்ணுமவனும் பாச
முத்தி சிவத்துவாபிவியத்திமானாய்ச் சிவனோடொ
த்துத் திரும்பத் திரும்பானென்று செப்புகின்றார்.

பன்னிறங்களவைகாட்டும்படிகம்போலுள்ளம்
பலபுலன்கணிறங்காட்டும்பரிசும்பார்த்திட்
டிந்நிறங்களென்னிறமன்றென்றுதன்ற
னெழினிறங்கண்டருளினாலிந்நிறத்தின்வேறாய்ப்
பொய்ந்நிறவைம்புலனிறங்கள்பொய்யெனமெய்கண்டான்
பொருந்திடுவன்சிவத்தினொடும்போதான்பின்னை
முன்னிறைநீர்சிறைமுறியமுடுகியோடி .
முன்னீர்சேர்ந்தந்நீராய்ப்பின்னீங்காமுறைபோல்

இ-ள். பன்னிறங்களவை காட்டும்படிகம்போல் - செவ்வரத்தப்பூ முதலிய தடத்தலக்கண சிவப்புமுதலிய தன்மங்களைத் தனது சுவரூப லக்கண சுக்கிலமுதலிய தன்மங்கள்போற் றன்னிடத்திற் காண்பிக்கும் படிகக்கற்போல்—உள்ளம் -ஆத்மாத்தான்—பலபுலன்கணிறங்காட்டும்ப ரிசும்பார்த்திட்டு - ("பலபுலன்கள்" என்பது மலமுதலியவற்றைக் காண் பிக்குங் குறிப்புமொழி யாதலால்) மலமுதலிய தடத்தலக்கண பசுத்துவ சீவத்துவ முதலிய தன்மங்களைத் தனது சுவரூபலக்கண சிவத்துவமுத லிய தன்மங்கள்போலத்தன்னிடத்திற் காண்பிக்கு முறைமையுங் கண் டு—இந்நிறங்களென்னிறமன்றென்று - இப்பசுத்துவ சீவத்துவமுதலிய தடத்தலக்கணங்க ளெனது சுவரூப லக்கணங்க ளல்லவென்று—அரு ளினால் - சிவசத்தி வியத்த சிற்சத்தியால் (விவேகித்து)—தன்றனெழி னிறங்கண்டு-தனது சுவரூபலக்கண சிவத்துவ தரிசனம் பண்ணி—இந்நி றத்தின்வேறாய் - இச்சிவத்துவ லக்கண விலக்கணமாய்— "பொய்ந்நிற வைம்புலனிறங்கள்" என்பதற்கு அசத்திய வைம்புல குணங்களென்று பொருளுரைக்கின் மாயாவாதமதமா மாதலால் ஆத்மாவுக்குத் தடத்தலக் கண மாதலாற் சிவத்துவம்போற் சுவரூப லக்கணமாயுள்ளனவன்றி மல முதலிய பாசங்கட்குச் சுவரூப லக்கணமாயுள்ள பசுத்துவ சீவத்துவ மு தலிய தன்மங்கள்—பொய்யெனமெய்கண்டான்-தனக்குச் செயற்கைக் குணங்களா யுள்ளன வாகிலு மியற்கைக் குணங்களாயுள்ளன வன்றென் று மலமுதலியவற்றிற் கியற்கைக் குணங்களா யுள்ளமை யுணர்ந்தான்

(சிவத்துவ விவேகி யென்றுமாம்)—முன்னிறைநீர்—சிறைமுறிய - கட்டு விட—முடுகியோடி-விரைந்துசென்று--முன்னீர் சேர்ந்தநீராய்-சமுத்திர மடைந் தப்புநீராய் — பின்னிங்காமுறைபோல் - திரும்புந் திரும்பாத செய்திபோல—பொருந்திடுவன்சிவத்திறேடும். (அமூர்த்த விபுப்பதார்த் தங்கட்குப் பொருந்துதல் பிரிதல் கலத்தல் போதிப்பது நீதியன்றாத லால்) சிவத்திறேடு - (தாதாற்மிய சம்பந்தத்தாற் றனது) சிவத்துவத் தோடு சாதிரிச்சிய சம்பந்தத்தாற் சிவனோடு சம்பந்திப்பன்—போதான் பின்னை - பசுத்துவசிவத்துவமுத லுபாதிப்படான். எ-று.

நீருப்புச்சோபாது. சிவத்துவ நிருபாதி. நீர்போயுப்புப்பொருந்துஞ் சித் திருந்தபடி யிருந்து சிவத்துவ மிசையுமாதலான் முற்றுவமையன்று; திரும்பத் திரும்பானென்று திருட்டாந்தம், (௬௭)

ஆசாரியரு முன்வாக்கில் வாசனையாற் புறப்படும் "பொருந்திடுவன்சிவத்திறேடு" என்பது பொ ருது சுவாயம்புவத்திற் சொல்லியபடி பசுத்தன் மை மறையத் தன்பதித்தன்மைவிளக்கத்தோடு பதிவெளியா யறிவில் விளங்குவதெ பொருந்துவ தென்று போதிக்கின்றார்.

எங்குந்தானென்னினுமெய்தவேண்டா
வெங்குமிலனென்னில்வேறிறையுமல்ல
னங்கஞ்சேருயிர்போல்வனெங்குமங்கத்
தவயவங்கள்கண்போலக்காணுவான்மா
விங்குநாமியம்புந்தத்துவங்களின்வைத்தறித
லிறைஞானந்தந்துதாளீதல்சுடரிழந்த
துங்கவிழிச்சோதியுமுட்சோதியும்பெற்றாற்போற்
சோதிக்குட்சோதியாய்த்தோன்றிடுவன்காணே.

இ-ள். எங்குந்தானென்னில்-சிவன் சித்தசித்துப் பிரபஞ்சமெல்லாம் வியாபியாயிருப்ப னென்னில்—நாமெய்தவேண்டா - (ஆற்றினீர் சமுத் திரத்திற் சென்று கூடுவதுபோ லவனை) நாஞ்சென்றுகூடவேண்டுவதில் லை—வேறெங்குமிலனென்னில் - (சருவத்தையு மறிதல் பண்ணுதல் கூ டாதாகையால்)—இறையுமல்லன்-சருவ சகற்கர்த்தாவு மல்லனாய் விடு வன்—(உம்மையாற்-சருவகர்த்திருத்துவ மில்லாமையாற் சருவஞ்ஞனு மல்லாதே போவன். பின்னவனை யடைவதில்லை யென்னில் அறிவது தியானிப்பது சமாதிப்பது சாக்ஷாற்கரிப்ப தெப்படியென்னில் அந்தச் சிவன்) எங்கும்-தனக்குச்சரீரம்போலுபசரிக்கப்படுஞ் சித் தசித்துப்பிரப

ஞ்சமெல்லாவற்றிலும்—அங்கஞ்சேருயிர்போல்வன்-இயற்கையினூற் சருவவியாபியா யிருந்தாலு மலவிருளுபாதிச் செயற்கையினூற் றனது சரீரவிளக்குப் பொருந்திய வவ்வளவில் ஞானமுண்டாகையா லவ்வளவுவியாபகனென் றுபசரிக்கப்பட்ட வான்மா வொப்பன்—அங்கத்தவயவங்கள்—(அந்தவான்மாப்பொருந்திய) சரீரத்துறுப்புக்கள்—கண்போல-நேத்திரமாகிய வுறுப்புப்போல—காணுவாகும்-(கண்ணேகாணும் அப்படியே சிவன் பொருந்திய சித்தசித்துப் பிரபஞ்சமாகிய சரீரத்துறுப்புக்கள் ஆத்மசிற்சத்திக்குறி பொறித்த சிற்கண்ணுறுப்புப்போல்)—அறியாவாகும்(ஆத்மசிற்சத்திக்குறிபொறித்த சிற்கண்ணுறுப்பேகாணும்; ஆகையால் "ஆத்மா" குறிப்புமொழியாதலால் ஆத்மசிற்சத்திக்குறி பொறித்த சிற்கண்ணனது) இருகுநாமியம்புந்தத்துவங்களின்வைத்தறிதல் - இந்தச்சாத்திரத்தில் நாமுன்சொல்லிய போக்கியப்பொருளை யறியும்போது பசுகரணமாயிருந்தாலுஞ் சகளசிவனை யறியும்போது சிவகரணமா யிருக்கின்ற புத்திமுதலிய தத்துவங்கள் காட்டாகப் பண்ணும் பதிஞானக்குறிபொறித்தவோருணர்தல் (ஈதொருசோதி)—இறைஞானந் தந்துதாவீதல் - தாள் - தத்துவாதீதமாகிய சிவசத்தி—இறைஞானந்தந்து - கருவிப்பதிஞானக்குறிபொறித்த சிற்சத்தியை விளக்கி—ஈதல்-தொழிற்பதிஞானக்குறிபொறித்துக்கொடுக்கவறிதல் (ஈதொருசோதியிந்தவிருசோதியும் பெற்றது)—சுடரிழந்ததுங்கவிழி-ஒளிமறைந்த பொறியரசுக் கண்—சோதியுமுட்சோதியும்பெற்றூற்போல்-புறவொளியு முள்ளொளியு முற்றதொப்ப—சோதிக்குட்சோதியாய்த்தோன்றிடுவன்காணே-சோதிக்குள் (உட்சோதிக்கென்றுமாறுக) சொல்லிய வாத்மசிற்சத்தியி னந்தரங்க நிருபாதிக சோதிக்குள்—சோதியாய்-நிட்களனுய்—தோன்றிடுவன்காணே - கிரிசியமன்றித்திருக்குருபியாய்த்) திரிசியன்றூனேயாவன். எ-று.

சோதிக்குள - சிவசத்திக்குள் — தோன்றிடுவன் - விளங்குவனென்றுசிலபேருரை. பராக்குருபியாகிய சிவசத்தியிற் சிவன்றூன்றுவனுகிற் சிவசத்திக்கன்னியமாய் விடுவனென்பதுமுதற் றூஷணம் பிரமாணப் பிரசங்கத்திற் பேசியதறிக; அதுவன்றி யெடுத்தன் முடித்த லிசையாது பகைக்கும்; பார்ப்பவன் பலப்பிரமிதியன்றிப் பிறர்பிரமாணப் பிரமிதி பலமுமாம். (௬அ)

ஞானத்தியான சமாதிசஞ்சல சிவன்முத்தி சாக்ஷாற்
கார சமயமாத்திரத்தின் மலமுதலியபாசம் பறியும்
அவைவருலேயிற் பரக்கு மென்று பாஷிக்கின்றூர்.

பாசிபடுகுட்டத்திற்கல்லினைவிட்டெறியப்
படும்பொழுதுநீங்குமதுவிடும்பொழுதிற்பரக்கு

மாசுபடுமலமாயையருங்கன்மமனைத்து
  மரணடியையுணரும்போதகலும்பின்னணையு
நேசமொடுந்திருவடிக்கீழ்நீங்காதேதூங்கு
  நினைவுடையோர்நின்றிடுவர்நிலையிதுவேயாகு
மாசையொடுமெங்குமிங்குமாகியலம்வருவோ
  ரரும்பாசமறுக்கும்வகையருளின்வழியுரைப்பாம்.

இ-ள். "அருளின்வழி" என்பது அருள்தரு மாகமமார்க்கத்தால். மற்றது வெளிப்பொருள். எ-று.

எட்டாஞ் சூத்திரம்
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - உகரு.

---

# ஒன்பதாஞ் சூத்திரம்.

---

முன்சொல்லிய சமாதிநிலை குலைந்தாற் பின்கூடுமுபாயங் கூறுகின்றார்.

பாசஞானத்தாலும்பசுஞானத்தாலும
  பார்ப்பரியபரம்பரனைப்பதிஞானத்தாலே
நேசமொடுமுள்ளத்தேநாடிப்பாத
  நீழற்கீழ்நில்லாதேநீங்கிப்போதி
ளைசைதருமுலகமெல்லாமலகைத்தேராமென்
  றறிந்தகலவந்நிலையேயாகும்பின்னு
மோசைதருமஞ்செழுத்தைவிதிப்படியுச்சரிக்க
  வுள்ளத்தேபுகுந்தளிப்பனூனமெலாமோட.

இ-ள். பாசஞானத்தாலும் - புத்தியாதி தத்துவதாத்துவிக விருத்தி ஞானத்தினாலும்—பசுஞானத்தாலும - பாசவிருத்தி விளக்கிய வாத்ம சிற்சத்தி விருத்தி ஞானத்தினாலும், பிரமம்நானென்னாது நான்பிரம மென்னும் பசுவாசனை தாக்கும் வியர்த்த வியர்ன ஞானத்தினாலும்—பார்ப்பரிய பரம்பரனை-காணுதற்கரிய செயற்கைச் சிவகரணமாகிய பாசஞானவிஷய சகள சதாசிவாதீத நிஷ்கள பரசிவனை—பதிஞானத்தாலே நேசமொடுமுள்ளத்தே நாடிப்பாதநீழற்கீழ்நில்லாதே நீங்கிப்போதின் - ஆத்மாவிற்

சாக்ஷாற் சிவசத்தியால் விளங்கிய சிற்சத்தி விருத்திப் பதிஞானத்தாற் றாமாத்திய மரியாதியி லறிந்து தியானித்துச் சமாதித்துச் சாக்ஷாற்கரித்துச் சிவசததிப் பிரபை தாரகமா யிராது விட்டுப் போதில்—ஆசைதரு மூலகமெல்லாமலகைத் தேராமென்றறிந் தகலவங்கிலேயேயாகும் - பிரதி பந்தமாயிருக்கும் பிரபஞ்சமனைத்துங் கானல்போற் பொய்போலத் தோற்று மாயாகார நிராகாரமாய்நோக்கத் திரும்பச்சமாதிநிலை தானேயாம்— பின்னும்-அதுவன்றியும்—ஓசைதருமஞ்செழுத்தை—விதிப்படியுச்சரிக்க• சிவமுதல் நமவீறாகச் செபிக்க—ஊனமெலாமோட-நமபதார்த்த பாசம் பறிய (விஞ்சிநின்ற)—உள்ளத்தே - (சுத்த பஞ்சாக்கரத்தினடுவெழுத்துளாக்கும்) சின்மாத்திராத்மாவிலே—புகுந்து - (முதலெழுத்துளாக்கும் பரத்தைப்)பதித்து—அளிப்பன்-(ஈற்றெழுத்துளாக்குஞ் சிவத்தை) இணக்குவன். எ-று. (௧)

சிவப பிரமாணமாய்ச் சுத்தகோடியிற் பிரவேசிக்குஞ் சிவாகம மந்தமாஞ் சாத்திரங்களும் பிராசாத மந்திர மந்தமாம் மந்திரங்களுஞ் சிவதத்துவ மந்தமாந்தத்துவங்களுந் தத்துவமுதலியவற்றின் விருத்திகளும் பாசஞானமென்றும் நான் பிரமமென்னு ஞானமுதலிய ஞானம் பசுஞானமென்றும் படிக்கின்றார்.

வேதசாத்திரமிருதிபுராணகலைஞானம
 விரும்பசவைவைகரியாதித்திறங்கண்மேலா
நாதமுடிவானவெலாம்பாசஞான
 நணுகியான்மாவிவைகீழ்நாடலாலே
'காதலினானான்பிரமமென்னுஞானங்
 கருதுபசுஞானமிவனுடலிற்கட்டுண
டோதியுணாந்தொன்றென்றாயுணர்ந்திடலாற்பசுவா
 மொன்றாகச்சிவனியல்பினுணர்ந்திடுவன்காணே.

இ-ள். இவைநணுகியாத்மாக்கீழ்எனமாறுக. அந்தப் பசுவானவன்— சிவனியல்பின்-சிவத்துவம் பெற்றகாலத்திற் பதியாய்—ஒன்றாக - உள்ளபடி யொருமிக்க வெல்லாப் பொருள்களையும்—உணர்ந்திடுவன்காணே- அறிவனானே. சிவ னென்றாக வியல்பிலுணர்ந்திடுவனே யென்றுரைாகலுமாம். மற்றது வெளிப்பொருள். எ-று. (உ)

அந்தக்கரணவிருத்தி சமூலநிவர்த்தியே சமாதியு முத்தியுந் தற்பொருளறிவு பிறபொருளறிவு முகிழ்க்

குஞ் சுவவேதன சிவவேதனுதி வியத்தி வேண்டி யதில்லையெனும் பாஷாணவாதி முதலோர்மதம் பாஷித்துத் தூஷிக்கின்றார்.

கரணங்கள்கெடவிருக்கைமுத்தியாமென்னிற்
கதியாகுஞ்சினைமுட்டைகருமாத்தினுயிர்கணா
மரணங்கொண்டிடவுறங்கமயங்கிமூர்ச்சிக்க
வாயுத்தம்பனைபண்ணவல்விடத்தையடையச்
சரணங்கள்புகுமிழற்போற்றனையடையுஞ்சமாதி
தவிராதுமலமிதுவும்பசுஞானமாகு
மரணங்களெரித்தவன்றனடியையறிவிறந்தங்
கறிந்திடீர்செறிந்ததுகளகற்றிடவே.

இ-ள். வெளிப்பொருள். (௩)

சாக்ஷாற் சிவசத்திவிளக்கு விளக்கிய சிற்சத்திக்குறிப் பதிஞானத்தாற் சிவாத்மசொரூபந் தெரியுமென்று செப்புகின்றார்.

சிவனையவன்றிருவடிஞானத்தாற்சேரச்
செப்புவதுசெயல்வாக்குச்சிந்தையெல்லா
மவனையணுகாவென்றுமாதலானு
மவனடியவ்வொளிஞானமாதலானு
மிவனுமியான்றுவக்குதிரமிறைச்சிமேதை
யென்புமச்சைசுக்கிலமோவிந்திரியக்கொத்தோ
வவமகலவெனையறியேனெனுமையமகல
வடிகாட்டியான்மாவ்வக்காட்டலானும்

இ-ள். வெளிப்பொருள். அடுத்தடுத்துச் சொல்லியது சொல்லிற் கூறியது கூறலெனுங் குற்றம் வாராதோ? வாராது சமாதி திடம்பிறக்கும்படி சாற்றியதாதலால். (௪)

சொல்லிய பதிஞானமே சிவமுதலிய திரிபதார்த்தங் காணுங்கண். கண்முதலியவற்றிற்குக் கண்ணென்பது கண்ணுக்குபகாரம்பண்ணுதலாற் கண்ணென்று உபசரிக்கப்பட்டதென்று காண்பிக்கின்றார்.

கண்டிடுங்கண்டனைக்காணுகரணங்காணு
கரணங்கடமைக்காணுவுயிருங்காணு

வுண்டியமருயிர்தானுந்தன்னைக்காணு
துயிர்க்குயிராமொருவனையுங்காணுதாகுங
கண்டசிவன்றனைக்காட்டியுயிருங்காட்டிக்
கண்ணாகிக்கரணங்கள்காணுகிற்பன்
கொண்டரனையுளத்திற்கணடடிகூடிற்பாசங்
கூடாதுகூடிடினுங்குறித்தடியினிறுத்தே.

இ-ள். கரணங்காணு-கரணங்களைக் காணு—உயிருங்காணு-உயிரையுங்காணு—கண்டசிவன்-இவையெல்லாவற்றையும்பிரத்தியக்ஷமாய்ப்பார்க்குஞ் சிவன்—தனைக்காட்டி - (தனக்கியற்கைக்கண்ணாகி யுயிருக்குச் செயற்கைக்கண்ணாகிய தனது சத்தியின லுயிர்க்கியற்கைக் கண்ணாகிய சிற்சத்தியை விளக்கி) தனதுசுவரூபத்தை(யுயிர்க்குக்)காண்பித்து—உயிருங்காட்டி-உயிர்க்குயிர்ச்சுவரூபத்தையுங் காண்பித்து—கண்ணாகி-(உயிர்க்கியற்கைக்கண்ணாகிய சிற்சத்திவியஞ்சகதன்சத்தி சமவாயசம்பந்தத்தாலுயிரைக்குறித்துபசரித செயற்கைக்)கண்ணாகி—காணு-காணுமல்—அடிகூடில் - சிவசத்திக்கொப்பச் சிற்சத்திக்கண்ணைத் திறந்தொளிபரப்பித் தியானிக்கில்—குறித்தடியினிறுத்தே-(திரும்பப் பாசநீங்கும்படி) சிவசிந்தனைபண்ணிச் (செப்பியபடி) சிவசத்தி தாரகமாகத்தானே நில். மற்றது வெளிப்பொருள். (௫)

அப்படி தியானம்பண்ணிச் சிவசத்திதாரகமாய் நின்று செய்வதுரைக்கின்ருர்.

குறித்தடியினின்றட்டகுணமெட்டுச்சித்தி
கோகனதன்முதல்வாழ்வுகுலவுபதமெல்லாம்
வெறுத்துநெறியறுவகையுமேலொடுகீழடங்க
வெறும்பொய்யெனநினைந்திருக்கமேலொடுகீழில்லா
னிறுத்துவதோர்குணமில்லான்றன்மையொருவருக்கு
நினைப்பரியானென்றுமிலானேர்படவந்துள்ளே
பொறுப்பரியபேரன்பையருளியதன்வழியே
புகுந்திடுவனெங்குமிலாப்போகத்தைப்புரிந்தே.

இ-ள். நெறியறுவகையும் - ஆறத்துவாவும்—வெறும்பொய்யென - அசத்தியம்போற் காணு மகண்டிதமாக—புகுந்து-விளங்கி—போகத்தை-சிவத்துவவிளக்கமாகுஞ் சிவானந்தப்பெயர்ச் சிவபோகத்தை. மற்றது வெளிபபொருள். எ-று. (௬)

சிவபோகநிமித்தமாகுஞ் சூலைந்த சிவசமாதிகூடுமப்பொ
ருட்டுப் பிரபஞ்சம் பொய்யென நினைந்திருத்தன்
மாத்திரம் போதுமோவென்னச் சித்தாந்தசிவோ
கம்பாவனைத் தீபக வேதாந்த சோகம்பாவனைவே
ண்டுமென்று விளம்புகின்றார்.

கண்டவிவையல்லேனானென்றகன்றுகாணாக்
கழிபரமுநானல்லேனெனக்கருதிக்கசிந்த
தொண்டினொடுமுளத்தவன்றானின்றகலப்பாலே
சோகமெனப்பாவிக்கத்தோன்றுவன்வேறின்றி
விண்டகலுமலங்களெல்லாங்கருடதியானத்தால்
விடமொழியுமதுபோலவிமலதையுமடையும்
பண்டைமறைகளுமதுநானேனென்று
பாவிக்கச்சொல்லுவதிப்பாவகத்தைக்காணே.

இ-ள். கண்டவிவை - தேகாதிப்பிரபஞ்சந்தாக்கிவாச்சியப்பொரு ளாய்மயங்கி யிருக்குங் குருலிங்கசங்மாதிகள்—அல்லேனான் - (நித்திய நிலையங்குலையுங் கண்டிதவடிவத் தடத்தலக்கணமுற்ற வயமிதம்பத வாச் சியப்பொருளாய்ச் சாலம்பசிவயோக விஷயமாய்த் தடத்தலக்கண சிவப தவாச்சியப்பொருட் சிவக்குறிபொறிக்கு மிடமாதலானும், வாச்சியப் பொருள்விட் டிலக்கியப்பொருட் சுவரூபலக்கண சிற்பரமிரண்டு மெடுத் துத் தொடுத்துரைத்தாலுஞ் சிவோயஞ் சிவமிதமென்று படர்க்கைப்பொ ருட் சுவரூபலக்கண சிவப்பொருளாய்ப் பாவிக்கப்பட்டுச் சிவோகமென் றுதன்மைப்பொருட் சிவப்பொருளாய்த் தியானிக்கக் கிட்டித்தட்டாதாத லானும், அகம்பதத்தில் வாச்சியப்பொருட் டடத்தலக்கணத் தன்மைப் பொருட் பூதாத்மாதி மந்திராத்மாந்த பஞ்சாத்மாக்குறி தாண்டிச் சிட்ட விலக்கியப்பொருட் சுவரூபலக்கணத் தன்மைப்பொருட் சின்மாத்திராத் மாவாய்ச் சிவபதத்தில் வாச்சியப்பொருட் டடத்தலக்கணத் தன்மைப் பொருட் பிரமாதி சாங்க சதாசிவாந்த பஞ்சேசுரக்குறி தாண்டிச் சிட்ட விலக்கியப்பொருட் சுவரூபலக்கணத் தன்மைப்பொருட் பரக்குறி பதித் துப்பின் அச்சிமிபதத்தில் வாச்சியப்பொருட் டடத்தலக்கணத் தன்மை ப்பொருட் டியானசமாதியுபாதியுற்ற சின்மாத்திராத்மாக்குறி பரக்குறி தாண்டிச் சிட்டவிலக்கியப்பொருட் சுவரூபலக்கணத் தன்மைப்பொருட் சிவக்குறிபொறிக்கப் பாத்திரவானுகையால்) நானல்ல—என்றகன்று- (பஞ்சவிதசாலம்ப சிவயோக மார்க்கத் தொருமார்க்கத்தான் முப்பதவாச் சியப்பொருள் கடந் துன்மனையுற்று) —காணுக்கழிபரமும்-பரோக்ஷவநா திமுத்தபரசிவமும்—நானல்லேன் - (படர்க்கைப் பொருளாதலாற் றன்

மைப்பொருளாகிய)நானல்ல—எனக்கருதி-(கருதி=சிந்தித்து)(சிவோயஞ்
சிவமிதமென்று சிந்திக்கலாஞ் சிவோகமென்று சிந்திக்கப்படாது ஆரோபி
மாயப்படியுஞ் சிந்திக்கலாம்) என்றுஞ் சிந்தித்து—கசிந்ததொண்டினொடு
முளைத்தவன்றானின்றகலப்பாலே-உளத்து - ஆத்மாவில்— தொண்டினொ
டும்-(சமய,விசேஷயிற் சைவர் செயற்கையாப் பாவிக்கு மியற்கையாய்
வயிட்டிணவ ரெப்போதும்பாவிக்கும்) தாசோகம்பாவனா வாசனையோடு-
அவன்றான்-சிவன்றான்—நின்றகலப்பாலே-நிலைபெற்ற சாங்கரியத்தாலே
(சிவோகமென்று சிறப்பித்துச் சிந்திக்கப்படான் எவப்படுந் தாசத்தன்மை
யுமேவுஞ்சிவத்தன்மையும் என்மாதா மலடியென்பதுபோற் பகைத்தேசி
பவித்துப் பாவிக்கப்படா தாகையால். ஆகிலெப்படி?)—சோகமெனப்பா
விக்க-(இரண்டுங்கெட்ட வயிட்டிணவ தாசோகம்பாவனா வாசனை துடை
த்துச் சித்தாந்தச் சிறப்புச் சிவோகம் பாவனைத் தீபக வேதாந்தப்பொதுச்
சோகம் பாவனை யச்சிமி யந்தத்தணைத்துச்) சோகமென்றுபண்ண—தோ
ன்றுவன்வேறின்றி. (தாசோகம் பாவனா வாசனை தள்ளி யந்தத் தச்சிமி
யணைத்துச் சித்தாந்தச் சிறப்புச் சிவோகம் பாவனை பண்ணப் பண்ணிக்
குறியொப்பித்து) வேற்றுக்குறியின்றி (சீவன்முத்தியிற் சமாதிமுற்றிச்)
சாக்ஷாற்கரிக்கப்படுவன். (நீரிப்போது செப்பியது செப்பமல்லச் சுவரூ
பசிவபாவனை சத்தியமானதுபோ லாரோபித சிவரூபசிவபாவனை சத்திய
மன்று அசத்தியமே; அசத்திய மெப்படி பலங்கொடுக்கும்? சத்தியம்,
நீசாற்றியது; முத்திசெய் சிவாவிர்ப்பாவ பாத்திர பாவனை யாதலாற் சத்
திய சிவபாவனையினாற் போல அசத்திய சிவபாவனையினாலும்) — கருட
தியானத்தால் விடமொழியுமதுபோலமலங்களெல்லாம்—விண்டகலும்-
பிரியாது பிரிந்து நீங்காது நீங்கும்—விமலதையுமடையும் - சிவத்துவா
பிவியத்தியுந் திதத்தாபிதமாம். ("விண்டகலும்" என்பதனான் முத்தி
பலமும் "விமலதையுமடையும்" என்பதனால் வியத்திபலமும் விளம்பப்
பட்டது. "தொண்டினொடும்" என்பதனை "நின்றகலப்பாலே" என்ப
தோடு விசேடியாமற் சிலபேர் "பாவிக்க" என்பதொடுபடுத்தி விசேடித்
தார்கள். அவர்கள் சிவோகத்தாசனென்றுசிந்திப்பார்களாய் மன்மாதா
வந்தியையென்றும் வழக்குரைப்பார்கள்) — பண்டைமறைகளும்-பிரவா
காநாதிசுருதிகளும்(உம்மையினாற் சிறிதிடத்துச் சிவாகமங்களும்)—அது
நானேனென்றுபாவிக்கச்சொல்லுவது-ததகமென்று தியானிக்கச் செ
ப்புவது—இப்பாவகத்தைக்காணே-இச் சிவோகம்பாவனைத் தீபக சோக
ம்பாவனையைத்தானே. எ-று.

சோகமென்பது பரோக்ஷாபரோக்ஷப்பகைப்பொருளைக்கியப்பிரா
ந்தியாகையால்

"தாசோகமிதிசம்போகச்சோகமிதிப்பரிப்பிரமம்
அகமேவபரிப்பிராந்திதச்சுமாத்திறினிபரித்தேசெற்॥"

என்று

சிலசிவாகமத்திற் றள்ளியிருத்தலால் அப்படி சிவோகம்பாவனையே

பகையாமற் பாவிக்கப்படுமென்று படித்திருந்தாலுஞ் சோயந்தேவதத்த னென்பதுபோற் சுருதிச்சொற் சித்தவிவேகத்தினாற் சிவோகம்பாவனைத் தீபகமாகச் சோகமென்றும் ஒருவழி சொல்லலாமென்று தாற்பரியம். ()

இந்நிலையுங் கூடாதோர்க்குச் சுத்தபஞ்சாக்கரத் துவாரத்தினாற் சிவோகம்பாவனைத் தீபகமாகு மஞ்செழுத்துச் செப மறைகின்றார்.

அஞ்செழுத்தாலான்மாவுமரனுடையபரிசு
மரனுருவுமஞ்செழுத்தாலமைந்தமையுமறிந்திட்
டஞ்செழுத்தாலங்ககரநியாசம்பண்ணி
யான்மாவினஞ்செழுத்தாலிதயத்தர்ச்சித்
தஞ்செழுத்தாற்குண்டலியினனலேயோமபி
யணைவரியகோதண்டமடைந்தருளின்வழிநின்
றஞ்செழுத்தைவிதிப்படியுச்சரிக்கமதியருக்க
னணையரவம்போற்றோன்றுமான்மாவிலரனே.

இ-ள். அஞ்செழுத்தாலான்மாவுமரனுடையபரிசும் - (மறைஞானதேசிகர் விரித்துரைத்தபடி) யகார 1மாத்மாச் சிகாரஞ் சிவமென்பதுமுதன் முறையும்—அரனுருவுமஞ்செழுத்தாலமைந்தமையும் - சிகாரமகாரமென்பது முதன் முறைமையிற் சதாசிவாதி ரூபமுற்றதும்—அறிந்திட்டு—அஞ்செழுத்தாலங்ககரநியாசம்பண்ணி - (கனிட்டாதி யங்குட்டாந்தங்களில்)யகாராதியாகக்(கரநியாசமும் பாதாதி மூர்த்தாந்தங்களில்) நகாராதியாக வங்கநியாசமும் பண்ணி—குண்டலியின்-நாபித்தானத்தில். கோதண்டம் - புருவமத்தியம். மற்றதுவெளிப்பொருள். எ-று. (௯)

இருதயத் தர்ச்சனைப்பிரகார மறைகின்றார்.

நாட்டுமிதயந்தானுநாபிதனிலடியாய்
ஞாலமுதற்றத்துவத்தாலெண்விரனாளத்தாய்
மூட்டுமோகினிசுத்தவித்தைமலமொட்டாய்
முழுவிதழெட்டக்கரங்கண்முறைமையினினுடைத்தாய்
காட்டுகமலாசனமேலீசர்சதாசிவங்கள் [க்
கலாமூர்த்தமாமிவற்றின்கண்ணாகுஞ்சத்தி
வீட்டையருள்சிவன்மூர்த்திமானாகிச்சத்தி
மேலாகிநிற்பனிந்தவிளைவறிந்துபோற்றே.

இ-ள். நாட்டும்—இதயந்தானும் - இருதயகமலமும்—நாபிதனில்—அடியாய்-கந்தமாய்—ஞாலமுதற்றத்துவத்தாலெண்விரனாளத்தாய் — மூ

ட்டுமோகினி-புறவிதழ்முடிச்சுமாயை—சுத்தவித்தைமலர்-சுத்தவித்தியா தத்துவமுட்பற்மாசனம்—(ஈசுரதத்துவமாகிய)முழுவிதழெட்டாய்—(ஓம் நமச்சிவாயநமவென்னும்)எட்டக்கரங்கள்—முறைமையினினுடையதாய் —காட்டுகமலாசனமேல்-காண்பிக்கப்பட்ட பற்மாசனப் பொகுட்டில்— (சாந்தியாதி நிவிர்த்தியந்தசதுட்கலாசத்திமண்டலத்திற் சாந்தியாதீதகலா ரூபசிவமண்டல மந்தர்ப்பவிக்குமாதலால்) ஈசர்சதாசிவங்கள்-அனந்தாதி யதிட்டாதாக்களாஞ் சம்புவீசுரர்கள் (உருத்திரசதாசிவ ரொருவருமே லிங்கத்துப் பூச்சியராதலாற் கலேசுர சதாசிவமுதற் சதாசிவாதிகளு மா சனத் தந்தர்ப்பவிப்பார்கள்)—இவற்றின்கண்ணுருஞ்சத்தி - சிவாசனத்தி டத்துச் சாந்தியதீதகலாக்கொழுந்தா மிந்திகாதி நாதகலாசமட்டி லிங்கா திட்டாயக வீசானிமுதன் மூர்த்தியீருருஞ் சத்தி சமட்டிக்குறிச் சத்தி— கலாமூர்த்தமாம்-அட்டத்திறிங்சற் கலாகற்பித சதாசிவதேகமாம்—வீட் டையருள்சிவன்—அதிகாராவத்தாரூட பரசிவன்—மூர்த்திமானுகி-தேகி யாகி—சத்திமேலாகி - தேகத்துக்குட் சிவனுய்—நிற்பன் - இருப்பன்— இந்தவிளைவறிந்துபோற்றே - இச்செய்தி யுணர்ந்து பூசிப்பாயாக. எ-று.()

இவ்வந்தரியாகமு மொருவழி யாத்மசுத்திமுன்னுகப் பின் பண்ணப்பட்டுச் சாலம்ப சிவயோக மூலமாத லாற் சாலம்ப சிவயோக மார்க்கத்தாற் சமனுந் தம்போய்ச் சமனுந்தமுற்றுப் பாசமுத்தி நிரால ம்ப சிவயோக பாத்திர சின்மாத்திராத்ம சித்திக் குறி யாத்மசுத்தியா மதனுற் சாலம்பசிவயோக மவலம்பித் தந்தத்து நிராலம்பித்து நிராலம்ப சிவ யோகம் பண்ணப் பரமுத்தியாமென்று பகர்கின் ருர்.

அந்தரியாகந்தன்னைமுத்திசாதனமா
யறைந்திடுவாதுதானுமான்மசுத்தியாகுங்
கந்தமலர்புகையொளிமஞ்சனமமுதுமுதலாக்
கண்டனவெல்லாமனத்தாற்கருதிக்கொண்டு
சிந்தையினிற்பூசித்துச்சிவனைஞானத்தாற்
சிந்திக்கச்சிந்திக்கத்தர்ப்பணத்தைவிளக்க
வந்திடுமவ்வொளிபோலமருவியரனுளத்தே
வரவரவந்திடுவன்பின்மலமானதறுமே

இ-ள். ஞானத்தால் - (முன்னு மிப்போதுஞ்சொல்லிய வழிபோய் முன்சொல்லியபடிதா னிருதயத்திருந்துதா னிராலம்பித்துப்பண்ணும்)நி ராலம்ப சிவதியானத்தால்—சிந்திக்கச்சிந்திக்க - தியானிக்கத் தியானி

க்க (தியானமுற்றுஞ் சிவசமாதியால்)—மருவியரனுனத்தேவரவர-சிவன் ஆத்மசிற்சத்தியின்கண் சானித்தியனாகச் சானித்தியனாக—மலமான தறுமே-மலமுத்திவருமே—பின் தர்ப்பணத்தைவிளக்கவந்திடுமவ்வொளி போல—(ஆன்மா) வந்திடுவன் - சிவத்துவாபிவியத்திமானுவன். வந்திடு மவ்வொளிபோல வொளிவரவர மருவியரன் வந்திடுவன் மலமானதறு மெனவுரையுரைத்தாற் காரியமுந்துதலுங் காரணம்பிந்துதலும் வியத்தி முந்துதலு முத்திபிந்துதலுமாய் முறைமைமத்தப்புவரும். வந்திடு மவ்வொ ளிபோல மருவியரன் வந்திடுவனென்றாலுந் திருட்டாந்த விரோதமா மா தலாலு மப்படியுரைப்பதன்று. மற்றது வெளிப்பொருள் எ-று. (கக)

சதாசமாதிநிட்டனுக்குச் சமாதிகுலைந்து சற்று மனச் சஞ்சலம் வந்தகாலத்துப் புறப்பூசையும் பூசிக்க வேண்டியதென்று புகல்கின்றார்.

புறமபேயுமரன்கழல்கள்பூசிக்கவேண்டிற்
பூமரத்தின்கீழ்விழுந்தபோதுகளுங்கொண்டு
சிறந்தாருஞ்சீர்ச்சிவனைஞானத்தாலங்குச்
சிந்திக்கும்படியிங்குஞ்சிந்தித்துப்போற்றி
யறம்பாவங்கட்குநாமென்கடவோமென்றே
யாண்டவனைக்கண்டக்காலகம்புறமென்னுதே
திறம்பாதேபணிசெய்துநிற்கையன்றோ
சீரடியார்தம்முடையசெய்திதானே

இ-ள். ஞானத்தால்-நிராலம்ப சிவத்தியானத்தால்—அங்கு-நிரால ம்ப சிவயோகத்தில்—இங்கும்-முன்சொல்லிய கலாமூர்த்தமாகக் கற்பிக் கப்பட்ட சிவலிங்கத்திலும்— (நிராகாரமா யுயிருக்குயிராய்) சிந்தித்துப் போற்றி-தியானித்துப் பூசித்து "ஆண்டவனை" என்றது பூசாகாலத்திற் பூச்சிய பூசகத்தன்மையாலுரைத்தது; சமாதிகாலத்திற் சுவதந்திரமா யொப்பாக வொப்பிக்கு நிராலம்ப சிவத்தியானத்தின் முளைக்குஞ் சமாதி யிற் சாற்றப்படாது

"நாஸ்திபூசாநமஸ்காரோநசபோத்தியாநமேவச
கேவலம்ஞேயமித்தியுத்தங்வேதிதவ்வியம்நகிஞ்சன"

என்று

தேவிகாலோத்தரத் திருத்தலால். மற்றதுவெளிப்பொருள்.

தேவிகாலோத்தரத் துரைத்த ஞானசாரமுற்று முற்று உலோகாசா ரப் பற்றுமுற்று மற்றவர்க்கே பஞ்சாக்கரமாத்திரத்தா லங்ககரநியாசம தனு லந்தரியாகமதனுற் பூமரத்தின்கீழ் விழுந்தபூப் புறப்பூசை இம்முக்

குறி பொறிக்குஞ் சிற்குறிஞானபூசை. உலோகாசாரமு ஞானசாரமு மொத்து மேறியுங்குறைந்து மிருக்கு மவர்க்குப் பத்ததிப்படிக்குப் பல குறிக் கிரியாபூசை. (௧௨)

சிவத்தியான வுயிரியற்கைச் சிவஞான பூசையினாற் சிவன் சீக்கிரஞ் சாந்நித்தியமாய்ச் சிவத்துவாபிவி யத்தி செய்வனென்று செப்புகின்றார்.

இந்தனத்தினெரிபாலினெய்பழத்தினிரத
மெள்ளின்கணெண்ணெயும்போலெங்குமுளனிறைவன்
வந்தனைசெய்தெவ்விடத்தும்வழிபடவேயருளு
மலமறுப்போரான்மாவின்மலரடிஞானத்தாற்
சிந்தனைசெய்தருச்சிக்கச்சிவனுளத்தேதோன்றித்
தீயிரும்பைச்செய்வதுபோற்சீவன்றனைப்
பந்தனையையறுத்தாக்கித்தன்னுருவப்
பரப்பையெலாங்கொடுபுகுந்துபதிப்பனிவன்பாலே.

இ-ள். "இந்தனத்தினெரி" என்பதுமுத லுவமை முற்றுவமை யன்று, பிரபஞ்ச வியாத்தி மாத்திரத்தி லேகதேசவுவமை; முற்றுவமை யாக்கிப் பொருளுரைக்கில், "இந்தனத்தினெரி" என்பதனாற்காட்டத் தின தவயவமாய்க் காட்டத்திலிருக்கு மக்கினிபரமாணுவுக்கு மப்படி யிருக்கும் பிருதிவிபரமாணு அப்புப்பரமாணு வாயுப்பரமாணுக்களுக்குஞ் சங்யோகசம்பந்தம்; அந்த இந்தனத்துக்குமெல்லாப் பரமாணுக்களுக்குஞ் சமவாயசம்பந்தம்; அக்கினிபரமாணுவுக்கு மெரிக்குஞ்சமவாயசம்பந்தம்; அன்னிய பரமாணுக்களுக்கு மெரிக்குஞ் சங்யோகசம்பந்தஞ் சொல்லப் படும். "பாலினெய்" என்பதனாலும், "எள்ளின்கணெண்ணெய்" என்பதனாலு மப்படியூகித்துச் சங்யோக சம்பந்தமுஞ் சமவாயசம்பந் தமுஞ் சொல்லப்படும்; "பழத்தினிரதம்" என்பதனாற் கேவலஞ் சமவாயசம்பந்தஞ் சாற்றப்படுமாதலாற் பிரபஞ்சத்துக்குஞ் சிவனுக்கு மிச்சம்பந்த மெல்லாஞ் சாற்றப்பட்டுச் சிவன் விகாரியாய்ச் சடமாயு மே காத்மவாதத்துக் கிருப்புமாவன்; ஆதலால், இச்சம்பந்தங்களை விட்டுச் சித்தசித்துப் பிரபஞ்சமுற்றும் வியாபித்து—எங்குமுளனிறைவன் (அத னால்)—எவ்விடத்தும் - இலிங்க சித்திராதியில்—வந்தனைசெய்து வழிப டவே - கிரியாபூசை நமஸ்காரங்கள் செய்து போற்ற—அருளும் - பதமு த்திகொடுத்துப் பரபோகந் துய்ப்பித்து மகாப்பிரளயத்திற் பரமுத்தியும் பலிப்பிக்கும் (இதிகாலத்திற் பரமுத்தி துல்லபமானாலும்) — மலமறுப் போர் - (உத்தரோத்தர சுத்தபோக மாத்திரமுற்று நடுவே கீழ் நழுவாத படி யொத்த மலபரிபாகத்தான் மகாப்பிரளயத்து மதிதுல்லபமாய் வரு

மிகுந்த மலபரிபாக தாரதம்மியத்தால் நிரதிகரண சிவதீக்ஷை சாதிக ரண சத்தியோ நிருவாண சிவதீக்ஷை யிரண்டிற்கு மருகர் சிலபேர்தவிர வசத்தியோ நிருவாண தீக்ஷை மாத்திரத்தருகராய்த் தானங்களிற் றங் காது சரீராந்தத்துச் சிவத்துவந் தடையின்றி யடையும்பொருட்டுத் தீ க்ஷையிற் பிராரத்தகன்மபோகந் தகைந்த விட்ட) மலமுத்தி விரும்புவோர் —ஆன்மாவின் மலரடிஞானத்தால் - சிவசத்திவிளக்கில் விளங்கிய சிற் சத்தியால்—சிந்தனைசெய்தருச்சிக்க - சிவோகம்பாவனைத் தியான சமாதி ஞானபூசை பண்ண—சிவன்—உளத்தேதோன்றி-ஆத்மாவின் மலக்ஷய கர சங்கற்ப சானித்தியனாய் சீவன்முத்தி சிவசாக்ஷாற்காரந்தான் பர முத்தி சிவசாக்ஷாற்கார கோடி பரிசிக்கு முத்தம சிவசமாதி மாத்திரந் தா னுதிக்கப்பண்ணிச் (சரீராந்தத்தில்)— தீயிரும்பைச்செய்வதுபோல்- (முற்றுவமையன் றிதுவும்; ஒத்த சிவத்துவப் பிரகாசமாத்திரத்தி லேக தேச திருட்டாந்தம்; முற்றுவமையுன்னிற் சிவாவேச காபாலமதமாம்; அது சித்தாந்தமன்று தடத்தலக்கணமாதலால் அதைச் சுவரூபலக்கண மோக்ஷ சுருதி துரத்தும்; ஆகையால் அவ்வளவொப்பினால்) — சீவன் றன்னை—பந்தனையையறுத்துத் தானாக்கி-அச் சேஷித்த மலத்தினை மாற் றித் தன்னைப்போற் றற்பொருளறிவுச் சிவனாக்கி — தன்னுருவப் பரப் பையெலாங் கொடுபுகுந்து பதிப்பனிவன்பாலே - (இவ்விடத்தும் இலக் கணையாற் பொருளுரையா திருந்தபடியுரைத்தாற் சங்கிராந்தவாதி பாசு பதிமதமாம் அது சித்தாந்தமன்று; பூரணப்பொருளைக் "கொடுபுகுந்து பதிப்பன்" என்பது கூடாது.) சிவனாகிய வாத்மாவிலே தன்து சத்திக் கொத்த பிறபொருளறிவுச் சிற்சத்திக்குறிச் சிவத்துவ பூரணமுற்றும் பிர காசிப்பிப்பன். எ-று. சிவப்பிரகாசமுதற் சிவசாத்திரங்களிலே "திரிமல மும்மகலவுயிரருள்சேர்முத்தி" என்பதுமுதல் வசனங்களுக்கு மிலக்கணை யினாற் பொரு ளிப்படிதானே பண்ணவேண்டும்; சொற்பொருளிருந்த படி பொருளுரைக்கிற் பாசுபதிமுதலோர் மதமாம்; அது சிவசித்தாந்த மல்ல வென்று செப்பி யப்பொருள் தள்ளியதாகையால் இப்பொருணற் பொருள். (கஉ)

ஒன்பதாஞ்சூத்திரம்
முற்றிற்று.
ஆ திருவிருத்தம் - ௲0ரு.

---

# பத்தாஞ் சூத்திரம்.

---

இப்படி யெட்டாஞ் சூத்திரத்து மொன்பதாஞ் சூத்தி ரத்து முத்திசாதன சிவயோக மனேகம் பிரகார மா யறைந்து சிவயோகபல சிவபோக சிவசாக்ஷா

ற்காரமுஞ் சிறிதுசிறிது நடுவே செப்பி வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்திற்றானே செப்பியிருத்தலாற் சிவசாத்திர மாத்திர சாத்திய சிவயோகாங்கக் குறித் திரிபதார்த்த சிவத்துவ பசுத்துவ விவேக பரோக்ஷ பொதுஞானமுஞ் சிவபோகசாதன சிவோகம் பாவனு சிவசமாதிக்குறிச் சிவயோகமுஞ் சிவயோகபல வபரோக்ஷ சாக்ஷாற்கார சிறப்புஞானக்குறிச் சிவபோகமுஞ்சிவயோகிமகிமையுஞ் செப்புகின்றாராய் ஒன்பதாஞ் சூத்திரத்தந் தத்துறைத்தசமாதிமான் மகிமை சாற்றுகின்றார்.

இவனுலகிலிதமகிதஞ்செய்தவெல்லா
 மிதமகிதமிவனுக்குச்செய்தார்பாலிசையு
மவனிவனுய்நின்றமுறையேகனுகி
 யரன்பணியினின்றிடவுமகலுங்குற்றஞ்
சிவனுமிவன்செய்தியெல்லாமென்செய்தியென்றுஞ்
 செய்ததெனக்கிவனுக்குச்செய்ததென்றும்
பவமகலவுடனுகிநின்றுகொள்வன்பரிவாற்
 பாதகத்தைச்செய்திடினும்பணியாக்கிவிடுமே.

இ-ள். இவனுலகிலிதமகிதஞ் செய்தவெல்லாம் - பூமியின்கண் ணிச் சமாதிமான் செய்யு மிதமகிதமுன்னுகப் புத்தியின் மூளைக்கும் புண்ணிய பாவங்கண் முற்றும்(உவர்த்தரையில்விரைத்தவித்துப்போற்பலியாது)—இதமகிதமிவனுக்குச் செய்தார்பாலிசையும்-இவனுக்குச் செய்த விதமகித முன்னுகப் புண்ணிய பாவங்கள் செய்தவர்கள் புத்தியிற் பொள்ளெனப் பெரிதாய் முளைக்கும்; (அதுகொண்டு அவைவருமென் றுபசரிக்கப்பட்டது. அதுவன்றி அவைவருமென் றுரையுரைத்தால் முத்தாத்மாவிற் சிவசத்திசங்கிராந்திக்குந் திருட்டாந்த மில்லாமற் றேடுஞ் சங்கிராந்திவாதி திருட்டாந்தமாகப் பண்ணிச் சித்தாந்தியைச் சயிப்பன்;ஒருவனது புண்ணியபாவ மொருவனிடத்திற் போகாது. அவனைக்குறித்துப் பண்ணினு லவனது புத்தியின் முளைக்கும்)—அவனிவனுய்நின்றமுறையேகனுகி-சோகம்பாவித்திருப்பதுபோ லொத்த சிவக்குறி யுள்ளுதிப்புன்னிச் சிவன்முன்னுகப் பின் னுனென்று சிந்தித்து—அரன்பணியினின்றிடவும்-

“சமாதிச்சமதாவஸ்தாசீவாத்துமபரமாத்துமநோ”

என்னுஞ் சிவவசனத்தாற் சிவசம சிவாரூத்தாவேச வசனுகிச் சீவித்திருக்க அப்படி சிவன் விதித்த சிவசமாதி யனுஷ்டானத்தி னிற்கத் (தானவனுதலால்சம

யிபண்ணுந் தாசானுட்டானத்தி னின்று தன்செயலற்றுத் தான்கெட்டு நிற்கவென்று பொருளுரைப்பது நன்றன்று. சமாதியிலு நானெனும் பக ங்கார விருத்தி யுபாதிவிருத்தி மாத்திரம் விட்டுச் சுவதந்திர புத்தியோடு தோற்றுமற் றோற்றி நிற்கு மாதலால்)—அகலுங்குற்றம்-பாசமுத்தி சிவத் துவாபிவியத்தி பலிக்கும்—பணியாக்கிவிடுமே-(சிஷித்தானுட்டான மாளு லுஞ் சண்டேச்சுரன் முதலோருக்குப் போல) விதித்தானுட்டான மாக்கி விடுமே. மற்றதுவெளிப்பொருள். (௧)

சிவபோகஞ் சிவயோகத்தாற் சேருமென்று செப்பு கின்றார்.

யான்செய்தேன்பிறர்செய்தாரொன்னதியானென்னு
மிக்கோணை ஞானவெரியால்வெதுப்பிநிமிர்த்துத்
தான்செவ்வேநின்றிடவ:த்தத்துவன்றானேரோ
தனையளித்துமுன்னிற்கும்வினையொளித்திட்டோடு
நான்செய்தேனெனுமவர்க்குத்தானங்கின்றி
நண்ணுவிக்கும்போகத்தைப்பண்ணுவிக்குங்கன்ம
மூன்செய்யாஞானந்தானுதிப்பினல்லா
லொருவருக்கும்யானெனதிங்கொழியாதன்றே.

இ-ள். யான்செய்தேன்பிறர் செய்தாரொன்னதியானென்னுமிக்கோ ணை - உபகாராபகாராபிமானத்திருக்காகு மஞ்ஞானத்தை—ஞானவெரி யால்-சிவசாத்திர மாத்திர சாத்திய சிவாதித் திரிபதார்த்த சிவத்துவ பசு த்துவ விவேக பரோக்ஷ போத ஞானக்கினியினால்—வெதுப்பிநிமிர்த்து- வாட்டி மேலறிவை நீட்டி—தான்செவ்வேநின்றிட - சிவயோகியானவன் தியான சமாதிக்குறிச் சிவயோகத் திருக்க—தத்துவன்றானேரோ-சிவனெ திராய்—தனையளித்துமுன்னிற்கும் - (வினைவில்எதிர்காலக்குறிப்புமொ ழி) தன்னைச் சிவயோகியைக்கொண்டு சாக்ஷாற்கரிப்பிக்கச் சத்திசங்கற்ப சானித்தியனுவன்—வினையொளித்திட்டோடும்-(முத்திமுந்தி வியத்திபிந் திவருதன் முறைமை யாதலான்) முன்பாசமுத்தியாம் பின் சிவசாக்ஷாற் காரக்குறிச் சிவத்துவ வியத்தியாம்—ஊன்செய்யாஞானம் - இறப்புஞா னச் சிவயோகத்துக்கு மூலமாய் முன்சொல்லிய போதஞானம். மற்றது வெளிப்பொருள். (௨)

சிவனைச் சிந்தித்துச் சிவசத்திதுணைச் சிற்சத்திப் பிரத் தியாகார வியாபாரத்தா லிந்திரியங்களை விஷய விமுகங்களாகப் பண்ணிச் சமாதிபண்ணித் தான் செய்யுங் கிருத்தியங்களைச் சிவாதீனமாக்கி நிற்கப்

பாசமுத்தி சிவத்துவவியத்தி பலிக்குமென்று படிக்கின்றார்

இந்திரியமெனைப்பற்றிநின்றேயென்வசத்தி
னிசையாதேதன்வசத்தேயெனையீர்ப்பதிவற்றைத்
தந்தவன்றனணைவழிநின்றிடலாலென்று
தானறிந்திட்டிவற்றினொடுதனையுடையான்றாள்கள்
வந்தனைசெய்திவற்றின்வலியருளினால்வாட்டி
வாட்டமின்றியிருந்திடவும்வருஞ்செயல்களுண்டேல்
முந்தனுடைச்செயலென்றுமுடித்தொழுகவினைகண்
மூளாவங்காளாகிமீளானன்றே.

இ-ள். ஆளாகி-சருவஞ்ஞத்துவஞ் சருவகர்த்திருத்துவ முற்றுச்சமர்த்தனாகி. தாசனாகி யென்றுரைப்பதன்று அது அதிமோகமென்று முன் மறுத்திருத்தலால். மற்றது வெளிப்பொருள். (௩)

கன்மங் கன்மபலன்க ளிரண்டினையுஞ் சிவனிடத்திற் சமர்ப்பித்துச் சமபுத்தியாய் நிருவிகற்ப சமாதியாற் சிவனைச் சிந்தியாதுசிந்தித் திருப்பவர்க்கிருவினை யிசையாதென் றிசைக்கின்றார்.

சலமிலனைஞானத்தாற்றனையடைந்தார்தம்மைத்
தானாக்கித்தலைவனவர்தாஞ்செய்வினைதன்னா
னலமுடனேபிறர்செய்வினையூட்டியொழிப்பானாய்
நணுகாமல்வினையவரைநாடிக்காப்ப
னுலகினிலென்செயலெல்லாமுன்விதியேநீயே
யுண்ணின்றுஞ்செய்வித்துஞ்செய்கின்றாயென்று
நிலவுவதோர்செயலெனக்கின்றுன்செயலேயென்று
நினைவார்க்குவினைகளெல்லாநீங்குந்தானே.

இ-ள். வெளிப்பொருள். (௪)

சிவசாக்ஷாற்கார சித்தியினாற் சித்தசிவயோகிக்குஞ் சிவப்பிரத்தியக்ஷ சாக்ஷாற்காரத்துன்முக சிவசமாதி சித்தியினாற் சித்தசமாதி சாத்திய சிவயோகிக்கும் விஷயவிருப்ப மிருந்தாலும், அவர்கள் சரீராந்தத்திற் பாசமுத்தியடைந்து மலசத்தி விருத்தி விரியாது குவித்த சிவசத்திக்கெப்பச் சிற

சத்தியை விரித்துச் சிவனைச் சாக்ஷாத்கரிப்பார்க ளென்றுஞ் சரீர மிருக்குங்காலத்து மாகாமிய மே றாதென்றும் பிராரத்தகன்மமும்பலங்குன்றி வா சனை மாத்திரமாய்த் தாக்காமற்றாக்கும் போகம் புசிப்பிக்கு மென்றும் இருதிருவிருத்தங்களா லி சைக்கின்றார்.

நாடுகளிற்புக்குழன்றுங்காடுகளிற்சரித்து
நாகமுழைபுக்கிருந்துந்தாகமுதறவிர்ந்து
நீடுபலகாலங்கணித்தராயிருந்து
நின்மலஞானந்தையில்லார்நிகழ்ந்திடுவர்பிறப்பி
னேடுதருமலர்க்குழலார்முலைத்தலைக்கோயிடைக்கே
யெறிவிழியின்படுகடைக்கேகிடந்துமிறைஞானங்
கூடுமவர்கூடரியவீடுங்கூடிக்
குஞ்சித்தசேவடியுங்கும்பிட்டேயிருப்பர்.

இ-ள். வெளிப்பொருள். (௫)

அங்கித்தம்பனைவல்லார்க்கனல்சுடாதாகு
மவ்விடதமந்திரமுடையார்க்கருவிடங்களேறு
வெங்கிதனைக்கனமமெலாஞ்செய்தாலுஞானிக்
கிருவினைகள்சென்றணையாமுற்செய்வினையிங்குத்
தங்கிப்போமபாத்திரமுங்குலாலன்வினைதவிர்ந்த
சக்கரமுங்கந்தித்துச்சுழலுமாபோன்
மங்கிப்போய்வாதனையாலுழலவிக்குமெல்லா
மலங்களும்பின்காயமொடுமாயுமன்றே.

இ-ள். பிராரத்தஞ் சுப்ததமென்று மந்தமென்றுந் தீவிரமென்று மூன்றுவிதம்; அவற்றுட் சுப்தஞ் சிவதன்மத் தொருப்பட்டிருப்பவரை வாதியாது; மந்தஞ் சிவஞானிகளை வாதியாது; தீவிரமெல்லாரையும் வாதிக்குமாறுலுஞ் சிவஞானிகளை மிகுதியும் வாதியாது ஆகாமியமு மேறாது. பதப்பொருள் வெளிப்பொருள்.

இப் பத்தாஞ்சூத்திரத்தும் முன்பின் சிலவிடங்களிலேயு மிருந்து கூறியதுகூறலைக்குறித்துந் திரிபதார்த்தஞ் சூக்குமச் சுவரூப பரீக்ஷை பண்ணாது லோகச்சொற் சுட்டு மட்டுக்கட்டு விட்டு மூட்டத் தொட்டுப் பரீக்ஷை பண்ணுதலானு முரைவிரித்துரையாததை உணர்ந்துகொள்க. ()

பத்தாஞ்சூத்திரம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௧௧.

# பதினொராஞ் சூத்திரம்.

சிவனதுபகார முணர்த்துகின்றார்.

காயமொழிந்தாற்சுத்தனாகியான்மாக்
  காட்டக்கண்டிடுந்தன்மையுடையகண்ணுக்
கேயுமுயிர்காட்டக்கண்டிடுமாபோல
  வீசனுயிர்க்குக்காட்டக்கண்டிடுவனித்தை
யாயுமறிவுடையனாயன்புசெய்ய
  வந்நிலைமையிந்நிலையினடைந்தமுறையாலே
மாயமெலாநீங்கியரன்மலரடிக்கீழிருப்பன்
  மாறாதசிவானுபவமருவிக்கொண்டே.

இ-ள். காயமொழிந்தால் - (பிராரத்தகன்மம் பிடித்திருத்தும் சரீர மது மாயு மாய்ந்தால் (சரீராவதி மறைக்குஞ் சாமர்த்தியமாத்திரமாய் மாயாதிருப்பத் தீக்ஷையிற் சேஷிப்பித்த மலமு மாயாதாய்)—சுத்தனாகி யான்மா - ஆத்மா மலமுத்திமானாய்ச் சிவத்துவாருக சின்மாத்திரனாய் நிற்ப—காட்டக்கண்டிடுந்தன்மையுடையகண்ணுக்கு - (சடமாதலாற்கண் காணு மென்பதுபகாரோபசாரம் முத்தியின் மலமறைப்பு நீங்கினுற் காட்டுகாடாது சுவதந்திரமாய்க் காணுந்தன்மை யுடையதானாலும் பெத்தத்தின் மலமறைப்பினால்) காட்டக்கண்டிடுந் தன்மையுடைய சீவாத்ம சிற்சத்திக்கு—ஏயுமுயிர்காட்டக்கண்டிடுமாபோல - பொருந்திய வாத்மா மனசையேவ மனசு கண்ணையேவக் கண் சிற்சத்தியை விளக்கச் சிற்சத்தி காண்பதுபோல—ஈசனுயிர்க்கு—காட்டக்கண்டிடுவன் - (பரிபூரணமாய்ப் பண்ணப்பட்டதற்குத் திரும்பத் திரும்பப் பண்ணவேண்டுவது நீதியின்று பார்த்தா வில்லையா மாதலால் காட்டுத் திரும்ப விரும்பாதபடி) சிவத்துவாபிவியத்தி பண்ண (தனக்குப்போசக போக்கியமின்றி யுள்ளமைமாத்திரமாய்ப் பிறர்க்குப் போசகபோக்கியமாய்ச் சாத்த சற்றுச் சவிகற்ப நிருவிகற்ப சாக்ஷாற்காரத்தாற் பதிமுதலிய முப்பதார்த்தங்களை) சாக்ஷாற்கரிப்பன்—இத்தையாயு மறிவுடையனாய் - அப்போதுவரு மிச்செய்தியை யிப்போது சிவாகமக் கேள்வி சிந்தித்தலினால் வருந் தெளிவென்றுணாக்கும் பதிமுதன் முப்பதார்த்த சிவத்துவ பசுத்துவ விவேக பரோக்ஷஞான முடையனாய்ப் பின் னபரோக்ஷம்போ லபிநயத்தியானவானாய்ச்சிவமாத்திரத் தேயஞேயத் தழுந்திச் சூனியப்போலிச்சிந்தனைச் சமாதிமானுமாய் (சமாதி சிவசாக்ஷாத்காரபலஞ் சடிதிகொடுக்கும் பொ

ருட்டு—அன்புசெய்ய-கூடிய மரியாதி சிவபூசைபண்ண—அந்நிலைமையிந் நிலையினடைந்தமுறையாலே - சொல்லிய விதேகபரமுத்தி சிவசாக்ஷாத் காரஞ் சதேக சீவன்முத்தியி லொருபடிசார்ந்த செய்தியாலே (அதுவன் றியும்)—அந்நிலைமை - பிறர் பசிதாகம்போல வொருபிரகாரந் திருச்சிய மானாலுஞ் சருவதிருக்கிருத்துரூபமாயது சிவமென்று வருமாகமபரோக்ஷ ஞானத்தை—இந்நிலையினடைந்தமுறையாலே - தன்பசிதாகம்போ லிது சிவமென்று வருஞ் சீவன்முத்தி சிவசாக்ஷாத்கார ரூபத்தினாலே சார்ந்த தன்மையினாலே—மாயமெலாநீங்கி - மலமுதற் பாச மோசித்து—மாறாத சிவானுபவமருவிக்கொண்டே - தனது பிறபொருளறிவுச் சிற்சத்தியில் விளங்கித் தோன்றிப் பிரிவற்ற பிரபஞ்சகர்ப்பப் பிறபொருட்சிவசாக்ஷாத் கார பூர்த்திக் கீர்த்திச் சிவானந்தத்தைத் தனது தற்பொருளறிவுச் சிற்சத் தியில் விளங்கித் தோற்றிப் பிரிவற்ற தற்பொருட் சிவசாக்ஷாத்காரததார சாக்ஷாத்கரித்தனுபவித்துக்கொண்டுதானே—அரன்மலரடிக்கீழிருப்பன்- அப்படி புறப்பொருட் சிவசத்திக்கொத்து விரிந்து சிததசித்துப் பிரபஞ்ச கர்ப்பப் பிறபொருட் சிவனைத் திருச்சியப் பிரபஞ்ச விலக்கணைத் திருக் குரூபப் பிரபஞ்ச லக்கணச் சருவ திருக்கிருத்துரூபமாய்ப் பராக்காய்ப் பார்க்கும் பராக்குரூபப் பிறபொருட் பிரமாணரூப தற்பொருட் பிரமே யரூபப் பிறபொருளறிவுச் சிற்சத்தி சிமையில் பிரத்தியக்காய் வீழ்ந்து பதிமுதன் முப்பதார்த்தப் பிறபொருட் பிரமேய சிமையிற் றீண்டா தச் சிற்சத்தி மாத்திரத்தைப் பிரத்தியக்காய்ப் பார்க்கும் பிரத்தியக்குரூபபிற பொருட் பிரமாதிருரூப தற்பொருட் பிரமாணரூப தற்பொருளறிவுச் சிற்சத்திக்குறிக் கிரமிகமாகச் சத்திமத்துரூபியாயுஞ் சத்திரூபியாயுந் தற் பொருட் பிரமாதிருரூப சித்துரூப மாத்திர தற்பொருளறிவனாகிய வந்த ராற்மரூப சிற்சத்திக்குறிச் சிவமாத்திரரூபியாயு மிருப்பன் எ-று. (க)

அபரோக்ஷப்போலி பரோக்ஷமாய்ப் பாசிக்குஞ் சின் மாத்திரத் தேய விதேய நிருவிகற்ப சமாதியிற் சா த்த மனோகங்கார புத்தி சஙகற்ப கருவபோத சிற் றுச் சவிகற்ப நிருவிகற்ப சாத்தமாத்திர சருவா ரத்த சிவசாக்ஷாத்காரத்திற் போலப் பதார்த்தங் கள் தோற்ருது தோற்றுமானால் அந்த ஞானம் பிறவிபெருக்கும் பிராகிருத மனோகங்கார புத்தி சங்கற்ப கருவபோத தூல சவிகற்ப ஞானந் துட் டஞ் சுத்தமன்றென்று சொல்லுகின்ருர்.

பரஞானத்தாற்பரத்தைத்தரிசித்தோர்பரமே
பார்த்திருப்பர்பதார்த்தங்கள்பாரார்பார்க்க
வருஞானமபலஞானவஞ்ஞானவிகற்ப
வாச்சியவாசகஞானம்வயிந்தவத்தின்கலக்கந்

தருஞானம்போகஞானதிருஞானஞேயந்
 தங்கியஞானஞ்சங்கற்பனைஞானமாகுந்
திருஞானமிவையெல்லாங்கடந்தசிவஞான
 மாதலாற்சீவன்முத்தர்சிவமேகண்டிருப்பர்.

இ-ள். வெளிப்பொருள். "பதார்த்தங்கள் பாரார்" என்பது பரமுத்தியிலென்று சிலபேர் படித்துப் பேசுவார்கள்; சருவபதார்த்த கர்ப்ப சிவசாக்ஷாத்கார பூர்த்திப் பரமுத்தியி லவர்கள் தாழ்ந்தசமாதிநிலையைச் சாற்றுத லஞ்ஞானம், அதுவன்றித் "தூரியனுஞ் சிவந்தோன்றுந் தானுந் தோன்றுந் தொல்லுலகமெல்லாந்தன் னுள்ளே தோன்றும்" என்பது முதலிய வசனவிரோதமு மாமென்பதறிக. (உ)

சாரூபமுதலிய பதமுத்தி பரமுத்தியல்ல வென்பது படிக்கின்றார்.

அருதியுடலொன்றினைவிட்டொன்றுபற்றிக்கன்மா
 லாயழிந்துவருதலா லந்தமில்லைப்
பிறுதியருள்பெற்றவர்கணித்தவுருவத்தைப்
 பெற்றிருக்கைமுத்தியெனிற்பெறும்பதமேயிதுவு
மிறுதிநிலையிதுதானுங்காயமுண்டே
 லிருங்கன்மமாயைமலமெல்லாமுண்டா
மறுதிதருமுடலாதிகாரியத்தாலறுதி
 மலமறுக்குமருந்தற்றாலுடன்மாயுங்காணே.

இ-ள். அறுதிதருமுடல் - சிவனு மாயையுங் கொடுக்குஞ் சரீரம். மற்றது வெளிப்பொருள். (௩)

சமாதி சித்தித்தா லொருபிரகார மலநீங்கிச் சீவன் முத்தி சிவசாக்ஷாத்காரஞ் சித்திக்குஞ் சித்திக்கப் பின்பு சரீராந்தத்தின் மல மாவிருதி நிவிர்த்திச் சுபாவமா யிருக்கு மழியாதென் றிசைக்கின்றார்.

தெரிவரியமெய்ஞ்ஞானஞ்சேர்ந்தவாறே
 சிவமபிரகாசிக்குமிங்கேசீவன்முத்தனுக்கு
முரியமலமவுடதத்தாற்றடுப்புண்டவிடமு
 மொள்ளெரியின்ஞெளிமுன்னரிருளுந்தேற்றின்

வருபரல்சேர்நீர்மருவுகலங்கலும்போலாகி
மாயாதேதன்சத்திமாய்ந்துகாயந்
திரியுமளவும்முளதாய்ப்பின்புகாயஞ்
சேராதவகைதானுந்தேயுமன்றே.

இ-ள். வெளிப்பொருள். (௪)

மலத்துக் காவிருதி நிவிர்த்தித் திரிவு வருமாகி லாணவ மாவுக்கு மந்தவிகாரம் வருமென்றதைய மறுத் துணர்த்துகின்றார்.

ஆணவந்தானநாதியந்தமடையாதாகு
மடையிலந்தவான்மாவுமழியுமெனிற்செம்பிற்
காணலுறுங்களிம்பிரதகுளிகைபரிசிக்கக்
கழியுஞ்செம்புருநிற்கக்கண்டோமன்றே
தாணுவின்றன்கழலிணையத்தவிருமலந்தவிர்ந்தாற்
றான்சுத்தனுயிருக்கைமுத்தியான்றானிணைப்
பூண்வேண்டுவதொன்றுமில்லையெனிலருக்கன்
புகுதவிருள்போமடியிற்பொருந்தமலம்போமே.

இ-ள். பாட்டிற் பாதி வெளிப்பொருள். (அப்படி யாணவமல மாவிருதி நிவிர்த்திச் சுவபாவ லக்கணமாய்க் கெடாது நீங்காம னீங்குமாகில்) தாணுவின்றன்கழலிணையத்தவிருமலம் - முத்திகிருத்திய தீக்ஷா கன்மத்தில் விளங்கிச் சாக்ஷாத்தீக்ஷா நாமந்தரித்த சிவக்கிரியாசத்தி சங்கற்ப சம்பந்தியாக மல மப்படிநீங்கும்—தவிர்ந்தால் - நீங்கினால்—தான்சுத்தனுயிருக்கைமுத்தி - தான் நின்மலனாய் நிற்றன் மாத்திரமே மோக்ஷம்—அரன்றானிணைப்பூணவேண்டுவதொன்று மில்லையெனில் - திரும்ப வந்தத் தீக்ஷா லக்கண சிவசத்தி சங்கற்ப சம்பந்தஞ் சாரவேண்டிய தில்லையென்று (மலம்போ முத்திவாதியாயிருந்து) நீ சொல்லில், (மலமுத்திமாத்திரம் முத்தியன்று மலசிவத்துவங்களினது முத்தி வியத்தி யிரண்டும்மோக்ஷமென்று முந்தி நாஞ் சொல்லுதலால்)—அருக்கன்புகுதவிருள்போம்—(அப்படி) அடியிற்பொருந்தமலம்போமே-வியத்திகிருத்திய தீக்ஷாகன்மத்தில் விளங்கிய சிவக்கிரியாசத்தி சங்கற்பத்திற் சம்பந்திக்க முன்சொல்லிய முத்திகிருத்திய தீக்ஷாகன்மத்தில் விளங்கிய சிவக்கிரியாசத்தி சங்கற்ப சம்பந்தத் தான் மலம்போயு மகாமாயையின் மலம்வைத்த மலவாசனை சிவத்துவத் தம்பனம் பண்ணிக்கொண்டு மாறாதிருக்கு மந்தமலவாசனை மகாமாயையில் இலயமாந்தானே எ-று. நன்றிது வாகிலு மிதினாலுமுத்தியே சொல்

லப்பட்டது; வியத்தி விளங்கச் சொல்லப்பட்டதில்லை. சத்தியமே சாற்றியது, மலவாசனை முத்திகிருத்தியமே செவ்வரத்தப்பூச் சிவப்புபாதியுற்ற படிகவெண்மை விளக்கம்போல மலவாசனோபாதி யுற்றுத் திரிவின்றி யிருந்தபடியிருக்குஞ் சிவத்துவாபிவியத்தியை வியஞ்சகந் திரும்ப விரும்பாமல் விகிருதிவிட் டிருந்தபடி யிருத்துஞ் சிவத்துவாபிவியத்தி கிருத்தியம் விகாரம் வருமாதலால் வேறொன்றல்ல. (ரு)

அநாதிபாசபந்தம் அகலுமாறெப்படியென்ன உத்தரமுரைக்கின்றார்.

நெலவினுக்குத்தவிடுமிகளனுதியாயே
நெல்லைவிட்டுநீங்கியவைநின்றநிலைநிகழ்த்தீா
சொல்லியிடிற்றுகளற்றவரிசியின்பாவிலலைத்
தொக்கிருந்துமற்றொருநெற்றோற்றிடாவா
மெலலவவைவிடுமறவேயவைபோலவணுவவ
மேவுமலமுடல்கன்மமனுதிவிட்டேநீங்கு
நலலசிவமுத்தியின்கட்பெத்தான்மாவை
நணுகிநிற்குமாதலினுசைமுமின்றமே.

(இ-ள்.) வெளிப்பொருள். (சு)

பெத்தான்மாக்களுக்குச் சிவாதீனமே சுவாதந்திரியமில்லையென்று பேசுகின்றார்.

எவ்விடத்துமிறையடியையின்றியமைந்தொன்றை
யறிந்தியற்றியிடாவுயிர்களீசன்றானும
செவ்விதினினுளமபுகுந்துசெய்தியெலாமுணர்ந்து
சேட்டிப்பித்தெங்குமாய்ச்செறிந்துநிற்ப
னிவ்வுயிர்கடோற்றமபோதவனையின்றித்தோற்று
விவற்றினுக்கமுதலெழுத்துக்கெல்லாநிற்கு
மவ்வுயிர்போனின்றிடுவனுதலானு
மரனடியைகன்றுநிற்பதெங்கேயாமே.

(இ-ள்) (முன்கூறியதிற் சிறிதுகூட லோகப்பிரசித்தப் பொருளோதுதலால்) வெளிப்பொருள். பெத்தான்மாவைக்குறித் துரைத்திருக்க இவ்விடத்துச் சிலபேர் முத்தான்மாவையுங் குறித்துரைத்ததென்று கொண்டு முத்தான்மாவுக்குச் சிவனோடொத்து வியாபித் தொருசிவசாதியாய் நிற்றலே சிவனோடேகலாம னிற்பனென்பதுங் கலப்பாய் நிற்பதென்பதும் நாஞ்சொல்லுஞ்சுத்தாத்துவைத சிவசித்தாந்த மென்பதை

யறியாமல் "அரனடியையகன்றுநிற்பதெங்கேயாமே." என்பதற்குப் பிரிந்துநிற்பதென்று சொல்லுவார்களென்று பண்ணிக்கொண்டு விசிட்டாத்துவைதமாய் வேறறக்கலந்து நிற்பதென்று பரிகரித்தார்கள்; அது, அநுதிமுத்தசிவனுக்கு மாத்மாவுக்குஞ் சமவியாபகத்துவ மிருக்கிற படியினாலே, அப்படி பிரிந்திருக்கு மென்று சொல்லுவார்களில்லை. பிரியாதிருந்தாலும், அமூர்த்த வஸ்துவுக்குப் பரிசக் கலப்பென்பதில்லை. அது சொல்லப்பட்டது.

சர்வவஸ்து ஷ்வனுச்சூத மஸ்வயம் சர்வவஸ்து பி:
சர்வம் வியாப்பியா வதிஷ்ட்டேத நசசம் யுச்சியதேபிரபு:

என்று சிவாகமவசன மிருக்கையால், சிவசமவாதிசொல்லுஞ் சாமியத்துக்கு வேருய்ச் சித்தாந்தி சொல்லுஞ் சிவசாமியஞ் சிவன்சொன்னதாதலால், அதிற்சொல்லுந் தூஷணஞ் சிவதூஷணமென் றறியாமற் சிலபேர் தூஷணஞ் சொன்னார்கள்; அந்தத் தூஷணத்துக்கு அவர்களுக்குப் பிராயச்சித்தஞ் சிவனே பண்ணுவர். (எ)

அசிவயோகிகட்கு அப்பிரத்தியக்ஷன் சிவதத்த சிவசாக்ஷாற்கார நிட்கள நிராலம்ப சித்த சிவயோகிகட்குச் சிவன் பிரத்தியக்ஷனென்று பேசுகின்றார்.

எங்குந்தானிறைந்துசிவனின்றானுகி
லெல்லாருங்காணவேவேண்டுந்தானென்னி
லிங்குந்தானந்தகருக்கிரவியிருளாகு
மீசனருட்கண்ணில்லார்க்கொளியாயேயிருளாம்
பங்கந்தானெழும்பதுமம்பக்குவத்தையடையப்
பரிதியலர்த்திடுவதுபோற்பருவஞ்சேருயிர்க்குத்
துங்கவரன்ஞானக்கண்கொடுத்தருளினாலே
சோதிக்குட்சோதியாய்த்தோன்றிடுவன்காணே.

(இ-ள்.) கொடுத்து - விளக்கி. சோதிக்குட்சோதியாய் - பராக்குரூபசத்திக்குட் பிரத்தியக்குரூப சத்திமானாய். மற்றது வெளிப்பொருள். எ-று. (அ

வாதிகள்கருத்து மறுத்துணர்த்துகின்றார்.

சென்றணையுநிழல்போலச்சிவனிற்பனென்னிற்
சென்றணையுமவன்முதலிசிவத்தையணைந்தொன்றாய்
நின்றவுயிர்கெட்டதெனிற்கெட்டதணைவின்றா
நின்றதேற்கேடில்லையணைந்துகெட்டதென்னிற்

பொன்றினதென்முத்தியினைப்பெற்றவரார்புகனீ
 போன்றுகையேமுத்தியெனிற்புருடனித்தனன்றா
மொன்றியிடுநீரொடுநீர்சேர்ந்தாற்போலென்னி
 லொருபொருளாமதிபதியோடுயிர்பொருளொன்றன்றே.

(இ-ள்.) வினுவுத்தரமறுப்பு. பொருள் வெளிப்பொருள். (௬)

முத்தியினிற் சிவனுமுத்தான்மாவும் பொன்னும்பொ
 ன்னும்போற் புணர்ந் தொருபொருளா யிருப்பா
 ர்களென்று சிவாத்துவைதிப் போலிப் புருஷனொ
 ருவன்புகல மறுத்துரைக்கின்றார்.

செம்பிரதகுளிகையினாற்களிம்பற்றுப்பொன்னாய்ச்
 செம்பொனுடன்சேருமலஞ்சிதைந்தாற்சிவ
னம்பனுடன்கூடுமெனிற்பொன்போலல்ல
 னற்குளிகைபோலவரனணுகுமலம்போக்கி
யம்பொனடிக்கீழ்வைப்பனருங்களங்கமறுக்கு
 மக்குளிகைதானும்பொன்னாகாதாகு
மும்பர்பிரானுற்பத்தியாதிகளுக்குரிய
 னுயிர்தானுஞ்சிவானுபவமொன்றினுக்குமுரித்தே

இ-ள். செம்பிரதகுளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்செம்பொனுடன்சேரும்— (அப்படி) மலஞ்சிதைந்தால் (முத்திமானாய்)—சிவன்—நம்பனுடன்கூடுமெனில்-சிவனோடைக்கிய மாமென்று செப்பில்—(சிவன்) பொன்போலல்லன்—(பொன்னுக்கு மொரு பொருள் போல்பவன். ஆகையால்) நற்குளிகைபோலவரன்—(சிவனுக்கு) அணுகுமலம் போக்கி—(ஒரு புடையொப்புவமையாதலால்) அம்பொனடிக்கீழ்வைப்பன் - (குளிகையும் பொன்னும் போற் றனக்கு வேற்றுச்சாதி யாகாமற் குளிகை பொன்னொளிப் பிரகாசம் பண்ணுவதுபோற் சிவத்துவப்பிரகாசஞ்செய் தொத்தசிவசாதியாக்கி) தனது சத்திக்கொத்து விரிந்து அந்தச் சத்திபதார்த்தம் பார்த் தொத்துப் போய்ப் பராக்காய்ப் பதிமுதற் பதார்த்தம் பார்க்கும் பராக்குரூப சீவசிற்சத்தியைப் பதிமுதற் பதார்த்தம் பாராது பிரத்தியக்காய்ப் பார்க்கும் பிரத்தியக்குரூப சிற்சத்திக்குறிச் சிவனுகச் சீவனைப் பண்ணுவன்—அருங்களங்கமறுக்குமக்குளிகை தானும் பொன்னாகாதாகும் (குளிகையாக வுபமிக்கப்பட்ட சிவனு மிப்பொன்னாக வுபமிக்கப்பட்ட சீவனாகான்; ஒருபொரு ளல்லாதிருந்தாலு மொரு சிவ சாதியா யொத்த பொருளா மென்றுரைத்தலாற் பஞ்சகிருத்தியம

முத்தசிவன் பண்ணவேண்டுமென்பதற் குத்தரம்)—உம்பர்பிரா னூற்பத்தியாதிகளுக்குரியன்-சிவன்சிருட்டிமுதலிய பஞ்சகிருத்திய கிருபாகிருதிக்கருகன் - உயிர்தான்-முத்தசிவன்றான் — சிவானுபவமொன்றினுக்குமுரித்தே-சிவ சங்கற்பத்துக்கு வேற்றுச் சங்கற்பம் வேற்றுப்பலம் விட் டபிருதக் கவர்ச்சநீய சங்கற்பசங்சித்த பஞ்சகிருத்திய கிருத்தானுலும் சிவன்போற்கிருபாசங்கற்ப சங்சித்த கிருத்திய கிருத்தல்லாமையாற் றனது பராக்ரூப சிற்சத்தி விருத்திக்குறிச சருவார்த்த சிவசாக்ஷாற்கார பூர்த்திக் கீர்த்திச் சிவானந்தநாம சிவபோகத்துக்கருக பிரத்தியக்ரூப சிற்சத்திலிங்கச் சிறப்புச் சிதந்தராத்ம பொதுச்சித்துக்குறி கரண கர்த்திருரூப வநுபவாநுபவி திருக் சுவரூபியாகாநிற்கும். எ-று. (௧0)

சிவனுஞ் சீவனுஞ் சித்தொருசாதி யிருசித்துப் பொருளா யிருக்குமென்ப திசையாது ஒருசித்துப்பொருளென் றுரைக்க மறுத்துணர்த்துகின்றார்.

சிவன்சீவனென்றிரண்டுஞ்சித்தொன்றுமென்னிற்
 சிவனருட்சித்திவனருளைச்சேருஞ்சித்தவன்றான்
பவங்கேடுபுத்திமுத்திபண்ணுஞ்சித்தவற்றிற்
 படியுஞ்சித்தறிவிக்கப்படுஞ்சித்துமிவன்றா
னவன்றானேயறியுஞ்சித்தாதலினாலிரண்டு
 மணைந்தாலுமொன்றாகாதனன்னியமாயிருக்கு
மிவன்றானும்புத்தியுஞ்சித்திவனுமோபுத்தி
 யிருவசித்தென்றிடிலவனுக்கிவனுமசித்தாமே.

இ-ள். சிவன்சீவனென்றிரண்டுஞ்சித்து—(சிற்பொருள் விபுபொருளு மாதலால் ஒன்றை விட் டொன்றிருக்குந் தானமு மில்லை. அதனால்) ஒன்றுமென்னில்-ஐக்கியமாமென்னில் (அமூர்த்த விபுப்பொருளொன்றுக் கொன்று தட்டா துள்ளும் புறம்பு மொத்திருக்கும்; அஃதிருக்க,அந்தச்சீவசிவைக்கிய மாதியானலநித்தியம்; அநாதியானல் வேற்றுமைக்குறி விளம்பப்படாது; வேற்றுமைக்குறி கண்டோங் கேட்டோமாகி யிருவர்க்கும்வைக்கப்படும்; அந்த வேற்றுமைக்குறி யாதோவென்னில்)—சிவன்—அருட்சித்து-சீவனுக்குப் பரமுத்திவியத்திக்குறி யனுக்கிரகம் பண்ணுஞ் சித்து—இவன்-சீவன்—அருளைச் சேருஞ்சித்து - அந்தச் சிவானுக்கிரகத்தைச் சிவனிடத்திநின்றும் பெறுஞ்சித்து—அவன்றான் - சிவன்றான்—பவங்கேடுபுத்திமுத்திபண்ணுஞ்சித்து - சிருட்டி திதி சங்கார திரோபாவ பதமுத்தி யனுக்கிரகங்களைப் பண்ணுஞ் சித்து—அவற்றிற்படியுஞ்சித்து—அந்தப் பஞ்சகிருத்திய பரதந்திரத்தி லகப்பட்டுக் கட்டுண்ணுஞ் சித்து—அறிவிக்கப் படுஞ்சித்துமிவன்றான் - புத்தி முத்திக் கிரமத்திற் சாபேக்ஷ

சிற்றறிவு நிரபேக்ஷ பேரறிவுகளினு லுணர்த்துவிக்க யோக்கியமாகுஞ் சித்துஞ் சிவன்முன்—அவன்முனேயறியுஞ்சித்து - சிவன் சுவதந்திரவறி வன்—ஆதலினு லிரண்டும்—அணைந்தாலும் - முத்தியிற்சாயுச்சிய மானு லும்—ஒன்முகாது - ஒருபொருளாகாது—அனன்னியமாயிருக்கும்-அனன் னியசாயுச்சியமுதற் சம்பந்தச்சொல்லிவ்விடத்துச் சாதிருச்சியப்பொருட் சொல்லாதலால்) ஒத்திருக்கும்—(பந்தத்தில்) இவன்முனுஞ்சித்துப்புத்தி யுஞ்சித்து—(சித்தெனும் வசனமாத்திரத்தினுலே சித்தைவிளக்குதலாற் சித்தென் றுபசரிக்கப்படும்) புத்தி—இவனுமோ (ஆகாது)—இதுவசித்தெ ன்றிடில்-புத்திசடமென்னில்—அவனுக்கு - சிவனுக்கு—இவனும் - சிவ னும்—அசித்தாமே - ஏகாரத்தெடுப்பினுலே யுபாதிதள்ளிச் சுவரூபலக்க ணத்தினுலே சிவனுக்கொத்துச் சித்துத்தானே (அசித்தன்று) எ-று.

சுவரூபலக்கணத்தினு லசித்துப்புத்தி தடத்தலக்கணத்தினுற் சித்தெ ன் றுபசரிக்கப் பட்டதுபோலப் பசுத்துவமிருத்தலாற் றடத்தலக்கணத் தினுலே யசித்தென்று உபசரிக்கப்பட்டது; முத்தியி லொத்தசித்தே யொ ருசித்துமன்று. (கக)

சிவன் சீவனுக்குப் பரமுத்தி பண்ணும் பரிசு பகர் கின்முர்.

இரும்பைக்காந்தம்வலித்தாற்போலிசைந்தங்குயிரை
யெரியிரும்பைச்செய்வதுபோலிவனைத்தாணுக்கி
யரும்பித்திந்தனத்தையனலழிப்பதுபோன்மலத்தை
யழித்தமலனப்பணைந்தவுப்பேபோலணைந்து
விரும்பிப்பொன்னினைக்குளிகையொளிப்பதுபோலடக்கி
மேனித்துத்தானெல்லாம்வேதிப்பாணுகித்
கரும்பைத்தேனைப்பாகைக்கனியமுதைக்கண்டைக்
கட்டியையொத்திருப்பனந்தமுத்தியினிற்கலந்தே,

(இ-ள்.) நல்லது உமதாசாரியர் படலபாடன வாசனு மார்ச்சன மாத்திரத்தினுல் வயித்தியனுகிய நிமித்த கர்த்தாவாற் கண்ணெளி விள ங்குவதுபோல, மலபாடன வாசனு மார்ச்சன மாத்திரத்தினுற் சிவனுகிய நிமித்தகர்த்தாவாற் சிவத்துவம் விளங்குமென்று பிறர்மதம் பிடுங்கு மொரு சுத்தாத்துவைத சித்தாந்தத் திருட்டாந்த வார்த்தை செப்பாது பிறர்மத திருட்டாந்தப் பேச்சுப் பேசியதேது? "அஃதாவது, இரும்பைக் காந்தம் வலித்தாற்போலிசைந்தங்குயிரை" என்றது முத்தியினுலுஞ் சுத ந்தரிய மில்லையென்னும் பிரயோச்சிய கர்த்திருத்துவ வாதிமத திருட் டாந்தமாம். "எரியிரும்பைச்செய்வதுபோலிவனைத்தாணுக்கி" என்றது சிவாவேசஞ் செப்புங் காபாலமத திருட்டாந்தமாம். "அரும்பித்திந்தனத்

தையனலழிப்பதுபோன்மலத்தையழித்து" என்றது காட்டத்தான் மறைப்புண்டு கடைய முகிழ்த் தெரி யிந்தனத்தை யெரித்தழித்தலான் மலமழிக்குஞ் சிவனுக்கு மறைப்பில்லாமையாற் கடைபவனுக்கொப்புச்சிவன் காட்டத்தின் மறைந்திருந்துதித்தவன்னிபோல மலத்தின் மறைந்திருந்துதிக்கு முயிர் சிவத்துவமாகையால் விஷமதிருட்டாந்தமாம். அல்லதூஉந் மஞானத்தான் முத்தியை முயலும் விவர்த்த வேதாந்திமதம்மலம்போமுத்திவாதிமதம் இருவர்மததிருட்டாந்தமாம். "அப்பனைந்தவுப்பேபோலனைந்து" என்றது விசிட்டாத்துவைதம் விளம்பு மிராமானுசமத திருட்டாந்தமாம். "விரும்பிப்பொன்னினைக்குளிகையொளிப்பதுபோலடக்கி" என்றது நாராயணப்பிரகிருதியிலயவாதி பாஞ்சராத்திரிமத திருட்டாந்தமாம். "மேளித்துத்தானெல்லாம்வேதிப்பானுகி" என்றது சிவகுண சங்கிராந்தி சொல்லும் பாசுபதிமத திருட்டாந்தபாசனும். "கரும்பைத்தேனைப்பாகைக்கனியமுதைக் கண்டைக்கட்டியை யொத்திருப்பன்" என்றது சாங்கியைகதேசி சத்துவ சம போகவாதிமத திருட்டாந்தமாம். "முத்தியினிற் கலந்தே" என்றது "கண்டைக்கட்டியையொத்து" என்பதை யிங்குமிசைத்துக் கலந்தே யிருப்பனென்றுகழறப் பரிணதவேதாந்தமததிருட்டாந்தமாம். இப்படியிருக்க எப்படி கோபுரத்தினின்றும் வீழ்ந்தவனுக் கிழை கட்டுவதுபோலப்படியொப்ப எப்படி யொப்புச் சிவசித்தாந்தப் பொருளை நீருரைப்பீர்?

சத்திய நீசாற்றியது; நமதாசாரியர் மூற்றுவமையுன்னிச் சொன்னவைன்று; ஒருபுடையொப் புருவகங்கருதி யுரைத்தாராதலான் மலவசமாகி மயங்குமுயிரைத் தன்வசமாக்கி மலமுத்திபண்ணிச் சிவத்துவாபிவியத்தி விளைத்துத் தனக்கொப்புவித்து எவுதலியற்றுதற்றன்மைச் சம்பந்தஞ் சற்றுமுற்றிராது முற்றுமறுத்துச் சித்துச்சிவசாதியாக்கி யொத்தொருமித்திருசித்துச் சிவசாதிக்கலப்பாயிருப்பனென் றிசைய வினிதாகப்பொருளிசைப்போம் நாம்.

குளிகை-பொன்னைத் தனக்குட் கரக்கு மிரதகுளிகை. மேளித்து-மிச்சிரமித்து. வேதிப்பானுகி - தன்மயமாக்குவானுகி. மற்றப்பதப்பொருள் வெளிப்பொருள். இதனுற் "கரும்பைத்தேனை" என்பது முதலியன மதங்கத்திற்சொல்லிய வெழுவகைமுத்திக்குத் திருட்டாந்தமாமென்றுஞ் சீவனுக் கியற்கையாகச் சிவத்துவமில்லைச் சிவவியத்திக் கலப்பினுற் செயற்கைச்சிவத்துவஞ் சித்திக்குமென்றும் உரையுரைக்குஞ் சிலபேர்மதந் திக்கற்றுத் திலதர்ப்பணஞ் செய்யப்பட்டுச் சென்றுபோயிற்று, (௧௨.)

## பதினொராஞ்சூத்திரம்

### முற்றிற்று.

திருவிருத்தம். ௬௨௩.

# பன்னிரண்டாஞ் சூத்திரம்.

சமாதிகூடியிருக்குஞ் சமயத்துச் சமபுத்திபண்ணிப் பூசாநமஸ்காரகாரியபுத்திபண்ணுதிருந்தாலுஞ் சமாதிசலனம் வந்தகாலத்துச் சரியானுட்டானந் தாக்கித்தாக்கிச் சமாதிநிலை சாரவேண்டுமென்று பன்னிரண்டாஞ் சூத்திரத்திற் படுத்திச் சரியைபடித்து முடிக்கின்றார்.

செங்கமலத்தாளிணைகள்சேரவொட்டாத்
திரிமலங்களறுத்தீசனேசரொடுஞ்செறிந்திட்
டங்கவர்தந்திருவேடமாலயங்களெல்லா
மரனெனவேதொழுதிறைஞ்சியாடிப்பாடி
யெங்குமியாமொருவர்க்குமெளியோமல்லோ
மியாவர்க்குமேலானேமென்றிறுமாப்பெய்தித்
திங்கண்முடியாரடியாரடியோமென்று
திரிந்திடுவர்சிவஞானச்செய்தியுடையோரே.

இ-ள். செங்கமலத்தாளிணைகள் - ஞானக்கிரியா சத்திக்குறிச் சிவத்துவத்தை. திரிமலங்களறுத்து - தேகத்தினிமித்தஞ் சிறிது சேஷித்தநிற்கத் தீக்ஷாசுத்தி பண்ணிக்கொண்டு. சிவஞானச்செய்தியுடையோரோ-நிருவிகற்பச் சமாதி நீங்கிச் சவிகற்பச் சமாதி சேர்ந்தோர். மற்றது வெளிப்பொருள். (க)

இதுவுமது.

ஈசனுக்கன்பில்லாரடியவர்க்கன்பில்லா
ரெவ்வுயிர்க்குமன்பில்லார்தமக்குமன்பில்லார்
பேசுவதென்னறிவில்லாப்பிணங்களைநாமிணங்கிற்
பிறப்பினிலுமிறப்பினிலும்பிணங்கிடுவர்விடுநீ
யாசையொடுமரனடியாரடியாரையடைந்திட்
டவர்கருமமுன்கருமமாகச்செய்து
கூசிமொழிந்தருண்ஞானக்குறியினின்று
கும்பிட்டுத்தட்டமிட்டுக்கூத்தாடித்திரியே.

இ-ள். ஞானக்குறியினின்று - தாசோகம்பாவனை தாக்கச் சரியை சரிக்கு மிடத்துஞ் சிவோகம்பாவனை ஞானஞ் சரித்துத் தரிப்பவனொன்று தாற்பரியம். மற்றது வெளிப்பொருள். (உ)

சிவோகம்பாவனை பண்ணுமவர்க்குத் தாசோகம்பாவனைசத்துருவானாலும் பராக்குற்றபோது பாவனை பலிக்கு முபாயம் பண்ணலாமென்று படிக்கின்றார்.

அறிவரியான்றனையறியவாக்கையாக்கி
யங்கங்கேயுயிர்க்குயிராயறிவுகொடுத்தருளாற்
செறிதலினாற்றிருவேடஞ்சிவனுருவேயாகுஞ்
சிவோகம்பாவிக்குமத்தாற்சிவனுமாவர்
குறியதனாலிதயத்தேயரனைக்கூடுங்
கொள்கையினாலவனாவர்குறியொடுதாமழியு
நெறியதனாற்சிவனேயாய்நின்றிடுவரொன்று
னேசத்தாற்றொழுதிடுநீபாசததார்விடவே.

இ-ள். சிவோகம்பாவிக்குமத்தால்-("அறியாமை யறிவகற்றி" எனுந் திருவிருத்த முதலியவற்றிற் செப்பியபடி) சிவோகம்பாவனை பண்ணுதலால்—சிவனுமாவர்—(பாவனுசாமர்த்தியமில்லாதபோது) குறியதனாலிதயத்தேயரனைக்கூடுங்கொள்கையினால் - இருதயகமலத்திற் றீபாகிருதி நாதாகிருதி சதாசிவாகிருதி முதற் சகள நிட்கள சகளசாகாரத் தன்மையினாற் சிவனைத்தியானிக்குஞ் செய்தியினால்—அவனாவர் - சிவசமான சாதிச் சிவனாவர்—குறியொடுதாமழியு நெறியதனால் - நிராகார சிவசமாதியில்—சிவனேயாய்நின்றிடுவர் - சிவனைப்போற் சிவனாவர். மற்றதுவெளிப்பொருள். (௩)

யோகசாமர்த்திய மில்லார்க்கு உபாயமுரைக்கின்றார்.

திருக்கோயிலுள்ளிருக்குந்திருமேனிதன்னைச்
சிவனெனவேகண்டவர்க்குச்சிவனுறைவனங்கே
யுருக்கோலிமந்திரத்தாலேநினையுமவர்க்கு
முளனெங்குமிலனிங்குமுளனென்பார்க்கு
மிருப்பாயவடிவாகியிந்தனத்தினெரிபோன்
மந்திரத்தின்வந்துதித்தேயிருஞ்சுரபிக்கெங்கு
முருக்காணவொண்ணாதபான்முலைப்பால்விம்மி
யொழுகுவதுபோல்வெளிப்பட்டருளுவனன்பர்க்கே.

இ-ள். சிறீகண்ட தேகதேகியாய்த் தரிசனங் கொடுப்பனென்று சித்தாந்தம். வெளிப்பொருள். (சு)

ஆகையால் நிராலம்ப சிவயோக சமாதிமானாகிய ஞானி நிராலம்ப சிவயோகமாகு ஞானனுட்டானத்தோடு சாலம்ப சிவயோகமாகும் யோகக்கிரியா சரியானுட்டான மூன்றிற்கு முரியன், மற்றவர் மூவருந் தங்கடங்கண் மரியாதிக் குரியரென்றும் அதனால் நிராலம்ப சிவயோக குருவே குருவென்றும் நிகழ்த்துகின்றார்.

ஞானயோகக்கிரியைசரியைநாலு
நாதன்றன்பணிஞானிநாலினுக்குமுரிய
னூனமிலாயோகமுதன்மூன்றினுக்குமுரியன்
யோகிகிரியாவான்முறைஞெண்கிரியையாதி
யானவிரண்டினுக்குரியன்சரிதையினின்றோ
னச்சரிதைக்கேயுரியனுதலினுலகியார்க்கு
மீனமிலாஞானகுருவேகுருவுமிவனே
யீசனிவன்றனென்றுமிறைஞ்சியேத்தே.

இ-ள். வெளிப்பொருள். (ரு)

மந்திரத்தாற் சாலம்பயோக முதலிய தந்திரத்தாற் சாவதிச் சுவாவதித் திரிகாலஞான முதலிய பல பல முண்டாம் நிராலம்ப சிவயோக குருபதேசத்தாற் சிவத்துவம் பொருந்து நிராலம்ப சிவயோகப்பொருட் சித்தாந்த மகாவாக்கியஞானம் வரும் மற்றொன்றால் வாராதென் றுரைக்கின்றார்.

மந்திரத்தான்மருந்துகளால்வாய்த்தவியோகத்தான்
மணியிரதகுளிகைகளான்மற்றுமற்று
தந்திரத்தேசொன்னபடிசெய்யவேத
சகலகலைஞானங்கடிரிகாலஞான
மந்தமிலாவணிமாதிஞானங்களெல்லா
மடைந்திடுமோசானருளாலடிசேர்ஞானம்
வந்திடுமற்றென்றாலும்வாராதாகு
மற்றவையுமவனருளான்மருவுமன்றே.

இ-ள். வெளிப்பொருள். (சா)

குருவின்பெருமை கூறுகின்றார்.

பரம்பிரமமிவனென்றும்பரசிவன்றானென்றும
பரஞானமிவனென்றும்பராபரன்றானென்று
மரன்றருஞ்சீர்நிலையெல்லாமிவனேயென்று
மருட்குருவைவழிபடவேயவனிவன்றானேயா
யிரங்கியவாரணமாமைமீனண்டஞ்சினையை
யியல்பினொடும்பரிசித்துநினைந்தும்பார்த்தும்
பரிந்திவைதாமாக்குமாபோற்சிவமேயாக்கும்
பரிசித்துஞ்சிந்தித்தும்பார்த்துந்தானே.

இ-ள். பரம் - சுத்தசிவன்றானென்றும்—பிரமம் - சுத்தசிவமத்திய நித்தசிவம்—இவன்றானென்றும்— பரசிவன்றானென்றும் - இருபரசிவனெனு மிலய சிவன்றானென்றும்—பராபரன்றானென்றும்-அனாகத சிவனென்னும் போகசிவன்றானென்றும்—பரஞானமிவனென்றும் - ஞானக்கிரியாப் பிரவிருத்திமானாகிய சதாசிவனெனு மதிகாரசிவனிவன்றானென்றும்—அரன்றருஞ்சீர்நிலையெல்லாம் - மகேசுரன், உருத்திரன், மால், பிரமன் முதற் சிவபேதமனைத்தும்—இவன்றானென்றும் (ஆரோபித சிவாத்துவிதத்தினாலே)—அருட்குருவைவழிபடவே - கிருபாசமுத்திரமாகிய தேசிகனைப் பாவனைபண்ண—அவனிவன்றானேயே - அந்தச்சிவ னிந்தக்குருதேகத்தி லாவேசித் திந்தக்குருவாயே. "இரங்கியவாரணம்" முதற்பதப்பொருள் வெளிப்பொருள். இம்முத்திருட்டாந்த தாட்டாந்திகப் பொருளுணர்ந் துரைக்குமிடத் துயிர்க்கியற்கையாய மலத்தின்மறைந்த சிவத்துவஞ் சிவனால் விளங்குமெனும் பொருள் விளங்கிற்று. (௭)

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௩௦

---

## சிவஞானசித்தியார் சுவபக்ஷமூலமும்

யாழ்ப்பாணம்

## சாலீவாடீபுரம் ஞானப்பிரகாச தம்பிரான்

## செய்தவுரையும்

முற்றிற்று.

---

வெண்பா.

ஒப்பிலரு ணந்தி யோங்குதமி ழாகமமாய்ச்
செப்புஞ் சிவஞான சித்தியார்க்—கொப்புரைதான்
பேதமகன் ஞானப் பிரகாச தேசிகனு
மாதரவாயத் தான்வகுத்தா னாய்ந்து.

---